ஸ்ரீ

# காதம்பரீ




இஃது

ஸர்டிபிகேட் பெற்ற ஆயுர்வேத டாக்டரும்,

சென்னை எஸ். கே. பி. ஏ. மெடிகல் காலேஜில் போதகாசிரியரும்,

எஸ். கே. பி. டி. ஆஸ்பத்திரியில் டாக்டரும்,

"ஔஷதயோகவிதி" முதலிய நூல்கள் இயற்றியவருமான

**பண்டித எம். துரைஸ்வாமி ஐயங்கார்,**

'ஆயுர்வேத பூஷண'

அவர்களால் இயற்றப் பெற்றது.

---

திருவாதி ஸம்ஸ்கிருத காலேஜ் பிரதான போதகாசிரியரான

ஸ்ரீமான் பண்டித ஆர். வி. கிருஷ்ணமாசாரியர், "அபிநவபட்டபாண"

அவர்களுடைய காதம்பரீ ஸங்கிரஹத்தின்

தமிழ் மொழிபெயர்ப்பு.

சென்னை :

வி. கல்யாணராம ஐயர் அண்ட் கோ.

1911

TO

THE HONORABLE

Mr. V. KRISHNASWAMI AIYAR Avl., B. A. B. L.,

Judge, High Court of Judicature, Madras.

FOR

His vast knowledge in and love for Sanskrit Language

THIS WORK

IS

WITH KIND PERMISSION

DEDICATED

with the most humble respects and as a most
hearty though humble tribute

BY

THE AUTHOR.

ஸ்ரீ:




# முகவுரை

சொற்சுவை பொருட்சுவைகளாலும், வர்ணனையின் மேன்மையினுலும், கதையின் வரலாற்ருலும் கேட்பவர் மனதைக் கவரத் தகுந்ததெனக் கற்புடையோரனைவராலும் ஒருங்கே கருதப்படும் காதம்பரீ யென்கிற நூலானது ஸ்ரீ பட்டபாணன் என்று பெரும்புகழ் பெற்ற மஹாகவியினுல் வடமொழியில் இயற்றப்பெற்ற ஓர் சிறந்த புராதன வசனகாவியமென்பதை இப்பார்தனிலுள்ளப் புலவரில் அறியாதார் வெகு சிறுபான்மையரே. பண்டைக் காலத்துப் பண்டிதர் வடமொழியிலியற்றிய வசனகாவியங்கள் வெகு சொற்பமாகவிருப்பதுடன், பதம், பொருள் முதலியவனைத்தாலும் சிறப்புற்றிருப்பவை அவற்றிலும் குன்றியவை. நாமறிந்தமட்டும் நாலைந்து காவியங்களே அவ்வாறு மிகவும் சிறந்தவை யென்ருலும், அவைகளிலும் இக்காதம்பரியே எவ்வகையிலும் விசேஷமாய் வியக்கத் தக்கதென விருப்புடன் வித்வான்களால் ஏற்கப்பெற்றதாகும். ஆனது பற்றியே 'காதம்பரியின் சுவையை யறிந்தவர் ஆஹாரம் அருந்தவும் விரும்பார்.'* எனப் பொருள்படுமாறு வடமொழியிற் பத்தியமொன்று படிக்கப் படுவதுமுண்டு. உண்மையாக ஸம்ஸ்கிருத காதம்பரியின் வாக்கியங்களையும், கதையின் வரலாற்றையும் ஓர் இரஸிகனை பண்டிதன் பல்லாயிரமுறைப் படித்து முடிப்பினும், இன்னும் அவன் அனேக முறைப் படிக்க விரும்பவனே யல்லாது அதில் வெறுப்புக் கொள்ளான் என்பது எமதெண்ணம்; அனைவரது அபிப்பிராயமும் இதற்கு மாருகவிராதென்பதும் திண்ணம். இந்த பாணகவி வர்ணிக்கும் வர்ணனையனைத்தும் தனது மனதில் அவ்வவ்வாறே அனுபவித்தனுபவித்து வர்ணிக்கப்பெற்றவையே யல்லாது, மற்ற ஸாதாரண கவிகளைப்போல் தோன்றியவாறு எதையோ வரையப் புகுந்தவனல்லனென்பது இந்நூலைக் கருத்துடன் படிப்பவருக்குப் புலப்படாமற் போகாது. விதிசை முதலிய நகரங்களின் நாகரிகத்தையும், விந்தியாடவீமுதலான காடுகளின் காட்சிகளையும், அச்சோதஸரஸ்ஸு முதலானவைகளின் அற்புதத் தோற்றங்களையும், ஹேமகூடம் முதலியவிடங்களின் மேன்மைகளையும், மஹாச்வேதை முதலியவர்களைப் பற்றிய மிக மனோஹரமான செய்திகளையும், காளி கோயிலையும் அங்குள்ள திரவிடதார்மிகனையும் (தமிழ்ப் பூசாரி) பற்றிய வியக்கத்தக்க விஷயங்களையும் வர்ணிக்கும் வகைகளை யுட்

---

* "காதம்பரீரஸஜ்ஞாநாம் ஆஹாரோபி ந ரோசதே"

யும் இக்கவிராயன் கண்ணுங் கருத்துமாகக் கூர்மையான மதியுடன் எவ் வளவு ஆழ்ந்து ஆலோசித்திருக்கின்றனென்பதை நாம் நன்குணரக்கூடும். மேலும் பிருஹத்கதையிலிருக்கும் 'ஸுமனஸ்' என்னும் மன்னவனது கதையைக்கொண்டு ஒருவாறு மாற்றி யெழுதப்பெற்ற இக்காதம்பரியிற்கூற ப்பட்டுள்ள வைசம்பாயனனென்னும் கிளியின் வரலாறு யாவும் ஆதியோ டந்தமாய் இக்கவியினது ஜீவித சரிதத்திற்கு எவ்வகையிலுமேற்றவண்ண மாயிருப்பதாக இவனெழுதிய ஹர்ஷசரிதமென்னும் நூலால் அறியப்படு கின்றதாதலின், அக்காரணங்கொண்டு இக்காதம்பரீயென்னும் கதையை வரையப் புகுந்தவனாய், தனது அனுபவத்திற்கிணங்க விஷயமனைத்தையும் நன்கு விளங்கக்கூற முயன்றிருக்க வேண்டுமென வடமொழியிலிருக்கும் காதம்பரீஸங்கிரஹத்தின் முகவுரையிற்றானே குறிக்கப்பெற்றுளது.

கவிகுலதிலகனான இந்த **பட்டபாணன்** வத்ஸவம்சமென்னும் வெகு சிறந்த அந்தணர் குலத்திலுதித்தவன். இவனது தந்தைக்குச் 'சித்திர பானு' என்றும், அன்னைக்கு 'இராஜதேவி' என்றும் பெயராம். இக் கவி 'சோணம்' என்கிற ஆற்றின் மேற் புரத்திற் 'ப்ருதுகூடம்' என்னும் கிராமத்திற் குடியிருந்து வந்ததாகத் தெரியவருகிறது. இந்த இந்தியநா ட்டின் வடபுறத்திற் கான்னியகுப்ஜமென்னும் இராஜ்யத்திற் செங் கோல் செலுத்திய 'ஸ்ரீஹர்ஷன்' என்கிற இராஜனால் அவன் ஆதரிக்கப்பெ ற்றவன். 629, கி. பி. இல் 'ஹியௌன்த்ஸாங்' (Hiouen Thsang) என் னும் சீனதேசத்தவன் ஒருவன் இந்தியாவில் யாத்திரை செய்தபோது இவ் விராஜனது பெயரைக் குறிப்பிட்டிருக்கின்றமையால், இவ்வரசனால் ஆதரி க்கப்பெற்று வந்த பட்டபாணனும் ஏழாவது நூற்றாண்டின் முதற்பகுதி யிலோ, ஆறுவது நூற்றாண்டின் இறுதியிலோ இருந்திருக்க வேண்டுமென நிச்சயிக்கப்படுகின்றது. காதம்பரியேயன்றி, ஹர்ஷசரிதம், சண்டிகாசதகம் என்று வேறிரண்டு நூல்களும் இவனால் இயற்றப்பெற்றுள. பார்வதீபரி ணயம், ஸ்ரீஹர்ஷனது ரத்னாவளீ என்கிற இவ்விரு நாடகங்களையும் இவன் இயற்றியதாகப் பெரும்பான்மையோர் எண்ணுகிறார் என்றாலும், இவை பாண னுடையதல்ல வென்று பண்டித ஆர். வி. கிருஷ்ணமாசாரியர் அவர்கள் ப்ரியதர்சிகா, பார்வதீபரிணயம் இவைகளின் முகவுரையிற் பல பிரமாண ங்களைக்கொண்டு நன்கு விளங்கக் கூறியிருக்கின்றனர்.

பட்டபாணன் தனது அந்திமதசையை அறிவிக்க விரும்பியவன் போல் 'ஜ்ஜாஸ்யவீ மரணேந ப்ரீதிம்,' என்கிற வாக்கியத்தை வரை ந்து, அதன் பின்னர் இறந்து போனதாற் அதுவரையில் முதற்பாகம் முற்று பெற்று, இரண்டாம்பாகம் அவனது புத்திரனால் பூர்த்தி செய்யப்பட்டது.

ஆனால் இவன் பாணனது புத்திரனே யென்பதை தனது நிகரில்லா வாக்கின் திறமையினால் விளக்கிக் காட்டியிருக்கின்றான். முதற்பாகம் சற்று விரிவாயிருப்பினும் இதில் விசித்திரவர்ணனைகளே வெகு விசேஷமாயிருக்கின்றனவே யன்றி, கதையின் பாகம் அவ்வளவு அதிகமல்ல ; இரண்டாம் பாகத்திலோ வர்ணனைகள் சொற்பமேயானாலும், பாஷையின் நடையானது பண்டிதரின் மனதைப் பறிக்குமாறு இசைந்திருப்பதுடன், கதையின் பெரும்பான்மையான பாகத்தைக் கூறி அதன் வரலாற்றையும் ஆச்சரியத்திலும் ஆச்சரியமாய் வெகு சாதுரியத்துடன் இணைத்திருக்கின்றான்.

பாணனது காதம்பரியில் வர்ணனைகள் வெகுசுவை பொருந்தியன வென்றாலும், அவை வெகு விரிவாயிருப்பது பற்றியும், சிலேஷைகளும் ஆங்காங்கு அதிகம் அமைந்திருக்கின்றமையாலும் அவைகளை இக்காலத்து மாணாக்கர் படித்தறியப் போதுமாறு அவகாசம் அகப்படுவது அரிதாயிருப்பதுடன், இவ்வளவு பெரிய நூலில் ஓரிடத்தையும் விடாதபடி முற்றிலும் பொறுமையுடன் அவர் படிக்க முயலவும் இயலமாட்டார். ஆனதுபற்றி, மாஹாவித்வான்கள் முதல் மணாக்கரீறாக யாவரும் இக்காதம்பரியின் சுவையையறிந்து மனங்களிக்க வேண்டுமென விரும்பி, சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் ஸம்ஸ்கிருத போதகாசிரியரான ராவ்பகதூர் எம். ரங்காசாரியர். எம். ஏ., எப். எம். யூ., அவர்களுடைய அபிப்பிராயத்தை அனுஸரித்து, திருச்சி எஸ். பி. ஜி. காலேஜ் பிரதான ஸம்ஸ்கிருத பண்டிதரும், 'அபிநவ பட்டபாண, சப்த தர்க்காலங்கார வித்யாபூஷண' முதலிய தமது மதியின் மஹிமைக்குத் தகுந்த பிருதுகள் வாய்ந்தவர்களுமான ஸ்ரீமான் **பண்டித ஆர். வி. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகள்** பாணனது காதம்பரியிற் சிறந்த வர்ணனைகளை மாத்திரம் சிறிதும் விடாது, மற்ற மிதமிஞ்சிய வர்ணனைகளுடன் சிலேஷையிற் சிலபாகங்களையும் மிக்க ஸாமர்த்தியத்துடன் நீக்கிச் சற்றும் சுவை குன்றாவண்ணம் கூடியமட்டிலும் சுருக்கி, பாணகவியின் வாக்கியங்களைக் கிஞ்சித்தேனும் மாற்றாது அவனது மொழிகளைக் கொண்டே **காதம்பரீஸங்கிரஹம்** * என்னும் நூலை வரைந்து அச்சிற்பதிப்பித்துப் பிரசுரப்படுத்தினார்கள் என்பதையும், அது சென்னை ஸர்வகலாசாலையோரால் இரண்டுமுறை காலேஜுகளிற் பாடபுத்தகமாக ஏற்படுத்தப் பட்டதென்பதையும் பெரும்பான்மையோர் அறிந்திருக்கக் கூடும். இப்பண்டிதோத்தமர் இக்காதம்பரியை ஸங்கிரஹம் செய்வதில் மாத்திரமேயல்ல, இன்னும் இதைப்போன்ற வேறு பல காதம்பரிகளையும் வரையவல்ல வல்

---

* ஸம்ஸ்கிருத காதம்பரீஸங்கிரஹம், பண்டித ஆர். வி. கிருஷ்ணமாசாரியர், ஸ்ரீ முனித்திரய மந்திரம், திருச்சிராப்பள்ளி—என்று எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

லமை வாய்ந்தவரென்பது அவர்கள் வடமொழியிலியற்றிய வாஸ்வதத்தா வியாக்யானம், அதனுடையவும்—பார்வதீபரிணயம், ப்ரியதர்சிகா, காவ்யாலங்காரஸூத்திர விருத்தி, மேகஸந்தேசம் முதலியவைகளின் முகவுரைகளையும் படித்தறிந்த பண்டிதரின் புத்திக்குப் புலப்படாமற்போகாது. காதம்பரியை யெழுதிய பட்டபாணனுக்கும், வேமபூபாலசரிதம் வரைந்த வாமனபட்டபாணனுக்கும், காதம்பரீ ஸங்கிரஹமியற்றிய அபிநவபட்ட பாணகிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகளுக்கும் 'பட்டபாணன்' என்கிற பட்டப்பெயர் ஒற்றுமையாய் அமைந்திருப்பது பற்றியும், இம்மூவரும் வத்ஸவம்சத்தினராகவே இருப்பதாலும், இவர்கள் ஒவ்வொருவருடைய ஜீவிதகாலங்களுக்கும் இடையில் சரியாக எழுநூறு வருடங்களே ஏற்படுகின்றமையாலும், வாக்குகளின் தோரணியில் ஒருவரையொருவர் மீறியிருக்கும் மேன்மையினாலும் இம்மூவருக்கும் நமது மனதுக்கு எட்டாத வகையில் ஏதோ ஸம்பந்தமொன்று ஸம்பவித்திருக்கவேண்டுமென இவர்களது வடமொழி வாசகங்களை வாசிக்கும்பொழுதெல்லாம் நான் உண்மையாய் ஊஹிக்கத் தொடங்குவதுண்டு.

நான் பலமுறை காதம்பரியையும் காதம்பரீஸங்கிரஹத்தையும் படித்ததில் இத்தகைய சிறந்தவடமொழி நூல்களிலிருக்கும் அரிய பெரிய விஷயங்களை ஸம்ஸ்கிருதமறியாத தமிழரும் அறிந்து ஆனந்தமனுபவிக்க வேண்டுமெனக் கருதியதற்கேற்ப, நான் பலதடவை பத்திரிகை முதலியவைகளின் வாயிலாகத் தமிழிலும் வடமொழியிலும் வரைந்துவந்த வெவ்வேறு வியாஸங்களைப் பார்வையிட்டு மேற்படி பண்டிதரவர்களும் தமது காதம்பரீஸங்கிரஹத்தைத் தமிழில் மொழிபெயர்க்கச் சொல்லி உத்ஸாஹப்படுத்தியதனால் இக்காதம்பரீ ஸங்கிரஹத்தை நான் தமிழில் இப்பொழுது மொழிபெயர்த்து வெளியாக்க முயன்றேன். காதம்பரீஸங்கிரஹம் எழுதியதற்குக் கூறப்பெற்ற காரணங்களே, காதம்பரியிருக்க அதைவிட்டுக் காதம்பரீஸங்கிரஹத்தை மொழி பெயர்க்க முகாந்தரங்களாகின்றன. தமிழில் வேறு காதம்பரீ ஒன்று பாசுரங்களாகப் பாடப்பெற்றிருப்பதாய் நான் அறிவேனாயினும், அது கேவலம் செய்யுள்மயமாயிருப்பதால் மஹாவித்வான்களுக்கேயன்றி மற்றவரது மனதுக்கு இன்பமளிக்கவல்லதல்லவெனவும், ஸம்ஸ்கிருத காதம்பரியிலிருக்கும் வியப்புறத் தகுந்தவையும் வெகு விசேஷகுணமமைந்தவையும் பலவகையிலும் சிறந்தவையுமான வர்ணனைகள் அதில் அநேகவிடங்களில் வீணில் விடுபட்டுப் போயிருக்கின்றனவெனவும் ஆலோசித்து, எவ்வளவு விரிவாக விருப்பினும் சில சிலேடைகளைத் தவிர்த்து மற்றச் சிறந்த வர்ணனைகளைச் சிறிதும் சிதறவிடாது இயற்றிய காதம்பரீஸங்கிரஹத்தையுள்ளபடி தமிழில் மொழி பெயர்ப்பது மிகவும் இன்றியமையாததென நான் தீர்மானிக்கலானேன். இம் மொழி

பெயர்ப்பில் ஸம்ஸ்கிருத காதம்பரீஸங்கிரஹத்திலுள்ள ஒவ்வொரு பதத்திற்கும் விடாதபடி பொருள் கூறப்பெற்றிருப்பதுபற்றி, மேற்படி ஸங்கிரஹத்திற்கு ஸம்ஸ்கிருத மாணுக்கரும் ஸம்சயமேதுமின்றி அர்த்தம் பண்ணிக்கொள்வதற்கும் இஃது மிகவும் ஸஹாயமாயுதவுமென்பதில் ஐயமேதுமிலது. இங்ஙனம் இதிற் பதம்பதமாய்ப் பொருள் கூறப்பெற்றிருக்கின்றன வென்ருலும், வடமொழியிலிசைந்திருக்கும் அழகிய நடைக்குச் சற்றும் கேடு நேரிடாவண்ணம் கூடியவளவும் இனிதும் எளிதுமான தமிழ் வசனநடையில் இயற்ற விரும்பிய எனதுமுயற்சி எவ்வளவுதூரம் நிறைவேறியிருக்கின்றதென்பதை நிதானத்துடன் இப்புத்தகத்தைப் படிப்பவரே பகுத்தறிய வேண்டும். வடமொழியிலிருக்கும் இக்காதம்பரீ முதலிய காவியங்களில் வரைந்துள்ள வர்ணனைகளின் வகைகளையும், இனிது இனிதான இரஸங்களை யிணைத்திருக்கும் மாதிரிகளையும், கதைகளைக்கொண்டு கோக்கும் விதங்களையும், மற்றும் ஸம்ஸ்கிருத கவிகளது கருத்துக்களையும் ஸம்ஸ்கிருதமறியாதவரும் கண்டு களிப்புறவேண்டுமெனக் கருதுபவர், ஸம்ஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்த்த இப்புத்தகத்தையே மிகவும் இன்றியமையாததென்று அங்கீகரிப்பதற்கு இணங்குவரென்றெண்ணுகிறேன். மேலும் மொழிபெயர்ப்பானதுபற்றி, ஆங்காங்கு ஸம்ஸ்கிருத மூலத்தையநுஸரித்து யெழுதவேண்டி இருந்ததாற் சிலவிடங்களிற் சிறிது கடினமாகவும், அல்லது சிலேஷையாகவும் வரையவேண்டி நேரிட்டதாலும், அங்கெல்லாம் விடாதபடி குறிகளிட்டு அந்தந்தப் பக்கங்களின் அடியில் தெளிவாகச் சிறிது சிறிது உரையும் வரையப்பட்டுள்து.

இப்புத்தகத்தைப் படித்துப்பார்த்த பண்டிதர் சிலர் மனமுவந்து இதற்காக அளித்தருளிய அபிப்பிராயங்களிலும் சிலவற்றை யிங்கு பிரசுரப்படுத்துகின்ருேம் :—

| | |
|---|---|
| மஹாமஹோபாத்யாய<br>வெ. ஸ்வாமிநாத ஐயர்,<br>தமிழ்ப் பண்டிதர்<br>பிரஸிடென்ஸி காலேஜ்<br>மதராஸ. | "தியாகராஜவிலாஸ்,"<br>திருவட்டீச்வரன் பேட்டை<br>20—10—1910. |

"மகா-ா-ா-ஸ்ரீ எம். துரைசாமி ஐயங்கார், வடமொழியிலிருந்து தமிழில் வசன நடையாக மொழி பெயர்த்திருக்கும் "காதம்பரீ" என்னும் புஸ்தகத்திற் சிலபாகம் படித்துப் பார்த்தேன். விஷயங்கள் மிகவும் திருப்திகரமாகவே யிருக்கிறது. வடமொழிப் பயிற்சியில்லாத தமிழர்கள் அந்தப் பாஷையிலுள்ள இந்நூற்பொருளை

அறிந்து இன்புறுதற்கு இப்புத்தகம் தக்க கருவியாக இருக்குமெ
ன்று நினைக்கின்றேன்."

இங்ஙனம்,

(Sd.) வெ. ஸாமிநாதையர்.

"MY DEAR SIR,

Your Tamil reductions of Kadambari has absorbed all my interest. By the side of its Sanskrit original, it appears a reflected image, true to its manifest ornament. The likeness of idiom, the sameness of fancy, the purity of structure and the similarity of rhetoric embellishment—all this preeminently characterizes your work. The translation is literal but literary. The especial care, with which the prime of Sanskrit compounds are rendered, with footnotes here and there for elucidation, and the tactful attention which often times prompts a repetition of the Sanskrit words, as they are with the sole view of preserving the beauty of the original thoughts are particularly note-worthy. In short, it must be said, that taken as it is from its setting, the language of the original has not lost its brilliant effect."

Yours Sincerely,

Triplicane, 5th October 1910. (Sd.) M. KRISHNAMACHARIAR, M. A. M. L., M. R. A. S., F. R. S. A., High Court, Vakil.

இக்காலத்தில் நவீனநாகரிகர்கள் நாவல் என்று சொல்லப்படுகிற கதைகளைக் கணக்கின்றி வரைந்து வெளிவிடுகின்றாராகிலும், பல்லாயிரமாண்டுகளுக்குமுன், மற்ற தேசங்களில் மானிடர் மாடுகளுக்கும் கேடாகக் காடுகளில் நடமாடிக்கொண்டிருந்த காலத்திலேயே, நமது ஆதிகாலத்து ஆரியர்கள் மிக மேலான நாகரிகம் வாய்ந்து, ஆச்சரியகரமான அறிவுடன் அகில சீர்மைகளும் அமையப்பெற்று விளங்கி வந்தனரென்பதையும், இக்காலத்திலெழுதப்படும் கதைகளைவிட, பண்டைக் காலத்துப் பண்டிதர் எழுதிய இக்காதம்பரீ போன்ற கதைகள் எவ்விதத்திலும் மேன்மை பொருந்தியவை யென்பதையும் இந்நூலைக்கொண்டு ஸம்ஸ்கிருத பாஷையிற் பயிற்சி பெறாத நமது தேயத்து ஜனங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்பது எனது கருத்து. அல்லாமலும் இக்காலத்து மற்ற நாவல்கள் அல்லது நாடகங்களைப்போல் இக்கதையானது மானிடரது மனதை அடாதவழிகளிற் செல்லவிடாமல் அறநெறியிற்றானே அனைவரையும் செல்லத்தூண்டுந் தன்

மையதென இதை ஆதியோடந்தமாய்ப் படிக்கத் தெரியவரும். விலாஸவதியானவள் தான் கருத்தரிக்கவேண்டிக் கடுமையானகஷ்டங்களையும் கருதாது, அரியவிரதங்களை அனுஷ்டிக்கும் விதங்களையும், சுகநாஸன் சந்திராபீடனுக்கு உபதேசிக்கும் விரிவான விஷயங்களையும், மஹாச்வேதையும் காதம்பரியும் பிராணனுக்கும் மேலான தமது கணவர் நிமித்தமாக அகில ஐச்வரியத்துடன் தாய் தந்தையர் முதலிய உறவினரனைவரையும் துறந்து, வனந்தனில் தங்கி வஸித்து, பதிவிரதாதர்மமே பெண்களுக்குப் பெருஞ் செல்வமெனக் காரியத்தினுற்றுனே விளக்கிக் காட்டும் வகைகளையும், அங்ஙனம் அவர் பதிவிரதாதர்ம்மத்தைத் தவராது தழுவியதால் இறந்துபோன புருடரும் எழுந்து வந்தனரென எடுத்துரைக்கும் பாவனைகளையும், வைசம்பாயனன் முதலியவர் அடாத செயலைச் செய்தனராதலால், அவர் தம்மைச் சார்ந்தவருடன் பல ஜன்மங்களிற் பெருந் துன்பங்கள் அனுபவிக்கவேண்டி நேரிட்டதென விளக்கிக் கூறும் விதங்களையும், சிறியோர் பெரியோர் முதலியவர் ஒருவருக்கொருவர் அவ்வப்பொழுது செய்து கொள்ள வேண்டிய மரியாதைகளின் மாதிரிகளையும் மிக விரிவாக விளக்குவதால் இந்நூல் அனைவரையும் அறநெறியில் அணுகச்செய்து அடாதவழிகளிலிருந்து அகற்றி இம்மையிலும் மறுமையிலும் இன்பந்தர இன்றியமையாததாகின்றது. அல்லாமலும் தாராபீடன், சுகநாஸன் முதலியவர் தவம்புரிந்தடைந்த மக்கட் பேறுடனும் மற்றும் மட்டில்லாச் செல்வங்களுடனும் மனமகிழ்ந்து வாழ்ந்து வந்தும், சிறிது நாட்களிற்றுனே தமது அகில ஆசைகளுக்கும் ஆதாரமான புதல்வருக்கே ஆபத்து நேர்ந்திடவே, பின்னர் ஸம்ஸாரம் ஸாரமற்றதெனவும், பரலோகவாழ்வே பாழடையாப் பாக்கியமெனவும் ஆலோசித்து, ஸகல ஐச்வரியங்களையும் அவற்றுலுண்டாகும் ஸுகங்களுடன் துறந்து, முனிவர்களுக்கேற்க மஹாரண்ணியங்களிற் சென்று அருந்தவம் அனுட்டித்து முத்தி பெறும் மார்க்கங்களைத் தேடும் வகைகளைக்கூறுவதால் இக்காதம்பரியானது.சிலர் சொல்லும் விதமாக கேவலம் சிருங்காரரஸத்தையே பிரதானமாகப்பெறுமல், சூத்திரகனை வர்ணிக்க முயன்று முதல் கதையின் கடைசி வரையில் பெரும்பாலும் சாந்திரஸத்தையுள்ளடக்கிக்கொண்டிருக்கின்றதாதலின் இது எவ்வகையிலும் சிறந்த குணங்களமைந்ததென எவர்தான் அங்கீகரிக்காமலிருக்கக் கூடும்?

இப்புத்தகத்திற்கு இதுவே முதற்பதிப்பாதலாலும், வேறு பற்பல காரியங்களிற் காலத்தை அதிகமாய் அவசியம் கழிக்கவேண்டி நேரிட்டதனுலும், மொழி பெயர்த்தல் முதல், எழுதல், அச்சிட்டுவரும் பிரதிகளைப் பார்த்து சோதித்தலீருகவுள்ள வேலைகளனைத்தையும் ஸஹாயமின்றி நானெருவனே பலகாரியங்களின் நடுவிற் செய்யவேண்டியிருந்ததாலும் இப்பதிப்பில் ஆங்காங்கு சிற்சில இலக்கணப்பிழை யெழுத்துப்பிழைகள் என்

னையுமறியாது ஏற்பட்டுவிட்டதானாலும், அவைகளுக்குப் பிழை திருத்தம் எழுதிச் சேர்த்திருக்கின்றேனாதலால், அவை அவ்வளவு பாதகமாகக் கருதப்படாமலிருக்க வேண்டுமெனவும், வெகு ஊக்கத்துடன் வரைந்தும் ஒருக்கால் எனக்கும் புலப்படாது மொழிபெயர்க்கவேண்டிய வாக்கியம் ஏதேனும் விடுபட்டிருப்பின், அத்தவறுதலையும் அருள் புரிந்து மன்னிக்கவேண்டுமெனவும் படிப்பவரனைவரையும் பணிவுடன் வேண்டிக்கொள்கின்றேன். இதில் ஏற்பட்டிருக்கும் ஏதேனும் தவறுதல்களை உற்றுப்பார்த்து மறு பதிப்பிற் சீர்திருத்தி இன்னும் சுவைபொருந்தியதாகச் செய்யவும் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

ஸம்ஸ்கிருத காதம்பரீஸங்கிரஹத்தை இங்ஙனம் மொழிபெயர்ப்பதற்கு மிகவும் அன்புடன் அருள்புரிந்து அனுமதி கொடுத்துத் தாமே பல வழிகளிலும் உத்ஸாஹத்தையூட்டி விருப்புடனும் விச்வாஸத்துடனும் உதவி செய்த ஸ்ரீமான் பண்டித ஆர். வி. கிருஷ்ணமாசாரியஸ்வாமிகளுக்கு நான் எனதாயுளுள்ளளவும் எவ்வகையிலும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றேன். மேலும் ஸ்ரீமான் அன்பில் ஸ்ரீவெங்கடாசாரியஸ்வாமிகளும், திருச்சி எஸ். பி. ஜி. காலேஜில் தமிழ்ப்பண்டிதராயிருந்த (Retired) ம-ா-ா-ஸ்ரீ ஸதாசிவம் செட்டியாரவர்களும் அநேக ஸமயங்களில் அச்சுப்பிழைகளைத் திருத்துவதற்குச் செய்த பேருபகாரமும், அக்கரையுடனும் ஆதரவுடனும் இப்புத்தகத்தை அழகாய் அச்சிற்பதிப்பித்துக் கொடுத்த **ஸதரன் ஸ்டார் பிரஸ்** அதிகாரிகளுடைய உகக்கத்தக்க உதவியும் எனதெண்ணத்திலிருந்து என்றைக்கும் அகலாது.

இங்ஙனம்,

ஆயுர்வேத விலாஸ்,
35. இருளப்பன் தெருவு,
சென்னை.
13—10—1910.

வித்வஜ்ஜன விதேயன்,

**எம். துரைஸ்வாமி.**

ஸ்ரீ:

# காதம்பரீ.





முன்னொருகாலத்தில் மாளவதேசந்தன்னில் அரசரனைவர்களது சிரஸ்ஸினால் தொழுதாதரிக்கப் பெற்ற தனதாணையை யுடையவனும், மற்றொரு மஹேந்திரனையொற்றவனும், நாற்புறமும் மாலை போல் கடல்களால் சூழப்பட்ட பூமியனைத்துக்கும் அதிபதியும், பராக்கிரமத்தாலும் பிரீதியாலும் தன் பாதத்திற் பணியுமளவற்ற சிற்றரசத்திரளோனும், மிகவும் ஆச்சரிய காரியங்களைச் செய்பவனும், யாகங்களை யனுஷ்டிப்பவனும், ஸகல சாஸ்திரங்களுக்கும் கண்ணாடி போன்றவனும், கலைகளுக்கெல்லாம் உற்பத்தியிடமும், குணங்களனைத்துக்கும் குடியிருக்கும் அகமும், ரஸிகர்களுகெல்லாம் ஆதாரமானவனுமான சூத்திரகன் எனப் புகழ் பெற்ற வேந்தனொருவன் இருந்தனன்.

இவனது மனத்தில் தர்மதேவதையும், சினத்தில் இயமனும், குளிர்ந்த எண்ணத்திற் குபேரனும், ஆண்மையில் அக்கினியும், புயத்திற் பூமியும், கண்ணிற் கமலையும், வாக்கில் வாணியும் முகத்தில் மதியும், வன்மையில் வாயுவும், அறிவில் அமரகுருவும், அழகில் அனங்கனும், ஒளியிற் கதிரவனும் குடிகொண்டிருந்தமையால் இவ்வரசன் ஸர்வதேவதாஸ்வரூபியும் விச்வரூபம் வாய்ந்தவனுமான ஸ்ரீமந்நாராயணனை யொற்றிருந்தனன்.

ஜயகுஞ்ஜரங்கள் விழுந்தமிழ்ந்தி நீராடுவதால் அவைகளின் கும்பஸ்தலங்களினின்று கலைந்து கரைந்துவிடும் ஸிந்தூரங்களால் ஸந்தியாகாலத்துச் செவ்வானம்போல் சிவந்த ஜலத்தையுடைய வேத்திரவதீ யென்கிற நதியினால் சூழப்பெற்ற விதிசை யென்னும் நகரமானது அவ்வேந்தனுக்கு இராஜதானியாகவிருந்தது.

இவ்வரசன் அகண்ட பூமண்டலத்தையும் வென்றதுபற்றி, தனது இராஜ்யத்தை அன்னிய அரசர்கள் அசைக்கிவிடுவார்களோ வெனச் சிந்தை யேதுமற்றவனாய், புயத்தினால் வளையைப் போல் மிகவும் எளிதாகவே இப்புவனபாரத்தை வஹித்தனன். பிருஹஸ்பதியையும் இகழ்கின்ற மதிமகிழ்ச்சிவாய்ந்தவரும், அநேக குல வரிசையாய் அமர்ந்தவரும், அடிக்கடி நீதிநூல்களை நன்காராய்ந்துணர்வதால் மாசற்ற மனத்தையுடையவரும், அன்னியர் பொருளில் ஆசையற்று அரசனிடம் அன்பார்ந்தவரும், அனவரதமூக்கமுள்ளவருமான அமைச்சருடன் கூடியிருந்து, தனக்குச் சமானமான வயது வித்தை வேடமுடையவரும், அரசர்களுக்கேற்ற பரிஹாஸங்களிற் பண்டிதரும், இங்கிதக்குறிகளை யெளிதில் அறியும் வல்லமை புரிந்தவரும், சிங்கக்குட்டிகளைப் போல் எப்பொழுதும் வியக்கத்தக்க விக்கிரமத்திற்றுனே விருப்பமுடையோராயினும் வினயந்தவறாது விவஹரிக்குந்தன்மையரும், தனது பிரதிபிம்பம் போன்றவருமான இத்தகைய இராஜகுமாரர்களுடன் விளையாடிக் கொண்டே இவ்வரசன் இளமைப்பருவத்தை வெகுநாளளவும் அவ்விராஜதானியில் மிகவும் இன்பத்துடன் கழித்தான். இங்ஙனம் இளமைப் பருவத்தில் இருந்தும் வடிவழகு வாய்ந்தும் அவன் ஐம்புலன்களையும் அடக்கியாளுந் தன்மையனும், மஹாஸத்வம் அமர்ந்தவனுமானதால் பெண்டிரைப்பேதையராகப்பாவித்தவனாய், வேந்தனுக்கு ஸந்தானம் வேண்டுமென விரும்பும் அமைச்சர்களால் வேண்டப்பட்டும் அவனுக்கு மாதர்களின்மீது மனவெறுப்புண்டானதுபோலும். அழகும் அடக்கமும் குலமும் குணமும் அமைந்த இருதயத்தைப் பறிக்கும் அந்தப்புரத் தேவிமார் இருப்பினும், அவன் சிலநேரம் மிருதங்கத்தையடிக்கத் துவக்கினவனாய் ஸங்கீத பிரஸங்கம் செய்தும், சிலவேளை வேட்டையாடியும், சிலகாலம் காவ்யபிரபந்தமியற்றியும், சில ஸமயம் சாஸ்திரவிசாரம் செய்தும், சிலநேரம் நாடகம் இதிஹாஸம் புராணம் கதை இவைகளை சிரவணம் செய்தும், சிறிதுகாலம் சித்திரமெழுதியும், சிலவேளை வீணை வாசித்துக் கொண்டும், மற்றுஞ் சில ஸமயங்களில் தனது தரிசனத்தின் நிமித்தம் வந்திருக்கும் தபோதனர்களின் தாள்களைப் பணிந்தும் பெண்டிர்பால் பராமுகமாகவே நண்பருடன்கூடிப் பகற்பொழுதைப் போக்குவான்; இவ்வாறு பற்

பல பரிஹாஸங்களிலும் கிரீடைகளிலும் கைதேர்ந்தவர்களான தோழர்களுடன் சேர்ந்தே பகலைப்போல் இரவையும் கழிப்பான்.

இங்ஙனமிருக்கையில் ஒருக்கால் ஆதித்தனுதித்து ஆகாயத்திற் சற்று தூரத்தில் தோன்றவே, மாதர்களின் வழக்கத்திற்கு மாருக இடையின் இடதுபுறத்தில் தொங்கும் வாளாயுதத்தினுல் தயங்கவும் மயங்கவுந்தகுந்த தனதுருவத்தையுடையவளாகிய வாயிற்காப்பவள் ஒருத்தி ஆஸ்தானமண்டபத்தில் வீற்றிருக்கும் கொற்றவன் பக்கலில் வந்து, புவிதனில் முழந்தாளிட்டுப் பணிந்து வினயத்துடன் இவ்வண்ணம் விண்ணப்பம் செய்தனள்:—"தேவ! தேவலோகத்திற்குத் தனது தேகத்துடன் ஏறும் திரிசங்குவினிடமிருந்து, சினங்கொண்ட தேவேந்திரனது ஹுங்காரத்தால் புவிதனில் தள்ளுண்ட இராஜலக்ஷ்மியெனத்தோற்றும், தென் தேயத்திலிருந்து வந்தவளான மாதங்கஜாதியிலுதித்த மாதொருத்தி கூட்டிலடைத்த கிளியொன்றை யெடுத்துக்கொண்டு அரண்மனை வாயிலில் இருந்தவளாய் தேவனிடம் கேட்டுக்கொள்வதாவது:—'உலகெங்கும் உள்ள இரத்தினங்கள் அனைத்துக்கும் கடல்போல், அருமையான பொருள் அனைத்துக்கும் பிரபுவே பிரதான பாத்திரம்; இப்பறவையும் மிகவும் ஆச்சரியகரமானதும், உலகத்திற்கெல்லாம் உயர்ந்த இரத்தினம் போன்றதெனவும் எண்ணி பிரபுவினது பாத மூலத்திற்கு அதை யெடுத்துவந்தவளாய் மஹாபிரபுவின் தரிசனத்தினுலுண்டான பேரின்பத்தைப்பெற விரும்பினவளாகிறேன்' என்பதே; பின்பு இதைச் செவியுற்றுப் பிரபுவினது சித்தம்" என மொழிந்தொழிந்தனள். வேந்தனும் அத்தருணம் ஆவலுடன் கூடியவனுய் அருகிலிருக்கும் அரசர்களின் முகங்களையுற்று நோக்கிவிட்டு 'குற்றமென்ன? அவளை வரச்செய்' எனக் கட்டளையிட்டனன்.

அரசன் அவ்வாறு ஆஞ்ஞாபித்தபின்பு, உடனே வாயிற்காப்பவள் எழுந்து, அம் மாதங்கமாதைப்போய் அழைத்துவந்தனள். அம் மங்கையரும் உள்ளே சென்று, ஆயிரக்கணக்கான அரசர்களின் மத்தியில் ஓர் மண்டபத்தில் சந்திரகாந்தக் கற்களிழைத்தச் சிரியதோர் கட்டிலில் வீற்றிருக்கும் மன்னவனைக் கண்ணுற்றனள்; அம் மண்டபத்திற்கு நாற்புறமும் பெருத்த நல் முத்துச்சரங்கள் ஊசலாடின; தங்கச்சங்கிலிகளால் தொடுக்கப்பெற்ற மணிமயமான நாற்காலு

களின்மேல் ஆகாசகங்கையினது நுரைகளின் திரள்கள்போல் வெண்மை நிறமானதும், அதிக பெரிதல்லாததும், வெண்பட்டு மயமுமான மேற்கட்டு அமைக்கப்பெற்றிருந்தது; பொற்பிடிகளையுடைய பல சாமரைகளை வேந்தனுக்கருகில் வீசிக்கொண்டிருந்தனர்; அவன் அமுதத்தினது நுரைகளைப்போல் வெண்மையானவையும், கோரோசனையால் சித்திரிக்கப்பட்ட ஆண் பெண்களான அன்னப்பறவைகளுடன் கூடிய ஓரங்களையுடையனவும், மெதுவாக சாமரைக்காற்றால் அலைக்கப்பெற்ற அழகிய தலைப்புகளையுடையவையுமான இரண்டு வெண்பட்டு உடைகளை உடுத்திக்கொண்டிருந்தான்; அவனது மார்பு மிக்கப்பரிமளம் பொருந்திய சந்தனப்பூச்சால் வெளுத்திருந்தது; அப்பூச்சின்மேல் குங்குமப்பொட்டொன்றும் விளங்கிற்று. நிர்மலமான வெள்ளித்தகடு போன்றதும், அகன்றதும், அஷ்டமி சந்திரனது பிறை போன்றதும், ஊர்ணை யென்கிற (புருவங்களுக்கிடையிலிருக்கும்) மயிற்சுழியுடன் கூடியதுமாய் அவனது நெற்றிக்கட்டு துலங்கிற்று; அவன் அளவற்ற பரிவாரங்களையுடையவனுயிருந்தும் * அத்விதீயனுகவும், இடைவிடாத தானப்பெருக்கைக் கைப்பற்றினவனுனும் மதமற்றவனுகவும் தோற்றினுன்.

அம்மாது பார்த்துவிட்டு தூரத்திலிருந்தவாறே, தனதுவரவை அரசனுக்கு அறிவிக்குமாறு மூங்கிற்றடியொன்றெடுத்து அச்சபையின் தரையில் ஒருமுறை அடித்தனள்; அம்மூங்கிற்றடியின் ஒலியினுல் அவ்வரசர் குழாமனைத்தும் ஒருமிக்கக் கண்களை வேந்தனிடமிருந்து இழுத்துக்கொண்டு அம்மங்கையின் பால் திரும்பியது.

பிரபுவும் பிரதீஹாரியால் (வாயிற்காப்பவள்) 'அதோ தூரத்திற்பாருங்கள்' எனச்சொல்லிக் காட்டப்பட்ட அச்சண்டாள கன்னிகையைக்கண்டான்; யௌவனமெல்லாம் நீங்கியும் அனவரதமும் செய்யப்பட்ட சரீர வுழைப்பினுல் தளர்ச்சியடை யாத தேஹக்கட்டுகளையுடையவனுன கிழவனொருவன் முன்செல்ல, இங்குமங்கும் அலைந்தாடும் காகபக்ஷமென்னும் பக்கக்குடுமியையுடையவனும், கனகமய

---

* அத்விதீயன் = ஸஹாயமற்றவன், ஒப்பற்றவன்; தானப்பெருக்கு = மதஜலப்பெருக்கு, கொடையின் பெருக்கு, மதஜலப் பெருக்கையுடைய யானைகள் மதம் பிடித்திருக்கும்; தானப்பெருக்கிருந்தும் மதமில்லையென்பது விசேஷம்.

மான சம்பிகளால் ஆக்கப்பெற்ற கிளிக்கூடொன்றை யெடுத்துக் கொண்டு வருபவனுயான சண்டாளச்சிறுவனொருவன் பின்தொடர, குதிகால்மட்டும் தொங்கும் கருநிறமான கஞ்சுகத்தால் கவரப்பெற்ற சரீரத்தையுடையவளும், சிரஸ்ஸின்மேல் சிவப்புத்துகிலொன்றால் முக்காடணிந்தவளும், இடையில் அரைநாண்மாலையை அணியப் பெற்றவளும், கண்டத்தில் மிக்கப்பருமனான நல் முத்துக்கோர்த்த வெண்ணிற ஹாரத்துடன் கூடியவளும், கமலையைப்போல் கரந்தனில் தோன்றும் கமலமலர்ச்சோபையையுடையவளும், யௌவநப் பருவத்தை அப்பொழுதே அடைந்தவளும், வியக்கத்தக்க வடிவழகுவாய்ந்தவளுமான அவளை அரசன் இமைகள் அசையாமற் பார்க்கலானான்.

அத்தருணம் ஆச்சரியபரவசனான அம்மஹீபதி அந்தரங்கத்தில் இங்ஙனம் ஆலோசிக்கலானான்:—'ஓகோ! ரூபநிர்மாணத்தில் பிரம்மதேவனது பிரயத்தினம் தகாத விடந்தனில் ஏற்பட்டதே! ஆம்; இவளைத் தனது அழகினால் உலகிலுள்ள மற்றவர் ரூபமனைத்தையும் இகழக்கூடியவளாகப் பிறப்பிப்பதானால், இவளது ஜன்மத்தை பரிசிக்கவொண்ணாத பஞ்சமகுலத்தில் ஏன் படைக்கவேண்டும்? நான் எண்ணுகிறேன், பஞ்சமஜாதியைப் பரிசிக்கும் பாவத்தினின்று பயத்தினால் கரத்தினால் தொடாமலே இவள் ஸ்ருஷ்டிக்கப்பட்டாள்; இல்லையேல், இவ்வடிவழகுக்கு வாட்டமென்பது இங்ஙனம் இல்லாதிருப்பதேன்? கரங்கள் பட்டுக் கசங்கிய அங்கங்களுக்கு இத்தகைய காந்தி பொருந்தியிராதன்றோ?' என்று இன்னும் பலவாறாகச் சிந்தித்துக்கொண்டே யிருக்கையில், வேந்தனை அச்சிறுமியும் அலங்காரமாகக்காதில் அணிந்திருந்த அழகியத்தளிரானது தளர்ந்து சற்றுக் கீழே நழுவ, வெகு பெருந்தன்மை பொருந்திய பெண்போலப் பணியலானாள்; அவள் அவ்விதம் அடிபணிந்து மணிமயமான மேடையின்மீது உட்கார்ந்ததும், கூடவந்த கிழவன்கூட்டிலிருந்தவாறே அக்கிளியை யேந்திக்கொண்டு சற்றருகிற்சென்று அதை அரசனுக்கு முன் ஆதரத்துடன் வைத்துச் செப்பியதாவது:—

'ஈசனே! இக்கிளியானது ஸகல சாஸ்திரங்களின் பொருள்களையெல்லாம் போதுமாறு அறிந்தது; ஸங்கீத சாஸ்திரங்களை உணர்ந்தது; காவ்யம், கதை, நாடகம் முதலிய பற்பல பிரபந்தங்களைக் கச

டறக் கற்றதும், அவற்றைத்தானே இயற்றும் வல்லமையும் வாய்ந்தது; யானை, குதிரை, ஸ்த்ரீ, புருஷர்கள் இவர்களுடைய இலக்ஷணங்களை யறியும் திறமை பொருந்தியது; சுருங்கச்சொல்லில் இது இவ்வுலகத்திற்கெல்லாம் இரத்தினம் போன்றது; வைசம்பாயனன் என இதற்குப் பெயர். இரத்தினங்களுக்கெல்லாம் ஸாகரம்போல் அடைதற்கரிய அரும்பொருள் அனைத்துக்கும் அண்ணலே அருகரெனக் கருதி, எங்கள் யஜமானனது புதல்வி பிரபுவின் பாதமூலத்திற்கு இதை யெடுத்துவந்தனள்; ஆகையால் தம்முடையதாகவெண்ணித் தாம் இதை ஏற்கவேண்டும்.' எனப்பகர்ந்து பஞ்ஜரத்தைப் பூபதிக்கு முன்னிலையில் வைத்துவிட்டுத் தான் தூர விலகினன்.

அவன் அப்புறம் போனதும் அப்பறவையரசு பாராளும் வேந்தனுக்கு எதிராகத் திரும்பித் தனது வலதுகாலைத்தூக்கியதாய், அரசனை நோக்கி மிக்கத்தெளிந்ததும் தேர்ந்ததுமான, ஸ்வரத்தையும் எழுத்தையுமுடைய மொழியினல் ஜயசப்தம் மொழிந்து, வடமொழியில் ஆர்யையெனப்படும் செய்யுளால் அடியில் வருமாறு பொருள்படப்பாடியது:—

* "தரணியாளும் தேவனே! தமது பகைவரது மங்கைகளின் கொங்கைகள் இரண்டும் கண்ணீர் அருவிதனில் நீராடி, மனத்துயர மூலக்கு அருகிலிருந்தவாறு, அம்பூண் ‡ அகற்றி, அருந்தவம் அனுட்டிப்பது போலும்."

அது கேட்டு, அரசனும் ஆச்சரியப்பட்டவனய், அடங்காமகிழ்ச்சியுடன் அருகில் அமர்ந்திருக்கும் அந்தணர் குலத்துதித்தவரும், அகில அமைச்சருக்கும் தலைவரும், வயது முதிர்ந்தவருமான குமாரபாலிதன் என்கிற மந்திரியை நோக்கி மொழிந்ததாவது:—

'இப்பறவை மிக்கத்தெளிவாக எழுத்துக்களை உச்சரிப்பதையும், இதன் இனிய தொனியையும் கேட்டீர்களா? முதலில் இது எழுத்துக்களின் ஒழுங்குதவறாது, நெடில் குறில் முதலியவைதை நேர்மை

* "ஸ்தநயுகமச்ருஸ்நாதம் ஸமீபதரவர்த்தி ஹ்ருதயசோகாக்நே:||
சரதி விமுக்தாஹாரம் வ்ரதமிவ பவதோ ரிபுஸ்த்ரீணாம் ||"

‡ அம்பூண், அம்=அழகிய, பூண்=ஆபரணம்; அப்பு=நீர், ஊண்=உணவு இவைகளை அகற்றி.

யாய் உச்சரித்து, மிகத் தெளிவாகப் பேசுவதே வியப்புறத் தக்கது; அதிலும் படித்துப் பயிற்சிபெற்ற புருடனைப் போலப் பக்ஷிஜாதிக்கும் பக்ஷமுள்ளவர்பால் பகுத்தறிவுடன் தன் பிரீதியை பிரகாசப்படுத்துமாறு பிரவிருத்தியென்பது பின்னும் ஆச்சரியத்தைப் புகட்டக்கூடியதே; ஆம்; தனது வலதுகாலைத் தூக்கியதாய் என்னை நோக்கி ஜயசப்தம் மொழிந்து, இதனால் மிகத் தெளிவாக இச்செய்யுள் பாடப்பட்டதல்லவா? பெரும்பாலும் பறவைகளும் பசுக்களும் பயம், ஆஹாரம், நித்திரை, சில குறிகள் இம்மாத்திரம் அறிந்தவைகளாயிருக்கின்றன; இதுவோ வெகு விசித்திரம்.' என மன்னவன் மொழிந்ததும், அதுகேட்ட குமாரபாலிதன் சற்றுப் புன்னகை புரிந்தவனாய், பூபதியை நோக்கிப் பின்வருமாறுரைத்தனன்;—'தேவ! இதிலென்ன வியப்பு? சுகம் சாரிகை முதலிய பறவையினங்கள் செவியுற்ற விதமே செப்புந்திறமை பொருந்தியவைகள் எனத் தங்களுக்குத் தெரிந்தவிஷயமே; மேலும் முற்பிறப்பிற் பயின்ற வாஸனையினாலோ, மனிதர் முயற்சியினாலோ இத்தகைய தேர்ச்சி உண்டாகின்றதென்பதில் வியப்பேதும் விசேஷமாயிலது. அன்றியும், பூர்வகாலத்தில் புருடரைப்போல் இப்பறவைகளுக்கும் செவ்வெனச் செப்புந்திறமையிருந்ததுண்டு. அக்கினி சாபத்தினால் இக்கிளிகளுக்கு ஸ்பஷ்டமாய் பேசும் திறமை போய்விட்டது; அங்ஙனமே வேழங்களுக்கும் நாவின் மாறுபாடுண்டாயிற்று.' என்று இவ்வாறு அவ்வமைச்சன் மொழிந்துகொண்டிருக்கையில், வானத்தின் உச்சியை ஆதித்தன் அடைந்ததை அறிவிக்கும் நடுப்பகலில் ஊதப்படும் சங்கின் முழக்கமானது நாழிகைகளின் முடிவில் அடிக்கப்படும் பேரிகைகளின் பேரொலியை அநுஸரித்து ஆகாயத்தை அளாவியது. அதைக் கேட்டு நீராடும் நேரம் நெருங்கியதென மற்ற மன்னவர் கூட்டத்தை விட்டவனாய், அக்கோமானும் கொலுவிருக்கும் மண்டபத்திலிருந்து எழுந்தனன்.

அதன்பிறகு அவ்வரசன் அங்கிருந்து செல்லுகையில், மற்றவரும் வெகு விரைவுடன் எழுந்து அவனுடன் ஏகியதால், தற்செயலாய் ஒருவருக்கொருவர் தங்கள் தங்கத்தோள்வளைக் கூர்களின் முனைகளில் உடைகளை தொடுத்து கிழித்துக்கொண்டனர்; அம்மஹீபதிகளது மார்புதனில் மணிமுத்துமாலைகள் அக்காலை புரண்டலைந்தன.

போகுங்கால் பூபதியைப் பணிவதற்கு அவரவர் முந்திக்கொள்ள ஆவலுடைய அம்மன்னவர் அனைவருக்கும் மஹத்தான பரபரப் புண்டாயிற்று. தோள்தனில் சாமரைதாங்கி இங்குமங்கும் ஓடித் திரியும் கவரி வீசும் மங்கையர் தம் சரணங்களில் அணிந்திருக்கும் மணிச்சிலம்புகளின் ஒலியினாலும், வெகுவிரைவாக முன் சென்று ஜனங்களை விலக்கும் வாயில் காக்கும் மாதர்களது ஜயசப்தத்தினாலும், மாளிகைகளது மாடிதனில் அறைகளிலிருந்து கிளம்பும் அஜ் ஜயசப்தங்களின் எதிரொலியாலும், நாற்புறமும் நடமாடும் மானிடரின் நூற்றுக்கணக்கான பாதங்கள் தங்களை துவைத்துவிடுமெனத் திகைத்து, பூமியிற் பரப்பிய பூக்களை விட்டுப் பறந்தோடும் வண்டுகளின் ரீங்காரத்தொனியாலும், வெகு வேகத்துடன் ஏகும் வேந்தர்களது தோள்வளைகளின் முனைகளால் தாக்கப்பட்டு குலுங்கியொலிக்கும் இரத்தினச் சரங்களுடன் கூடிய மணித்தூண்களின் ஓசையாலும் அவ்வாஸ்தானமண்டபம் ஆரவாரத்துடன் அசைக்கப்பட்டதுபோல் ஆயிற்று.

பின்பு அவ்வரசர்களிடமிருந்து பிரிந்தவனான வேந்தனானவன் 'இளைப்பாறலாம்' என அச்சண்டாளகன்னிகையைக் கண்டு தானாகவே மொழிந்து, தாம்பூலத்தட்டு தாங்குபவளை நோக்கி 'வைசம்பாயனனை அகத்தினுள் எடுத்தேகு' எனக்கட்டளையிட்டு, மிகவும் ஆப்தர்களான இராஜ குமாரர்கள் சிலருடன் அரண்மனைக்குள் சென்றான். அங்கு அணிகள் அனைத்தையும் அகற்றியவனாய், கிரணங்கள் நீங்கிய கதிரவன்போல் தோற்றுமிவன் சிலம்புப் பயிற்சிக்குபயோகமான கருவிகள் நிறைந்த கொடியாடும் கூடத்திற்கேகினான். அவன் அங்கு தனக்கு ஈடான வயதுவாய்ந்த வேந்தரது மைந்தருடன் சிராக சிலம்பம்பழகினான்; உடனே, அக்காலை அதிக ஜனநெருக்கம் இல்லாதிருப்பினும், அரசனது அகத்தில் ஆட்களை விலக்கும் அதிகாரத்தைக் கடமையாகச் செலுத்தும் கட்டியக்காரர்களால் வழிகாட்டப்பட்டவனாய் நீராடும் இடத்தை அடைந்தனன்; அங்கு நறுமணம் நிறைந்த தண்ணீர் ததும்பும் தங்கத் தொட்டியொன்று வைக்கப்பட்டிருந்தது; அதன் பக்கத்திற் படிகச் சிலையாற்செய்த ஓர் ஸ்நாநபீடம் ஸ்தாபிக்கப்பட்டிருந்தது. மிக்க பரிமளம்பொருந்திய தண்ணீர் நிறைந்த ஸ்நானகலசங்கள் ஆங்கொருபுறம் விளங்கின.

பின்பு அவ்விடத்தில் மஞ்சனமாடிவிட்டு, அரவத்தின் உடலிலிருந்து உரிந்த புரணிபோல் மிகவும் மெல்லியதான வெளுத்த துகில் இரண்டைத்தரித்துக்கொண்டு, மிக்க வெண்மையான மேகத்துண்டுபோல் துலங்கும் வெண்பட்டாடையொன்றால் தலைப்பாகையணிந்தவனாய், பிறகு பித்ரு தர்ப்பணஞ்செய்து, மந்திரமோதி மிக்க பரிசுத்தமாகிய அர்க்கியஜலத்தால் ஆதித்தனை ஆராதித்துவிட்டு தேவாலயஞ் சென்றான். ஆங்குச் சிவபெருமானைப் பூஜித்து, அத்தேவாலயமிருந்து வெளிவந்து, ஔபாஸநம் முதலிய சடங்குகளைச் சரிவர முடித்துக்கொண்டான்; ஸுகந்தம் தரிக்கும் அறையினுட்சென்று, கஸ்தூரி கர்ப்பூர குங்குமப்பூக்களின் வாஸனைகளேற்றிய சந்தனக்குழம்பை அங்கங்களிற்பூசிக்கொண்டான்; நறுமணங் கமழும் மல்லிகை மலரைச் சிரந்தனில் அணிந்தனன்; உடைகளைக் களைந்து வேறு துகில் உடுத்திக்கொண்டு, காதில் அணியும் மணியொன்றையே பூஷணமாகவுடையவனாய், இவ்வேந்தன் தன்கூடவிருந்து அருந்தத்தகுந்த சில பூபதிகளுடன் தனக்கு இஷ்டமான இனிய சுவை பொருந்திய உணவுகளை ஆசையுடன் அருந்தி உண்டிவினை முடித்துக்கொண்டான்.

பின்பு தூமபானம் பண்ணி, ஆசமநம்செய்து, தாம்பூலந்தரித்துக்கொண்டு, மழமழவென்றிருக்கும் அம்மணிமேடையினின்றும் மன்னவன் எழுந்திருக்கவே, சற்றுத் தூரத்திலிருந்த வாயிற்காப்பவள் வெகு விரைவுடன் ஓடிவந்து கைலாகு கொடுக்க, அவளது கரத்தைப் பற்றிக்கொண்டு, அகத்தினுள் உலாவுகையில் கூடவிருக்கக்கூடிய சில பரிஜனங்கள் பின்தொடரக் கொலுமண்டபம் சென்றான். அம்மண்டபமோ, அதன் பக்கங்களில் வெண்மையான வஸ்திரங்களால் திரைகள் இடப்பட்டிருந்தமையால், படிகமணி பதித்த பித்திகளால் அமைக்கப்பட்டதுபோல் தோன்றிற்று; அம்மண்டபத்தின் தரையானது மணிமயமாகவும், கஸ்தூரிகலந்து வெகு ஸுகந்தம் வீசும் சந்தனநீர் தெளிக்கப் பெற்று குளிர்ந்துமிருந்தது; அங்கு நாட்டப்பட்டிருந்த தங்கத்தூண்கள் செவ்வெனச் செதுக்கப்பெற்ற பற்பல பதுமைகளுடன் கூடியவைகளாகவும், ஸுகந்தமான ஜலத்தினால் கழுவப்பெற்று களங்கமற்று மிருந்தன; அங்கு ஓர் மேடையின்மேல் மலர்களது மணத்தினால் வாஸனை யேற்றப்பட்ட

விரிவஸ்திரமொன்று விரித்தும், தலைமாட்டில் பட்டுத் தலையணை போடப்பட்டதுமான ஓர் படுக்கையிடப் பெற்றிருந்தது. அவன் ஆங்கு அச்சயனத்தின்மீது அமர்ந்தனன். வாளேந்தும் மாதொருத்தி தனது கத்தியை மடியின்மேல் வைத்துக்கொண்டு, பூமியில் உட்கார்ந்து, கமலயிதழ்கள்போல் கோமளமான கரங்களால் மெதுவாக பாதங்களைப் பணிவுடன் பிடிக்க, அத்தருணம் காணக்கூடிய மன்னவருடனும் மந்திரிமாருடனும் மித்திரர்களுடனுமாக பற்பல ஸல்லாபம் செய்துகொண்டு சற்றுநேரம் வீற்றிருந்தனன். பிறகு அரசன் அக்கிளியினது விருத்தாந்தங்களை வினவ விரும்பியவனுப் சற்றுத் தூரத்திலிருக்கும் பிரதீஹாரியை நோக்கி, 'அந்தப்புரமிருந்து அந்த வைசம்பாயனனைக் கொண்டுவா' என்று ஆஞ்ஞாபித்தான்.

அதன் பின்னர் அந்தப்புரம் சென்று, ஓர் முகூர்த்த காலத்திற்குள்ளாகவே வைசம்பாயனன் அப்பிரதீஹாரியால் ஏந்தப் பெற்ற பஞ்ஜரத்திலிருந்தவாறே, பொற்பிரம்பூன்றி (வயது சென்றமையால்) சற்றுக்கூனிய முதுகுடன் வெண்சட்டையிட்டு மறைத்த மேனியையுடையவனுன கஞ்சுகி ஒருவனுல் பின்பற்றப்பட்டதாக, அரசனது அருகில் வந்து சேர்ந்தது. அக்கஞ்சுகியும் புவிதனில் புயம்வைத்துப் பணிந்து, "வேந்தே! 'தமது உத்திரவின்படி இவ் வைசம்பாயனனை நீராட்டி, ஆஹார மூட்டி, வாயிற் காப்பவளிடம் கொடுத்து, தேவரது பாத மூலத்திற்கும் அனுப்பினவளாகிறேன்' என தேவிகள் அறிவிக்கச் சொன்னுர்கள்." என்றுப் பிரபுவினிடம் விண்ணப்பம் செய்துவிட்டு அவன் போனதும், வைசம்பாயனனை நோக்கி, 'உன்னுல் அபிமதமான உணவுகள் எவையேனும் அந்தப்புரத்தில் அருந்தப்பட்டனவோ?' என வேந்தனும் வினவ, அதற்கு அப்பறவையும் பதிலுரைத்ததாவது:—'அண்ணலே! அங்கு என்னுல் அருந்தப்படாத பண்டமும் உண்டோ? மிக்க மதங்கொண்ட கோகிலங்களது கண்களின் காந்திபோல் கருஞ்சிவப்பான நற்சுவை பொருந்திய நாவற்பழங்களின் இரஸத்தைப் போதுமளவு பருகினேன்; சிறிய சிங்கத்தின் உகிர்களால் உடைக்கப்பெற்ற வெறிகொண்ட வேழங்களின் கும்பஸ்தலங்களிலிருந்து உதிரும் உதிரங்கலந்த நல்முத்துக்களின் ஒளியையுடைய மாதுளம் விதைகளைப் புசித்தேன்; தாமரையிலைபோல் பசுமையானவைகளும், திராக்ஷ

யைப்போல் மிகவும் இனிமையானவையுமான பழைய அருநெல்லிக் கனிகளை யதேஷ்டமாய் அருந்தினேன்; பலவாறு பேசுவதிற் பய னென்ன? தமது தேவிகளின் திருக்கரங்களால் அளிக்கப்பெற்றவை அனைத்தும் அமுதமாகவே ஆயின.' என்று இவ்வாறு பகரும் அப்பறவையினது பேச்சை மெல்லென மறுத்து, மன்னவன் இங் ஙனம் மொழிந்தனன்:— 'இஃதெல்லாம் இருக்கட்டும்; நீ உனது வரலாறு அனைத்தையும் ஆதியோடந்தமாய் மொழிந்து, எமதாவலை த் தீர்க்கக்கடவாய். நீ எவ்விடத்தில் எவ்வாறு பிறந்தாய்? எவர் உனக்கு இந்நாமகரணம் செய்தவர்? உனது தாய்தந்தையர் யாவர்? வேதங்கள் உனக்கு வந்ததெங்ஙனம்? சாஸ்திரங்களிற் பயிற்சி எவ் விதம் உண்டாயிற்று? எவரிடம் கலைகளைக கற்றனை? இஃதுனக்கு ஜன்மாந்தர வாஸனையோ? அல்லது வரப்பிரதானமோ? இல்லையேல், நீ வெளியில் பறவை வேடம்பூண்டு மறைந்து வஸிக்கும் ஓர் முனி வரோ? இதற்குமுன் நீ எங்கு வஸித்தாய்? உனது பிராயம் யாது? கூட்டில் எவ்வாறு அடைபட்டாய்? சண்டாளனது ஹஸ்தத்தில் எவ்விதம் அகப்பட்டாய்? இங்குதான் எங்ஙனம் வந்தனை?' என்று தானாக இவ்விதம் ஆவல்கொண்டு அரசன் வினவ, வைசம்பாயன னும் ஒரு முகூர்த்த நேரம்போல் தனதுள்ளத்தில் ஆலோசித்து விட்டு, ஆதரவுடன் சொல்லத்தொடங்கியது. "ஈசனே! இக்கதை யோ வெகு விரிவானது; ஆகிலும் ஆவலிருப்பின் செவியுறுவீர் களாக:—

கிழக்கு மேற்குக் கடற்கரைகளைக் குருச்சாய் அளாவிக்கொண்டு, மத்தியதேசத்திற்கு * அலங்காரமான புவியினது அரைஞாண் மாலைபோன்ற விந்தியாடவீ யென்று பெயர்பெற்ற காடொன்றுளது; அஃது, மிகவும் உன்னதமானவையும், ஆனது பற்றி அவற்றின் சிக ரங்களிற் சிக்கிய தாரகைக் கூட்டங்கள்போல் தோற்றும் மிக்க மலர் ந்த வெண்மையான மலர்களின் திரள்களைத் தலையால் தாங்குகின் றவையும், காட்டானைக் கூட்டத்தின் மத நீர் சொரிந்து வளர்ந்த வையுமான விருக்ஷங்களால் விளங்கிற்று; மதுபானம் செய்த மதத் தினாற் சிவந்த கேரளதேயத்து மாதரது கபோலங்கள்போல் கோம

* மத்தியதேசம்='ஆர்யாவர்த்தம்' என்கிற ஓர் பிரதேசம்; 'இடை' யென்று மற்றொரு பொருள்.

ளமான காந்தி பொருந்தியவையும், அங்குமிங்குந் திரியும் வன தேவதைகளது சரணங்களிற் சாத்திய செம்பஞ்சுக்குழம்பினால் சிவக்கச் செய்தவைபோல் தோற்றுபவையுமான இளந்தளிர்கள் இடைவிடாது அவ்வடவியில் அடர்ந்திருந்தன; எப்பொழுதும் நெருங்கிய மிருத்யுபயத்தை ‡ உடையதானதாலும், ¶ மஹிஷ ஸஞ்சாரத்தைப் பெற்றிருப்பதாலும் அது இயமபுரியோவெனத் தோற்றும்; ஒரு புறம் பிரளயகாலம்போல் § மஹா வராஹத்தின் கோரப் பற்களால் கொந்தியெடுக்கப் பெற்ற பூதலம் புலப்படும்; பின்னொரிடத்திற் போர்க்களம்போல் † சரங்கள் திரள் திரளாய்க் கவிந்திருக்கும்; மற்றொரு பக்கம் மஹாவிஷ்ணுவினது திருமேனிபோல் $ தமால நீலமாகத்தென்படும்.

அவ்வடவிதனில் தண்டகாரண்ணியத்திற்கு இடையில் பூவுலகெங்கும் புகழ்பெற்றதும், தர்ம தேவதைக்குப் பிறப்பிடம் போன்றதும், கோதாவரியென்னும் புண்ணிய நதியினால் சூழப்பெற்றதுமான அகத்தியமாமுனிவரது ஆச்ரமம் ஒன்றுண்டு; அங்கு நஹுஷனென்பவனை ஓர் ஹுங்காரத்தால் விண்ணுலகமிருந்து இம்மண்ணுலகிற் தள்ளியதால் பிரஸித்தமானப் பிரபாவம் பெற்றவரும், தென்திசையாகும் மாதரசினது முகத்தில் திலகம்போல் துலங்குபவருமான மேன்மை தங்கிய அகத்தியமாமுனிவருடைய மனைவியான லோபாமுத்ரை யென்பவள், தானாகவே பாத்திகட்டித் தன் கரங்களால் தானே தண்ணீர் ஊற்றித் தனது புதல்வரைப்போல் பேதமேதுமின்றி வளர்த்த விருக்ஷங்கள் பல விளங்கின. கையிற் பலாசதண்டந்தரித்துப் பசுமையான இலைகளாற் செய்த தொன்னையை யேந்திக்கொண்டு, பர்ணசாலைதோறும் பிக்ஷை யெடுத்து, விரதமனுட்டிப்பவனான திருடதஸ்யுயெனப்பெயருடைய அவர்களது புதல்வன் ஒருவன் அப்பிரதேசத்தைப் பரிசுத்தமாகச் செய்துகொண்டிருந்தனன்.

---

‡ மிருத்யுபயம்=மரணபயம், இயமனிடமிருந்து பயம்.
¶ மஹிஷம்=காட்டெருமை, இயமன் வாஹநமான எருமைக்கடா.
§ மஹாவராஹம்=காட்டுப்பன்றி, வராஹாவதாரம்.
† சரங்கள்=ஞாழங்கள், பாணங்கள்.
$ தமாலநீலம்=பச்சிலைகளால் நீலமானது, பச்சிலைபோல் நீலமானவர்

இங்கல்லவோ முன்பு பஞ்சவடி யென்னும் ஓர் இடத்தில் தசரதரது சொர்க்களைச் சிரமேற்கொண்டு ஸ்ரீராமன் அகத்தியமாமுனியின் அடி பணிந்துகொண்டு, இலக்ஷ்மணரால் அமைக்கப் பெற்ற அழகிய பர்ணசாலையில் ஸீதையுடன் ஸுகமாகச் சிலகாலம் வஸித்தனர். அகத்தியமுனிவர் கடல் நீரனைத்தையும் குடித்துப் பின்பு உமிழ்ந்து, ஆங்கு ஆச்ரமத்தின் சுற்றுப்புறங்களில் இருக்கும் பெரும் மடுவுகளில் அந்நீரைப் பகுத்துவிட்டனர்போலும்; இவ்விடத்தில்லவா தசரதரது மைந்தரின் அம்புனல் அரிந்து தள்ளப்பட்ட வெகு நீண்ட கபந்தன்புயமானது அகத்தியரது சினத்தைத் தணிக்குமாறு வந்திருக்கும் நஹுஷனது மலைப்பாம்புருவங்கொண்ட உடலோ வென அங்குள்ள முனிவர்களுக்கு சங்கையை யுண்டாக்கியது.

வெகு நாட்களுக்குமுன் நடந்த விருத்தாந்தங்களை யிப்பொழுதும் விசதமாக விளக்குவதான அவ்வகத்தியாச்ரமத்திற்கு அருகில் கடல்நீர் அனைத்தையும் அருந்திய அகத்தியரிடம் பொறுமையுடன் சினங்கொண்ட வருணபகவானால் ஏவப்பெற்ற பிரம்மதேவன் அவரது ஆச்ரமத்திற்கு அருகில் உற்பத்திசெய்த மற்றொரு மஹாஸமுத்திரமெனத் தகும், மிகவும் ஆழமானதும், நீருக்கு நிதிபோன்றதும், நிகரில்லாததுமான பம்பை யெனப் பெயர்பெற்ற பங்கயப் பொய்கை யொன்று இருக்கின்றது; அக்குளந்தனில் தாமரைமலர்களது மதுவையருந்தி மதம்பட்ட காரன்னப் பேடுகள் கலகலவென்று அழகாய் ஆர்ப்பரிக்கின்றன. காற்றினால் அசைக்கப்பெற்ற அலைகளின் உச்சியிலிருந்து உதிக்கும் திவலைகள் மாரிகாலத்தைத் துவக்குவனபோல் தோற்றுகின்றன; ஒருபுறம் இறங்கும் இருஷிஜனங்கள் ஜலம் நிரப்பும் கமண்டலங்களிலிருந்து தோன்றும் இனிய தொனியால் மனோஹரமாயிருக்கின்றது; நீர்வாழும் தபோதனர்களால் தமது தேவதைகளின் அர்ச்சனைக்காக உபயோகிக்கப்பெற்ற பூக்களையுடையதும், கொடிவீடுகளிலிருந்து கூத்தாடும் மயில்க்கூட்டங்களுடன் கூடியதும், பலவகையான புஷ்பங்களின் பரிமளங்களைப்பரவச் செய்வதுமான வனத்தின் வரிசையால் நாற்புறமும் அத்தடாகத்தின் தடம் தழுவப்பட்டிருக்கின்றது; அனவரதமும் தண்ணீரருந்தவருகிறவைகளான, மிகுந்த சேற்றினால் அழுக்கடைந்த அங்கங்களையுடைய காட்டானைகள், மற்றொரு மாகடலென்று பயப்

கெத் தண்ணீரெடுக்க இழியும் கார்முகில்கள் போற் காணப்படுகின்றன.

இத்தகைய அத்தாமரைக் கயத்தினது பச்சிமதீரத்தில் வன தேவதைகளுக்கு உலகமெல்லாம் காண்பதற்கான உப்பரிகைபோன்றதும், தண்டகாரண்ணியத்திற்கு அதிபதிபோலிருப்பதும், மிகப் பெரிதும், முதிர்ந்ததுமான இலவமரம் ஒன்றுளது; இம்மரத்தின் அடித்தண்டில் திக்கஜங்களது துதிக்கைக்குத் துல்லியமான கிழட்டு மலைபாம்புகள் சுற்றிக்கொண்டிருக்கின்றமையால், அதைச்சுற்றிலும் பெரியதோர் பாத்தி கட்டப்பட்டதுபோற் காணப்படும்; இவ்விருக்ஷமானது திசைகளினுடைய எல்லைகளின் அளவுகளை அளக்க முயல்வதுபோல் தோற்றும் அண்டத்தை அளாவிய கிளைகளின் கூட்டத்தால் பிரளயகாலத்தாண்டவத்தில் நாற்புறங்களும் பரப்பிய பல்லாயிரம் புயங்களையுடைய நடராஜனை நொடிப்பதற்கு ஒங்கியது போல் புலப்படும்; கடல்நீரைக் குடித்து, ஆகாயமார்க்கமாய் ஆங்கு வந்து, சற்றுநேரம் ஜலச்சுமையால் சோர்ந்து, கிளைகளின் இடைகளில் வந்து தங்கி, அங்கு இலைகளை ஈரமாக்கும் கார்மேகத்திரள்களாலும் காணப்பெறாத தனது சிகரத்தையுடையது; மிகவும் உன்னதமாயிருப்பதால் நந்தநவனத்தினது சீர்மையை நோக்குவதற்கு மேலோங்கியதோ வெனத்தோற்றும்; அது பத்மநாபன்போல் வனமாலையால் * தழுவப்பெற்றிருக்கின்றது.

அம்மரத்தில் சாகைகளது சிகரங்களிலும், பொந்துகளின் அந்தரங்களிலும், இலைகளின் இடைகளிலும், கிளைகளின் ஸந்திகளிலும், நாள்பட்ட மரப்பட்டைகளின் சந்துகளிலும் ஸங்கியையின்றி விசாலமான இடை வெளிகள் இருந்தமையால், சங்கையேதுமில்லாது கூடுகளை அமைத்துக்கொண்டு, ஒருவராலும் ஏற முடியாததுபற்றி (மனத்திலிருந்து) விலகியவிநாச பயத்தையுடையவைகளாய், கிளிக் கூட்டங்கள் பற்பல தேயங்களிலிருந்தெல்லாம் வந்து வஸித்தன. அம்மரம் மிக்க முதிர்ந்திருப்பதால் உதிர்ந்துபோய் அங்குமிங்கும் அற்பமாகவிருக்கும் இலைகளையுடையதாயிருந்தும், இராப்பக

* வனமாலை=வனத்தின் வரிசை, திருமால் அணிந்திருக்கும் இப்பெயரையுடைய ஓர் மாலை.

லாய் இதில் வந்தடைந்த இக்கிளிக் கூட்டத்தினால் இடைவிடாது இலைத்திரளால் பசுமையாகவே இருப்பதுபோல் பார்க்கப்படுகிறது. அக்கிளிகள் அம்மரந்தனில் தமது கூடுகளில் ஒவ்வோர் இரவையும் கழித்து, தினந்தோறும் எழுந்தெழுந்து, ஆகாயத்தை ஆதித்தனது இரதகுதிரைகளின் ஒளியால் பூசுவது போலவும், வானவில்லுடன் கூடியது போலவும் செய்து கொண்டு, மரகதக்கன் மயமான ஸஞ்சரிக்குந் தன்மையுள்ள தரையையொப்ப இரை தேடும்பொருட்டு வானந்தனில் வரிசை வரிசையாய் உலாவின. அவைகள் ஆங்காங்கு உணவுகளை உண்டு, திரும்ப வந்து, தமது கூடுகளிலிருக்கும் குஞ்சுகளுக்குப் பற்பல பழங்களின் இரஸங்களையும், சம்பாப்பயிர்க் கதிர்களின் பிஞ்சான தானிய மணிகளையும் மூக்கினால் ஊட்டியூட்டி, அன்புகள் அனைத்தையும் இழிவுபடுத்துவதும் ஒப்பற்றதும் அளவற்றதுமான சிசுக்களிடமிருக்கும் ஆசையினால் அக்குஞ்சுகளை மார்புதனில் அணைந்துகொண்டு இரவுகளைக் கழித்துவந்தன.

அம்மரத்தின் வெகு பழைய பொந்தொன்றில் தனது இல்லாளுடன் இருந்து வந்த என் தந்தைக்கு, அந்திமவயதில் ஏதோ விதிவசத்தால் நான் ஒரு புதல்வனை பிறந்தேன். அக்காலை என்னைப் பெறுவதாலேயே பொறுக்கமுடியாது உண்டானப் பிரஸவ வேதனையால் எனது அன்னை விண்ணுலகம் ஏகியது. என்பிதா தனது மனதிக்கிசைந்த மனைவியின் மரணத்தினால் மஹத்தான மனத்துயரம் அடைந்திருந்தும், மிக்க படபடப்புடன் பொங்கியெழும் அச்சோகத்தை உள்ளடக்கிக் கொண்டு, புதல்வனிடமிருக்கும் பிரீதியினால் தானொன்ருகவே என்னைக்காப்பாற்றுவதில்தானே கருத்தாயிருந்தது. மிகவும் வயது சென்றுவிட்டமையால் தோல் செரிந்து, ஸ்வாதீனமற்று, சிறகுகள் சிதறியிருந்தனவாகையால், அது நன்கு எழும்பிப் பறக்கும் திறமை யிழந்துபோயினது. அங்கங்களிற் சேர்ந்து அதிகமாய் தாபத்தை அளிக்கும் மூப்பை உதரிவிடுவதற்கு விரும்பியதுபோல் அதற்கு உடலில் உதரல் உண்டாயினது. ஆகவே பறந்தோடப் பலமற்ற என் பிதா, தேய்ந்து விரிந்த முனையையுடையதான தன் அலகினால் மற்றப் பறவைகளினது கூடுகளிலிருந்து கிழே விழுந்து இறைந்து கிடக்கும் சம்பாப்பயிர்க் கதிர்களிலிருந்து நொய்யரிசிகளை அடிக்கடி யெடுத்துவந்தும், கிளிக்கூட்டத்தால் கோதி

யெறியப் பெற்று மரத்தடிகளிற் சிதறியிருக்கும் கனிகளின் கணங்களைப் பொறுக்கி வந்தும் எனக்குக் கொடுக்கும்; தினந்தோறும் நான் உண்டு மிகுந்த உணவையே அது தான் அருந்திவந்தது.

ஒருக்கால் விடியற்காலத்து ஸந்தியாராகத்தினால் சிவந்த நிறம் பொருந்திய சந்திரன் மேற்கடற்கரையதனில் மெள்ள விறங்கினான். திசைகளின் அந்தங்களெங்கும் விசாலமாய் விரிவையடைந்தன. சிவக்கக் காய்ச்சிய செவ்வரக்குக் கம்பிபோற் சிவந்து வெகு நீண்டவைகளான கதிரவனது கதிரொளிகளாகிற பத்மராகச் சிலைகளின் சலாகைகளால் ஆக்கப் பெற்ற துடைப்பக் குச்சிகளால் வானமேடையில் இறைந்து கிடக்கும் தாரகைத்திரள்களாகும் மலர்கள் தூரத்தில் ஒதுக்கப்பட்டன. கானகமானது உதயகிரிச்சிகரத்தில் வந்துதித்த ஆதித்தனை நோக்கிப் பனித்துளிகளால் நன்கு நனைந்த தாதுகளுடன் கூடிய புஷ்பங்களைத் தளிர்களாகும் அஞ்ஜலிகளைக் கொண்டு அர்க்கியம் விடுவதுபோல் உதிர்த்தது. தர்மதேவதைகளது த்வஜங்கள்போல் தபோவனத்தில் அக்கினிஹோத்ரம் செய்யும் இடங்களிலிருந்து தூமங்கள் மேலோங்கிக் கிளம்பின. அப்பொழுதே மலரும் தாமரை மலர்களிலிருந்து மகரந்தத் திவலைகளை மாரிபோல் சொரிவதும், இரவின் இறுதியில் குளிர்ந்திருப்பதுமான விடியற்காலத்து வாயுவானது வெகு மெள்ள வீசியது. (உதயகாலமானதால்) நெருக்கமாய் மூடிக் கொள்ளும் ஆம்பல் மலர்களுக்குள் அதன் இதழ்களால் இறுக்கப் பெற்ற இறகுகளையுடைய வண்டுகள் உங்காரத்தொனிகளை யுச்சரித்தன. சளர்மன் தரையிற் படுத்திருந்ததால் புழுதி படிந்த மார்பு வயிறு முதலிய அங்கங்களின் உரோமஜாலங்களையுடைய வனமிருகங்கள், காலையிற் குளிர்ந்தகாற்றுத் தாக்கியதும் தூக்கக் குறையினால் கலங்கிய கருவிழிகளையுடையவைகளும், நன்றாகக் காய்ச்சி உருக்கிய அரக்கினது பெருக்கினால் இணைக்கப்பட்டவைபோன்ற இமை மயிர்களை உடையவைகளுமான தமது கண்களை மெள்ள மெள்ள விழித்தன. பம்பாஸரஸ்ஸிலிருக்கும் காரன்னங்களின் ஆர்ப்பரிப்பு காதுகளுக்கு இன்பமாய் இசைத்தெழும்பியது. விடியற்காலமும் துலக்கமாய்த் தோன்றியது. சுற்றுக்கெல்லாம் பிரகாசமான ஜோதியுடன் சூரியனும் உதயமாய் ஒரு முகூர்த்தகாலமும் ஆயிற்று. கிளிக்கூட்டங்களும் தங்கள் தங்களுக்கு இஷ்டமான திசைகளை நோக்கிச் சென்று

விட்டன. அசைவின்றிக் கூடுகளில் அடைந்திருக்கும் கிளிக்கூட்டங்களுடன் கூடியிருந்தும் நிச்சப்தமாயிருந்ததால், அம்மரமானது சூன்னியமாகவிருப்பது போலவே காணப்பட்டது. எனது தந்தை தனது கூட்டிலேயே வஸிக்க, சிசுவாகவிருந்ததால் சிறிதும் பலமில்லாததும், அப்பொழுதே முளைத்துக்கொண்டும் இருக்கிற இரண்டு சிறகுகளையுடைய நானும் என் தந்தைக்கு அருகிலிருந்த கூடொன்றில் அடைந்திருந்தேன். திடீரென அம்மஹாரண்ணியத்தில் ஸஞ்சரிக்கும் ஸகல ஜீவராசிகளையும் நடுநடுங்கச் செய்வதும், பயத்தினால் விரைவாகப் பறந்தோடும் பறவைகளின் பக்ஷங்கள் இரண்டின் சப்தத்தினால் எங்கும் ஓங்கிப் பரவக்கூடியதும், வெருண்ட வெகு சிறிய வேழங்களது சீத்கார சப்தத்தால் விசேஷித்து விருத்தியடைந்ததும், தமது நீண்டமுகங்களை உயர நிமிர்த்திக்கொண்டு, அங்குமிங்குமாய் அலைந்தோடும் காட்டுப் பன்றிகளின் கர்கரவென்கிற உறுமலுடன் கூடியதும், குன்றங்களது குகைகளில் உறங்கி யெழுந்த சிங்கங்களினது கர்ஜனையால் கதிப்படைந்ததுமான வேட்டையாடும் ஆரவாரத்தின் பேரொலி யொன்று பரவிற்று; அதற்குமுன் கேட்டிராத அப்பேரிரைச்சலைச் செவியுற்றுக் காது சிதறுண்ட நான் சிசுவாயிருந்தமையால் பயத்தினால் தழுதழுத்து, நடுக்கமுற்று, தற்காலம் தற்காப்புச் செய்துகொள்ளுமெண்ணத்துடன் தந்தையினது மூப்பினால் மிகவும் சிதறுண்ட சிறகுகளுக்கு இடையிற்போய் நுழைந்துகொண்டேன்.

அதன் பின்னர் 'இதோ பெருங்கஜத்தினால் அலைக்கப்பெற்ற நற்றாமரைக் கயத்தின் நறுமணம் வீசுகிறது; இதோ வராஹங்கள் கடித்து மெல்லும் மேன்மையான கோரைக்கிழங்குகளின் கந்தம் கமழுகின்றது; இதோ காட்டெருமைக் கடாக்கள் கொம்புகளின் முனைகளாற் கொந்திய புற்றுகளிலிருந்து புழுதி கிளம்புகின்றது; இதோ காட்டானைகளின் கூட்டம்; இதோ வனமஹிஷங்களின் மந்தை; இதோ சிங்கத்தினது நகங்களால் கும்பஸ்தலங்கள் பிளக்கப்படுவதுபற்றி கீச்சிடும் குஞ்ஜரங்களது கூக்குரல்; இதோ சதுப்பான சேறு வீழ்ந்து அழுக்கடைந்ததான காட்டுப்பன்றிகள் கடந்த வழி; இதோ இப்பொழுதே மேய்ந்து மெல்லப்பட்ட இளம்புற்களின் சாற்றால் பசுமையானவையும், அசை போடுகையில் மான்

களின் வாயிலிருந்து பெருகியவையுமான நுரைகளின் வரிசை; இதோ (நாம் எய்த அம்புகள் பாய்ந்து) உடல்களிலிருந்து உதிர்ந்த உதிர பிந்துக்களால் நனைந்த இலைச்சிறகுகளாற் சிவந்த கலைமான்கள் சென்ற பாதை; இதோ உகிர்களின் சிகரங்களால் வரையப்பெற்ற வக்கிரமான வரிகளையுடையதும், அவற்றிலிருந்து விழுந்த உதிரத்தினால் சிவந்ததும், (அதனால் அடிக்கப்பட்ட) யானைகளின் சிரஸ்ஸிலிருந்து சிதரின நல்முத்துக்களையுடையதுமான மிருகேந்திரனது மார்க்கம்; இதோ அடவியாகும் மாதின் தலைப் பின்னல் போன்றதும், மதஜலத்தினால் மலினமுமான கூட்டத்தை விட்டுத் தனித்துத்திரியும் கஜபதியின் பாதை; இதோ இச்சவுரிமான் பந்தியைப் பின் பற்றுங்கள்; வெகு துரிதமாய் இக்கானகத்திற்போய் நுழையுங்கள்; மரங்களின் சிகரங்களில் ஏறுங்கள்; இத்திசையைப் பாருங்கள்; இச்சப்தத்தைச் செவியுறுங்கள்; வில்லைக்கையிலேந்துங்கள்; ஜாக்கிரதையாயிருங்கள், வேட்டைநாய்களை அவிழ்த்து விடுங்கள்.' என்று வெகு பரபரப்புடன் இவ்வாறு ஒருவருக்கொருவர் ஏவிக்கொண்டு மரங்களடர்ந்த மஹாரண்ணியத்தில் மறைந்திருக்கும் வேட்டையிற்புகுந்த மஹத்தான ஜனத்திரளினது கானகம் அனைத்தையும் கலங்கச்செய்யும் கோலாஹலத் தொனியொன்றைக் கேட்டேன்.

பின்பு சற்றுப்பொழுதுக்கெல்லாம், குன்றங்களின் குகைகளிலிருந்து கிளம்பும் எதிரொலியால் கணீரெனக் கேழ்க்கும் வேடர்கள் அம்புகளால் அடித்த கேஸரியினது கர்ஜனையினாலும், வேட்டைநாய்கள் வெகு வேகமாக அவயவங்களைக்கடித்துப் பிடுங்குவதால் திகிலடைந்து அங்குமிங்கும் வெருண்டு விழிக்கும் கருவிழிகளையுடைய கலைமான்களினது கருணைபுரியக்கூடிய கூக்குரலாலும், விருக்ஷங்களின் உச்சிகளிலிருந்து உயரக்கிளம்பி வெகு பரபரப்புடன் பறக்கும் பறவைகளின் ஆரவாரத்தாலும் அவ்வடவியெல்லாம் அசக்கப்பட்டதுபோல் ஆயிற்று; சற்றுநேரத்தில் அவ்வேட்டையாடும் ஆரவாரமும் அடங்கியது; நானும் சற்று பீதிதெளிந்து, ஆவலுடன் தந்தையின் மடியிலிருந்து சிறிது வெளிவந்து, பொந்திலிருந்தவாறே, பயத்தினால் கண்களின் கருவிழிகளிரண்டும் சுழலமிட, கழுத்தை நீட்டிக் குழந்தைப்பருவத்திற்கேற்க, இஃதென்னவென்று

காண்பதில் ஆசையுடன் அதே திசையிற் கண்வைத்துப்பார்த்தேன்.

அவ்வனந்தரத்திலிருந்து நானிருந்த இடத்தை நோக்கியே வருவதும், பல்லாயிரக்கணக்கானதும், அதிபயங்கரமானதும், உற்பாதவேளையில் உதித்த வேதாளக்கூட்டம் போன்றதுமான வேடர்களது படையொன்றைக் கண்டேன்; அது அங்குமிங்குமாய் அலைந்து திரியும் அந்தகனது பரிவாரம்போலும், ஓரிடத்திற்கூடிய (உருவெடுத்த) தீவினைத்திரள்போலவும், இடைவிடாது பாணங்களை மாரிபோல் சொரிந்து இராமனால் இயமனுக்கு இறையாக்கப்பட்ட கரதூஷணர்களது ஸேனைகளின் ஸமூஹமானது இராமன்பால் தீங்கெண்ணிய தோஷத்தால் பிசாசங்களாகப் பிறந்துவந்ததுபோலவும் புலப்பட்டது.

மிகவும் மஹத்தான அவ்வேடரது படைக்கு இடையில், இளம்பிராயம் வாய்ந்த அச்சேனைத் தலைவனொருவனைக் கண்ணுற்றேன்; அவன் மறு ஜன்மமெடுத்த * ஏகலவ்யனேயெனத் தோன்றினன்; அவனது புயங்களிரண்டும் யானையினது துதிக்கையின் அளவெடுத்து அமைக்கப்பட்டனவோ வெனக் கூடியவைகளாய் திரண்டுருண்டு முழந்தாள் வரையில் நீண்டிருந்தன; எப்பொழுதும் உழைக்கும் வழக்கத்தினல் அவன் உதரம் தடுக்குப்போல் மெலிந்திருந்தது; அவனது துடைகளிரண்டும் மத்தகஜத்தின் மதஜலப் பெருக்கினல் அழுக்கடைந்த இரண்டு கட்டுத்தரித் தூண்களை நகைக்கின்றன போலிருந்தன; தன்னிடம் பழக்கமுள்ளவைகளும், இயற்கையாகவே சிவந்திருப்பதால் நாவறட்சி யிருந்தும் (தங்களால் கடிக்கப்பட்ட) மான்களினது உதிரத்தைக் கக்குவதுபோல் தோற்றுவதும் ஆயாஸத்தால் வெகுதூரம் நீண்டு வெளிவந்திருப்பதுமான நாவினல் தமது கஷ்டத்தை அறிவிப்பவைகளும், சோழிகளாற் செய்த மாலைகள் கட்டிய கண்டத்துடன் கூடியவைகளும், பெரும் பன்றிகளின் கோரப்பற்களால் அடிபட்டுப் புண்படுத்தப்பட்டவைகளும், சின்னஞ்சிறிய சரீரத்தையுடையவைகளானலும், மிக்க திறமைபொருந்தியவைகளானதால் பிடரிமயிற்படராத சிங்கக்குட்டிகளோவெனக் கூடியவைகளும், வெவ்வேறு வர்ணங்களுமான வேட்டை நாய்களால்

* ஏகலவ்யன் = திரோணசாரியருடைய சீடனன ஓர் வேடன்.

அவன் பின்பற்றப்பட்டிருந்தான்; மேலும் அவன் அந்தகனுடைய அம்சாவதாரம் போலவும், தீவினைகளின் ஸஹோதரன் போலவும், கலிகாலத்தின் ஸாராம்சம் போலவும் தோற்றினன்; மாதங்ககன் என்று அவன் பெயராம். அவனது இந் நாமத்தை நான் பிறகுதான் கேட்டேன்.

பின்னர் என் மனதிற் பின்வருமாறு எண்ணலானேன்:— 'ஆ! இவர்களது ஜீவனம் எவ்வளவு அறிவீனமானதும், ஸாதுஜனங்களால் வெறுக்கப் பெற்றதுமாய் இருக்கின்றது? ஆம்; நரமாம்ஸங்களால் (காளி முதலிய தைவத்திற்கு) பலியிடுவதில் இவர்களுக்கு தர்ம புத்தி; ஆஹாரமோ, ஸத்புருடர்களால் நிந்திக்கப்பெற்ற மது மாம்ஸம் முதலியன; நரிகள் ஊளையிடுவதே சாஸ்திரம், நன்மை தீமைகளை உபதேசிப்பவர் ஆந்தைகள்; நாய்களே பரிசயத்திற்குரியவை; கொடிய தொழில் புரிய ஸாதனங்களான தனுஸ்ஸுக்களே தோழர்; குரூரத்தன்மையான வேங்கைகளுடன் ஸஹவாஸம்; பசுக்களின் உதிரத்தினல் தேவதார்ச்சனை; களவாடுவதால்தானே ஜீவனம்; ஸர்ப்பங்களின் மாணிக்கங்களே பூண்கள்; காட்டானைகளின் மதநீர்களாற் சந்தனப்பூச்சு; தாம் வஸிக்கும் வனத்தையே வேறுடன் அழித்து விடுகின்றனர்.' என்று நான் சிந்தித்துக்கொண்டிருக்கையில்தானே அவ்வேடர் படைத்தலைவன் அடவிதனில் அலைந்து திரிந்ததனல் உண்டான ஆயாஸத்தைத் தீர்த்துக்கொள்ள விரும்பியவனய் அதே இலவமரத்தடி நிழலில் வந்து உட்கார்ந்தனன். அவர்களுள் வேறொரு வேடவாலிபன் வெகு விரைவுடன் இரங்கித் தனது கரங்களால் அலைக்கப்பெற்ற அக்குளத்திலிருந்து தாமரைத் தளிரால் ஆக்கிய தொன்னையில் வைடூர்யமணியை யுருக்கிவார்த்தது போலிருப்பதும், நிரம்பநிர்மலமாயிருக்கின்றமையால் பரிசித்து அநுமானத்தினல் தானே அறியக்கூடியதுமான தண்ணீரையும், அப்பொழுதே புதிதாகப் பெயர்த்தெடுக்கப பட்டவைகளும் சேறுகளைக் கழுவி விட்டமையால் களங்கமற்றவையாகவும் இருக்கும் அத் தாமரைக் கிழங்குகளையும் எடுத்துவந்தான்; ஸேனைத்தலைவனும் தண்ணீரை அருந்திவிட்டு, அத்தாமரைக் கிழங்குகளை மெதுவாக மென்று தின்றான். பின்பு அவன் ஆயாஸந்தீர்ந்து எழுந்து, அந்த வேடர்களின் படையும் தண்ணீரை அருந்திவிட்டுப் பின் தொடர,

மெள்ள மெள்ள தன் மனதுக்கிசைந்த திசையை நோக்கிச் சென்றனன்.

அவர்களுள் கிழட்டு வேடனொருவன் அவ்வனசரக்கூட்டத்தினிடமிருந்து மானிறைச்சி பெறுதவனுய், மாம்ஸம் வேண்டுபவனாக, அம்மரத்தடியில்தானே ஓர் முகூர்த்தகாலம்போல் தங்கினான். அவ்வேடர்படைத்தலைவன் அடவியில் மறைந்ததும், அக்கிழட்டு வேடன் அம்மரத்தின்மீது ஏறவேண்டி விரும்பியவனாய், எமது உயிர்களை உறிந்து விடுபவன்போல் அவ் விருக்ஷத்தை அடிமுதல் நுனிவரையில் வெகுநேரம் ஏறயிராங்கப் பார்த்தான். அவனது அப்பார்வையிலிருந்து பயந்த கிளிக் கூட்டங்களது ஜீவன்கள் அந்தக்ஷணமே வெளிக்கிளம்பின போலும். ஈரமிலா நெஞ்சத்தார்க்கு எதுதான் செய்தலரிது? பல பனைமரங்களின் உயரமுள்ளதும், ஆகாயத்தையளாவிய கிளைகளின் சிகரங்களையுடையதுமாயிருக்கும் அம்மரத்தின்மீது படிகளால் ஏறுவதுபோல் மிகவும் எளிதாகவே அவன் ஏறிவிட்டானன்றோ? அதிலேறி, சாகைகளின் சந்துகளிலிருந்தும் பொந்துகளிலிருந்தும் அவ்விருக்ஷத்தினது கனிகளைப் பறிப்பதுபோல் கிளிக்குஞ்சுகளை ஒவ்வொன்றாகப் பிடித்தான்; அவற்றுள் சில பறந்தோடுந் திறமை பெறுதவைகளாகவும், வேறு சில பிறந்து வெகு சொற்ப நாட்களேயானதால், கருப்பையிலிருந்து பற்றிய காந்தியினால் செந்நிறம் பொருந்தியவைகளாய், அவ்விலவமரத்தினது பூக்களோவெனச் சங்கையை யுண்டுபண்ணுபவைகளாகவும், அப்பொழுதுதான் இறகுகள் முளைத்துக்கொண்டிருந்ததால் சிலது பங்கயத்தின் புதிய இதழ்களுக்கொப்பானவைகளும், (இவ்வபாயத்திற்கு) பரிகரிபபுத் தேட பலமற்றவைகளாகவும் இருந்தன; அவைகளைப் பிடித்து உயிர்களையும் போக்கி புவிதனில் எறிந்தனன்.

எனது தந்தையோ தடுக்கக்கூடாது திடீரென உயிரையுறிஞ்சுமாறு நேரிட்ட அம்மஹத்தான ஆபத்தைக்கண்டு, இரண்டத்தனை உதறலுண்டாய், மரணபயத்தினால் திசைகளில் அங்குமிங்கும் திகைத்துச் சுழலமிடும் கருவிழியையுடைய கண்ணை வைத்துப் பார்த்தது; அது இறகுகள் இரண்டாலும் என்னை மறைத்துக்கொண்டு, அதையே தற்காலத்துக்கு தகுந்த தப்பிவைக்கும் வழியென்றெண்

ணியதாய், பிரீதிக்குப் பரவசமாகவும், எந்தனைக் காப்பாற்றுவதில் தானே கவலையுள்ளதாகவும், செய்வது யாதென்றறியாததாய் சிறகுகளாலும் மார்பினாலும் என்னை அணைத்துக்கொண்டிருந்தது.

இக்கொடும்பாவியும் கிரமமாகக் கிளைவிட்டுக்கிளை தாவித் திரிந்துகொண்டு, எம் பொந்தின் வாயிலண்டை வந்து, கிழட்டுக் கிருஷ்ண ஸர்ப்பத்தின் உடல்போல் பயங்கரமான தனது இடது புயத்தை நீட்டி, தனதலகினால் அடித்துக் குத்துவதும் கூக்குரலிடுவதுமான என் தந்தையை அக்கொலைபாதகன் இழுத்து உயிரையும் இழக்கச் செய்தான். எந்தனையோ வெகு சிறியதாயிருந்தமையாலும், திகிலடைந்துடலை யொடுக்கிக்கொண்டிருந்ததினாலும், ஆயுள் மிகுந்திருந்ததாலும் எவ்வகையிலோ இறக்கைகளுக்கிடையில் புகுந்திருக்க அவன் காணவில்லை. உயிரிழந்த என் தந்தையையும் அந்தோ! கழுத்தைத் திருகித் தலைகீழாகத் தரையிலெறிந்தனன்; நானும் அதன் கால்களுக்கிடையில் கழுத்தை நுழைத்துக்கொண்டு அசைவின்றி மடிதனில் மறைந்தவாறே அதனுடன் கூடவே விழுந்தேன்; பூர்வஜன்மத்திற் செய்த புண்ணியத்திற் சிறிது மிகுதியிருந்தமையால் அங்கு காற்றினால் குவிக்கப் பெற்ற இலைச்சிறகுகளினது குவியிலொன்றின் மீது என்னை விழக்கண்டேன்; இதனாலல்லவோ எனது சரீரம் சிதறிப்போகவில்லை! அம் மரத்தின் உச்சியிலிருந்து அவன் இறங்கி வருவதற்குள்ளாகவே, நான் அங்கு இறைந்துகிடந்த இலைச்சிறகுகளுக்கேற்ற நிறமுடையதாயிருந்தது பற்றி, நன்கு காணக்கூடாவுருவத்துடன் கூடியதாய், உயிரிழந்த தந்தையை துறந்துவிட்டு, காதுகனைப்போல், பிராணனைப் பறிகொடுக்கத்தகும் தருணத்திலும் பாலத்தன்மையினால் பிற்காலத்திற் பிறக்கக்கூடிய பிரீதியின் இரஸத்தின் அருமையை யறியாமல், ஜன்மத்திற் கூடவே பிறந்த பயம் ஒன்றிலேயே பிடிக்கப் பெற்று, சிறிது முளைத்திருக்கும் சிறகுகளால் சரீரத்தைச்சற்று தாங்கிக்கொண்டு, இங்குமங்குமாய் தள்ளாடி, யமன் வாயிலிருந்து தப்பி வெளிவந்ததாக எந்தனை யெண்ணிக்கொண்டு, சற்று அருகிலிருந்த பச்சிலை மரத்தின் வேறடியிற் போய் நுழைந்து கொண்டேன்.

அவ்வேடன் அவ்வளவு நேரத்திற்கெல்லாம் இறங்கி, நிலந்த

னில் சிதறிக்கிடந்த கிளிக்குஞ்சுகளின் உடல்களை ஓர் லதாபாசத்தி ஞல் ஒருமிக்கக் கட்டி யெடுத்துக்கொண்டு, அச்சேனைத் தலைவன் சென்ற பாதையில் தானே அதே திசையை நோக்கிப் போயினன். அப்பொழுது ஜீவிதத்தில் ஆசையுண்டானதும், பித்ருமரணத்தினு லுண்டான புதிய துயரத்தினுல் நெஞ்சுவற்றியதும், மிகவும் உயர த்திலிருந்து விழுந்தது பற்றி ஆயாஸமடைந்த சரீரத்தையுடையது மான எந்தனை, தேஹம் அனைத்தையும் தஹிக்கச் செய்யும் பயத்தி னுல் உண்டான த்ராஹம் பரவசமாக்கியது. இவ்வளவு நாழிகைக் கெல்லாம் அப்பாவியானவன் வெகுதூரம் சென்றிருப்பானென நினைத்து, சற்றுத்தலை நிமிர்ந்து பயத்தினுல் சஞ்சலமான கண்களால் திசைகளை யெல்லாம் பார்த்துவிட்டு, புல்லசைந்தாலும் மீண்டும் அவன்தான் திரும்பிவந்தானென, தீச்செயல்புரியும் அவனையே அடி க்கடி நினைத்துக்கொண்டு, அப்பச்சிலை மரத்தின் அடியிலிருந்து வெ ளிவந்து, தண்ணீரிருக்குமிடஞ் செல்ல முயன்றேன்.

இறகுகள் இன்னும் நன்கு முளைக்கவில்லையானதால், அதிக திடமாக நடமாடமுடியாது தலைகீழாகக் கவிழ்ந்து கவிழ்ந்துத் தள் ளாடிக்கொண்டு செல்லுகையில், அடிக்கடி குறுக்காகப் புறண்டு விழும் எனது சரீரத்தை ஒருபுறத்துச் சிறகினுல் தாங்கிக்கொண் டும், நிலத்தின்மீது நடந்துசெல்ல விணுசையுடையதாயிருப்பினும் அதில் அப்யாஸமில்லையானதால், ஓர் அடிவைத்ததும் தலைதூக்கி யிடைவிடாது மேல்மூச்சு விட்டுக்கொண்டு, உடல்முழுதும் புழுதி படிந்து நகர்ந்துசெல்லுகையில் என் மனத்திற் தோன்றியதாவது:— ‘வெகு துன்பப்படும் தசைகளிலுங்கூட உலகில் ஸர்வப்பிராணிகளின் ப்ரவ்ருத்திகளும் உயிரிடத்துமாத்திரம் உபேக்ஷையுள்ளவைகளா யிருப்பதில்லையன்றோ? இஜ்ஜகத்தில் ஜந்துக்களனைத்துக்கும் உயி ரைக்காட்டிலும் உத்தமமான விரும்பக்கூடிய அருமைப்பொருள் வேறொன்றுமிலது. மிகவும் பூஜ்யரான எனது பிதா இவ்வாறு உயிர் துறந்திருக்கையிலும், பழுதடையாப் புலன்களுடன் இன்னமும் இதோ ஜீவித்திருக்கின்றேனே! சீ! கருணையற்றதும், கடோரத் தன்மையதும், நன்றியில்லாததுமான எந்தனைச் சுடவேண்டும். ஒகோ! தந்தையின் கடுமையான மரணசோகத்தைச் சஹித்துக் கொண்டு நான் இன்னும் உயிர்பிழைத்திருக்கின்றேனே! நன்றிகூடப்

பாராட்டப்படவில்லையே! என் நெஞ்சம் வெகு கடுமையான தன்றோ? எனது அன்னை விண்ணுலகமடைந்திருக்க, அத்துயரத்தின் வேகத்தை என்தந்தை யடக்கிக்கொண்டு, வயதுசென்றிருந்தும், என்னையெடுத்து வளர்ப்பதில் வருத்தங்கள் மிகவும் அதிகமாயிருப்பினும் என்னிடம் வைத்த அன்பினால் அவற்றை எண்ணாமலே, அவ்வவ்வுபாயங்களைக்கொண்டு என்னைப்பிறந்த நாள்முதல் பரிபாலித்ததே! அதையெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் மறந்துவிட்டேனே; இப்பிராணன் வெகு அற்பமானதன்றோ? எங்கேயோ போய்க்கொண்டிருக்கும் நமக்கு பேருபகாரம் செய்த தந்தையை யின்னும் இது பின்செல்லவில்லையல்லவா? பலவகையிலும் இவ்வுயிரின்பாலிருக்கும் ஆசையானது எவனையும் மூர்க்கனாகச் செய்யாமலிருப்பதில்லை. இவ்வவஸ்தையிலுங்கூட எந்தனைத் தண்ணீரருந்தும் ஆசை ஆயாஸப்படுத்துகின்றதே! தந்தை யிறந்ததினாலுண்டாகும் துயரத்தை யறியாத எந்தனுக்கு இத்தண்ணீரருந்தும் புத்தியென்பது மிகவும் கன்னெஞ்சுத்தனமென்றே எண்ணுகிறேன். குளக்கரையோ இன்னமும் தொலைதூரமெனத் தோற்றுகிறது; ஏனெனில், ஸாரஸங்களென்னும் நீர்வாழும் பறவைகளின் ஆர்ப்பரிப்புகள் தெளிவற்றவைகளாய் கேழ்க்கப்படுகின்றன. இப்பகற்பொழுதின் தன்மையும் வெகு கடுமையாகவே காண்கிறது. கதிரவனும் வானத்தினுச்சியையடைந்து தனது சுடரொளி வீசும் வெயிலை தீப்பொறிகளது திரள்களைப்போல் இடைவிடாது இறைக்கின்றான்; வெயிலின் பரிசத்தினால் மிக்க சூடுண்ட புழுதி ஜாலங்களையுடையதால், நடக்கக்கூடாத இப்பூமியும் நாவறட்சியை அதிகமுண்டாக்குகின்றது; மிகவும் மிதமிஞ்சிய தாஹத்தினால் சோர்ந்துபோன என் எளிய அங்கங்களுக்குச் சிறிதும் நடமாடத் திறமையேயில்லை; எனக்கு நான் ஸ்வாதீன மிழந்ததாகிறேன். எனது நெஞ்சம் அஞ்சித் துயரமுறுகின்றது; கண்ணும் பஞ்சடைந்துபோகின்றதே! விரும்பாமலிருப்பினும் எந்தனுக்கு இந்தக்ஷணமே இப்பாழுந் தைவம் மரணத்தையளிக்குமோ?'

என்று நான் இவ்வாறாக சிந்தித்துக்கொண்டிருக்கையிலேயே அக்குளத்திற்குச் சற்றுத் தூரத்திலிருக்கும் தபோவனந்தன்னில் வஸிப்பவரான பெருந்தவம்புரிந்த ஜாபாலி யென்கிற முனிவரது

மைந்தனான் ஹாரீதன் என்னும் இருஷிகுமாரனொருவன் அத்தவழியாக அத்தாமரைக் கயத்தில்தானே நீராடவேண்டி வந்தான்; அவனோ, *ஸனத்குமாரன் போல் ஸர்வவித்தைகளாலும் சுத்தமான தனது சித்தத்தையுடையவன்; தனக்கீடான பிராயம் வாய்ந்த வேறு தாபஸகுமாரர்களால் அவன் பின்தொடரப்பட்டிருந்தான்; ஸகல சிற்றின்பங்களின் அநுபவத்தையும் அகற்றியதற்காக ஏற்படுத்திய (மனம், வாக்கு, காயம் இவைகள் ஸம்பந்தமான) மூன்று ஸத்தியக்குறிகள் போன்ற மூவ் விபூதிக்கோடுகளிட்டு, அவனது அகன்ற நெற்றியானது அலங்கரிக்கப் பெற்றிருந்தது; செந்நெற்ருனியங்களின் ஆஹாரப்பிடிகளால் வளர்க்கப்பட்டுப் பழக்கமுண்டானதும், தனது கொம்பு முனையாற் கொந்திப் பெயர்க்கப்பட்ட † ஸ்நானமிருத்திகையைச் சுமந்துகொண்டு வருகின்றதுமான தபோவனத்திலிருக்கும் மானொன்று அவனைப் பின்பற்றியது.

பெரும்பாலும் ஸத் புருடர்களது சித்தங்கள் எப்பொழுதும் சாரணமேதுமின்றி நேசப்பான்மை பொருந்தியனவாகவும், மிக்க இரக்கமுள்ளனவாகவும் அல்லவா இருக்கின்றன? ஏனெனில், நான் அத்தகைய நிலைமையிலிருப்பதை அவன் கண்டு இரக்கமுற்று, அருகிலிருந்த இருஷிகுமாரர்களில் ஒருவனை நோக்கி இங்ஙனமுரைத்தனன்:— 'இறகுகள் முளைக்காத இக்கிளிக்குஞ்சு எங்ஙனமோ இம்மரத்தினுச்சியிலிருந்து தவறிவிழுந்துவிட்டது; அல்லது பருந்துவாயிலிருந்தாவது இஃது நழுவி விழுந்திருக்கவேண்டும்; ஆம்; இது மிகவும் உயரத்திலிருந்து வீழ்ந்திருப்பதால் சிறிது மிகுதியான ஜீவனையுடையதாகக் கண்களை மூடிக்கொண்டு அடிக்கடி தலைகிழாகக் கவிழ்ந்து வீழ்கின்றது; அடிக்கொருமுறை அதிகமாய்ப் பெருமூச்சு விடுகின்றது; பன்முறை தனது அலகைத் திறக்கின்றது; தன் தலையைத் தான் தாங்கிக்கொள்ளச் சக்தியற்றிருக்கின்றது; ஆகையால் உயிர் துறப்பதற்குள்ளாகவே இதை வந்து எடுத்துக்கொண்டு தண்ணீருக்கு அருகிற்கொண்டுபோய் விடுவாயாக.' எனக் கூறி, என்தனை அவனைக்கொண்டு குளக்கரையை யடைவித்தனன். தண்ணீருக்கு அருகிற் சென்றதும், தானாகவே என்னை யேந்திக்

---

* ஸனத்குமாரன் = பிரம்மதேவனது புதல்வன்.
† ஸ்நானம் செய்யும்போது வைதிகர் உபயோகிக்கும் மண்.

கொண்டு முற்றிலும் சக்தியற்ற எனது முகத்தை நிமிர்த்தி, விரலால் சிறிது நீர்த்துளிகளைப் பானம்பண்ணி வைத்தனன்; பின்பு தண்ணீரையும் உடல்மீது தெளிக்கவே, புதியதாகப் பிராணனையடைந்த எந்தனை தீரத்தின் ஓரந்தனில் படர்ந்திருந்த தாமரையிலையின் குளிர்ந்த நிழலில் விட்டுவிட்டு, முறைப்படி நீராட்டம் அனுட்டித்தனன். நீராட்டம் நிறைவேறியதும், அப்பொழுதே புதிதாகப் பறித்த செந்தாமரைப் பூக்களுடன் கதிரவக்கடவுளை நோக்கித் தலை நிமிர்ந்து அர்க்கியப் பிரதாநம் செய்தருளிக் கரையேறினன்; பின்னர் சுத்தமாக வெளுத்த மரவுரியை தரித்தவனாய், என்னை யெடுத்துக்கொண்டு மெல்லெனத் தபோவனம் நோக்கிச் சென்றனன்.

சற்றுத்தூரம் சென்றதும், மற்றொரு பிரம்மலோகம் போன்ற மிகவும் அழகான ஓர் ஆச்ரமத்தைக் கண்டேன்; அது எக்காலத்தும் கனிகளாலும் பூக்குலைகளாலும் பூர்ணமானவைகளும், அதர்மங்களுக்குண்டான கேடுகளைக் குறிக்கும் விண்மீன்களது வர்ஷம்போல் வாயுவினால் அலைக்கப்பெற்ற வெண்மையான மலர்களின் திரள்களைச்சொரிவதுமான கானகங்களால் திசைகடோறும் தழுவப்பட்டிருந்தது; இடைவிடாது நெய்யினால் இடப்படும் ஹோமங்களால் மனங்களித்து, தபோதனர்களை தேஹத்துடன் தைவலோகம் ஏற்றிவைக்கக் கருதியவைகளான அக்கினிகளால் தூண்கள்போல் எழுப்பப்படும் தூமங்களென்னும் வியாஜத்தால் விண்ணுலகப் பாதையிற் செல்லுமாறு அமைக்கப்படும் படிகளின் அணியையுடையதுபோல் அவ்வனம் காணப்பட்டது; அங்கு இடைவிடாது செவியுறப்படும் வஷட்கார மந்திரங்களை * சுககுலங்கள் ஓயாமல் உச்சரித்துக் கொண்டிருந்தன; கிழவரும் கண் தெரியாதவருமான முனிவர்களை அங்கு பழக்கமுடைய வாநரங்கள், கைகொடுத்து ஆச்ரமங்களுக்கு உள்ளிருந்து வெளியிலும், வெளியிலிருந்துள்ளேயும் அழைத்துச் சென்றுகொண்டிருந்தன; அதிதிவர்க்கங்கள் அங்கு அதிகமாயுபசரிக்கப்பட்டனர்; சிராத்தச்சடங்குகள் சிரத்தையுடன் செய்யப்படுகின்றவையாயிருந்தன; யஞ்ஞவித்தைகள் விரித்துரைக்கப்பட்டு வந்தன; தர்மசாஸ்திரங்கள் தர்க்கிக்கப்பட்டன; பற்பல நூல்கள் படிக்கப்படலா

* வஷட்காரமந்திரங்கள்=ஹோமம் பண்ணுகையில் ஓதப்படும் பிரார்த்தனைச் சொற்கள்.

யின; சாஸ்திரங்களனைத்தின் பொருள்களும் ஆராய்ச்சி செய்யப்பட்டன; அவ்வாச்ரமம் முன்பு கலிகாலத்தினுற் காணப்படாதது; அஸத்தியமென்பது அங்கு அபரிசிதமானது; காமவிகாரமோ காதாலும் கேழ்க்கப்படாதது.

அங்கு, மாசுமறுவென்பது ஹோமஞ்செய்வதால் அக்கினியிலிருந்து கிளம்பும் தூமங்களிலன்றி ஒழுக்கங்களில் இல்லை; முசச்சிவப்பு சுகங்களிடமல்லாது சினங்களிற் கிடையா; தீக்ஷ்ணத்தன்மையென்பது தர்பமுனைகளிலன்றி சுபாவங்களிற் காணப்படவில்லை; சபலத்தன்மையானது கதளீதளங்களிலல்லாது சித்தங்களிற் கிடையா.

இத்தகைய அவ்வாச்ரமத்தின் மத்தியபாகத்தை அலங்கரிக்கச் செய்யும் ஓர் ரக்தாசோகமரத்தின் அடிநிழலில் வீற்றிருக்கும் மஹாமஹிமைதங்கிய ஜாபாலி யென்னும் முனிவர் ஒருவரைக் கண்டேன். அவர் வெகு நீண்டு நரைத்துப்போன உரோமச்சடைகளால் தைவலோகமேறுவதற்கு ஸம்பாதிக்கப்பெற்ற புண்ணிய நூற்கயிறுகளுடன் கூடியவர்போல் விளங்கினர்; வெகு சபலங்களான இந்திரியங்களாகும் குதிரைகளை உள்ளேயடக்கிக்கட்டும் வடக்கயிறுகள்போல் நீண்டு படர்ந்திருக்கும் நாடி நரம்புகளால் அவரது கண்டம் கவியப்பெற்றிருந்தது; தனது திடத்தன்மையை (மனோதைரியம்) பெருங்குன்றங்களுக்கும், காம்பீர்யத்தைக் கடல்களுக்கும், காந்தியைக் கதிரவனுக்கும் பகுத்திடுபவர்போல் பார்க்கப்பட்டார்.

அவரைத் தரிசித்ததும் யான் இவ்வாறு ஆலோசிக்கலானேன்:— 'ஓ! தவங்களின் மஹிமை மிக்க வியக்கத்தக்கது; இவரது மூர்த்தியானது மிகவும் சாந்தமாகக் காணப்படினும், பழுக்கக்காய்ச்சிய பத்தரைமாற்றுத் தங்கம்போல் பிரகாசமாயிருப்பதால், பளபளவென்று மின்னும் மின்னற்கொடிபோல் இது கண்ணைப் பறிக்கின்றதே! எப்பொழுதும் உதாஸீநமாக (ஒன்றிலும் பற்றுப்பகையற்று) இருப்பினும், மஹாமஹிமை வாய்ந்திருப்பதால், முதலில் நாடுபவர்க்கு அச்சத்தை அதிகம் அளிக்கின்றார்போலும்; சொற்பதவம் புரிந்த தாபஸர்களின் ஒளியே எப்பொழுதும் இயற்கையாகவே தாங்கக்கூடாதது; புவனமனைத்தாலும் பணியப்பெற்ற பாதங்களையுடையவரும், அனவரதமும் தவம்புரிவதால் மாசற்றவரும், உலகமனைத்

தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோற் காண்பவரும், பாவங்களை யெல்லாம் பார்த்தவுடன் பறக்கச் செய்பவருமான இத்தகைய மஹா மஹிமைவாய்ந்த இவரது பேரொளியானது பொறுக்கக்கூடாத தென்பதைக் கேழ்க்கவும் வேண்டுமோ? மாமுனிவரது திருநாமங் களைக் கீர்த்தனம் பண்ணுவதே புண்ணியமாம்; தரிசனம் செய்வதிற்கூறவும் வேண்டுமோ? இம்மஹானை அதிபதியாகவுடைய இவ்வாச்ரமம் வெகு பாக்கியம்செய்தது; ஆனால், மேதினிக்கே நான்முகனாய் விளங்கும் இம்மாமுனிவர் வீற்றிருப்பதுபற்றி அகண்ட பூமண்டலமுமே பாக்கியம்பெற்றது. இவ்விருடிகளல்லவோ புண்ணியவான்கள்? எனெனில், வேறு வேலைகளேதுமில்லாது அல்லும் பகலும் இவர்கள் இமைகளசையாமல் இம்மஹானது திருமுகமண்டலத்தையே கண்ணுற்றவர்களாக புண்ணிய கதைகளைக காதாற் கேட்டுக்கொண்டு, மற்றொரு பிரம்மதேவன் போன்ற இம் மஹர்ஷியைப் பணிந்துகொண்டிருக்கின்றனரல்லவா? நான்முகனது வதனகமலங்களில் வஸிப்பவையான வேதங்கள் நான்கும், வெகு நாட்களாக வேறோர் உசிதமான இவ்விரண்டாவது இடத்தையும் தேடிக்கொண்டன. கலிகாலத்துக் கடுஞ்செயல் யாவையும் பறக்கடித்துப் பல வகையிலும் நிலையாய்க் குடிகொண்டிருக்கும் மேன்மைபொருந்திய தர்மமானது, கிருதயுகத்தை நிச்சயமாய் நினைக்கச்செய்வதேயில்லை. இவ்வவனியின்கண் இம்முனிவர் வீற்றிருக்கக்கண்டு, ஸப்தருஷிகளின் மண்டலம் தன்னிடம் வஸிக்கப்பெற்றிருந்த பெருமையை உண்மையாய் வானம் இப்பொழுது வஹிக்கவேயில்லை. பெரும்பாலும் மஹாபூதங்களது சுடரொளிகளும் தாங்கமுடியாதவைகள்; இவரோ தேஜஸ்விகளுக்கெல்லாம் முதன்மையானவர். இம்மஹாத்மாவால் ஆச்ரயிக்கப்பெற்ற உலகமானது இரண்டு சூரியன்களையடைந்ததுபோற் பிரகாசிக்கின்றது. இம்மஹான் தயாரஸப்பெருக்கு; ஸம்ஸாரக் கடலைக்கடக்கும் ஸேது; பொறுமையாகும் நீருக்குப்பொருந்திய ஆதாரம்; ஆசைகளென்னும் கொடிகளின் அடவிக்குக் கோடரி; அஞ்ஞானமாகும் அந்தகாரத்திற்கு ஆதித்தன்; நல்லொழுக்கங்களுக்குக் குடியிருக்கும் வீடு; மங்களங்களுக்கெல்லாம் ஆலயம்; கலிகாலத்திற்கு எதிரி; தவத்திற்கு நிதி; ஸத்தியத்திற்கு ஸகா; நேர்மையான நெறிக்கு இருப்பிடம்; புண்ணிய ஸமூஹத்திற்

குப் பிறப்பிடம்; சிற்றின்பங்களுக்குச் சற்றும் வசப்படாதவர்; மற்றும் பலஸௌகங்களுக்கும் பராமுகமானவர். வெகு பூஜ்யரான இவரது அருளாற்றான் இத்தவஞ்செய்யுஞ்சோலை பகையைப் பரிஹரித்ததும், பொறாமையைப் போக்கியதுமாயிருக்கின்றது; ஓ! மஹாத்மாக்களுக்கு என்ன மஹிமை! இங்கு விவேகமற்ற விலங்குகளுங்கூடச் சாச்வதமாகத் தங்களிடமிருக்கும் இயல்பான பகைமையைப்பரிஹரித்து, மிகவும் அமைதியான சுபாவத்தைப் பெற்றவைகளாய்த் தபோவனந்தன்னில் தங்கி வஸிக்கும் ஆனந்தத்தை யனுபவிக்கின்றன; ஆம்; இதோ நாகமொன்று, வெயிலால் வாட்டப்பட்டு மயிலினது தோகைக்குள் அஞ்சாமற் பதுங்குகின்றது; இதோ மான்குட்டியொன்று, தன் தாயை விட்டுவிட்டுப் பிடரிமயிர் படராத சிங்கக்குட்டிகளுடன் கூடிப் பரிசயம்பெற்று, நன்கு சுறப்புண்டு பெருகும்பாற் பெருக்குடையதான சிங்கப்பேட்டின் முலையை யுண்ணுகிறது.'

என்று இவ்வாறுகச் சிந்தித்துக்கொண்டேயிருக்கும் எந்தனை அதே அசோகமரத்தின் அடிநிழலில் ஒருபக்கத்தில் விட்டுவிட்டு, ஹாரீதன், தனது தந்தையின் பாதங்களைத் தொட்டுத் தொழுதுவிட்டு, அவருக்குச் சற்றுத் தூரத்திலிருந்த தர்பாஸனமொன்றிற் சென்று அமர்ந்தனன். என்னைப்பார்த்து அங்கிருந்த முனிவர் யாவரும் அங்குட்கார்ந்த ஹாரீதனை நோக்கி 'இக்கிளிக்குஞ்சு எங்கிருந்து கொண்டுவரப்பட்டது?' என வினவர். அவர்களை நோக்கி இவன் இங்ஙனம் விடையளித்தனன் :— 'நான் நீராடுவதற்கு இங்கிருந்தேகுகையில், தாமரைக் குளக்கரையிலிருக்கும் மரத்தின் கூட்டிலிருந்து விழுந்ததும், நெடுந்தூரமிருந்து விழுந்ததால் மிக்கக்களைத்த தேஹத்தை யுடையதுமாயிருந்த இக் கிளிக்குஞ்சை மிகவும் அற்பமாய் மிகுந்திருந்த ஆயுளையுடையதாகக் கண்டெடுத்தேன்; அத்தருவின்மீது தாபஸர்கள் ஏறமுடியாதானதால், இதைத் தன் கூட்டில் ஏற்றிவைப்பதியலாதெனக் கருதி மனமிளகிய யான் இதையிங்கு எடுத்துவந்தேன்; ஆகையால் இன்னும் நன்கு இறகுமுளையாத இது, ஆகாயத்தில் எழும்பிப்பறக்குந் திறமை வருகிறவரையில் இவ்விடத்தில்தானே ஓர் ஆச்ரமவிருக்ஷத்தின் பொந்தில் வைக்கப்பட்டு, முனிகுமாரராலும் நம்மாலும் கொண்டுவந்து போடப்படும்

செந்நெலரிசியின் நொய்ப்பொடிகளாலும், கனிகளின் இரஸங்களா லும் வளர்க்கப்பெற்றுப் பிழைத்து வரட்டும்; அநாதபரிபாலனமென் பது எம்மைப்போன்றவரது கடமையல்லவா? நன்கு சிறகுகள் முளைத்து வானத்திற் சஞ்சரிக்கும் வல்லமை வந்துவிட்டதானல் இது தன்மனத்துக் கிசைந்த விடத்திற்குப் பறந்து போகட்டும்; இல்லையேல், பழக்கமுண்டானதாய் இவ்விடத்திலேயே இருந்தாலும் இருக்கட்டும்.' என்று இதுமுதலிய என்னைப்பற்றிய ஸம்பாஷணை யைச் செவியுற்று, சற்றுக் குதூஹலமடைந்தவரான மேன்மைதங் கிய ஜாபாலியானவர், சிறிது கழுத்தைத்திருப்பி மிகவும் சாந்தமான தனது திருஷ்டியினல் என்னை நோக்கிவிட்டு, நெடுநேரம் எதையோ நினைவுக்குக் கொண்டுவருபவர்போல் பலமுறை பார்த்து, 'தன் அவிநயத்தின் பயனையே இஃது அனுபவிக்கின்றது.' என மொழி ந்தனர். முக்காலங்களையும் காணவல்ல மஹா பிரபாவசாலியான அம்முனிவரோ, தவத்தின் பெருமையாற் பெற்ற திவ்யதிருஷ்டியி னல் உலகம் அனைத்தையும் உள்ளங்கையில் இருப்பதுபோற் காண் கிருர்; கடந்துபோன ஜன்மாந்தரங்களை யறிகிருர்; இனிவரும் விஷ யத்தையுங்கூறுகிருர்; அவரது மஹிமையையறிந்தவரான அச்சபை யிலிருந்த தாபஸர்கள் எனையோரும் 'இஃது எங்கு எதற்கு எத்த கைய அவிநயத்தைச்செய்தது? முன் ஜன்மத்தில்தான் இது எப்பிற ப்பாகவிருந்தது?' என்று தெரிந்துகொள்ள மிகவும் ஆவலுள்ளவர்க ளாயினர்; பின்பு அம்மஹானுபாவனையும் அவர்கள் வணக்கத்துட ன் இவ்வாறு வினவினர்:—'ஐயன்மீர்! அருள்புரிந்து அனுக்கிரஹத் துடன் மொழிந்தருள்வீர்களாக; எவ்வகைத்தான அவிநயத்தினு டைய பலன் இதனல் இப்பொழுது அனுபவிக்கப்படுகின்றது? பூர்வ ஜன்மத்தில் இது யாராகவிருந்தது? பக்ஷி ஜாதியில் எங்ஙனம் இதற்கு ற்பத்தி? இதன் பெயர் யாது? எமதாவலைத் தீர்க்கவேண்டும்; விசே ஷ வல்லமைவாய்ந்த தாங்கள் அகில ஆச்சரியங்களுக்கும் ஆதார மாகிறீர்கள்.'

இங்ஙனம் அத்தபோதனச் சங்கத்தால் வேண்டப்பெற்ற அம் மாமுனிவர் மறுமொழி கூறியதாவது:—'வியக்கத்தக்க இவ்விஷய மோ மிகவும் விஸ்தாரமாகச்சொல்லவேண்டியதானது; பகற்பொழுதோ இன்னும் சொற்பந்தான் மிகுதியாயுளது; நமக்கு நீராடும் நேரமும்

நெருங்கிவிட்டது; தேவதார்ச்சனைகளைச் செய்யக்கூடிய வேளை உங்களுக்கும் அதிக்கிரமித்துவிடுகின்றது; ஆனதுபற்றி நீங்கள் எழுந்திருங்கள்; அனைவருமே மத்தியான்னச் சடங்குகளை முறைப்படி யனுட்டிப்பீர்களாக; மாலைப்பொழுதில் அமர்ந்துட்கார்ந்து கேழ்க்கும் உங்களுக்கு, இதுயார்? ஜன்மாந்தரத்தில் இதனால் யாது செய்யப்பட்டது? இவ்வுலகத்தில்தான் இதற்கு எவ்வாறுற்பத்தி?— என்கிற யெல்லாவற்றையும் ஆதிமுதல் எடுத்துறைக்கப் போகின்றேன்; இதற்கும் ஆஹாரமூட்டி ஆயாஸந்தீரச் செய்யுங்கள்; நிச்சயமாய் இதுவும் தனது ஜன்மாந்தரச் செய்தியனைத்தையும் யான் கூறிவருகையில்தானே, கனவுதனிலறிந்ததுபோல் நினைத்துக் கொள்ளப் போகின்றது.' என்று மொழிந்துகொண்டே எழுந்து, மற்ற முனிவருடன் விதிப்படி நீராடி, மற்றும் மத்தியான்னத்திற் செய்யவேண்டிய சடங்குகளை யனுட்டித்தார்.

இவ்வளவு நேரத்திற்கெல்லாம் பகற்பொழுதும் போயிற்று; தினகரனும் மேல்திசைக்கடலின் தண்ணீரின்கண் விழ, அவ்வீழ்ச்சியின் விசையால் உயரக்கிளம்பிய நீர்த்திவலைகளின் திரள்போல் தாரகைக்கூட்டம் வானத்தில் உதித்தது; அந்திப்பொழுதும் அந்தத்தையடைய, அதன் அழிவால் துயரமுற்ற இரவானது கருநிறமான மான்தோலைப் போர்த்துக்கொண்டதோ வெனத் தோற்றும்படி புதிதாயிருள் வந்து கவிந்துகொண்டது. முனிஜனங்களது மனதுகளைத் தவிர்த்து மற்றெல்லாவற்றையும் அந்தகாரம் நன்கு அணைந்துகொண்டது. உதிக்குந் தருணத்திலிருக்குஞ் சிவப்பெல்லாம் நீங்கிய சந்திரபிம்பமானது ஆகாயகங்கையில் அமிழ்ந்து முழுகியதால் ஸிந்தூரங்களெல்லாம் கழுவப்பெற்ற ஐராவதத்தின் கும்பஸ்தலம்போல் அந்தக்ஷணத்திற் காணப்பட்டது. பனித்திரளைப்பொழிந்துகொண்டு சந்திரபகவானும் சற்றுத்தூரத்தில் உதித்துத்தோன்ற, அமுதத்துகள்களின் படலம்போன்ற நிலவுனல் உலகெங்கும் வெண்மையாக்கப்பெற்றிருக்க, இரவில் அரையாமம் கழிந்தவுடனே, ஹாரீதன், உணவுகளையுண்டு, என்தனை யேந்திக்கொண்டு, அந்த முனிவர் குழாமனைத்துடனும் கூட நிலவுனல் நன்கு துலங்கும் அத்தபோவனத்தின் ஓர் பாரிசத்தில் வேத்திராஸனத்தின்மீதுவீற்றிருக்கும் தனது தந்தைக்கு அருகிற் சென்று செப்பியதா

வது :— ‘ தந்தையே! வெகு விந்தையான விஷயத்தைச் செவியுறு வதில் ஆவலுள்ள அந்தரங்கத்துடன் கூடியவரான இந்த முனிவர் அனைவரும் வந்து இங்கு வட்டமிட்டவராய்க் காத்துக்கொண்டிருக் கின்றனர்; இச்சிறிய பறவையும் களைப்பாற்றி வைக்கப்படலாயி னது; ஆகவே, முந்திய ஜன்மந்தன்னில் இதனால் செய்யப்பட்டது யாதெனவும், யாராகவிருந்ததென்றும், இனி எவராக ஆகப்போ கிறதென்பதையும் எமக்கு மொழிந்தருள்வீர்களாக,’ என்று இவ் வாறு அவனால் வினவப்பட்டதும், அம்மாமுனிவர் முன்புறத்திலி ருக்கும் என்னைக் கண்ணோக்கிவிட்டு, அம்முனிவர்கள் அனைவரும் ஒரே மனத்தராய் கதாச்ரவணம் செய்யப்போவதில் ஆவலுள்ளவர் களாயிருப்பதையும் அறிந்துகொண்டு, மெதுவாகச்சொல்ல வாரம் பித்தார் :— ‘ ஆவலிருப்பின் செவியுறுவீர்களாக.’

“ அவந்திதேயந்தன்னில், மூவுலகுக்கும் திலகம்போன்ற தும், விண்ணுலகத்தின் ஒளியைவென்றதுமான உஜ்ஜயினீ எனப் பெயர்பெற்ற நகரம் ஒன்றுளது. அது மஹாகாளனென்னும் நாம தேயம்வாய்ந்த மேன்மைதங்கிய சிவபெருமானால் தனது வாஸத்தி ற்குத் தகுந்தவாறு படைக்கப்பெற்ற மற்றொரு மேதினியோவென த்தோற்றும். இரண்டாம் பூமண்டலமென்று மயங்கிவந்த ஸமுத் திரம்போன்றதும், பாதாளமட்டும் ஆழமுள்ள தண்ணீர் நிரம்பியது மான அகழியினால் அது சூழப்பெற்றிருக்கின்றது. ஆகாயத்தை யளாவிய கொடிமுடிகளுடன் கூடியதும், சுண்ணப்பூச்சினால் வெளு த்ததுமான சுற்றிலுமிருக்கும் மதிலானது சிவபெருமான் வீற்றிருக் கின்றாரென்னும் அன்பால் வந்திருக்கும் கைலயங்கிரியோவெனப் புலப்படும். சங்குகள், முத்துச்சிப்பிகள், முத்துகள், பவழங்கள், மரகதக்கற்கள், மற்றும் பற்பல இரத்தினங்களின் குவியல்களுடன் கூடியவைகளும், தங்கத்துகள்களாகும் மணல்களின் இராசிகள் பரப் பப்பெற்றவையும், அகத்தியமாமுனிவரால் நீரனைத்தும் அருந்தப்ப ட்டு வற்றிப்போன கடற்றரைகளோவெனக் கூடியவைகளுமான வெகு நீண்ட பெருங்கடைவீதிகள் ஆங்கு விளங்குகின்றன. அனவரதமும் நடைபெறும் வேதமோதும் கோஷத்தினால் அந்நகரம் களங்கமற்றிருக்கிறது. அது சிப்ரா யென்னும் நதியொன்றால் சூழப்பெற்றது. உலகமெங்கும் புகழ்பெற்றவர்களும், மைனாகமே

ன்னும் மலைபோல் பக்ஷபாதத்தை* யறியாதவர்களும், ஜைனதர்மம் போல் ஜீவன்கள்பால் இரக்கமுள்ளவரும், தானமளிக்குந்தன்மை யரும், வெகு திறமைவாய்ந்தவரும், யாவரிடமும் முன்னதாகவே புன்சிறிப்புடன் பேசுங்குணமுடையவரும், தேசபாஷைகளெல்லா வற்றையும் கற்றவரும், சாஸ்திரங்களில் ஆசையுள்ளவரும், ஸுபா ஷிதங்களில் ஆவலுள்ளவருமான வேச்யாஜனங்கள் அங்கு வஸிக் கின்றனர். மேலும் அது மாடகூடங்களால் மலைகளுடன் கூடியது போலவும், பெரும் கிருஹங்களால் கிளைப்பட்டணங்களுடன் கூடி யிருப்பதுபோலவும், கருடனது மூர்த்திபோல் அச்யுதஸ்திதியால்‡ வெகு நேர்மையாகவும் காணப்படுகிறது.

இந்நகரத்தில் மாடங்கள், இரவுகடோறும் வாயுவால் சலிக்கப் பெற்று அழகாய் அசங்கும் தளிர்கள்போன்ற வெண்பட்டுத் துவ ஜங்களாகும் கைகளை, மாளவதேயத்து மாதர்களது தாமரைமலர் போன்ற முகங்களின் அழகைக்கண்டு வெட்கங்கொண்ட சந்திரனு டைய மாசைத்துடைப்பதற்காக உயரத் தூக்கியனபோல் தோற்று கின்றன. இங்கு ஸுராஸுரர்களது சூடாமணிகளின் ஒளிகளால் பரிசிக்கப்பெற்ற தனது பாதங்களின் நககாந்தியையுடையவரான மஹாகாளனெனப் பெயர்பெற்ற பகவானான மஹாதேவனானவர் கைலையங்கிரியில் வஸிப்பதிலும் வாஞ்சையற்றவராய் பிரத்யக்ஷ மாய் தாம் வந்து வஸிக்கின்றனர்.

இவ்வகைத்தான அந்நகரத்தின்கண் நள நஹுஷ யயாதி துந் துமார பரத பகீரத தசரதர் முதலியவருக்கு ஒப்பானவனும், மூவ் வகைச்சக்திகளின்† பயனைப் பெற்றவனும், நீதி நூல்களைக் கசடறக் கற்ற மதிநலம் வாய்ந்தவனும், தர்மசாஸ்திரங்களோதி யுணர்ந்த வனும், சாந்தமான காந்தியாலும், சரீரத்தின் சுடரொளியாலும் சந் திர ஸூர்யர்களிருவர் குணமும் பொருந்தியிருப்பதால் அவர்களோ டொப்ப மூன்றுவனெனத் தோற்றுபவனும், தசரதர்போல் ஸுமித்

---

* பக்ஷபாதம்=ஒரு சார்பான அன்பு, சிறகுகளின் வீழ்ச்சி.

‡ அச்யுதஸ்திதி=நழுவவிடாத ஒழுக்கம், திருமாலின் இருப்பு.

† மூவ்வகைச்சக்தி=பிரபு சக்தி, மந்திரசக்தி, உத்ஸாஹசக்தி.

திரோபேதனும்†, மஹேச்வரன்போல் மஹாஸேனனுஸ்ருதனும்‡, தர்மதேவதையின் அவதாரம் போன்றவனும், பரம புருஷனான நாராயணனுக்குப் பிரதிநிதியெனத் தகுந்தவனும், பிரஜைகளின் பீடைகளைப் பரிஹரிப்பவனுமான **தாராபீடன்** என்னும் அரசன் ஒருவன் இருந்தனன்.

இரதிதேவியினது புலம்பல்களால் இரக்கங்கொண்ட இருதயத்தையுடையவரான பரமசிவனால் படைக்கப்பெற்ற மற்றொரு மன்மதனெனவே மானிடரனைவரும் இவனை யெண்ணலானார்கள்; இவனது சரித்திரத்தை ஜனங்கள் தங்களது பாக்கியப்பெருக்கைப்போற் செவியுற்றனர்; உபதேசமொழியைப் போல் ஏற்றுக்கொண்டனர்; மங்களத்தைப்போல் வெகுமானித்தார்கள்; மந்திரத்தைப்போல் ஜபித்தனர்; சாஸ்திரவசனங்களைப் போல் மறந்தார்களில்லை.

அவ்வேந்தனுக்கு, சாஸ்திரம் கலைகள் இவற்றில் ஆழ்ந்த பேரறிவு பொருந்தியவனும், சிறு பிராயமுதல் சிறப்புடன் செழித்தோங்கிய அளவற்ற அன்பார்ந்தவனும், நூல்களிற் செப்பியவாறு நீதிகளைப் பிரயோகிப்பதில் மிக்க திறமைவாய்ந்தவனும், மிக ஸங்கடமான பெருஞ்செயல்களிலும் அஞ்சாத நெஞ்சத்தையுடையவனும், தைரியத்திற்குத் தங்கும் அகம்போன்றவனும், ஒழுக்கத்திற்கு இருப்பிடமானவனும், காரியங்களிலெல்லாம் மிகவும் ஊக்கமுள்ளவனும், ஸத்தியத்திற்கு அணைபோலவும், தர்மத்திற்குப் பிரம்மதேவன் போலவும், இந்திரனுக்குப் பிரஹஸ்பதி போலவும், தசரதருக்கு வஸிஷ்டர் போன்றவனுமான **சுகநாஸன்** என்னும் ஓர் அந்தணன் அமைச்சனாகவிருந்தனன்.

நாற்கடல்களாகும் அகண்டமான அகழிகளால் சூழப்பெற்ற இவனது தரணிதன்னில் ஆயிரக்கணக்கான சாரபுருடர்கள் எங்கும் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பதால், அகத்தினுள் நடைபெறும் விருத்தாந்தம்போலவே, இம்மேதினியில் அகில அரசர்களுடையவும்

---

†ஸுமித்திரோபேதன்=நல்ல தோழர்களுடன் கூடியவன், ஸுமித்திரையென்பவளோடு கூடியவர்.

‡மஹாஸேனனுஸ்ருதன்=பெரும்படையாற் பின்செல்லப்பட்டவன், ஸுப்ரம்மண்ணியரால் அனுஸரிக்கப்பட்டவர்.

மூச்சுவிடுதலுங்கூட தினந்தோறும் இவனுக்குத் தெரியவராம லிருந்ததில்லை.

அவ்வேந்தனே இளமைப்பருவத்திலேயே ஐராவதமென்னும் ஆனையினது துதிக்கைபோல் திரண்டுருண்டு நீண்டதும், இராஜ லக்ஷ்மியின் விலாஸத்திற்கேற்ற தலையணைபோன்றதுமான தனது புயத்தினல் ஸப்தத்வீபங்களால் சூழப்பெற்ற ஸகல பூமியையும் வென்று, தன் தோழனுக்கொப்பான அச்சுகநாஸனென்னும் மந்திரி யினிடத்தில் இராஜ்யபாரத்தை யேற்றிவிட்டு, பிரஜைகளையெல் லாம் குறையின்றி ஸுகமாகவிருக்கச்செய்து, இப்புவியின் பாலனத் தொழிலிலிருந்து சற்றொழிந்தவனாய், பெரும்பாலும் உலகவாழ்க் கையிலுண்டான இன்பங்களையனுபவித்து வந்தான்.

சுகநாஸனும், மஹத்தான அவ்விராஜ்யத்தைத் தனது அறி வின் பலத்தினல் ஆயாஸமேதுமில்லாமல் ஆண்டுவந்தான்; பிரஜை களின் அன்பை இரட்டிக்கச்செய்து, இராஜ்யகாரியங்களை யரசன் அனுஷ்டித்தவாறே இவனும் நிறைவேற்றிவந்தான்.

அமைச்சனிடம் இராஜ்யபாரத்தை யமர்த்திவிட்டு, வாலிபப் பருவத்திற்கேற்ற இன்பங்களையனுபவித்துக்கொண்டு அவ்வரசன் இங்ஙனம் சில காலத்தைக்கழித்தனன்; அன்றியும், நாளடைவில் வெகுவாய் ஜீவலோகத்திலுண்டான ஸுகங்களனைத்தின் கரை யையுங் கண்டவனானன்; ஆனல் மைந்தனது முகத்தைக் காண்ப தாலுண்டான ஸுகமொன்றைமாத்திரம் அவன் பெறவில்லை. யௌவனப்பருவம் கழிந்துபோகப் போக, தன் மனோரதமும் வரவர வீணாய்விடுவதைக் காணுமிவனுக்குப் புதல்வனைப் பெறாத தாலுண்டான மனக்கொதிப்பும் மேன்மேலும் பொங்கி யெழும்பி யது. பூபதிகள் பல்லாயிரக்கணக்காய்ப் பக்கத்திற் சூழ்ந்திருந்தும் துணையற்றவனைப்போலவும், கண்களிருந்தும் அந்தகனைப்போல வும் தன்னையெண்ணலானன்.

அவ்வரசனுக்கு மூவ்வுலகத்திற்கும் ஆச்சரியத்தை யளிப்பவ ளும், அகில அந்தப்புரத் தேவிமார்களுள் முதன்மையானவளுமான விலாஸவதீ யென்று புகழ்பெற்ற பட்டமஹிஷியொருத்தி இருந்த னள்; அவள் திருமாலின் மார்புக்கு கௌஸ்துபமணியின் ஒளிபோல

வும், சந்திரனுக்கு நிலவு போலவும், மலயமலைக்குச் சந்தனவடவியின் பந்திபோலவும், சேஷனுக்குப் படத்திலிருக்கும் மாணிக்கக் காந்தி போலவும் அப்பூபதிக்குப் பூஷணம்போல் அமைந்திருந்தனள்.

ஒருநாள் அம்மஹீபதி அவளிருக்கும் அகத்தினுட் சென்றான்; அங்கு ஆபரணமேதும் அணிந்துகொள்ளாதவளாய் அம்புயமலர் போன்ற தனது வதனத்தை இடது கரதலத்தில் சாய்த்து வைத்துக் கொண்டு, இடைவிடாது சொரியும் கண்ணீர்ப் பெருக்கினால் வெண் பட்டாடையும் நனைய, வெகு நெருக்கமான சிறியதோர் மஞ்சத்தின் மீதுட்கார்ந்தபடி அவள் அழுதுகொண்டிருக்கக் கண்டான்; பணி விடைசெய்பவர் பலர், சிந்தையுடன் கண்களசையாமல் துயரத்தி னால் வாய்ப்பேச்சின்றி வரிசையாய்ச் சூழ்ந்திருந்தனர்; அந்தப்புரத் துக் கிழவிமார்கள், ஆங்கு சற்றுத் தூரத்தில் இருந்துகொண்டு அவ ளைத் தேற்றிக்கொண்டிருந்தனர்; அவளது முன்னெற்றி மயிர்கள் கோதி முடியப்படாமலே கலைந்திருந்தன. வேந்தன் வருவதைக் கண்டு, எதிர்கொண்டெழுந்திருக்கும் அவளை அதே மஞ்சத்தில் உட னே உட்காரச்செய்து, தானும் உட்கார்ந்து, கண்ணீர் பெருகுவதற்கு ப்பொருந்திய காரணமறியாமல், மிகவும் திகிலடைந்து, தனது கரத் தினால் கன்னங்களிரண்டிலும் உதிரும் கண்ணீர்த் துளிகளிகளைத் துடைத்துவிட்டு, மனைவியை நோக்கி அம்மன்னவன் இவ்வாறு கூற லானான்:— 'தேவி! மனந்தனில் பெருந்துயரம் நிறைந்து வாய்திறவாமலே நீ ஏன் அழவேண்டும்? உனது இவ்விமைகள் கண்ணீர்த் துளிகளை, நல்முத்துச்சரங்களைத் தொடுப்பது போல் உதிர்க்கின்றனவே! மெலிந்து அழகிய மத்தியபாகத்தை யுடைய வளே! நீ ஆபரணங்களை யணிந்துகொள்ளாமலிருப்பதென்னோ? இரு செந்தாமரை மலர்களில் இளம்வெயில் விழுந்தாற்போல், உன் பாதங்களிரண்டிலும் செம்பஞ்சுக்குழம்பு ஏன் இடப்படவில்லை? முத்துச்சரமணிந்து கண்டத்தை யலங்கரிக்காமலிருக்கக் காரணம் யாது? ஓ மானினி! கோரோசனைப் பொட்டிடாமலும், முன்னெற்றி மயிர்களைச்சேர்த்து முடியாமலும் இந்த நெற்றிக்கட்டைச் சும்மா வைத்திருப்பதேன்? தேவி! சற்று என்மீது அருள்புரிந்து, துயரத் தின் காரணத்தை மொழிந்திடுவாயாக. நான் எவ்விஷயத்திலேனும் அபராதம் செய்ததுண்டோ? அல்லது நம்மை யடுத்துப் பிழைக்கும்

பரிஜனங்களில் எவராயினும் ஏதேனும் தகாதபிழை செய்தனரோ? மிகவும் ஊக்கத்துடன் நான் நன்கு சிந்தித்துப்பார்த்தும், உந்தனிடம் சிறிதும் எவ்வகையிலும் தவறியதாக எந்தனுக்குத் தோற்றவில்லை; எனதுயிரும் இராஜ்யமுங்கூட உன் அதீனமாகவேயல்லவாயிருக்கின்றன? ஸுந்தரி! மனத்துயரத்திற்கு முகாந்தரமின்னதெனக் கூறுவாயாக.' என்று வினவியும், விலாஸவதி மறுமொழியொன்றும் பகராமலிருக்கவே, பக்கலிலிருந்த பரிஜனத்தை நோக்கி, அவள் கண்ணீர்விட்டழுவதன் காரணத்தைக் கேழ்க்கலானன்.

பின்னர், அவளருகில் அனவரதமும் காத்திருப்பவளான மகரிகை யென்னும் தாம்பூலத் தட்டேந்துபவள், வேந்தனை நோக்கி மொழிந்ததாவது:— "தேவனே! தேவரீரிடம் சிறிதேனும் தவறுதலும் உளதோ? பிரபுக்களான தாம் அனுகூலமாயிருக்கையில், குற்றேவல்புரியும் மற்றவர்க்கு அபராதஞ்செய்யச் சக்தியுமுண்டோ? ஆனல், 'வெகுநாட்களாக மக்கட்பேறின்றி வீணுகவல்லவோ வாணுளைக் கழிக்கின்றேன்' என்பது தான் தேவியாருக்கு மனவருத்தம். இவ்வாறு வெகுகாலமாகத் தவிக்கின்றார்கள். வெகுநாட்களாகவே யஜமானியவர்கள் சயனம், ஸ்நானம், போஜனம், பூஷணம் இவைகளைப்பெறுவது முதலிய தினந்தோறும் செய்தற்குறிய கிருத்தியங்களிலும் வெறுப்புடனே, வெகு பிரயாஸப்பட்டுப் பரிஜனங்கள் செய்யும் முயற்சியினல்தானே பிரவ்ருத்திப்பவர்களாயிருந்தார்கள்; மன்னவனது மனதுக்குத் துயரத்தைத்தர விரும்பாதவர்களாய், விஸனத்தின் விகாரத்தை விளக்கிக்காட்டவில்லை; இன்றைக்கோ, நோன்பு தினமான சதுர்தசி யென்று, மஹாமஹிமை வாய்ந்த மஹாகாலனைத் தொழுவதற்காக இங்கிருந்து செல்ல, அவ்விடத்தில் மஹாபாரதம் ஓதுகையில் 'புத்திரனில்லாதவர்க்குப் புண்ணிய வுலகங்களில்லன; புத் என்னும் நரகத்தினின்றும் பாதுகாக்கின்றன் என்றுதான் புத்திரன் என்று பெயர் வந்தது.' என்கிற விஷயத்தைத் தேவிகள் செவியுறலாயினர். இதைக்கேட்டு வீட்டிற்கு வந்ததும், பணிவிடை செய்பவரால் தலைவணங்கி, பணிந்து வேண்டப்பட்டும், உணவை விரும்புகிறார்களில்லை; எப்பொழுதும் இடைவிடாது கண்ணீர்த் துளிகள் பெருகிக்கலங்கிய முகத்தையுடையவர்களாகவே புலம்பு

கிறுர்கள். இதுதான் நடந்த செயல்; இனி தேவரது சித்தம்.'' என மொழிந்தனள்.

அவள் சொல்லி ஓய்ந்ததும், வேந்தனும் ஓர் முகூர்த்தநேரம் மௌனமாயிருந்து, வெகுதாபத்துடன் பெருமூச்செறிந்து, பின்வருமாறு பேசலானன் :— "தேவி! தைவாதீனமான இவ்விஷயத்தில் யாம் செய்யக்கூடியது யாது? போதும், அதிகமாய்ப் புலம்பாதே; தைவங்களின் அருள்களை யாம் பெரும்பாலும் பெற்றவர்களல்லர்; மைந்தனை அணைந்துகொள்வதாகும் அமுதத்தை அருந்தும் ஸௌக்கத்திற்கு உண்மையாய் நமது இருதயம் பாத்திரமாகவில்லை; முற்பிறப்பில் நாம் நல்வினையை யனுஷ்டித்தவரல்லர்; ஜன்மாந்தரத்திற் செய்த வினையல்லவோ புருஷனுக்கு இஜ் ஜன்மத்திற் பயன் தரும்? பெரும் முயற்சி செய்பவனுலும் ஈசன் செயலை மாற்றி வைப்பதியலாது; மானிடரால் செய்ய வியன்றதெவ்வளவோ, அவ்வளவும் அனுஷ்டிக்கப்படலாம்; தேவி! ஆசாரியர்களிடம் அதிகம் பக்தி பண்ணு. தேவதைகளுக்கு இருமடங்கு அதிகமாய் ஆராதனஞ் செய். முனிவர்களை ஆராதிப்பதில் ஆதரவை அதிகங் காட்டவேண்டும். முனிவரல்லவோ மேலான தெய்வம்? பெரும் முயற்சியுடன் பூஜிக்கப் படுவாராகில், கோரிக்கைகளுக்கிசைந்தவாறு பயன் தரும் வரன்களை அடைதற்கரிதானவையானுலும் அவர்கள் அளித்தருள்கின்றனர். இங்ஙனம் செவியுறப்படுகிறதல்லவா?:— முன்னுல் சண்டகௌசிகரது மஹிமையால் மகத தேசத்தின்கண் பிருஹத்ரதன் என்னும் இராஜன், ஜராஸந்தன் என்னும் மைந்தனையடைந்தனன்; தசரதமஹாராஜனும் வயது சென்றிருந்தும், விபண்டகமா முனிவரது புத்திரரான ருச்யசருங்கர் அருளால் நான்கு புதல்வர்களைப் பெற்றுர்; வேறு சில இராஜருஷிகளும் முனிவர்களைப் பூஜித்ததனுல், புத்திரர்களைப் பார்ப்பதாகிற அமுதபானம் செய்யும் ஆனந்தத்தை அடைந்தவர்களானுர்கள். மாமுனிவரைத் தொழுவது பயன்படாமற் போவதில்லை. தேவி! நானும் உன்தனை முதிர்ந்த கர்ப்ப பாரத்தினுல் சோர்ந்தவளாகவும், ஆகவே நன்கு வெளுத்த வதனத்தையுடையவளாகவும் எக்காலங் காண்பேனே? எனக்கு மைந்தன் பிறந்த பெருங்கொண்டாட்டத் தினத்தன்று, பொங்கியெழும்பும் பரமானந்தத்துடன் பரிஜனங்கள் எப்பொழுது வலுவில்

என்மீதிருக்கும் ஆடையாபரணங்களைக் களைந்துகொண்டு போகப் போகின்றனரோ? எனது தேவியானவள் மஞ்சத்துகில் தரித்து, புதல்வனுடன் கூடிய மடியையுடையவளாய், எந்தனை யானந்தப்படுத்துங் காலமெதுவோ? பற்பல ஓஷதிச்சாற்றால் பொன் நிறமான சிக்குண்ட கூந்தலையுடையதும், இரக்ஷையின் பொருட்டு நெய்ப்பொட்டுகளிட்ட கன்னத்தில் வெண்கடுகுடன் சிறிது திருநீறிடப் பெற்றதும், கோரோசனைப் பூச்சினால் கனகவர்ணமான கழுத்துச் சரடு முடியப்பெற்றதும், பற்களில்லாப் புன்சிரிப்புடன் கூடியதுமான சிறு குழந்தை, எச்சமயம் மல்லாந்து சயனித்து எனக்கு மனக்களிப்பைத் தருமோ? மங்களதீபம் போல், அந்தப்புரமாதரது கரங்களின் வரிசைகளால் மாற்றி மாற்றி யேந்தப்படும் மூர்த்தியையுடையதாய், அகில ஜனங்களாலும் கொண்டாடப்படும் கோரோசனையால் பொன்னிற மேனியையுடைய குழந்தையானது எப்பொழுது என் கண்களது துயரமாகும் அந்தகாரத்தை அடியோடகற்றுமோ? எப்பொழுது என் சிறுமகவு, புவிதனிற் புரண்டு புழுதி படிந்த மேனியையுடையதாய், என் இருதயம், த்ருஷ்டி இவைகளையிழுத்துக்கொண்டு, அகத்தின் அங்கணங்களில் அங்குமிங்கும் அலைந்தோடி அரண்மனையை அலங்கரிக்குமோ? தனது அன்னையின் அடிகளிரண்டிற்கும் நலங்கிட்டு மிகுந்த செம்பஞ்சுக்குழம்பு கொண்டு எப்பொழுது வயது சென்ற கஞ்சுகிகளின் முகங்களுக்குக் கோலஞ் செய்துகேலி செய்யப்போகின்றதோ? என்று இவைகளையும் இன்னும் பலவாறான மனோரதங்களையும் எண்ணியெண்ணித் தவித்துக்கொண்டே நான் இரவுகளைக் கழித்துவருகிறேன்; இந்தக் குழந்தையில்லாக்குறைவினால் உண்டான துயரமானது, அக்கினிபோல் அல்லும் பகலும் என்னையுந்தான் தஹிக்கின்றது. எந்தனுக்குப் புவனமே பாழடைந்திருப்பது போல் புலப்படுகின்றதே! இச் செங்கோலைப் பயனற்றதுபோலவே பார்க்கின்றேன். தைவச்செயல் தடுக்க வியலாதிருக்க, யான் என் செய்யலாகும்? ஆதலால், தேவி! இத்துயரத்தை விட்டுவிடுவாயாக; தைரியத்திலும் தர்மத்திலும் புத்தியை நாட்டு. தர்மத்தை ஆவலுடன் அனுஷ்டிப்பவருக்கு மங்களப் பேறுகள் எப்பொழுதும் அருகிலிருப்பவைகளாகவே ஆகின்றன." என்று கூறிவிட்டு, தண்ணீரெடுத்து, கண்ணீர் பெருக்குகளுடன் கூடிய இவ

ளது முகத்தைத் தானே துடைத்தான். அளவில்லா அன்பினல் இன்பமானவைகளும், துயரத்தைத் துறத்துந்திறமை பொருந்திய வைகளும், தர்மோபதேசமடங்கியவைகளுமான சொற்களால் அடிக்கடி அவளுக்குத் தேறுதலேயுண்டாக்கி, வெகுநேரம் அங்கிருந்துவிட்டு, வேந்தன் வெளிக்கிளம்பி வந்தான். அவன் அப்புறம் போனதும், விலாஸவதியும் சற்றுத் துயரந் தெளிந்தவளாய், ஆபரணமணிந்து கொள்ளுவது முதலிய தினந்தோறுஞ் செய்துகொள்ளவேண்டிய உசிதமான காரியங்களைச் செய்துகொள்ளலானுள். அதுமுதல் தைவங்களைத் தொழுவதிலும், அந்தணரை ஆராதிப்பதிலும், பெரியோரைப் பணிவதிலும் பேராதரவைக் கைப்பற்றினள். எவரிடமிருந்து எவ்வெவற்றைச் செவியுறுகின்ருளோ, அவையனைத்தையும் கருத்தரிப்பதில் ஆசையினுல் ஆவலுடன் செய்யலானுள். அதிகமான ஆயாஸத்தையும் அவள் ஒரு பொருட்டாகவெண்ணினுளில்லை — எப்பொழுதும் எரிக்கப்படும் ஏராளமான குங்கிலியங்களின் தூபங்களால் கவியப்பெற்ற காளி கோயில்களில் வெண்துகில் தரித்துத் தூய்மையான தேஹத்தையுடையவளாய், பட்டினியிருந்துகொண்டு, பசுமையான தர்ப்பங்களை மேல்விரிப்பாகவுடைய முஸலசயனங்களில்* நித்திரைசெய்தனள்; கோகுலங்களில் இடைக்கிழவிமாரால் அலங்கரிக்கப்பெற்ற, நல்ல இலக்ஷணம் பொருந்திய பசுக்களின் அடியில், பற்பல பூக்களையும் நவரத்தினங்களையுஞ் சேர்த்துப் புண்ணிய நீர் நிரப்பியவையும், பாலுள்ள மரங்களின் தளிர்களால் அலங்கரிக்கப்பெற்றவையுமான பொற்குடங்கள்கொண்டு நீராடினள்; நாள்தோறும் எழுந்தெழுந்து, தங்கத்தாலான எள்ளிலேகளை இரத்தினங்கள் அனைத்தோடும் அந்தணருக்கு அர்ப்பணஞ் செய்தனள்; நாற் சந்திகளில் பற்பல பலிகளாலும் தானங்களாலும் திசைகளுக்கதிபதிகளான தைவங்களைத் திருப்திசெய்து வைத்து, மஹா மாந்திரிகர்களால் இடப்பெற்ற மண்டலாகாரமான இரேகைகளுக்கு இடையில் இருந்துகொண்டு, கிருஷ்ண சதுர்தசிகளின் இரவுகளில் மங்களஸ்நானங்களைப் பெற்றுவந்தாள்; பிரஸித்திபெற்ற நாககுலங்களின் மடுவுகளில் மஞ்சனமாடினள்; அரசுமுதலான மஹா விருக்ஷங்களைப் பூஜித்து, வலஞ்செய்து அவற்றை வணங்கலானுள்;

* முஸலசயனம் = உலக்கைகளாற் செய்த படுக்கை.

ராட்டஞ் செய்து, சற்றும் விள்ளாத அவிழ்களால் ஆக்கிய தத்தி யோதன பலியை வெள்ளிக்கலத்தில் ஏந்திக்கொண்டு, மணிமயமான வளைகளெல்லாம் குலுங்கத் தனது கரங்களால்தானே வாயஸங்க ளுக்குப் பலியிட்டனள்; தானுகவே பிண்டபாத்திரங்களளித்து, பக்தியுள்ள மனத்துடன் பொய்யா மொழியினரான திகம்பர ஜைன ஸந்நியாஸிகளிடமிருந்து 'ஆரூடங்களை வினவினள்; குறிசொல்லும் ஸ்த்ரீகளது மொழிகளை மேன்மையாக எண்ணினுள்; சகுன சாஸ் திரம் அறிந்தோரை யுபசரித்தாள்; பக்ஷிசாஸ்திரம் பயின்றவரிடம் பக்ஷம் பாராட்டலானுள். அனேக மூத்தோரது பரம்பரையாய் வந்த இரஹஸ்யங்களை யங்கிகரித்தனள். புதல்வனைக் காண்பதிற் பேராவல்கொண்டவளாக, தரிசனத்தின் நிமித்தம் வந்திருக்கும் வேதியரைக்கொண்டு வேதங்களையோதிவித்தனள். அனவரதமும் படிக்கப்படும் புண்ணிய கதைகளைக் கேட்டாள். கோரோசனையி னுல் எழுதப்பட்ட பூர்ஜமென்னும் மரத்தின் பட்டைகளடங்கியவை யும், மந்திரஞ் ஜபிக்கப்பெற்றவையுமான தாழ்த்துகளைத் தரித்துக் கொண்டாள்; இவளுடைய பரிஜனங்களும், அனவரதம் உபச்ருதி யைக்* கேழ்ப்பதற்காக வெளியில் ஆங்காங்கு சென்றனர்; அச் சகுனங்களையும் வந்து சொல்லிக்கொண்டனர். தினந்தோறும் இர வில் நரிகளுக்கு மாம்ஸபலிகளைப் போட்டாள். கனவிற்கண்ட விநோ தங்களை ஆசிரியரிடம் கூறிவந்தாள். நாற்சந்திகளிற் சிவபெருமா னுக்குப் பலி நிவேதனம் செய்தனள்.

இங்ஙனம் சிலகாலம் செல்ல, ஒருநாள் இரவில் பெரும்பான் மையான பாகமும் கழிந்திருக்கையில், மன்னவன், விலாஸவதி வெண்மையான பெரியதோர் மாளிகையின் உச்சியிலிருக்க, அவ ளது வாயினுள் கலைகளனைத்தாலும் பரிபூர்ணமான மண்டலத்தை யுடைய சந்திரபிம்பம் புகுந்துகொண்டிருந்ததாகக் கனவுகண்டான். அக்கணமே கண்விழித்து எழுந்து, சுகநாஸனையழைத்து, ஸ்வப்னத் தின் செய்தியைச் சொன்னுன். சுகநாஸனும் மிகவும் களிப் புற்றவனுய் இவ்வாறு கூறலானுன்:— 'தேவ! நமக்கும் நமது

---

* உபச்ருதி=வெளியில் விவஹரிக்கப்படும் வார்த்தைகளில் தங்கள் மனதில் எண்ணியிருக்கும் விஷயத்திற்கு அனுகூலம் அல்லது பிரதிகூல மாகப் பொருள்படும் வார்த்தை.

பிரஜைகளுக்கும் வெகு நாட்களாயிருக்கும் அவாக்களெல்லாம் நன்கு பயன்பெற்றன. சிறிதுநாட்களுக்குள்ளாகவே ஐயன்களான தாங்கள் ஐயமின்றி புதல்வனது பங்கயமலர்போன்ற வதனத்தைப் பார்க்கும் பேரின்பத்தைப் பெறுவீர்கள். இரவில் இப்பொழுதுதான் வெண்மையான உடைகளை யுடுத்திக்கொண்டு, சாந்தமான திவ்ய மேனியையுடைய வேதியரொருவர் வந்து, மலர்ந்த வெண்தாமரை மலரை எனது மனோரமா தேவியின் மடியில் வைத்ததாக நானுங் கனவு கண்டேன். முன்னதாய் ஸம்பவிக்கும் சுபசகுனங்கள் ஆனந்தத்தை அருகிலிருப்பதாய் அறிவிக்கின்றன. இரவின் இறுதியிற் காணப்படும் கனவுகள் பெரும்பாலும் பயன் தராமற் போவதுமில்லை. எப்படியும் இன்னும் சொற்பகாலத்தில் மாந்தாதாவைப் போல் இராஜருஷிகள் அனைவருக்கும் முதன்மையானவனும், புவனத்தின் பேரானந்தத்திற்குக் காரணமானவனுமான மைந்தன் தமது தேவிகளிடமிருந்து உண்டாகப்போகின்றான்; அக்குழந்தை பிறந்து, ஸ்வாமியின் இக்குலத்தின் ஸந்ததியும் குலைந்துபோகாது குறைவின்றி விளங்கப்போகிறது.' என்று இப்படி கூறிக்கொண்டேயிருக்கும் அவ்வமைச்சனைத் தனது கரத்தினாற் பிடித்துக்கொண்டு, அரசனானவன் அந்தப்புரமேகி, அவ்விரு கனவுகளையுஞ் சொல்லி விலாஸவதியையும் வியப்புறச் செய்தனன்.

சிலநாட்கள் சென்றதும், ஓர் பொய்கையினது ஜலத்தினுள் சந்திரபிம்பத்தின் பிரதிமைபோல், தேவதைகளின் அருளால் விலாஸவதியினிடம் கர்ப்பம் ஆவிர்பவித்தது. சிறிது சிறிதாக நாடோறும் கர்ப்பமும் வளர, அவள் மெல்ல மெல்லவும் ஸஞ்சரிப்பவளானாள். அடிக்கடி தொடர்ந்துவரும் கொட்டாவியினால்கண்களை நெரித்துக்கொண்டு, சோம்பலுடன் பெருமூச்சுவிட்டாள். ஒவ்வொரு நாளும் பற்பல சுவைபொருந்திய உணவுகளையும் விரும்பலானாள். இவளை இவ்வித நிலைமையிலிருப்பவளாக, இங்கிதக்குறிகளை யெளிதிலறியும் வல்லமைவாய்ந்த பரிஜனங்களும் அறிந்துகொண்டனர்.

பின்னர் அவளது பரிஜனங்களுக்குள் தலைமையானவளான குலவர்த்தனை யென்னும் கிழவியொருத்தி, ஓர் சுபதினத்தன்று மாலைப்பொழுதில் அரண்மனைக்குள் கொலுமண்டபத்தின்கண் வீற்றிருப்பவனும், அருகிற் பிரம்பினாற் செய்த பெரியதோர் ஆஸனத்

தில் அமர்ந்திருக்கும் சுகநாஸனுடன் வெகு விச்வாஸம் நிரம்பிய பற்பல வார்த்தைகளாடிக்கொண்டிருப்பவனுமான அரசனுக்கு அருகிற்சென்று, அவனது காதோடு விலாஸவதியின் விருத்தாந்தத்தை யறிவித்தனள்.

இதுகாறும் கேட்டிராததும் நம்பமுடியாததுமான அவளது அப்பேச்சைக் கேட்டு, அங்கங்களனைத்தும் அமுதப்பெருக்கினால் அபிஷேகமானதுபோலெண்ணுபவனான அவ்வரசனது நேத்திரம் அக்கணமே அமைச்சனது முகத்திற் பாய்ந்தது. இதற்குமுன் பிரபுவினிடம் பார்த்திராத பரமானந்தத்தைப் பார்த்தும், குலவர்த்தனை புன்னகைபுரிந்து மலர்ந்த முகத்துடன் வந்திருப்பதையுங் கண்டு, அவ்விஷயமும் மனத்தில் எப்பொழுதும் குடிகொண்டு வருகிறதானதாலும், இச்செய்தியை யறியாதவனாயிருந்தும், அக்காலத்தில் அவ்வித மஹத்தான மகிழ்ச்சிக்குத் தகுந்த வேறோர் காரணத்தைக் காணாதவனாய்ச் சுகநாஸன் தானாகவே அனுமானித்து, சற்று ஆஸனத்தை நகர்த்திக்கொண்டு, அரசனுக்கு மிகவும் அருகில் வந்து, சிறிது மெதுவாக வினவினன் :— ‘அண்ணலே! அக்கனவு கண்டதில் உண்மை யேதேனும் உண்டோ? குலவர்த்தனை மிக்க மலர்ந்த கண்களையுடையவளாகவல்லவோ காணப்படுகிறாள்? பேரின்பக் கண்ணீர் ததும்புபவையும், மலர்ந்துச்சுழலமிடுங் கருவிழியுடையனவுமானப் பிரபுவினது கண்களிரண்டுங்கூட ஆனந்தத்திற்குப் பெரியதோர் காரணத்தைக் கூறுகின்றன. மஹத்தான உத்ஸவம் உண்டாகக் கேழ்ப்பதிற் குதூஹலமுடைய என் மனது, ஆவலுடன் படபடத்து வாடுகின்றது; ஆகவே, இஃதென்னவென்று தேவரீர் மொழிந்தருள்வீராக.’ என்று அவன் கூறியதும், அம்மன்னவன் சற்று நகைத்து நவின்றனன் :— ‘இவள் உரைக்கும் விதமனைத்தும் உண்மையாகில், கனவிற் கண்டதெல்லாம் பயனுள்ளவைதான். ஆனால், நான் நம்பவில்லை; இவ்வளவு பாக்கியம் நமக்கேது? இத்தகைய பிரியவசனங்களைச் செவியுறுவதற்கு நாம் பாத்திரமாகாதவரல்லவா? குலவர்த்தனை வீண்வார்த்தைகளைச் சொல்லுபவளல்லள். ஆனாலும், இவ்வித மங்களங்கள் எமக்கு ஸம்பவிக்காவென நினைத்தவனாய், நான் இப்பொழுது இவளை மாறுபாடடைந்தவளைப் போல் பார்க்கவேண்டி வருகிறது. ஆகையால் எழுந்திருங்கள்;

நாமே சென்று இதில் ஏதேனும் உண்மையுளதோவெனத் தேவி யைக் கேட்டறிந்துகொள்வோம்.' என மொழிந்து, கூடவிருந்த அரசர் அனைவரையும் அங்கு விட்டுவிட்டு, தனது அங்கங்களிலிரு ந்து ஆபரணங்களைக் கழற்றிக் குலவர்த்தனைக்கு அளித்து, சுகநாஸ னுடன் எழுந்திருந்து, அடங்கா மகிழ்ச்சிகொண்ட தனது மனந் துரிதப்படுத்த, முன்புறத்திற் காற்றினல் அலைகிற ஜ்வாலைகளுடன் கூடிய ஊழியரெடுத்தேகும் தீவர்த்திகளால் அகத்தினுள்ளிருக்கும் ஒவ்வோர் அங்கணத்தின் இருளும் அகற்றப்பட, அந்தப்புரஞ் சென்றான்.

அங்கு, துயிலறையில் இரக்ஷைகளின் ஏற்பாடுகள் நன்கு செய் யப்பெற்றிருந்தன; அவ்வறையானது புதிதாகச் சுண்ணமிட்டு வெண்மையாக்கப்பட்டிருந்தது; மங்கள தீபங்கள் நன்கு துலங் கின; வாயிற்படியில் இரு பாரிசங்களிலும் பூர்ணகும்பங்கள் வைக் கப் பெற்றிருந்தன; ஆங்கு, கர்ப்பந்தரித்தவற்கேற்றவாறு அமைக் கப்பெற்றிருந்த சயனத்தைச் சுற்றித் திருநீறுகளைக்கொண்டு கோல ங்களிட்டு அலங்கரித்தும், நித்திரை செய்கையில் தலைமாட்டில் உபயோகிக்கப்படும் மங்களகலசங்கள் அமைக்கப்பெற்றுமிருந்தன; அச்சயனத்தின்மீது விலாஸவதியைப் படுத்திருக்கக் கண்டான். இடைவிடாது இடப்பெற்ற தயிர்த்துளிகளுடனும், தொடுக்கப்படாத மலர்களுடனுங்கூடிய ஸ்வர்ணமயமான பூர்ண பாத்திரங்களாலும், கோரோசனை கலந்த வெண்கடுகுகளாலும், ஜலத்தின் அஞ்ஜலிகளா லும் ஆசாரங்களில் ஆழ்ந்த அறிவுள்ள அந்தப்புரக் கிழவிமார் ஆங்கு அவளுக்கு ஆராத்திரிகை யெடுத்துக்கொண்டிருந்தனர். வெகு பரபரத்த பரிஜனம் நீட்டிய கைகளைப்பற்றியவளாய், தளிர் போன்ற தனது கரத்தை இடது முழந்தாளில் ஊன்றிக்கொண்டு எழுந்திருக்கும் விலாஸவதியை நோக்கி, 'போதும் போதும்; அதிக வுபசாரம் வேண்டேன்; தேவி! எழுந்திருத்தலாகாது.' என மொ ழிந்து வேந்தன், அவளுடன் அதே சயனத்தில் உட்கார்ந்தனன். தீட்டிய தங்கத்தாலாக்கின அழகிய கால்களையுடையதும், வெண் ணிறமான மேல் விரிவுத் துகிலுடன்கூடியதுமான கிட்டவிருந்த மற்றொரு மஞ்சத்தில் சுகநாஸனும் அமர்ந்தனன்.

பின்னர் அவளைக் கருதரித்தவளாகக் கண்டுகொண்டு, மட்டில்லா மகிழ்ச்சியால் மயங்கிய மனத்துடன் கூடிய மன்னவனுனவன் பரிஹாஸம்பண்ணப் புகுந்தவனாய், 'தேவி! குலவர்த்தனை யேதோ கூறுகின்றனளே, அதென்ன அவ்விதந்தானோ? என்று சுகநாஸர் வினவுகின்றனர்.' எனக் கேட்டான். பின்பு விலாஸவதியும், நன்கு விளங்காப் புன்னகை புரிந்து, அதன் ஒளி, கன் கபோலம் உதடுகளிற் பரவ, நாணத்துடன் அக்கணம் தலைவணங்கிக்கொண்டனள்.

பிறகு, கிரமமாக, கர்ப்பகாலத்திற்கேற்றவாறு மயக்கையென்னும் விருப்பங்களைப் போதுமாறு நிறைவேற்றிக்கொண்டு, பெருமகிழ்ச்சியடைந்தவளான விலாஸவதி, பிரஸவகாலம் பூர்த்தியானதும், ஓர் சுபதினத்தன்று, அடிக்கடி கழிந்துவரும் நாழிகைகளைக் கணக்கிட்டுப் பார்ப்பவரும், வெளியில் அடிபோட்டு தம் நிழலையளந்துகொண்டிருப்பவருமான எண்கலைஞர் லக்கினம் குறித்து வருகையில், உத்தமமான வேளையில், உலகில் பிரஜைகளெல்லோருடையவும் மனத்தினில் அடங்காத ஆனந்தத்தை அளிக்க வல்ல புதல்வனை யீன்றனள். அப்பாலகன் பிறந்ததும், வெகு பரபரப்புடன் இங்குமங்குமாய் ஓடும் பரிஜனத்தின் பல நூற்றுக்கணக்கான பாதங்களின் பரிசத்தால் புவியை அதிரச்செய்வதும், அந்தப்புரஜனங்கள் அந்த ஸமயம் அணியும் ஆபரணங்களிலிருந்து கணீர்கணீரென இனிமையான ஒலியை யெங்கும் பரப்புவதும், பரிசுபெறுவதற்காக வலுவில் ஒருவருக்கொருவரால் பூஷணங்கள் பறிக்கப்படுவதாலுண்டாவதுமான பெரும் பாக்கியப்பெருக்கினது மகிழ்ச்சியினாலுண்டான குழப்பமானது அரண்மனை யடங்கலுமுண்டாயிற்று. பின்னர் மங்களமாக முழங்கப்படும் மேளங்களின் பேரொலியால் மேலோங்கியதும், பல்லாயிரம் ஜனங்களின் கலகலவென்னும் சப்தத்தினால் பெருகியதும், மூவுலகத்தையும் நிரப்புவதுமான கோலாஹலத் தொனியைக்கேட்டு, அந்தப்புரத்தோர், அரசர்களது கூட்டம், வாலிபர், விருத்தர் இவர்களுடன் இடையன் முதல் எல்லா வகுப்பு ஜனங்களும் பரமானந்த பரிதர்களாய்ப் பித்துப் பிடித்தவர் போல் நர்த்தனஞ்செய்தனர்.

மன்னவனே, தனது மைந்தனது முகத்தைக் காண்பதிற் பெருமையினுல் இழுக்கப்பெற்ற இருதயத்தை யுடையவனுயிருந்தும், நல்ல முகூர்த்தத்தை யெதிர்பார்க்கவேண்டியிருந்ததால், சோதிடர்கள் உபதேசித்த உத்தம முகூர்த்தத்தில் ஸமஸ்தபரிஜனங்களையும் தூரவிருக்கச் செய்து, சுகநாஸனொருவனையே கூட வழைத்துக் கொண்டு பிரஸவகிருஹஞ் சென்முன். அவ்வகத்தின் வாயிற்படியானது மணிமயமான இரண்டு மங்கள கலசங்களுடன் கூடியதாகவும், சற்று ஸமீபத்தில் இருபுறமும் இரண்டு கலப்பைகளும் உலக்கைகளும் வைக்கப்பெற்றதாகவும், இடையிடையில் அணியணியாய் சிறிய மணிகள் கோர்க்கப்பெற்ற மாவிலைத்தோரணத்தையுடையதாகவும் விளங்கியது. அங்கு மாதரசிகள் பலர், வாயிற்படிக்கு இருபுறமும் மஞ்சநீரில் நனைத்த பொன் நிறமான புடவையுடுத்தி பெருமை பொருந்திய ஷஷ்டீதேவியை * பிரதிஷ்டை செய்து கொண்டிருந்தனர்; செம்பஞ்சுக் குழம்புகளிட்டுச் சிவக்கச்செய்த மத்திய பாகத்துடன் கூடியவைகளான சந்திரசூரிய பிம்பங்களைப் போட்டுக்கொண்டுமிருந்தனர்; பஞ்சவர்ணங் கலந்த விசித்திரமான சிறு சிறு துண்டுத்துகில்களைக்கொண்டு அலங்கரித்து, மஞ்ச நிறமாக் குழம்பு பூசிய மடக்குகளைச் சந்தன நீரிட்டு வெண்மையாக்கிய சுவர்களது சிகரபாகங்களில் வரிசை வரிசையாய் வைத்துவந்தனர்; பிரஸவகிருஹத்திற் செய்யக்கூடிய மற்றும் மங்களகரமான அலங்காரங்களையும் அவர்கள் நிறைவேற்றி வந்தனர்; பற்பல பூக்களாலும், சந்தனம் முதலிய ஸுகந்தங்களாலும் கோலஞ்செய்த ஓர் வயது முதிர்ந்த வெள்ளாடு, வாயிற்படிக்கு அருகிற் கட்டப்பட்டிருந்தது. அங்கு வேதியர் வெகுபேர் வேதமோதி சாந்திநீர்களையிறைத்துக்கொண்டிருந்தனர்; வயதுசென்ற பெண்டுகள் பலர், பிரஸவ காலத்திற்கேற்க சுபமான ஸங்கிதங்களை மனோஹரமாய்ப் பாடினர்; அவ்விடத்தில் இடைவிடாது நாராயணனது நாமஸஹஸ்ரங்களும் ஓதப்பட்டு வந்தன; நீரையும் நெருப்பையும் பரிசித்துக் கொண்டு பார்த்திவனும் உள்ளே சென்முன்.

---

*பதினறு மாதாக்களில் ஒருத்தியாகிய ஸுப்பிரம்மண்ணியனது மனைவியான ஓர் தேவதை.

அங்கு பிரவேசித்ததும், பிரஸவத்தினால் வாடி வெளுத்த மேனியையுடையவளான விலாஸவதியின் மடியின்மீது தனது ஆனந்தத்திற்கு ஆதாரமான புதல்வனைக் கண்டான்; அக்குழந்தையோ, பிரஸவ கிருஹத்திலிருக்கும் தீபத்தின் ஒளியையும் தனது காந்தியினால் மழுங்கச் செய்வதும், கர்ப்பத்திற்பற்றிய சிவப்புநிறம் நீங்காததால், உதயகாலத்தில் செந்நிறமான மண்டலத்தையுடைய சூரியனைப்போல் விளங்குவதும், அந்திப்பொழுதிற் செங்காவிகொண்ட சந்திர பிம்பம்போன்றதும், பவளத்தளிர்களின் தளங்களாலோ இளம் வெயிற்செதில்களாலோ பத்மராகமணியின் கிரணங்களாலோ படைக்கப்பெற்றவையெனத் தோற்றும் அவயவங்களையுடையதும், உடம்புடன் கூடப்பிறந்த அலங்காரமான அணிகள்போல் ஒளிவீசும் மஹாபுருடர்களது குறிகளுடன் கூடியதுமாகக் காணப்பட்டது. எண்ணியெண்ணித் தவம்புரிந்து காணப்பெற்ற தனது அருமைப் புதல்வனது முகத்தை இமைகளாடாமல் அசைவற்ற கண்களால் பானஞ்செய்பவன்போல் ஆவலுடன் பார்த்துப் பேரானந்தமடைந்தனன். கிருதகிருத்தியனாகவும் தன்னையுணர்ந்தனன். அக்காலை முற்றிலும் மனோரதம் நிறைந்த சுகநாஸனும், மெல்ல மெல்ல பாலகனது ஒவ்வோர் உறுப்பையும் உற்றுப்பார்த்து, அன்பினால் அகன்ற நேத்திரங்களையுடையவனாய், அரசனை நோக்கிப் பின்வருமாறு புகன்றான்,— 'வேந்தே! நன்றாய்ப் பாருங்கள்; கர்ப்பத்தில் நெருக்கமாய் அமுக்கப்பெற்றதால் இன்னும் அவயவங்களின் சோபையானது நன்கு விளங்காமலிருப்பினும், இக்குமாரனுக்குப் பொருந்தியிருக்கும் சக்கிரவர்த்தி சின்னங்கள் சிறப்பையுண்டாக்குகின்றன. ஆம்; ஸந்தியாகாலத்திற் சிவந்தநிறமுள்ள பாலசந்திரனது கலைபோலிருக்கும் இச்சிறு குழந்தையின் நெற்றியில், தாமரைக் கொடியினுள் சுருண்டிருக்கும் நுண்ணிய நூலிழைபோன்ற ஊர்ணையென்னும் மயிர்ச்சுழியானது மிக்க பிரகாசிக்கின்றது. செந்தாமரை மொட்டுபோல் செந்நிறமான கரங்களிரண்டும், பகவானான திருமாலினது திருக்கரங்கள்போல் சங்கு சக்கிரங்களாலும் மற்றும் பல சுபமான இரேகைகளாலும் அலங்கரிக்கப்பெற்றிருக்கின்றன. இதோ இக்குழந்தையின் அழுகுரல் பெரியதோர் பறையறையின் பேரொலிபோல் கேழ்க்கின்றதே!

என்று சுகநாஸன் இங்ஙனம் கூறிக்கொண்டிருக்கையிலேயே, மங்களன் என்னும் புருடனொருவன், பரபரப்புடன் ஒதுங்கும் பிரபுக்கூட்டத்தினால் வழிவிடப்பட்டு, வெகு விரைவுடன் ஓடிவந்து, அடிபணிந்து வேந்தனிடம் இவ்வண்ணம் விண்ணப்பஞ் செய்தனன் :— 'மன்னவ! பாக்கியப்பேற்றினால் வாழ்கின்றீர்கள்; உமது பகைவரெல்லாம் பறந்தோடினர்; சிரஞ்ஜீவியாய் வாழக்கடவீர்கள்; இவ்வுலகத்தையெல்லாம் வென்றுவிட்டீர்கள்; போற்றத்தக்க சுகநாஸருக்கும் உமது பிரஸாதத்தினால் மூத்த மனைவியான மனோரமையென்னும் அந்தணர்குலத் துதித்த மாதரசினிடம் மைந்தனொருவன் பிறந்தனன். இது செய்தி; இனி தேவரீர் திருவுள்ளம்.'

பின்பு, அரசனானவன் அமுதவர்ஷம்போல் அவனது பேச்சைச் செவியுற்றதும், இவ்விதம் மறுமொழி கூறலானான் :— 'ஓ! இஃதென்ன சுபபரம்பரை! ஆபத்து ஆபத்தையும், ஸம்பத்து ஸம்பத்தையும் தொடர்ந்துவருகின்றதென்னும் உலகத்தில் வழங்கப்படும் முதுமொழி முற்றிலும் உண்மையானதே.' என மொழிந்து, மனமகிழ்ச்சியினால் முகம்மலர்ந்தவனாய், அம்மன்னவன், வேகமாய் ஆவலுடன் சுகநாஸனை ஆலிங்கனம் செய்து, சிரித்துக்கொண்டே அவனது உத்தரியத்தைத் தானாகவே பரிசாக அபஹரித்துக்கொண்டான். அப்படியே எழுந்திருந்து, கட்டியக்காரர்கள் பற்பலவிதமாய்க் கட்டியம் கூறிக்கொண்டும், ஸங்கீதக்காரர் அனேகவித முகவாத்தியங்களை கோலாஹலத்துடன் முழங்கியவர்களாய்ப் பாடிக்கொண்டும் பின் செல்ல, சுகநாஸனது மாளிகைக்குச் சென்று, உத்ஸவத்தை யிரண்டுபங்கு அதிகமாகச் செய்வித்தான்.

பின்பு ஆறுவது தினத்து இரவில் ஷஷ்டீ தேவியென்னும் தேவதையின் பூஜைக்காக கண்விழிக்கும் சடங்கும் சென்றுவிட, பத்தாம் நாள் வந்ததும் சுபமான முகூர்த்தத்தில் பசுக்களையும் பணங்களையும் பிராம்மணருக்குப் பலகோடியாய்த் தானஞ்செய்து, இக்குமாரனது தாயின் தாமரை மலர்போன்ற முகத்தினுள் பூர்ணமண்டலத்துடன் சந்திரன் புகுந்ததாகக் கனவுகாணப்பட்டதென்று, அந்த ஸ்வப்னத்திற்கேற்க வேந்தனானவன் தனது மைந்தனுக்கு சந்திராபீடன் என நாமகரணம் செய்தனன். மறுநாள் சுகநாஸனும், அந்தணரின் ஆசாரத்திற்கு அனுரூபமாக சடங்குகள் அனைத்தையும்

அனுஷ்டித்து, அரசனது அனுமதியை அனுஸரித்துத் தனது தநய னுக்கு வேதியர்க்கேற்க வைசம்பாயனன் எனப் பெயரிட்டான். கிரமமாக சூடாகரணம் முதலிய சிறு பிராயத்திற் செய்யவேண்டிய சடங்குகளெல்லாம் செய்து முடிக்கப்பெற்றவனுன சந்திராபீட னுக்குக் குழந்தைப் பருவமும் கழிந்துபோயினது.

தாராபீடனும், தன் குமாரனுக்குக் கிரீடைகளிலிருக்கும் பற் றைப் பரிஹரிக்குமாறு, பட்டணத்திற்குப் புறம்பாக, சிப்ராநதிக் கரையில், அரைக் குரோசதூரம் விஸ்தீர்ணமுள்ளதும், மிக்க பெரி தும், சுண்ணச்சாந்து பூசி வெண்ணிறமானதும், இமயமலைச் சிகரங் களின் பந்திகள் போன்றதுமான மண்டலாகாரமான மதிலால் கவ ரப்பெற்றதாயும், கீழ்மாளிகையில் ஏற்படுத்திய கெரடியாடுங் கூடத் தையுடையதுமான கல்விச்சாலை யொன்றைக் கட்டிமுடித்தனன்; வித்தைகள் அனைத்துக்கும் ஆசிரியர்களை ஆராய்ந்து சேர்ப்பதில் அதிக முயற்சியையும் செய்யலானுன்.

சிங்கக்குட்டியைக் கூட்டிலடைப்பதுபோல் அச்சிறுவனை வெளியே நடமாடவொட்டாமல் அக்கல்விச்சாலையினுள் ளிருக்கச் செய்து, குருமார்களது குமாரர்களை மாத்திரமே பரிஜனபரிவாரங் களாகவும் ஏற்படுத்தி, சிறு குழந்தைகளுக்கேற்ற விளையாட்டுகள் எல்லாவற்றையும் அகற்றி, வேறு விஷயத்தில் மனத்தைச் செலுத் தாமலிருக்கவுஞ் செய்து, ஸகலகலைகளையுங் கற்கும் பொருட்டுச் சந் திராபீடனை ஓர் சுபத்தினத்தன்று வைசம்பாயனனுடன் கூடக் குரு மார்களிடம் ஒப்புவித்தனன்; நாள்தோறும் எழுந்தெழுந்து சொற்ப பரிஜனம் பின்செல்ல, விலாஸவதியுடன் அக்கல்விச்சாலைக்கே சென்று, பார்த்திவன் தன் புதல்வனைப் பார்த்து வருவான்.

சந்திராபீடனும் அங்ஙனம் அரசனால் அன்னிய விஷயத்தில் தன் சித்தத்தைப் புகவிடாது தகையப்பெற்றவனாய், அவரவர்களு க்கேற்றவாறு தங்கள் தங்களது திறமையைத் தெளிவாக விளக்கிக் காட்டுபவரும், புத்தித் திறமையும் அமைதியும் அமைந்த மாணாக் கனைப்பெற்றதாலுண்டான உத்ஸாஹத்தை யுடையவருமான ஆசிரி யர்களால் ஆவலுடன் உபதேசிக்கப்பெற்றவனாய் வித்தைகள் அனை த்தையும் கிரஹித்தனன்; ஆம்; அவன் வியாகரணம், மீமாம்ஸை

தர்க்கம், தர்மசாஸ்திரம், இராஜநீதிகள், கெரடியாடும் வித்தை, அகில ஆயுதப் பயிற்சிகள், தேரோட்டுதல், யானையேற்றம், குதிரையேற்றம், வீணை வேணு மிருதங்கம் முதலிய வாத்தியங்களை வாசித்தல், பரதமுனிவர் முதலானவர்கள் இயற்றிய நாட்டிய சாஸ்திரங்கள், நாரதர் முதலியவர்கள் பிரசுரம்செய்த ஸங்கீதசாஸ்திரம், பக்ஷி சப்தங்களையறிதல், இயந்திரப் பிரயோகங்கள், நஞ்சுகளை முறித்தல், சுரங்கங்களைக் கண்டு பெயர்த்தல், நீந்தல், தாண்டல், குதித்தோடல், ஏறியிறங்கல், ஸகல லிபிகள், ஸமஸ்ததேச பாஷைகள், மற்றுமுள்ள பற்பல கலைகள் இவைகளிலெல்லாம் ஒப்பற்ற திறமையைப் பெற்றுவிட்டான்.

எப்பொழுதும் சிலம்பம் பழகிச் சரீரத்தை யுழைத்துவருபவனான இவனுக்குப் பீமனைப்போல் இயற்கையாகவே அமைந்திருந்த மிகுந்த வலிமையானது சிறு பிராயத்திலேயே உலகில் அனைவருக்கும் வியப்பைத் தரக்கூடியதாகவாயினது. பாலியப் பருவத்தில்தானே இவன், ஒவ்வொரு வாள் வீச்சால் பனைமரங்களையும் பங்கயத் தண்டுகளைப்போல் அறுத்து வீழ்த்துவான். பத்துப்புருடர்கள் சுமக்கக்கூடிய இருப்புத் தடியையெடுத்துக் கெரடியாடுவான். தேஹவலிமை யொன்றைத் தவிர்த்து கலைகளெல்லாவற்றிலும் வைசம்பாயனன் சந்திராபீடனை யொத்திருந்தனன். ஸகல கலைகளிலும் வல்லவனானனென்கிற வெகுமானத்தாலும், சுகநாஸனிடமிருக்கும் கௌரவத்தாலும், பிறந்ததுமுதல் கூடியிருந்து புழுதி விளையாடியதாலும், சந்திராபீடனுக்கு வைசம்பயனன் நம்பிக்கையனைத்தையும் வைக்க நல்லிடமாகவும், இரண்டாவது இருதயமெனத்தகும் தோழனாகவும் ஆயினன். சந்திராபீடன், ஒரு நொடிப்பொழுதேனும் அவனைவிட்டுத் தனித்திருக்கப் பொறுக்க முடியாதவனானன்; வைசம்பாயனனும், அங்ஙனமே அவனைப் பிரிந்திருக்கத் துணிவுபெற்றானில்லை.

இவ்வாறு கல்விகளையெல்லாம் கசடறக் கற்றுவந்த அந்த சந்திராபீடனுக்கு வாலிபப்பருவம் வரத் தொடங்கவே, ஏற்கனவே இருந்த வடிவழகானது பின்னும் இருமடங்கு அழகை அதிகமாய் மேலோங்கச் செய்தது; ஸௌந்தரியம், செல்வம், இவற்றுடன் மார்

பும் விசாலித்தது; உறவினர்களது மனோரதங்களுடன்கூட திரண்டு ருண்டு துடைகளிரண்டும் பூரித்தன; குரலுடன்கூட இருதயமும் கம்பீரத்தன்மையை யடைந்தது.

சந்திராபீடன் இப்படி படிப் படியாக யௌவனப் பருவத்தை ப்பெற்று, ஸகல கலைகளாகும் கடலைக்கடந்து கரையேறிவிட்டதாக ஆசிரியரால் ஆமோதிக்கப்பெற்றானென அரசன் அறிந்து, அவனை அழைத்து வருவதற்காக ஸேனைத்தலைவனான வலாஹகன் என்பவனை அழைத்து குமாரனிடம் அனுப்பினன். அவன் கல்விச்சாலைக்குச் சென்று, வாயிற்காப்பவரிடமிருந்து அனுமதிபெற்றவனாய், உள்ளே சென்று சென்னிவணங்கி, இராஜகுமாரனது அனுமதியினால் வணக்கத்துடன் ஆஸனத்தில் உட்கார்ந்தனன். ஒரு முகூர்த்தகாலம் சும்மாவிருந்து, வலாஹகன் சந்திராபீடனுக்குச் சற்றருகிற் சென்று, வினயத்தை விளக்கிக்கொண்டு இவ்வாறு விண்ணப்பஞ் செய்யலானான்:— "இராஜகுமார! மஹாராஜா இவ்வாறு கட்டளையிடுகிறார்— 'எமது ஸகல மனோரதங்களும் ஸம்பூர்ணமாயின. பற்பல சாஸ்திரங்களையும் நீ பயின்றிவிட்டனை. கலைகளெல்லாம் கற்கப்பட்டன. ஆயுதவித்தைகள் எல்லாவற்றிலும் நீ மேலான திறமையைப்பெற்றாய். கல்விச் சாலையினின்றும் வெளிவருவதற்கு ஆசிரியர் அனைவராலும் ஆமோதிக்கப் பெற்றவனாகிறாய். சிக்ஷைகளைப் பெற்று, ஸகல கலைகளுடனுங் * கூடி, பௌர்ணமீ சந்திரனைப்போற் புதிதாக வெளிக்கிளம்பும் உந்தனை ஜனங்களெல்லாம் கண்டு களிக்கட்டும். உனது தரிசனத்தின்பொருட்டு அந்தப்புரத்தோர் அனைவரும் அதிக ஆவலுள்ளவர்களாயிருக்கின்றனர். நீ கல்விச்சாலையிற்போய் வஸிக்கத் துவக்கியபிறகு, பத்தாவது வருடம் இதோ நடைபெறுகின்றது; ஆறாவது பிராயம் நடைபெறுகையில் நீ கல்விச்சாலையிற் புகுந்தனை. இங்ஙனம் இவையனைத்தையும் இப்பொழுது ஒருங்கே கூட்ட, நீ பதினாறு வயதுடன் ஓங்கி விளங்குகின்றனை: ஆனதுபற்றி, நீ இன்றுமுதல் வெளிவந்து, உந்தனைப் பார்ப்பதற்குப் பேரவாக்கொண்ட அன்னைமார் அனைவருக்கும் தரிசனங்

* கலைகள் = 64 கலைகளென்னும் வித்தைகள், 16 சந்திரனுடைய பிறைகள் .[ பிறைகளெல்லாவற்றுடனும் பூர்ணசந்திரன் உதிப்பதுபோல், கலைகள் அனைத்தையும் அடைந்த நீ வெளிக்கிளம்பு என்றருத்து.]

துறந்துவிட்டு, ஆசார்யர்களின் அடிபணிந்து, நிர்ப்பந்தங்களினின்றும் நீங்கியவனாய், சுயேச்சையாக இராஜ்யஸௌகங்களை யனுபவிப்பாயாக. அகில அரசர்குழாத்தையும் ஆதரிக்கக்கடவாய். அந்தணரை ஆராதி. பிரஜைகளையெல்லாம் பரிபாலனஞ்செய். உறவினரை ஆனந்தப்படுத்து.' என்றனர்; ஆகையால் இதோ மூவுலகத்திற்கும் முக்கிய மாணிக்கம் போன்றதும், வாயு கருடன்களுக்குச் சமான வேகத்தையுடையதுமான **இந்திராயுதம்** என்று பெயர்பெற்ற குதிரையானது உமக்காக மஹாராஜாவால் அனுப்பப்பட்டு வாயிலில் நிற்கின்றது; இந்த அச்வமோ, பாரஸீகதேயத்துப் பிரபு, மூன்று உலகங்களாலும் வியக்கப்பெற்றதென நினைத்து, 'கடல் நீரிலிருந்து கிளம்பியதும், கர்ப்பத்திலிருந்து ஜனிக்காததுமான மிகவும் அருமையான இக்குதிரையை மன்னவன் ஏறுவதற்குரியதாகுமெனக் கொண்டுவந்தேன்' என்று சொல்லி யனுப்பினான். ஆனதால் இதன்மேல் ஏறி இதை யனுக்கிரஹிக்கவேண்டும். இதோ மிகுந்த வினயம் வாய்ந்தவரும், குலக்கிரமமாக தொன்று தொட்டுவந்தவருமான அரசகுமாரர்கள் ஆயிரமாயிரமாய் உம்மை உபசரிக்கும்பொருட்டு அனுப்பப்பட்டு, தலைவணங்கி தண்டனிடுவதற்கு ஆவல் கொண்டவராய், வாயிலில் அச்வங்களின் மீதிருந்தவாறே காத்துக் கொண்டிருக்கின்றனர்."

என்று இவ்விதம் உரைத்து வலாஹகன் ஓய்ந்ததும், சந்திராபீடன், தனது தந்தையின் ஆஞ்ஞையை ஆதரவுடன் சென்னியிற்றாங்கி, வெளிக்கிளம்ப வேண்டுமென விரும்பியவனாய் புதிதான கார்முகில் முழக்கம்போல் கம்பீரமான தொனியுடன், 'இந்திராயுதம் இங்கு கொண்டுவரப்படட்டும்' எனக் கட்டளையிட்டனன்.

அவன் அவ்விதம் உத்தரவுசெய்ததும், இருபுறமும் கனகமயமான கடிவாளவளயங்களைப் பிடித்து, அடிக்கடி கழுத்தை இழுத்துத் தாழ்த்துவதில் வெகு பிரயாஸப்படும் புருடர் இருவரால் இழுத்துக்கொண்டு வரப்பெற்ற, அகில அச்வங்களையும் அதிசயித்ததான இந்திராயுதத்தைக் கண்ணுற்றனன். அது ஒரு புருடன் தனது புயத்தை உயரத்தூக்கித் தொடக்கூடிய அவ்வளவு உன்னதமான முதுகையுடையதாகவும், ஜடரக்குழியைப் படபடத்து நடுக்கச்செய்

வதும் கர்ணகடோரமுமான அடிக்கடி கனைக்கும் தொனியினால், பொய்யாகவே வேகசாலியென்று கர்வங்கொண்ட கருடனை வெருட்டுவதுபோல் தோற்றுவதாயும் இருந்தது; மேலும் அதன் கால்கள் செதுக்கி ஒழுங்காக்கப்பட்டதுபோலவும், மார்பு விசாலமாக்கப்பட்டதுபோலவும், முகம் மழமழவென்று மெருகிடப்பெற்றதுபோலவும், வேகத்தில் கருத்மானுக்கு எதிரிபோலவும், துரிதகதியில் மனதுக்குக் கூட்டுப் படிப்பாளிபோலவும், உலகம் அனைத்தையுங் கொண்டு விலைமதிக்கத் தகுந்ததாகவும் காணப்பட்டது.

இதுகாறும் காணப்பெறாததும், இலக்ஷணங்கள் யாவும் அமையப்பெற்றதுமான அந்த அச்வத்தினது அதிசயிக்கத்தக்க வடிவத்தைப் பார்வையிட்டதும், வெகு தீரத்தன்மையனான சந்திராபீடனது இருதயத்தையுங் கூட ஆச்சரியமானது பரிசிக்கலாயினது; இவன் தனது சித்தத்திலும் இங்ஙனம் சிந்திக்கலானான்:— 'வாஸுகியைச் சுற்றிக் கட்டி வெகு விரைவுடன் சுழற்றிய மந்தரகிரிகொண்டு கடல்நீரைக் கடைந்து, இந்த அச்வரத்தினத்தைப் பெறாது, தேவாஸுரர்கள் வேறென்ன இரத்தினத்தைக் கண்டெடுத்தனரோ? உச்சைச்ரவஸ் என்னுங் குதிரையைக்கண்டு வியப்புற்ற மனத்தையுடையவனாகச் செய்து, மஹேந்திரனை ஸாகரம் வஞ்சனையல்லவா செய்துவிட்டது? பகவானான நாராயணனது கண்களுக்கு இவ்வளவு காலமாகவும் இது புலப்படாமற் போய்விட்டதென்று கருதுகின்றேன்; ஏனெனில், அவர் இன்னமும் கருடன்மீது ஏறும் விருப்பத்தை விட்டாரில்லை. ஓ! என்ன ஆச்சரியம்! எமது தந்தையின் இராஜ்யலக்ஷ்மியோ, தேவேந்திரனது செல்வத்தையும் மீறியிருக்கின்றதே! ஆனதுபற்றியே, மூவுலகத்திலெங்கும் பெறத்தகாத இத்தகைய இரத்தினங்களெல்லாம் நன்கொடையாக வந்து கிடைக்கின்றன. மிகவும் காந்தி பொருந்தியிருப்பதாலும், வெகு வலிமையுடையதானதாலும், இதன்வடிவம் ஏதோ தேவதையுடன் கூடியதுபோல், உண்மையாகவே ஏறுவதில் எந்தனுக்கு அச்சத்தையுண்டாக்குவதுபோல் புலப்படுகிறதே! தேவதைகளும் முனிவரது சாபத்தினால் தமது தேஹங்களை விட்டவர்களாய், சாபச்சொற்களால் வந்து ஸம்பவித்த வேறு சரீரங்களிற் சேர்ந்து வஸிப்பதுமுண்டு. இதுவும் சாபத்தைப் பெற்ற எவரேனும் ஓர் மஹாத்மாவாக

த்தான் இருக்கவேண்டுமென்பது திண்ணம். என் நெஞ்சம் இதற்கு தைவத்தன்மையிருப்பதாகக் கூறுவதுபோலிருக்கின்றதே.' என்று சிந்தித்துக்கொண்டே அதன்மேல் ஏறவேண்டி ஆஸனம் விட்டெழுந்தான். அக்குதிரைக்கு அருகிற் செல்லாமலே, 'ஓ! மஹாத்மாவான அச்வமே! நீ எவராகவேனும் இரு. உந்தனுக்கு வந்தனம் செய்கிறேன். உன்மேல் ஏறுவதாகும் எனது இம்மீறுதலை எவ்விதத்திலும் மன்னிப்பாயாக. அறியப்படாமலிருக்குமளவிலும் அமரர்களாயிருப்பினும் அனுசிதமான பரிபவங்களை அனுபவிக்கவேண்டித்தான் நேரிடுகின்றது.' என மனத்தினுள் வேண்டிக்கொண்டான். இந்திராயுதம், அவனது அபிப்ராயத்தை அறிந்ததுபோல் சிரஸ்ஸையசைத்துப் பிடரிமயிர்களை யடித்துக்கொண்டு, சுருக்கித்திருப்பிய கருவிழிகளுடன்கூடிய தனது கண்களால் அவனைச் சாய்ந்து பார்த்துவிட்டுக் கனைத்தது. பின்னர் இனிமையான இக்கனைப்புத் தொனியினால் சந்திராபீடன், இந்திராயுதத்தினிடமிருந்து ஏறுவதற்கு அனுமதிபெற்றவன் போல் அதன்பேரில் ஏறினான். அதன்மீது ஏறிக்கொண்டு, மூன்று லோகத்தையும் ஓர் ஒட்டைச்சாணளவில் அடங்கியதுபோல் எண்ணியவனாய் வெளிக்கிளம்பி, வெகு வன்மையான குளம்புகளின் உரத்த சப்தத்தினாலும் கனைக்கும் முழக்கத்தினாலும் ஸகல புவனங்களையும் செவிடாகச் செய்வதும், கங்குகரையில்லாததுமான குதிரைப்படையைக் கண்ணுற்றனன். சந்திரோதயத்தினால் ஸாகரஜலம்போல், சந்திராபீடன் வெளிக்கிளம்பியதால் அக்குதிரைப்படை யாவுமே ஒருவாறு சலித்தது. ஒருவரையொருவர் முந்திக்கொண்டு அடிபணிய ஆவலுள்ள அவ்வரசகுமாரரெல்லாம் வெகு பரபரப்புடன் குடைகளைக் களைந்து, வெறுஞ் சிரஸ்ஸுடன் கூடியவர்களாய், ஒன்றுக்கொன்று நெருக்குவதாற் சினங்கொண்ட குதிரைகளை விலக்குவதில் வெகுப் பிரயாஸப்பட்டுக்கொண்டு சந்திராபீடனைச் சூழ்ந்துகொண்டனர். ஒவ்வொருவருடைய பெயரையுங்கூறி, தனித்தனியாக வலாஹகனால் அறிவிக்கப்பட்டவர்களாக, அவரவர்கள் தூரத்திலிருந்தவாறே சென்னி வணங்கி வந்தனஞ் செய்தனர்.

சந்திராபீடனும் அவர்களனைவரையும் ஸம்மானித்துவிட்டு, பின்பு, தனக்குத்தகுந்த குதிரையின்மேல் ஏறிக்கொண்ட வைசம்பாயனனால் பின்செல்லப் பெற்றவனாகவும், சுற்றிலும் தொடுத்த நல்முத்துச்

சரங்களையுடையதும் மேற்புறத்திற் பதித்த சிங்கப்பதுமையைப் பெற்றதும் தங்கத்தாலாக்கிய தண்டத்துடன் கூடியதுமான குடையைத் தரிப்பதால் வெயில்தாக்காது மறைக்கப் பெற்றவனாகவும், 'ஜய சீலனாக இருந்து பல்லாண்டு வாழக்கடவாய்' என்று இனிமையான சொற்களால் மங்களகரமாக இடைவிடாது உரத்துப் படித்துக்கொண்டு வருபவரான புகழ்கூறும் புலவர்களால் துதிக்கப்பெற்றவனாகவும் பட்டணத்தை நோக்கிப் பிரயாணமானான். திரும்பவும் அங்கங்களை அடைந்து அவனிதனில் அவதரித்த அனங்கனேயெனத் தோற்றும் அச்சந்திராபீடன் கிரமமாக நகரமார்க்கம் வந்தடைந்தானெனத் தெரிந்து, ஜனங்கள் யாவரும் வேலைகளையெல்லாம் ஒழித்துவிட்டு, அவனைக் காண்பதற்காக வந்து சேர்ந்தனர். அவர்கள் அனைவரும், 'ஓகோ! நாம் பெரும் புண்ணியசாலிகள்; ஏனெனில், தைவத்தன்மை பொருந்தியதெனத்தகும் இவன் வடிவத்தை யாம் உள்ளத்திலுண்டான பிரீதிரஸப்பெருக்கினால் அகன்ற இக்கண்கள் இரண்டாலும் தடையின்றிக் காண்கிறோமல்லவா? இப்பொழுதுதான் எமது ஜன்மம் பயன்பெற்றதாயினது. சந்திராபீடனென்று வேடம்பூண்டு வேற்றுருவந் தரித்த இந்த மாக்ஷிமை தங்கிய புண்டரீகாக்ஷனுக்கு எவ்விதத்திலும் இவ்வந்தனத்தைச் செலுத்துகின்றனம்.' என மொழிந்துகொண்டு கைகூப்பித் தண்டனிட்டனர். எங்கும் ஆயிரக்கணக்கான வீட்டுச் சாளரங்களின் கதவுகளிரண்டும் நன்கு விசாலமாய்த் திறந்து வைக்கப்பட்டிருந்ததால், நகரமும் சந்திராபீடனது தரிசனத்தில் ஆவலுடன் விழித்துக்கொண்ட கண்களின் வரிசைகளையுடையதுபோல் காணப்பட்டது. கிரமமாக் சந்திராபீடனும் அரண்மனை வாயிலில் வந்துசேர்ந்து குதிரையிலிருந்துங் கீழிறங்கினன்.

இறங்கியதும் சந்திராபீடன் தனது கரத்தினால் வைசம்பாயனனது கரத்தைப்பற்றிக்கொண்டு, வெகு வணக்கத்துடன் வலாஹகன் வழிகாட்டிக் கொண்டு முன்செல்ல, மூவுலகமும் ஓரிடத்தில் ஒருமிக்கக் கூடியது போலிருக்கும் அரண்மனையினுட் சென்றான். அங்கு வெண்சட்டைத் தரித்து, பொற்பிரம்பேந்தியவர்களாய், வாயிற்படித் தூண்களுக்கு அருகிற் சித்திரிக்கப் பெற்றவர்போலவும், செதுக்கிய பதுமைகளைப்போலவும் நின்றுகொண்டிருக்கும், மிகவும் உன்ன

தமான உருவத்தையுடைய வாயிற்காப்பவர் இராப்பகலாய்க் காத்துக் கொண்டிருந்தனர். உட்புறத்தில் ஏராளமான போர்க் கருவிகளுடன் கூடியவைகளும், ஸர்ப்பக் கூட்டங்களால் கவியப்பெற்ற பாதாள கேவிகளுக்கொப்பானவைகளும், அதிக ஆழமுள்ளவையுமான ஆயுத சாலைகள் ஆங்கு இருந்தன. ஒருபுறத்தில் கந்தமாதனன் என்னும் மத்தகஜமொன்று, தனது இடது தந்தத்தின் முனையில் துதிக்கையை வைத்துக்கொண்டு, முக்காற்பங்கு மூடிய கண்களையுடையதாய் சற்றேனும் காதுகளை யசைக்காமல், அனவரதமும் ஸங்கீதஸமயத்தில் முழங்கப்படும் மிருதங்கத் தொனியைக் கேட்டுக்கொண்டிருந்தது. பளப்ளவென்றிருக்கும் கம்பளப் போர்வை போர்த்த முதுகுகளை யுடையவைவும், அரசருக்கு அருமையானவையும், அப்பொழுதே கொட்டில்களிலிருந்து கொண்டுவரப்பெற்றவையுமான குதிரைகள் அங்கு அணியணியாய் நின்றுகொண்டிருந்தன. அங்கு நீதிமண்டபம் ஒன்றில் பெருந்தன்மைக்கேற்றவாறு உடைகளை யுடுத்திக் கொண்டு, பிரம்பினல் ஆக்கிய மிகவும் உன்னதமான ஆஸனங்களில், தர்மங்களே உருவெடுத்து வந்திருக்கின்றனவோ வெனச்சொல்லும் படியான நியாயாதிபதிகள் வீற்றிருந்தனர். ஸகல நகரங்கள் கிராமங்கள் இவற்றின் பெயர்களை யறிந்து உலகம் யாவும் ஓர் அகம்போலிருக்கக் காண்கிறவர்களும், அகில புவனத்து வியாபாரங்களையும் வரைந்துகொண்டிருப்பதால் இதை தர்மராஜன் இராஜதானியாகத் தோற்றுவிப்பவர்களுமான எழுத்துவேலை யதிகாரிகள் அந்நீதி மண்டபத்தின்கண் ஆயிரமாயிரமாய்ச் சாஸனங்களை யெழுதிக் கொண்டிருந்தனர். பட்டம்பெற்ற சுற்றத்தரசர்கள் ஆஸ்தானமண்டபத்தில் அவரவருக்குற்ற ஆஸனங்களில் அமர்ந்தவராய், மன்னவர் இயற்றிய காவ்யம் முதலியப் பிரபந்தங்களை ஒருவருக்கொருவர் ஆலோசித்துக்கொண்டும், கவிகளது குணங்களை யெடுத்துரைத்துக்கொண்டும் இருந்தனர். மேலும் அங்கு ஒருபுறத்தில், வேட்டைநாய்களின் கூட்டங்கள் தங்கச்சங்கிலிகொண்டு கட்டப்பட்டிருந்தன. கூனர், குள்ளர், வேடர், செவிடர், ஊமையர், ஆண்மையற்றவர் என்றித் தகைய பலவாறான ஜனங்கள ஒருபக்கம்சூழ்ந்திருந்தனர். மதங் கொண்ட குஞ்ஜரத்தின் மதஜலமணத்தினுற் பொறுமைகொண்டு கூட்டிலிருந்தவாறே பேரிரைச்சலிடும் சிங்கங்கள் ஒருபக்கம் விளங்

கின. அல்லாமலும், அவ்விடத்தில் கார்முகில்கள்வந்து கவிந்து கொள்வனபோல்காரகிற் கட்டைகளிலிருந்து திரள் திரளாய்த் தூமங்கள் கிளம்பிக்கொண்டிருந்தன. இரத்தாசோகமரங்கள் இளம்வெயில்போற் பிரகாசித்தன. நக்ஷத்திரக் கூட்டம்போல் முத்துத் தோரணங்கள் ஒளிவீசின. இயந்திரங்களிலிருந்து நீர் சொரியப்பெற்ற அறைகள் மாரிகாலமடைந்தனவோ வெனத்தோன்றின. மயில் நிற்கும் பொற்பிரம்புத் தடிகள் மின்னற்கொடிகளுக்கொப்பத் துலங்கலாயின. பற்பல கற்பாவைகளும் அகத்துக்கு ஆதிதேவதைகள் போல் அங்குவிளங்கின. பின்னும் அவ்விடம், சிறந்தகவிஞர் இயற்றிய கத்யம்போல், அநேகவர்ண சிரேணிகளில் *விளக்கப்பெற்ற நூதனமான பொருள்களின் †திரள்களையுடை யதாகவும், மாலைப்பொழுது போல்சந்திராபீடோதயத்தைப் பெற்றதாகவும்‡ பலராமனைப்போல் காதம்பரீ ரஸத்தின் § சிறப்பை வர்ணிப்பதில் ஆவலுள்ளோரால் சூழப்பெற்றதாகவும் இருந்தது.

வாயிற் காப்பவரில் வெகுபேர் விரைவுடன் ஓடிவந்து அடிபணிந்து வழிகாட்ட, ஆசாரங்களில் அதிக வல்லவரான அந்தப்புரக் கிழவிமார் அங்கு உட்புறமிருந்து வெளிவந்து மங்களகரமான ஆராத்திரிகையை அடிக்கடி யெடுக்க, அனேகம் ஆயிரக்கணக்கான பிராணிகளால் சூழப்பெற்ற வெவ்வேறுலகங்களெனத்தகும் உள்ளிருக்கும் அங்கணங்களைத் தாண்டிச்சென்று, தன் குலத்திற்குத் தொன்றுதொட்டு வந்தவரும் உயர்குலத்தில் உதித்தவரும் அன்பார்ந்தவருமான சரீரரக்ஷாதிகாரிகளால் சூழப்பெற்ற தன் தந்தையை, அன்னப் பறவையின் அங்கங்களைப்போல் வெண்ணிறமான சயனத்தின்மீது வீற்றிருக்கக் கண்டான்.

'இதோ பார்ப்பீர்களாக.' என வாயிற் காப்போன் கூறியதும், தலை வணங்கி வந்தனஞ் செய்த அச்சந்திராபீடனை 'வரவேண்

---

* அனேக வர்ண சிரேணிகள் = பல எழுத்துகளின் வரிசை, பிராம்மணர் முதலிய பல ஜாதி ஜனங்களின் வீதிகள்.

† பொருள்கள் = அர்த்தங்கள், தனங்கள்.

‡ சந்திராபீடோதயம் = சந்திராபீடனுடைய விருத்தி, சந்திரரூபமான சிரோபூஷணத்தினுடைய உதயம்.

§ காதம்பரீரஸம் = அப்பெயர் கொண்ட நூலின் இரஸம், மதுவின் சுவை

டும் வரவேண்டும்.' என்று சொல்லிக்கொண்டு தூரத்திலிருந்த வாறே தனது புயங்களிரண்டையும் நீட்டி அவனைத் தந்தையும் தழுவலானான். ஆலிங்கனம் செய்து விடப்பட்டவனாய், தகப்பனாரது பாதபீடத்திற்கு ஸமீபத்தில் தனது தாம்பூலத் தட்டேந்துபவள் வந்து, வெகு துரிதமாக மடித்து ஆஸனமாகப் போட்ட உத்தரீயத்தை 'அப்பால் எடுத்துவிடு.' என்று மெதுவாகப் பகர்ந்து, தன் பாதத்தின் முனையினால் அதைத் தூர விலக்கிவிட்டு, தரையிற்றானே சந்திராபீடன் உட்கார்ந்தனன்; வைசம்பாயனனும் வேந்தனால் தனது மைந்தனைப்போலவே வேற்றுமையின்றி ஆசையுடன் அணைந்து கொள்ளப்பெற்றவனாய், பின்பு அருகிலிருந்த அவனது ஆஸனத்தின்மீது அமர்ந்தான். ஓர் முகூர்த்தகாலம் அங்கிருந்து விட்டு, 'அப்பா! குழந்தாய்! நீ போய், புத்திரனிடம் வாத்ஸல்யம் வாய்ந்த உனது அன்னையைத் தொழுதுவிட்டு, உன்னைக் காண்பதிற் காதல் கொண்ட மற்றத் தாய்மார்கள் எல்லோருக்கும் தரிசனத்தைத் தந்து அவர்களையும் களிக்கச் செய்வாயாக.' என மொழிந்து தந்தையினால் விடப்பட்டவனாய், வினயத்துடன் எழுந்து, பரிஜனங்களையெல்லாம் நிறுத்திவிட்டு, வைசம்பாயனனை மாத்திரம் கூடவழைத்துக் கொண்டு, அந்தப்புரத்திற் செல்லக்கூடிய சில இராஜபரிஜனம் வழி காட்ட, அந்தப்புரத்தினுட் சென்றான்.

அங்கு வெண் சட்டை தரித்து சரீரத்தைப் போர்த்துக்கொண்டிருக்கும் அனேக அந்தப்புரத்து அதிகாரிகளால் நாற்புறமும் சூழப்பெற்றவளும், மிகவும் சாந்தமான வடிவங்களை யுடையவர்களாய்க் காஷாய முடுத்துக்கொண்டிருக்கும் வயது சென்ற ஸன்னியாஸ ஸ்திரீகளாற் புண்ணியகரமான பூர்வகாலததுக் கதைகளைச் சொல்லிக் களிப்படையச் செய்யப் படுகின்றவளுமான தனது அன்னையை அடுத்துச் சென்று அடிபணிந்தனன்.

அவளோ, பரபரப்புடன் அவனை யெடுத்து, தன் ஆஞ்ஞையை அந்தக்ஷணமே நிறைவேற்ற வல்ல பரிஜனம் பக்கத்திலேயே காத்திருக்கையிலும், தானாகவே ஆராத்திரிகையை யெடுத்துவிட்டு, தனதுள்ளத்தில் அனேக சுபங்களைக் கோரியவளாய், அவனை உச்சி முகர்ந்து ஆலிங்கனம் செய்து கொண்டனள்; பின்னர், அங்ஙனமே வைசம்பாயனனுக்கும் தகுந்தவாறு உபசாரஞ் செய்து, தழுவிவிட்டு,

தானும் உட்கார்ந்தவளாய், வினயத்துடன் தரையில் உட்காரப் போகும் சந்திராபீடனை வலுவில் இழுத்துத் தன் மடியின்மேல் ஏற்றி உட்காரச் செய்தனள்; வைசம்பாயனனும், வெகு விரைவாக பரிஜனத்தால் இடப்பட்ட பீடத்தில் உட்கார்ந்ததும், சந்திராபீடனை ப் பலமுறை கட்டித் தழுவி, நெற்றிக்கட்டிலும், மார்பிலும், தோள்க ளிலும் அடிக்கடி தனது கரதலத்தினால் தடவிக் கொடுத்துவிட்டு, விலாஸவதி அவனை நோக்கிக் கூறத்தொடங்கினள்:— 'குழந்தாய்! உன் தந்தை வெகு கன்னெஞ்சரப்பா; ஏனெனில், மூவுலகங்களா லும் கொண்டாடத் தகுந்த இந்த உன் வடிவமானது அவராலல்ல வோ இவ்வளவு காலமாய் வருந்தியது? குருமாரது இத்தகைய வெகு நீண்டகால நிர்ப்பந்தத்தை நீ எங்ஙனம் ஸஹித்தனையோ? ஓகோ! பாலனுசவிருந்தும், வலியுள்ள வாலிபனைப்போல் உந்தனுக்கு த் துணிவு மிகவும் அதிகம். நீ சிறுகுழந்தைப் பருவத்திலிருக்கையி லும், உன் மனம் சிசுக்களுக்கு இயல்பான விளையாட்டிலிருக்கும் விருப்பை அற்பமாக நினைத்து, அதில் பற்றில்லாதிருப்பது மிக்க வியக்கத் தக்கதே; ஆ! குரு ஜனங்களிடம் நினதுபக்திக்கு நிகரேது மிலது. எவ்வகையிலும் இப்பொழுது தந்தையின் அருளால் உந்தனை ஸகலகலா வல்லவனாகக் காண்பதுபோலவே, இன்னும் சிறிது நாட்க ளில் உந்தனுக்கு இசைந்த மனையாட்டிகளுடன் கூடியிருக்கவும் காண ப்பெறுவேனாக.' என்று இவ்வண்ணம் உரைத்து, பின்பு வெட்கத் தினால் புன்னகைகொண்டு தலைவணங்கியிருக்கும் இவனது கபோல த்தையெடுத்து முத்தமிட்டுக் கொண்டனள். இவ்வாறு அங்கும் சொற்ப நாழிகையே இருந்துவிட்டு, கிரமமாக அந்தப்புரத்தோர் அனைவருக்கும் தான் தரிசனம் தந்து அவரைக் களிப்புறச் செய்த னன். அங்கிருந்து பின்னர் வெளிவந்து, அரண்மனை வாயிலில் நிற்கும் இந்திராயுதத்தின் மீதேறி, அவ்வாறே அவ்வரசகுமாரரது கூட்டம் பின்தொடர, சுகநாஸனைக் காண்பதற்குச் சென்றான்.

பற்பல சாஸ்திரங்களாகும் அஞ்ஜனந் தீட்டி நன்கு விழிக்கப் பெற்ற ஞானக் கண்களையுடைய சாக்கிய முனிவரது சாஸன நெறி யில் வல்லவரான பெரியோர்களாலும், சிவந்த உடைகளையுடுத்திருக் கும் சைவமதத்தினராலும், அந்தணராலும் அல்லும் பகலும் சுற்றி லும் வீற்றிருக்கப் பெற்ற சுகநாஸனது மாளிகையின் வாயிலிற்

சென்று, இராஜகுமாரன் அரண்மனையிற் போலவே வெளியங்கணத்திற்றானே குதிரையை விட்டுக் கீழிறங்கினன். வாயிற்படியிற் குதிரையை நிறுத்திவிட்டு, வைசம்பாயனன் கரத்தைப் பற்றிக்கொண்டு, மிகப் புதிய சுத்தமான சுண்ணச் சாந்திட்டு வெண்மையாக்கிய பல்லாயிரம் மாடங்கள் அடர்ந்ததும், வேந்தனது இரண்டாம் அரண்மனை யெனத் தகுந்ததுமான சுகநாஸனது அகத்தினுட் சென்றான். அங்கு நுழைந்ததும், அனேக மாயிரம் அரசருக் கிடையில் அமர்ந்திருக்கும் மற்றொரு தந்தைக்குச் சமானமான சுகநாஸனைப்பார்த்து, வினயத்தை விளக்குபவனாய்ச் சற்றுத் தூரத்திலிருந்தவாறே, தலைவணங்கி வந்தனஞ் செய்தனன்.

சுகநாஸனும், பரபரப்புடன் கிரமமாக எழுந்திருக்கும் மற்ற மன்னவருடன் எழுந்து, வெகு ஆதரவுடன் சில அடி தூரம் எதிர்கொண்டு போய், மிகவும் ஆனந்தத்தினால் அகன்ற நேத்திரங்களிலிருந்து தானே வடியும் ஆனந்தபாஷ்பநீர்த்துளிகளைப் பெருக்கிக் கொண்டு வைசம்பாயனனோடு சந்திராபீடனையும் மிகவும் அன்புடன் ஆலிங்கனம் பண்ணிக் கொண்டான். தழுவி விடப்பட்டதும், ஆதரவுடன் கொண்டுவந்து போடப்பெற்ற இரத்தினபீடத்தை விட்டுவிட்டு இராஜகுமாரன் தரையிலுட்கார்ந்தனன்; பின்பு வைசம்பாயனனும் அப்படியே செய்தான். இராஜபுத்திரன் தரையில் உட்கார்ந்ததும், சுகநாஸனைத் தவிர்த்து மற்ற மன்னவர் அனைவரும் தமது ஆஸனங்களை அகற்றி நிலந்தனில் அமர்ந்தனர். சுகநாஸன் ஒரு க்ஷணநேரம் சும்மாவிருந்து, அன்பினால் அவன் அங்கங்களில் உண்டான உரோமச்சிலிர்க்கையால் உள்ளத்தில் அடங்காத ஆனந்தத்தை அறிவிப்பவனாய், சந்திராபீடனை நோக்கி இங்ஙனஞ் சொல்லலானான்:—'அப்பா! சந்திராபீட! பிரபுவான தாராபீடனானவர், உந்தனைக் கல்விகளைக் கசடறக் கற்றவனாகவும், யௌவனப் பருவத்தை யடைந்தவனுமாகக் கண்டு, இப்பொழுதே இவ்விராஜ்யத்தை நெடுங்காலமாய் அரசுசெலுத்திவந்ததனாலுண்டான பயனைப் பெற்றவராகினர். முதியோர் ஆசீர்வாதங்கள் யாவும் இப்பொழுதே பூர்த்தியாயின. அநேக ஜன்மாந்தரங்களிற் செய்த நல்வினைகளெல்லாம் இப்பொழுதே பலித்தன. இப்பொழுதுதான் நம் குலதைவங்கள் குளிர்ந்த முகங்களை யுடையவைகளாயின. புண்ணியசாலிகளல்லாத

வருக்குப் புவனங்களெங்கும் புகழத்தக்க உன்னைப்போன்றவர் புத்திரராகப் பிறக்கின்ருரில்லை. ஓ! இச்சிறிய பிராயமெங்கே! மானிடத் தன்மைக்கு மேலான இத்திறமை யெங்கே! வித்தைகளை யெல்லாம் விரைவாகக் கிரஹிக்கும் இந்த ஸாமர்த்தியந்தான் எத்தகையது! ஓகோ! பிரஜைகளெல்லோரும் பெரும் பாக்கியசாலிகளாயினர்; பரத பகீரதர்களுக் கொப்பான நீ இவர்களைப் பரிபாலிக்கப் பிறந்தனையே! உந்தனை அதிபதியாகப் பெற, இம் மேதினி எத்தகைய புண்ணியம் பண்ணியதோ? எப்படியும் தனது கோரப்பற்களால் ஆதிவராகனைப்போல், நீயும் உனது புயத்தினுல் புவனபாரத்தைப் பிதாவுடன் கூடிச் கல்பகோடி காலமளவும் வஹிக்கக் கடவாய்.' எனச் சொல்லி, தானுகவே புஷ்பம், சந்தனம், ஆடை, ஆபரணம் முதலியவற்ருல் ஆதரவுடன் உபசரித்துவிட்டு, போகச் சொல்லி உத்தரவளித்தான். அங்கிருந்து விடை பெற்றதும், குமாரன் எழுந்திருந்து, அந்தப்புரஞ் சென்று, வைசம்பாயனனுடைய மாதாவான மனோரமையைப் பார்த்துவிட்டு, வெளிவந்து, இந்திராயுதத்தின் மேலேறி, தன் தந்தையினுல் தனது அரண்மனையின் பிரதிபிம்பம் போல் முன்னமே அமைக்கப்பெற்ற தன் மாளிகைக்குச் சென்ருன்; சென்றதும் சீர்மையான மண்டபமொன்றில் இருக்கும் சயனத்தின் மீது சற்று நேரம் அமர்ந்திருந்து, அவ்வரச குமாரருடன் மஞ்சன மாடுவது முதல் விருந்துண்ணுமளவிலும் உள்ள பகற்பொழுதிற் செய்யவேணடிய விதிகளை யெல்லாம் செய்து முடித்துக் கொண்டான் மாளிகைக்குள் தன் துயிலறையிலேயே ஒருபுறத்தில் இந்திராயுதம் இருப்பதற்கு இடமொன்றையு மேற்படுத்தினுன்.

இவனது இவ்வகையான விருத்தாந்தத்துடன் பகற்பொழுதும் சாய்ந்தது; வானத்தை விட்டு இறங்கும் மத்தியான்னகாலத்துச் சீர்மை யென்னும் தேவியின் தாள்களிலிருந்து நழுவி விழுவதும், தனது ஜோதியால் மறைக்கப் பெற்ற மத்திய இரத்திரத்தையுடையதுமான பத்மராகக் கற்களிழைத்தத் தண்டைச் சிலம்பு போன்ற ஆதித்தமண்டலம் கிரணங்களை யெல்லாம் இழந்து கீழே விழத் தொடங்கியது; சக்கிரவாகப் பறவைகள், பங்கயக் கயத்தின் பரிமளத்திற் பரிசயத்தினுல் வந்த வண்டுகளின் வரிசைகளால் கண்டத்திற் கவ்வப் பெற்றனவாதலால், காலபாசத்தினுற் கழுத்திற் கட்

யிழுக்கப்பட்டனவோவெனக் கூடியவைகளாய் ஆண் பெண்களிரண்டும் வெவ்வேருய்ப் பிரிந்துவிட்டன.

சூரியபகவானும், மெதுவாக மேற்றிசையாகும் மங்கையர் செவியில் அணியும் செங்குவளைமலர்போல், சற்று நேரமிருந்து இவ்வுலகம் விட்டு சாய்ந்திடவே, பங்கயப் பூக்கள் பகலிற் பானஞ் செய்த வெயில் அனைத்தையும் அடியோடு அகற்றும் பொருட்டு உள் நுழையும் இதழ் இதழான இருள்களுக் கேற்க வண்டுகளின் இனங்கள் செந்தாமரை மலர்களின் உட்புறங்களிற் புகுந்து கொண்டன; அந்திப்பொழுதின் செவ்வானமும் மெல்ல மெல்ல மறைந்து வந்தது; ஸந்தியாகாலதேவதையை அர்ச்சிக்கையில் பலி பிண்டங்கள் திசைகடோறும் போடப்பட்டன; புரோஹிதரெல்லாம் பூபதிக்கு வாழ்த்துக் கூறிவிட்டு வெளிக்கிளம்பிக் கொண்டிருந்தனர்; ஆயிரக்கணக்காய் எரிக்கப்படும் தீபங்களின் எதிரொளிகளைப் பெற்ற மணிமேடைகள் யாவும், அர்ச்சனை செய்கையில் அங்கு இறைந்து கிடக்கும் மலர்ந்த செண்பகப் பூக்களுடன் கூடியவை போல் தோற்றின; பகற்பொழுதிற் கொழுந்து விட்டு எரிந்த சூரிய காந்தக் கற்களிலிருந்து தீயனைத்தும், கணவனை விட்டுப் பிரிந்த மாதர்களின் இருதயத்திற் பற்றியதுபோல் அவர் மனங்கள் ஏங்கித் தவித்தன; அந்திப் பொழுதின் அந்திமமும் வந்து துவக்க, சந்திராபீடனும் தன் தந்தையின் அரண்மனைக்குச் சென்று, அவன் அருகிற் சற்றுநேரம் தங்கிவிட்டு, விலாஸவதியையும் கண்டு, பின்பு தனது மாளிகைக்குத் திரும்பி வந்து, சயனத்தின் மீதேறி படுத்துறங்கினுன்.

பொழுதுவிடிந்ததும் துயிலெழுந்து, தந்தையினிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு, புதிதாய் வேட்டையாடுவதிற் பேராவலால் இழுக்கப்பெற்ற இருதயத்தை யுடையவனாக, கதிரவன் உதிப்பதற்கு முன்பே, இந்திராயுதத்தின் மேல் ஏறிக் கொண்டு, முன்னதாக, கர்த்தபங்களின் அளவுகொண்ட வேட்டை நாய்களைத் தங்கச் சங்கிலி பூட்டியிழுப்பவரான நாய்வளர்ப்பவர், கரங்களிற் கோதண்டமேந்தி வெகு கோலாஹலத்துடன் அடிக்கடி ஓடுவதை நோக்கி இரட்டித்த உத்ஸாஹத்தையுடையவனுய், ஏராளமான ஆட்கள்,

யானைகள், அச்வங்கள் இவைகளுடன் கானகம் ஏகினான். அங்கு, காதுமட்டும் இழுத்து விடுத்த அம்புகளாற் காட்டுப் பன்றிகளையும், மிருகேந்திரன்களையும், மான்களையும் ஆயிரம்ஆயிரமாய் அடித்து வீழ்த்தினான்; வெகு வலிவு வாய்ந்தவனானதால், மற்றுங் கொடிய விலங்குகளையும் உயிருடன் துள்ளத்துள்ளக் கவர்ந்துகொண்டனன். சூரியன் நடுப்பகலை யடைந்ததும், மூழ்கி யெழுந்தது போல் களைப்பினால் வியர்வை நீர்த்திவலைகளை இடைவிடாது சொரிவதும், சிரமத்தினால் சோர்ந்ததுபற்றி வாயிலிருந்து பெருகும் உதிரத் துளிகள் கலந்த நுரைகளுடன் கூடிய உதடுகளையுடையதுமான இந்திராயுதத்தினால் வஹிக்கப் பெற்றவனாய், பதாதி பரிஜனங்களெல்லாம் நெடுந்தூரத்திற் பின் தங்கி விடவே ஒருவரும் போகாமல் முன்புறம் சூன்னியமாக விருக்க, வெகு வேகசாலிகளான குதிரைகளில் ஏறிவரும் சில இராஜகுமாரர்களுடன், 'அந்த கேஸரி இவ்விதம், அவ்வன வராஹம் இப்படி, அந்த சரபமிருகம் அப்படி.' என்று அவ்வேட்டையின் விருத்தாந்தத்தையே கூறிக்கொண்டு, தன் அரண்மனைக்கு வந்து சேர்ந்தனன்.

குதிரையிலிருந்து கீழிறங்கியதும், வெகு துரிதமாகப் பணிவிடை செய்பவரால் ஓடிவந்து இடப் பெற்ற பீடந்தனில் அமர்ந்தவனாய், கவசத்தைக் கழற்றியதுடன், குதிரையேறிச் சவாரிசெய்தற்கேற்றவண்ணம் பூண்டிருந்த உடைகளைக் களைந்துவிட்டு, இங்குமங்குமாய் அசைக்கப்படும் சிற்றாலவட்டக் காற்றினால் இளைப்பாறினன்; சிரமபரிஹாரமானதும், வெள்ளியாலும் பொன்னாலும் இரத்தினத்தாலும் ஆக்கப்பெற்ற கலசங்களுடன் கூடிய மஞ்சனமாடும் இடஞ் சென்றான். அங்கு நீராட்டத்தை நிறைவேற்றிக் கொண்டு, தேவதார்ச்சனைகளைச் செய்து முடித்து, வாஸனை தரிக்கும் அறைக்கேகி யுட்கார்ந்தனன்; அங்கு அரசனனுப்பிய அரண்மனைப் பரிசாரிகைகள் பேழைகளிற் பூண்களையும், பூமாலைகளையும், பூசிக்கொள்ளும் வாஸனைத் திரவியங்களையும் அவன் முன்னிலையிற் கொண்டு வந்தளித்தனர். அவர்களிடமிருந்து அவையனைத்தையும் பெற்று, தான் முதலில் வாஸனை வஸ்துக்களைப் பூசிக்கொண்டு, வைசம்பாயனனுக்களித்து, அருகிலிருந்த யாவருக்கும் முறைப்படி ஆடை, ஆபரணம், வாஸனைப்பொருள், புஷ்பம் இவைகளைக் கொடுத்து

விட்டு, ஆஹாரமருந்தும் கூடத்திற்கேகினான். அவ்விடத்தில் இரட்டையாய் மடித்திட்ட இரத்தினகம்பளத்தி லுட்கார்ந்தவனாய், அருகில் உட்கார்ந்து, அவர் குணங்களை யெடுத்துரைக்கும் வைசம்பாயனனால் அவரவருக் கேற்றவிடங்களில் அமர்த்தப்பெற்ற அரசகுமாரருடன் ‘இவருக்கு இதை யளியுங்கள்; இவருக்கு இதைப் பரிமாறுங்கள்.’ எனச் சொல்லி, தனது ஆதராதிசயத்தை யறிவிப்பது பற்றி, அவர்களுக்குத் தன்னைப் பணிவதிற் பிரீதியைப் பின்னு மதிகமாய் மேலோங்கச்செய்து கொண்டே உணவுகளை யுண்ணலானான். பின்னர் ஆசமனஞ் செய்து, தாம்பூலந்தரித்து, அங்குதானே சற்று நேரமிருந்துவிட்டு, இந்திராயுதத்தினிடம் போயினன். அதனிடம் நின்றுகொண்டே, அதன் குணங்களைப்பற்றிய பற்பல ஸல்லாபங்களைச் செய்து, தானாகவே இந்திராயுதத்திற்கு முன்னிலையிற் புற்களை யெடுத்துப் போட்டுவிட்டு, வெளிவந்து, இராஜனது மாளிகைக்குப் போய், தந்தையைத் தரிசித்து, திரும்பவும் தன் மனைக்கு வந்து அன்று இரவையுங் கழித்தான்.

மறுநாட் காலையில், இந்திரகோபமென்னும் பட்டுப்பூச்சிபோல் மிகச் சென்னிறமான சேலையினால் முக்காடணிந்தவளும், ஒழுங்காகத் திரண்டுயர்ந்த நீண்ட நாசியை யுடையவளும், மலர்ந்த கமல மலர்போன்ற தெளிவான நேத்திரங்களுடன் கூடியவளும், பெருந்தன்மைக் கேற்ற வடிவம் வாய்ந்தவளுமான கன்னிகையொருத்தியால் பின் தொடரப் பெற்ற, அகில அந்தப்புரத்திற்கும் அதிகாரியான **கைலாஸன்** என்னும் கஞ்சுகியை வரக் கண்டான்.

அவன் அருகில் வந்து, தனது வலது கரத்தைப் புவிதனில் வைத்து அடி பணிந்து விண்ணப்பம் செய்ததாவது :— “இராஜகுமார! மஹாராணி விலாஸவதியம்மாள் இங்ஙனம் ஆஞ்ஞாபிக்கின்றனர் :— ‘இக் கன்னிகையானவள், முன்னால் குலூத இராஜதானியை வென்று, மஹா ராஜனால் சிறைப்படுத்தப்பெற்ற ஜனங்களுடன் கொண்டு வந்து, அந்தப்புரப் பரிசாரிகைகளின் மத்தியத்திற் சேர்க்கப்பெற்ற குலூதேச்வரன் புதல்வியான **பத்திரலேகை** யென்னும் நற்குணம் பொருந்திய பாலிகை; இவளை அநாதை யென்னும் அரசன் புதல்வியென்னும் கருதி, அன்பினால் இதுகாறும் மனது

புத்திரியைப்போல வெண்ணி, நான் சீராட்டி வளர்த்து வந்தேன்; ஆகவே, இப்பொழுது உனக்குத் தாம்பூலத் தட்டேந்தும் தாதியாக இருக்கக் கூடியவளென்று நினைத்து, இவளை யுன்னிடம் அனுப்புகின்றேன்; மற்றப் பரிஜனங்களைப் போல் இவளையும் நீ பார்த்தல் தகாது; உனது மனப்போக்கைப் போலவே இவளையும் சபலமான செய்கைகளினின்றும் தடுப்பாயாக; இவள் நம்பிக்கையாக ஸகல காரியங்களிலும் அந்தரங்கத் தோழிபோல் வைத்துக் கொள்ளக்கூடியவள்; வெகுநீண்ட காலமாக வளர்த்து வந்த வாஞ்சையினால் என் மகளைப் போல் இவளிடத்து என் மனம் பற்றிவிட்டது; இயற்கையிலேயே இவள் வெகு வினீதையாயிருப்பது பற்றி, சிறிது நாட்களிற்குளே குமாரனான உந்தனைத் திருப்திசெய்து வைக்கப்போகின்றாளென்பது திண்ணம்; இவளது ஸ்வபாவங்களை நீ யறிந்தவனல்லன் என்றெண்ணி இவ்வாறுரைக்கின்றேன்; இவள் நெடுநாள் வரையிலும் தகுந்த விதமாய் உனக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்குமாறு, நீ எவ்வகையிலும் இவளிடம் நல்லெண்ணமுள்ளவனாயிருக்கக் கடவாய்.' என்றனள. அப்பால் உமது சித்தம்." என்று மொழிந்து கைலாஸன் ஓய்ந்ததும், நற்குலத்துதித்தவர்க்கேற்க, பாதத்திற் பணிந்த பத்திரலேகையை வெகுநேரம் இமைகளசையாமற் பார்த்துவிட்டுச் சந்திராபீடன், 'அன்னையின் உத்தரவுப்படிக்கே.' எனக் கூறி கஞ்சுகியை அனுப்பிவிட்டான்.

பத்திரலேகையோ, அது முதலாகத் தரிசனத்தினால் மாத்திரமே அவனுக்குப் பணிவிடை செய்வதிற் பேராவல் கொண்டவளாய் நித்திரையிலும், உட்கார்ந்திருக்கையிலும், நிற்கையிலும், உலாவுகையிலும், மன்னவனது மாளிகைக்குச் செல்லுகையிலும் அல்லும் பகலும் சாயைபோல் அவ்வரச குமாரனை விட்டுப் பிரிந்தாளில்லை; சந்திராபீடனுக்கும் பார்த்தது முதல் அவளிடம் ஒவ்வொரு க்ஷணமும் அன்பானது அபாரமாய் ஓங்கி வளர்ந்த வாறிருந்தது. அந்தரங்கமான அகில காரியங்களிலும் அவளைத்தனது வேற்றுமையற்ற மற்றொரு இருதயத்தைப் போலவே நம்பலானான்.

இங்ஙனம் சில நாட்கள் சென்றுவர, வேந்தனானவன் சந்திராபீடனுக்கு இளவரசுப் பட்டமளிக்க விரும்பியவனாய், வேலைக்கார

ரிடம் அதற்கு வேண்டும் பண்டங்களைக்கொண்டு சேர்ப்பதற்காகக் கட்டளையிட்டனன். இளவரசுப்பட்டம் பெறப்போகிற இச் சந்திராபீடன், ஒருக்கால் தரிசனத்தின் பொருட்டுத்தன்னிடம் வந்திருக்கையில், ஏற்கனவே வினயம் வாய்ந்தவனாயிருப்பினும் அவனை இன்னும் விசேஷமாய் வினீதனாக்க வேண்டுமென்று எண்ணியவனாய்ச்சுகநாஸன் பின் வருமாறு சற்று விரிவாக உபதேசிக்கத் தொடங்கினான்:—

“அப்பா! சந்திராபீட! அறியவேண்டியவை அனைத்தையும் அறிந்து, கல்விகளை யெல்லாங் கற்ற உந்தனுக்கு உபதேசிக்கவேண்டிய விஷயம் சிறிதுமிலது; என்றாலும், யௌவனப் பருவத்திலுண்டாகும் இருளோ (அஞ்ஞானம்) இயற்கையாகவே பெருந்திபங்களின் ஒளிகளால் அகற்றக்கூடாததும், கதிரவனாலும் விலக்க முடியாததுமான அவ்வளவு மிகவும் அடர்த்தியானது. ஜீரண காலத்திலும்* தணியாததான செல்வச் செருக்கினால் உண்டாகும் மதமானது‡ மிகக் கடுமையானது. பிரபுத் தன்மை யென்னும் இம் மாசுபடர்ந்த அந்தகத் தன்மையானது, அஞ்ஜன குளிகைகளாலும் அகற்றக் கூடாததாயிருக்கின்றதென்பது மற்றொரு துன்பமாகுமெனக் கருதியே உந்தனுக்கு விரிவாகக் கூறுகின்றேன். பிறவிச்செல்வம், புதிதான வாலிபப் பருவம், நிகரில்லா வடிவழகு, மானிடத்தன்மைக்கும் மேலான திறமை என்கிற இவை யாவும் மஹத்தான கேடுகளின் பரம்பரைகளல்லவா? இவற்றினுள் ஒவ்வொன்றுமே அவினயம் அனைத்துக்கும் ஆதாரமாகும்; அப்படியிருக்க, அவ்வெல்லாவற்றினது சேர்க்கை யெத்தகைய தென்பதைக் கூறவும் வேண்டுமோ? யௌவனாரம்பத்திற் புத்தியானது, பெரும்பாலும் சாஸ்திரங்களென்னும் ஜலத்தினால் கழுவப் பெற்று களங்கமற்று இருந்தபோதிலும் கலங்கிவிடுகின்றது. புழுதிகளைச் சுழற்றிவாரி யிறைத்துக் கொண்டு இலைச் சிறகுகளை யிழுத்துச் செல்லும் சுழற்காற்றுப்போல்

* ஜீரணகாலம்=விருத்தாப்யம், உணவு ஜீரணமாதல்;

‡ மதம்=இறுமாப்பு; வெறி. [மதுபானம் பண்ணுபவனுக்கு தான் அருந்திய மது ஜீரணமான பின்பாவது மதம் தணியும்; செல்வமதமோ ஜீரணகாலம்—கிழத்தன்மை— வந்தும் தணிவை யடையாதது என்று கருத்து.]

பிரகிருதியென்னும் மாயையானது இரஜோப்பிராந்தியை† உண்டு பண்ணி, தனதிஷ்டப்படி புருடனை வாலிபப் பருவத்தில் வெகு தூரம் வலுவில் இழுத்துவிடுகின்றது. சிற்றின்பங்களிலுண்டாகும் பெரும்பற்றுனது திக்பிரமைபோல், துன்மார்க்கங்களிற் செல்லத் தூண்டி, மனிதனை மிகவும் நாசமாக்குகின்றது. உன்னைப்போன்றவரே உபதேசங்களுக்கு உரியவராகின்றனர், பளபளவென்றிருக்கும் படிகமணியிற் சந்திர கிரணங்கள் போல, மாசற்ற மனத்திலல்லவோ உபதேச குணங்களெல்லாம் ஸுகமாக ஊடுருவிச்செல்லும்? மூத்தோர் சொல்லும் வார்த்தை நிர்மலமாகவே யிருப்பினும், அது கேடுண்ட மானிடரின் செவியிலும் தெளிவான தண்ணீர்போல் சென்று, மிகவும் அவர்கட்கு துன்பத்தையே தருகின்றது; மற்றவருக்கோ, குஞ்ஜரங்களுக்குக் கன்னத்திலிட்ட அணிபோல், முகத்திற் சோபையை மிகுதியாய் உண்டாக்குகின்றது. வெகு மலினமான அந்தகாரம் அனைத்தையும் அந்திப் பொழுதிலுதிக்கும் அம்புலிபோல், குருமார்களின் உபதேசமானது அகில தோஷத்திரள்களையும் அகற்றும். சிற்றின்பங்களின் சுவையைச்சற்றும் அறியாதவனான உந்தனுக்கு இதுதான் உபதேசத்திற்கு ஏற்ற காலம்; மன்மத பாணங்கள் தாக்கிச் சிதறுண்ட இருதயத்திலோ, உபதேசிக்குமவையாவும் சில்லிக கலத்திலிட்ட நீர்போல் உடனே ஒழுகிவிடும். கொடிய சுபாவமுள்ளவர்க்கு நற்குடியிற் பிறப்பதாவது சாஸ்திரமோதுவதாவது வினயத்துக்குக் காரணமாகமாட்டா; சந்தன மரத்திலுண்டாகும் தியானது தஹிக்காமலிருக்குமோ? கடலினுள்ளிருக்கும் படபாக்கினி யென்னும் பெருந்தீயும், தன்னைத் தணிப்பதற்குக் காரணமான தண்ணீரால் மிகவும் உக்கிரமாகவே எரியவில்லையோ? குருவினுபதேசமென்பது, புருடருக்கு அகில மாசுகளையும்§ அலம்புவதற்கு அருஹமான நீரில்லா நீராட்டம்; நரைத்திரை முதலிய விகாரமான உருமாறுட்டமேதும் உண்டாகாத முதிர்வற்ற மூப்பு; ஸ்வர்ணத்தினுற் செய்யப்படாத ஸர்வோத்தமமான ஆபரணம்; மன்னவ

† இரஜோப் பிராந்தி = மூன்று குணங்களில் ஒன்முன இரஜஸ் என்னும் குணத்தினுலுண்டாகும் மோஹம்; இரஜஸ் = புழுதி, பிராந்தி = அதைச் சுழற்றி வாரி யிறைத்தல்.

§ மாசு = பாவம், அழுக்கு.

ருக்கோ இது இன்னும் இன்பமயமாகாதது; என்றாலும் அவருக்கு உபதேசிப்பவரோ, வெகு சிலராயுள்ளவரே. மனிதரோ, மன்னவன் மொழி யெவ்வாறிருப்பினும், அதையே எதிரொலிபோல்பயத்தினும் பின்பற்றுகின்றனர்; ஒருகால் உபதேசிக்கப் பெறினும், கடுமையான கர்வமென்னும் அப்புருதியின் வீக்கத்தால் மூடப்பெற்ற செவிக்குழியை யுடையவர்போல் அதை யவர் கேள்வியுறுகின்றாரில்லை; செவியுற்ற போதிலும், மத்தகஜம்போல் கண்களை மூடிக்கொண்டு, ஹிதோபதேசமளிப்பவரை அவமதிக்கின்றவராய், அவர்களைத் துன்பப்படுத்துகின்றனர். அரசர்களின் தன்மையானது அஹங்காரமாகும் தாபஜ்வரத்தினாலுண்டான மோஹத்தால் மழுங்கி இருளடைந்து குழப்பங்கொண்டல்லவா கிடக்கின்றது?

நல் வாழ்க்கையில் ஆவலுள்ளவனான நீ முதன்முதல் இவ்விலக்ஷ்மியையே பார். இவள் பாற்கடலிலிருந்து உதிக்கையில், இளம்பிறையான மெல்லிய இந்துவினிடமிருந்து தனிமையாக வக்கிரத்தன்மையையும், உச்சைச்ரவஸ்ஸினிடமிருந்து நின்றவிடத்தில் நில்லாத நிலையற்ற நிலைமையையும், காலகூடத்தினிடமிருந்து மோஹத்தை யுண்டாக்கும் மஹிமையையும், மதுவினிடமிருந்து மதத்தையும், கௌஸ்துபமணியினிடமிருந்து கடினத்தன்மையையும், அவற்றுடன் சேர்ந்திருந்த பரிசயப்பற்றினால் பிரிந்திருக்கையில் மனதை ஆற்றுதற்பொருட்டு இவ்வித சின்னங்களை யெல்லாம் பெற்றுவந்தாளென்பது திண்ணம். மிகவும் இழிகுணமுள்ள இவ்விலக்ஷ்மியைப்போல் இவ்வாறு பரிசயத்திற் குரித்தாகாதவர் வேறொருவரும் இவ்வுலகிலிலர். திடமான நற்குணங்களாகும் பாசங்களால் இறுகக் கட்டி இடம்விட்டுப் பெயர முடியாமற் செய்தபோதிலும், இருந்த விடம் தெரியாது மறைந்து விடுகின்றாள்; இவள் பரிசயத்தைப் பரிபாலிக்கின்றாளில்லை; உயர்ந்த ஜாதியை உற்றுப்பார்க்கின்றதில்லை; ஸந்ததியின் வரிசையை சற்றும் பின்பற்றுவதில்லை; ஒழுக்கத்தை யுணர்வதில்லை; சாஸ்திரத்தைச் செவியுறுகின்றதில்லை; தர்மத்தைத் தழுவுவதில்லை; கொடையைக் கொண்டாடுவதில்லை; அறிவின் அருமையை விசாரிப்பதில்லை; வானத்தின்கண் முகில்கள் அசைகையில் அவைகளிற்றோன்றும் விதம்விதமான விசித்திர வடிவங்களின் வரிகள்போல் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே

பாழாகி விடுகின்றனள். அந்த மந்தர பர்வதத்தைப் பாற்கடலிற் சுழற்றுகையில் அதனிடமிருந்து பயிற்சி பெற்றவள் போல் இவள் இன்றைக்கும் இங்குமங்குமாய்ச் சுழன்றோடுகிறாள். தீக்ஷணத் தன்மையைக் கற்றுக்கொள்பவள் போல் கத்திகளின் கூர்மையான முனைகளிற் குடியிருக்கின்றாள். பாதாளகெவிபோல் பேரிருளைப் பரப்புகின்றாள்*. மாரிகாலத்து மின்னல்போல் ஒளித்து மறைகின்றனள். பலங்குன்றியவனைப் பித்தனாக்குகின்றாள். ஸரஸ்வதியின் அனுக்கிரஹம் பெற்ற ஜனத்தை அஸூயையால் தழுவுகின்றாளில்லை. நற்குணம் பொருந்தியவனை தூய்மையற்றவனென்றெண்ணியவள்போல் பரிசிப்பதுமில்லை. உதாரத் தன்மையனை அமங்கலனைப்போல் அவமதிக்கின்றாள். ஸத்புருடனை அவசகுனம் போலெண்ணிக் கண்ணெடுத்துப் பார்ப்பதுமில்லை. நற்குலத்தோனை நல்ல பாம்பென்று எண்ணியவள்போல் தாண்டிவிடுகின்றனள். சூரனைக் கண்டகம்போலெண்ணிப் பரிஹரித்துவிடுகின்றாள். கொடையாளியைக் கெட்ட கனவைப்போல் நினைப்பதுமில்லை. வினயமுள்ளவனைப் பாதகனைப்போலெண்ணி அவன் பக்கத்திலும் அணுகாள். தீரத்தன்மையனைப் பித்துப் பிடித்தவனைப்போல் பரிஹஸிக்கின்றனள். மிக்க நிலையில்லாத் தன்மையுள்ள இவ்விலக்ஷ்மியானவள் தீபத்தின் சுடரொளிபோல் எவ்வளவுக்கெவ்வளவு ஓங்கிப் பிரகாசிக்கின்றனளோ, அவ்வளவுக்கவ்வளவு தூமம்போல் மலினமான தீராத தீவினைகளையே தருகின்றனள்; ஆம்; இவள் பேரவா என்னும் விஷக்கொடியை வளர்ப்பதற்குத் தண்ணீர்த் தாரை; ஐம்புலன்களாகும் அடவி மிருகங்களை மயக்கச் செய்ய மறவர்களின் பாட்டு; ஸச்சரிதமென்னும் சித்திரங்களைச் சீர் குலையச் செய்யும் தூமக்கொடி; மோஹமாகும் நீண்ட நித்திரைக்கு மாயப்படுக்கை; பாவங்களென்னும் பெரும் பாம்புகளுக்குப் படுக்கும் பாழி; நற்குணங்களாகும் அன்னப் பறவைகளுக்கு அகாலத்திலுதித்த மாரிகாலம்; கபட நாடகத்திற்குப் பிரஸ்தாவனை‡; தர்மமென்னும் இந்து மண்டலத்திற்கு இராகுவின் நாக்கு. பழக்கத்தைப் பாராட்டாதவளான இவளால்

---

* பேரிருள் = அஞ்ஞானம், பெரும் இருள்.

‡ பிரஸ்தாவனை = கதையின் வரலாற்றைச் சுருக்கித் தொடங்கும் நாடகத்தின் ஆரம்ப பாகம்.

திடமாகத் தழுவப்பெற்று வஞ்சிக்கப் படாமலிருந்த அத்தகைய ஒருவரையும் நான் கண்டதில்லை. நிச்சயமாய் சித்திரத்திலிருந்தாலும் இவள் சலிக்கின்றனள்; செவியுற்றபோதிலும் ஏமாற்றி விடுகிறாள்; சித்தத்திற் சிந்தித்தாலும் மோசம் செய்கின்றனள்.

இங்ஙனம் நல்லொழுக்கமற்றவளான இவ்விலக்ஷ்மியாலும் எவ்வகையிலோ தைவ வசத்தால் பார்த்திவர் பற்றிக்கொள்ளப் பெற்றவராய், பரவசர்களாகப் போய், அகில அவினயங்களுக்கும் ஆதாரமாகவும் ஆகின்றனர்; அதெங்ஙனமெனில்:— மகுடாபிஷேகம் செய்யுங்கால் மங்களகலசத்து ஜலத்தினால் இவரது தாக்ஷிண்ணியம் கழுவப்படுவது போலவும், அபிஷேகச் சடங்கில் அக்கினியை வளர்த்தி ஹோமஞ் செய்கையில், அதிலிருந்து கிளம்பும் தூமத்தினால் மனது மலினமாக்கப்படுவது போலவும், பாகை கொண்டு கட்டிய பட்டத்தினால் மூப்பு வருமென்னும் எண்ணம் மறைக்கப்படுவது போலவும், வெண் குடையின் வட்டத்தால் பரலோகப் பார்வை மூடப்படுவது போலவும், சாமரைக் காற்றால் உண்மை யுரைக்குந் தன்மை ஒதுக்கப்படுவது போலவும், செங்கோல்களால் ஸத் குணங்கள் விரட்டி யகற்றப்படுவது போலவும் எண்ணுகின்றனம். ஏனெனில்; சிலர் சிறிது செல்வத்தைப் பெற்ற இறுமாப்பினால் தமது பிறப்பையும் மறந்தவர்களாய் விதம் விதமான விஷயங்களை யனுபவிப்பதில் விருப்பை கொண்டவைகளும், ஐந்துகளாகவே யிருந்தும் பல்லாயிரக் கணக்கானவைபோல் பார்க்கப்படுகின்றவைகளுமான இப்புலன்களால் துன்பமுற்றவர்களாகவும், இயல்பாகவே சபலத் தன்மையதானதால் எங்கும் அலைந்து திரிவதும், ஒன்றாக விருப்பினும் இலக்ஷக் கணக்கானது போல் தோற்றுவதுமான மனத்தினால் அலைக்கப் பெற்றவர்களாகவும் குழப்பத்தை யடைகின்றனர்; செல்வச் சுட்டினாற் சமைக்கப் பெற்றவர்போல் துள்ளித் துடிக்கின்றனர்; வலுவான அடியினால் தாக்கப்பட்டவர்போல் தங்கள் அங்கங்களைத் தாங்களே தாங்கிக்கொள்ள மாட்டவில்லை; நண்டுகளைப்போல் ஒரு சார்பாய்* நடக்கின்றனர்; அறநெறி தவறியதால் நடமாட்டத்திற் தடுமாற்றமடைந்து, முடவர்போல் பிறருதவியினாற்றானே ஸஞ்சரிக்

* ஒரு சார்பாய்=பக்ஷபாதமாய், ஒரு பக்கமாய்ச் சாய்ந்து.

கின்றனர்; பொய் பேசுவதால் வாயிற் பொங்கி யெழும்பிய புண்ணையுடையவர்போல் பெரும் பிரயாஸத்துடன் பிதற்றுகின்றனர்; மரிக்குங்காலம் மிக நெருங்கியதோவெனத் தோன்றும்படி உறவினரையும் உணர்கிறாரில்லை; கண்ணோய் கொண்டவர்போல் களங்கமற்றுப் பளபளவென்றிருக்கும் பெரியோரைப் பார்க்கின்றனரில்லை; காலனென்னும் காலகூடஸர்ப்பத்தாற் சிறிக்கடிக்கப்பெற்றவர்போல மஹா மந்திரங்களாலும்‡ மீண்டும் விழித்துப் பார்க்கின்றாரில்லை. பேராசை யென்னும் நஞ்சினால் மூர்ச்சையடைந்தவர்களாய் உலகத்திலுள்ள பொருளனைத்தையுமே பொன் மயமாகப் பார்க்கின்றனர். இவர் பெயர் செவியுறப்படினும், சாவுப்பறைகள் போல் வெகுட்டலை யுண்டாக்குகின்றது; மனத்தினால் சிந்திக்கப்பட்டாலும், மஹா பாதகத்தைச் செய்யும் முயற்சிகளைப்போல் இவர் முற்றிலும் உபத்திரவத்தை யுண்டாக்குகின்றனர்; தினந்தோறும் பாவங்களால் நிறைப்பப் பெற்றவர்போல் உடல் பூரித்தவராகின்றனர்; இத்தகைய நிலைமையிலிருக்கும் இவர்கள், புற்றுப் புற்களின் முனையிலிருக்கும் தண்ணீர்த் துளிகளைப்போல் தாம் வீழ்ந்துபோவதையும் விழித்துப் பார்க்கின்றனரில்லை.

வேறு சிலர், சூதாட்டத்தைப் பொழுது போக்கென்றும், வேட்டையாடுவதைச் சீரவுழைப்பென்றும், மதுபானத்தை மனமகிழ்ச்சி யென்றும், மூத்தோர் சொற்களைப் புறக்கணித்தலைப் பராதீனமற்ற தன்மை யென்றும், பரிபவங்களைச் சஹிக்குந்தன்மையைப் பொறுமை யெனவும், ஸ்வதந்திரமாயிருத்தலைப் பிரபுத்தன்மை யெனவும், தைவங்களை அவமதித்தல் மஹத்தான மனோதைரிய மெனவும், அமைதியற்றிருப்பதை உத்ஸாஹமெனவும் இவ்வாறாக தோஷங்களையும் குணங்களாகு சார்பிற்கொண்டு சேர்க்கின்றனர்; அன்றியும், தாங்களே தங்களுள்ளத்தில் நகைத்துக்கொண்டு, தமது காரியங்களை நிறைவேற்றிக் கொள்வதிற்றானே கருத்துள்ளவரும், பொருளென்னும் புலால்களைப் புசிப்பதில் பருந்துகள்போன்றவரும், ஆஸ்தானமாகும் அம்புயக் கயத்தில் வஞ்சனையில் வல்ல கொக்குகளுக் கொப்பானவரும், திரோஹம் செய்வதிலேயே மிகத்

‡ மஹாமந்திரங்கள் = உயர்ந்த மந்திரங்கள், ஆழ்ந்த ஆலோசனைகள்.

திறமை வாய்ந்தவருமான மாயத் தோழர்களால் மானிடருக்குத் தகாத மேலான தோத்திரங்கள் செய்து வஞ்சிக்கப் பெற்றவர்களாய், செல்வச் செருக்கினால் மனது மதித்து மயக்கங் கொண்டிருப்பது பற்றி, அதுவும் அவ்விதமே யெனக்கருதி, தம்மிடத்துப் பொய்யான அபிமானத்தைத் தாமே உண்டாக்கிக்கொண்டு, மானிடப் பிறவிகளாயிருந்தும், தைவாம்சமாய் அவதரித்திருப்பது போலவும், தேவர்களுடன் கூடிப் பழகுவது போலவும், மனிதத் தன்மையையே மீறி அதற்கும் மேலான நிலையிலிருப்பதாகவும் தம்மை யெண்ணி, தேவர்களுக்கேற்ற செயல்களைச் செய்ய முயற்சித்து, ஜனங்கள் யாவருங் கண்டு நகைக்கக் கூடிய நிலைமையைப் பெறுகின்றனர். தம்மை யடுத்துப் பிழைக்கும் ஆட்களால் செய்யப்படும் தமது நடையுடை பாவனைகளின் நடித்தலைக் கண்டு களிப்படைகின்றனர். தமக்குள் தைவங்களும் தங்கியிருப்பதாகத் தாம் ஆரோபணம் செய்து கொண்டு மோசம் போகும் இவர்கள், தமது புயங்களிரண்டிலும் வேறு இரண்டு கரங்கள் மறைந்திருக்கின்றன வென்றும் மனதில் தியானம் செய்கின்றனர். தமது நெற்றியில் மூன்றாவது கண், சருமத்தினால் மறைக்கப்பெற்று உள்ளடங்கியிருப்பதாகவும் மதிக்கின்றனர்; தாம் தரிசனம் தருவதும் அனுக்கிரஹமென்று ஆலோசிக்கின்றனர்: கண்கொண்டு பார்ப்பதையும் நன்மையென நிர்த்தாரணம் செய்கின்றனர்; பேசுவதையும் பரிசெனக் கருதுகின்றன; கட்டளையையும் வரப்பிரதானமென்று நினைக்கின்றனர்; தமது பரிசமும் பரிசுத்தமாக்குமென பாவிக்கின்றனர். கள்ள மகிமையாலுண்டான கர்வம் நிரம்பியவர்களாய் தைவங்களைத் தொழுகின்றாரில்லை; அந்தணரை ஆராதிப்பதில்லை; மேன்மக்களை ஸம்மானிப்பதில்லை; குருமார்களுக்கு கௌரவத்துடன் எதிர்கொண்டெழுந்திருக்கின்றாரில்லை; 'பயனற்றப் பிரயாஸங்களால் உலகத்து இன்பங்களை யனுபவிப்பதற்கு இடையூறுகளை யுண்டாக்குகின்றனர்.' என்று, பண்டிதரைப் பரிஹஸிக்கின்றனர்; 'கிழட்டுத்தன்மையினால் உண்டான தழுதழுத்தப் பிதற்றல்.' என்று, விருத்தர்களின் உபதேசத்தை உணர்கின்றனர்; தமது புத்திக்குப்பரிபவம் என்றெண்ணி, அமைச்சரது ஆலோசனைகளில் அசூயையுறுகின்றனர். ஹிதமுரைப்போரை வெறுக்கின்றனர். வேறு வேலை யேதுமில்லாது,

அல்லும் பகலுமாய் அஞ்ஜலி செய்துகொண்டு, யாவனொருவன் தேவதாமூர்த்தியைப்போல் போற்றுகிறானோ, எவனொருவன் எப்பொழுதும் மாயமாஹாத்மியத்தை யுண்டாக்குகின்றானோ, எவ்வகையிலும் அவனையே ஆனந்தத்துடன் ஆமோதிக்கின்றனர்; அவனுடனே ஸல்லாபம் செய்கின்றனர்; அவனையே அருகில் அமர்த்திக்கொள்கின்றனர்; அவன் சொற்களையே செவியுறுகின்றனர்; அவனிடந்தான் செல்வத்தைச் சொரிகின்றனர்.

எவர்களுக்கு, மிகக் கடுமையான உபதேசங்களை உணர்த்தும் இரக்கமற்ற சாணக்கிய நீதிகள் பிரமாணங்களாகவும், அபிசாரமென்னும் கொடிய சூன்னியத்தொழில் புரியும் புரோஹிதர் ஆசாரியராகவும், பிறரை யேமாற்றுவதிலேயே எண்ணங்கொண்ட அமைச்சர்கள் ஆலோசனைக் கூறுபவராகவும், இயற்கையிலேயே அன்பார்ந்த உள்ளத்தையுடைய உடன்பிறந்தோரே வேருடனழிக்கக்கூடியவராகவும் ஆகின்றனரோ, அத்தகைய அரசர்களது நடத்தையில் எது தான் ஏற்கத் தகுந்ததாகும்?

இவ்வாறு மிகவும் முரண்பட்ட கோடிக் கணக்கான கொடிய செயல்களால் இச்செங்கோல் மிகவும் கோரமானது; நீயும் மஹத்தான மோஹத்தைத் தரும் இவ்வாலிபப் பருவத்தில் இருக்கின்றனை; ஆனதுபற்றி, எப்படியானால் பிரஜைகள் உன்னைப் பரிஹஸிக்சாமலிருப்பரோ, ஸத்புருடர் சற்றும் நிந்திக்கமாட்டாரோ, குருமார் எவ்விதம் இகழாமலிருப்பரோ, நண்பர்கள் எப்படி நிந்திக்காமலிருப்பார்களோ, வித்வான்கள் கண்டு எவ்வாறு விஸனிக்காமலிருப்பரோ, விடபுருடர் எங்ஙனம் நகைக்காமலிருப்பார்களோ, ஸமர்த்தர்கள் எப்படி வஞ்சிக்காமலிருப்பரோ, ஸேவகராகும் சென்னாய்கள் எவ்விதமாய் பிடுங்கித் தின்னாமலிருக்கக் கூடுமோ, பெண்களும் எவ்வாறு ஆசைகாட்டி மோசம் செய்யாமலிருப்பரோ, மற்றும் சிற்றின்பங்கள் உந்தனை யெங்ஙனம் இழுக்காமலிருக்குமோ, அவ்வாறு முயற்சிப்பாயாக. நீயோ, இயல்பாகவே வெகு தீரன்; தந்தையினாலும் பெரும் முயற்சியோடு பயிற்சி செய்விக்கப் பெற்றிருக்கின்றனை. சபலசித்தனும் அறிவீனனுமாயிருப்பவனையே செல்வங்கள் மதப்படுத்துகின்றன; என்றாலும், உன் ஸத்குணங்களைக் கண்டுண்டான

ஸந்தோஷமே இங்ஙனம் என்னைக் கூறும்படி தூண்டியது. புருடனெவனும் பண்டிதனாயிருப்பினும், பகுத்தறிவுடன் கூடியவனாயினும், விசேஷ வலுவுள்ளவனானாலும், நற்குலத்தோனாகிலும், வெகு தீரத்தன்மையனாயிருந்தாலும், பெரும் முயற்சியுடையவனாயிருப்பினும் அவனையும் துர்விநீதையான இந்த இலக்ஷ்மி மூடனாக்கி விடுகின்றனள், என்று மீண்டும் உனக்கு இதையேதான் அடிக்கடி யான் வற்புறுத்திக் கூறுகின்றேன். எப்படியும் நீ சுபமாகத் தந்தையினால் செய்விக்கப்படும் யௌவராஜ்ய பட்டாபிஷேக மங்களத்தை யனுபவிக்கக் கடவாய். உங்கள் குலத்திற்குத் தொன்று தொட்டு வந்திருப்பதும், உனது முன்னோர்களால் முன்பு ஆளப்பட்டதுமான இச்செங்கோலைச் செவ்வெனச் செலுத்துவாயாக; பகைவரை தலைவணங்கச் செய்; உதவி செய்து உறவினரை உயர்த்து; முடிசூட்டியபிறகு, திக்விஜயம் செய்ய முற்பட்டவனாய், உன் தகப்பனாரால் ஏற்கனவே ஜயிக்கப் பட்டிருப்பினும், நீயும் முற்றிலும் சுற்றிச் சென்று, ஸப்த த்வீபங்களால் அலங்கரிக்கப்பெற்ற இம்மேதினியை மீளவும் வென்று வருவாயாக. பராக்கிரமத்தை ஓங்கி வளரச் செய்வதற்கு உனக்கு ஏற்றகாலம் இதுதான்; உலகில் தனது வீரத்தன்மையை விருத்தியடையச் செய்த வேந்தனது கட்டளையே, மூவுலகங்காணும் முனிவரது மொழிபோலப் பயன்பெற்றதாகும்." என்று இவ்வளவு தூரம் மொழிந்து, ஓய்ந்தனன்.

இவ்வாறு கூறிச் சுகநாஸன் ஓய்ந்ததும், சந்திராபீடன் மாசற்ற அவ்வுபதேச மொழிகளால் தன்னை அலம்பப் பெற்றவனைப்போலவும், கண் திறந்து வைக்கப் பட்டவனைப்போலவும், தூய்மையாக்கப் பெற்றவனையோபபவும், ஒளிவீசுந்தன்மையனாகச் செய்யப் பெற்றவனைப் போலவும் எண்ணி, மனமகிழ்ச்சி யடைந்து, பின்பு ஓர் முகூர்த்தகாலம் அங்கு தங்கிவிட்டு, விடை பெற்றுக்கொண்டு, தன் வீடு சென்றான்.

அதன் பின்னர் சில நாட்சென்றதும், வேந்தனானவன் அனேகமாயிரம் அரசரால் சூழப்பெற்றவனாய், சுகநாஸனுடன் தானாகவே மங்களகலசமேந்தி, புரோஹிதரால் புண்ணிய தினத்தில் முடி சூட்டுதற்கேற்ற மங்களச் சடங்குகளையெல்லாம் நிறைவேற்றி வைக்கப்

பெற்ற தனது குமாரனுக்கு பற்பல புண்ணிய தீர்த்தங்கள், ஸமஸ்த நதிகள், ஸகல ஸமுத்திரங்கள் இவைகளிலிருந்ததெல்லாம் எடுத்து வரப்பட்டதும், ஸகல ஓஷதிகளுடனும், ஸமஸ்த பலங்களுடனும், ஸர்வ மிருத்திகைகளுடனும், அகில இரத்தினங்களுடனும் கூடிய தும், பேரின்பக் கண்ணீர் கலந்ததும், மந்திரமோதி பரிசுத்தமாக்கப் பெற்றதுமான ஜலத்தினல் அபிஷேகம் செய்வித்தனன். தனக்கு அதுவரையில் ஆதாரமாயிருந்த விருக்ஷத்தை முற்றிலும் விட்டகலாமலே மற்றொரு மரத்தைத் தாவிப் படரும் கொடிபோல், இராஜலக்ஷ்மியானவள் தாராபீடனை விட்டுவிடாமலே, அபிஷேக நீரால் நனைந்த அங்கங்களையுடைய அச் சந்திராபீடனைப் போய் அந்தக்ஷணமே பற்றிக்கொண்டனள். பின்பு அந்தப்புரப் பெண்கள் அனைவராலும் சூழப் பெற்றவளும், அன்பார்ந்த உள்ளத்தை யுடையவளுமான விலாஸவதியினாற்றானே அங்கங்க ளனைத்திலும் ஸுகந்தமான சந்தனப் பூச்சிடப்பெற்றவனாய், அக்காலைத் தானே பிரம்புத்தடியேந்தி பிதா, முன்புறத்தில் ஜனங்களை விலக்கும் அதிகாரத்தைச் செலுத்த, சந்திராபீடன் ஸபாமண்டபம் சென்று, மேருகிரியின் சிகரத்திற் சந்திரன்போல் இவன் தங்கச் சிங்காஸனத்தில் ஏறினன்.

இங்ஙனம் சிங்காஸனமேறி, ஸகல இராஜாக்களுக்கும் ஸம்மானங்களைச் சரிவரச் செய்து முடித்தபின்பு முகூர்த்தநேரங் கழித்து, இவனுக்குத் திக்விஜயப் பிரயாணத்தை யறிவிப்பதான புறப்பாட்டுப்பறையானது கம்பீரமாய் முழங்கியது. பிறகு பறையொலியைக் கேள்வியுற்று, 'வெற்றி பெற்று வாழக் கடவாய்.' என்று கோஷித்து வாழ்த்தப்பட்டவனாய் சந்திராபீடன், சிங்காஸனத்திலிருந்து பகைவரது பாக்கியத்துடன் பெயர்ந்தனன். வெகு துரிதமாக எழுந்த வேந்தர் கூட்டத்தினல் நாற்புறமும் சூழ்ந்து பின் தொடரப் பெற்றவனாய் ஆஸ்தான மண்டபம் விட்டு வெளிக் கிளம்பினன்; வெளி வந்ததும், முன்னால் எழுதிய பத்திரலேகையுடன் கூடியதும், தகுந்தவாறு மங்களகரமான அலங்காரத்தை யுடையதுமான பெண்யானையின்மீதேறி, நூறு அலகுகளுடன் கூடிச் சுற்றிலும் நல்முத்துச் சரங்கள் தொங்கவிடப்பெற்ற வெண் குடையினல் வெயில் படமறைக்கப் பட்டவனாய் வெளிக் கிளம்பிப் போகமுயன்றனன்.

மிருந்த ஸிந்தூரப் பொடிகளாற் சிவந்ததும், புவிதனில் புரண்டு ஊசலாடுமே முத்துச் சரங்களுடன் கூடிய கொடியின் அடிச் சிலையை யுடையதும், வெண்ணிறப் பூச் சரத் திரள்களால் வெளிரிய சிரத்துடன் கூடியதுமான மத்தகஜமொன்று, குறுக்காகப் பாய்ச்சிய வெண்மையான கங்காப் பிரவாஹத்தைப் பெற்று நக்ஷத்திரக் குவியலால் கவியப்பட்ட சிகரச்சிலையுடன் கூடிய மேருகிரியோ வெனத் தோற்றும்படி பின் தொடர, பொன்னணிகளின் ஒளியினுல் மினுக்கங்கொண்ட மேனியை யுடையதும், இழுத்துச் செலுத்தப் படுவதுமான இந்திராயுதம் முன் செல்ல, மெல்ல மெல்ல வெளிவந்து முதலிற் கிழ்த்திசையை நோக்கிப் பிரயாணமாயினன்.

இப்படிப் பிரயாணமானதும் வைசம்பாயனனும், தனது மாளிகையில் நிறைவேற்றிய புறப்பாட்டு மங்களச் சடங்குகளைப் பெற்று, வெண்பட்டுடைகளை யுடுத்திக் கொண்டு, வெண்மையான புஷ்ப சந்தனங்களை யணிந்து, வெண்குடை தரித்து, வெகு வேகத்துடன் ஏகும் பெண் யானையேறி, பெருஞ் சேனைத்திரளாலும், இராஜஸமூஹங்களாலும் பின் தொடரப்பட்டு, இரண்டாவது இளவரசு போன்றவனுய் கதிரவனுக்கு அருகில் இந்துபோல், சந்திராபீடனது பக்கலில் வந்து சேர்ந்தான். பிறகு, ‘இளவரசர் இதோ புறப்பட்டு விட்டார், இதோ வந்து விட்டார்.’ என்று கேள்வியுற்று ஓடும் படைகளின் பாரத்தினுல் அந்தக்ஷணத்தில் இம்மேதினி நடு நடுங்கியது. நொடிப்பொழுதுக்கெல்லாம், அவனியெங்கும் அச்வமயமாயிருப்பது போலவும், திசைகளெல்லாம் குஞ்ஜரமயங்களானவை போலவும், ஆகாயமெங்கும் குடைகளாற்ருனே ஆக்கப்பட்டது போலவும், வாயுவெல்லாம் கஜங்களது மதஜலமயமாயிருப்பது போலவும், பிரஜாஸ்ருஷ்டியாவும் பிரபுமயமாயினது போலவும், பகற்பொழுதே கிரீடமயம் போலவும், மூவுலகங்களுமே வாழ்த்துக்கூறும் ஒலிமயமாய் ஆய்விட்டது போலவும் தோன்றியது.

வெண்மையான கொடிகளின் இராசிகளால் இடைவிடாது எங்கும் மறைக்கப் பெற்றிருந்தமையால், திசைகள் பத்தும், படைகளின் பெருங் கோலாஹலங்களைக் கேட்டுப் பயந்தவைபோல் இருந்தவிடந் தெரியாமல் மறைந்துவிட்டன. மத்தகஜக் கூட்டங்களின் மத்தகங்

களிலிருக்கும் பல்லாயிரம் சாமரைகளால் கவியப்பட்ட வானமானது, மிகவும் அழுக்குப் படிந்த இவ்வவனியின் பரிசத்தைப் பரிஹரிக்கக் கருதியதுபோல் நெடுந்தூரம் ஒதுங்கியது. சூரியனது கதிரொளிகள், பிரபலமாகப் பிரம்பேந்துபவரது பிரப்பங் கொடிகளால் வீசி விலக்கப் பட்டவை போலவும், குதிரைக் குளம்புகளால் கிளம்பும் புழுதிகண்டு பயந்தவைபோலவும் முன்புறம் விட்டகன்றன. குடைகளால் எங்கும் வெயில் மறைக்கப்பட்டதாதலின், பகற் பொழுதே, கஜங்களின் துதிக்கைகளிலிருந்து சொரியும் மதநீர்த் திவலைகளால் அழிந்துவிடுவேனோவென அஞ்சியதுபோல் மழுங்கிப் போயினது. கிரமமாக அசைந்து சென்றுகொண்டிருந்த ஸேனைக்கு முன்பாக விரைந்தோடும் ஜனக்கூட்டங்களது கோலாஹலத்தாலும், காஹளமென்கிற வாத்தியங்களின் வெகு நீண்ட நாதத்தினாலும், குதிரைகளின் குளம்போசைகளுடன் கூடிய கனைப்புத் தொனியாலும், இடை விடாது செவிகளை யடித்துக்கொள்வதால் உண்டாகும் ஒலியுடன் இசைந்தெழும் கஜங்களின் கர்ஜனையாலும், மங்களகரமாய் ஊதப்படும் சங்குகளின் சப்தத்தினால் செழித்தோங்கும் புறப்பாட்டுப் பறைகளின் பேரொலியாலும், அடிக்கடி இங்குமங்குமாய் அடிக்கப்படும் மேளங்களின் முழக்கத்தினாலும் ஜனங்களுக்குச் செவிகள் சிதறுண்டு மூர்ச்சை யுண்டானதுபோலும்.

நன்கு மலர்ந்த கருங்குவளைக் காடுதனிற் புதிய நீர் பாய்வதுபோல், கிரமமாக பால் நுரைபோல வெண்மையான புவியினது புழுதி ஆகாயமெங்கும் அளாவியதாய் காணப்பட்டது. சூரிய பிம்பமானது மிகவும் அதிகமான தூள்களால் மழுங்கியதாய், குஞ்ஜரங்களின் காதுகளிலிட்ட சிறிய சவுரிபோல் ஒளியிழந்து போயினது. வெண்பட்டுக் கட்டி வெளுத்திருக்கும் கொடிபோல், தேவகங்கையானது கலங்கிப் போயிற்று. மிகக் கனமான பூபாலரது பலத்தின் பாரத்தைத் தாங்க வியலாது, பூமியானது மறுபடியும் பாரத்தை இறக்கி வைக்க தேவர்களை வேண்டும்பொருட்டு புழுதி யென்னும் பாவனையால் விண்ணுலக மேறுகிறதோவெனக் கூறுமாறு விளங்கியது.

பிறகு திசைகள் தோறும் யானைகளது துதிக்கைகளின் துவாரங்களிலிருந்து பெருகும் மதஜலங்களாலும், குதிரைகளின் வாய்களி

விருந்து கனைக்குந் தருணத்தில் உதிரும் உமிழ் நீர்த் தாரைகளின் வரிசைகளாலும் புழுதிசளெல்லாம் தணிந்து போனதால், மறுமடி திக்குகள் யாவும் கண்களுக்கு நன்கு துலங்கித் தோன்றுகையில், கடல் நீரிலிருந்து கிளம்புவதுபோலிருக்கும் கங்குகரையில்லாத அச் சேனையைக்கண்டு வியப்புற்ற வைசம்பாயனன் நாற்புறமும் சுற்றி நோக்கிவிட்டு, சந்திராபீடனைப் பார்த்துச் செப்பியதாவது:—

'இளவரசே! மஹாராஜாதிராஜனான தாராபீட தேவனால் ஜயிக்கப்படாமல், இனி நீ போய் ஜயிக்கவேண்டிய அத்தகைய இடம் ஏதேனும் மிகுதியாய் உளதோ? அவரால் வசமாக்கப்படாத எத்திசைகளை நீ வசப்படுத்திக்கொள்ளப் போகின்றனை? அவர் அலங்கரிக்காத எந்த கொத்தளங்களை நீ இப்பொழுது அலங்கரிக்கப் போகிருய்? அவர் தேடாத அரும்பொருட்கள் எவை உன்னால் இனி ஸம்பாதிக்கப்படப் போகின்றன? இளம்பங்கய மொட்டுப்போல் கோமளமான அஞ்ஜலியைச் சிரந்தனில் எவர்தான் வைத்தார்களில்லை? தம்பாத பீடத்தின்கண் எவரது சூடாமணிகள் தான் உரைஞ்சாமலிருந்தன? பிரம்புக் கொடிகளைக் கரந்தனில் ஏந்தாதவர் யாவர்? சாமரைகள் எவரால் தான் தாங்கப்படவில்லை? எவர் ஜயசப்தம் முழங்காதவர்? தசரதர், பகிரதர், பரதர், திலீபர், அலர்க்கர், மாந்தாதா முதலிய மன்னவர்களுக்கொப்பானவரும், குலகௌரவங்களால் விளங்குபவரும், யாகங்களை யனுட்டித்தவரும், பட்டந்தரித்தவருமான பார்தனிலிருக்கும் பார்த்திவர் அனைவரும், இதோ சூடாமணிப்பந்திகளால் உனது மங்களகரமான பாததூள்களின் திரளைத் தாங்குகின்றனரே. பத்துத் திசைகளின் அந்தங்களையும் அளாவும் இவரது இச்சேனைகளும் இதோ உன்னைப்போற்றுகின்றன; ஆம்; இதோ பார்! கண்கொண்டு பார்க்கப்படும் திசைகளெங்கும் படைகளைப் பாதாளம் கொப்புளிப்பதுபோலவும், பூமியானது அவைகளைப் பிறப்பிப்பது போலவும், ஆகாயம் பொழிவதுபோலவும், திக்குகள் கக்குவதுபோலவும், பகல் படைப்பதுபோலவும் புலப்படுகிறது. அபரிமிதமான படைகளின் பாரத்தினுல் ஆக்கிரமிக்கப்பெற்ற இம்மேதினியானது முன்பு மஹாபாரதப் போரிலுண்டான பெருங்கலவரத்தைத் தான் இப்பொழுது நினைத்துக்கொள்ளுமென்று எண்ணுகிறேன். இதோ

இக்கதிரவனும் கொடிகளது கோடிகள் தாக்கித் தடைபெற்ற தனது மண்டலத்தையுடையவனாய், அவைகளை ஆவலுடன் என்னுபவன் போல், காடுபோன்ற அக்கொடிகளின் இடைகளில் அகப்பட்டுத் திரின்கிறான். ஸேனைகளின் பாரத்தினால் ஸகல குலபர்வதங்களாகும் ஸந்தி பந்தங்களெல்லாம் அறுபட்டு, ஆயிரக்கணக்காக இத்தரணியானது சிதறிப் போகாமலிருக்கின்றதென்பது, அல்லது, படையினது பாரத்தால் அழுந்தும் பூமியைத் தாங்கமுடியாது ஆதிசேடனது ஆயிரம் படங்களும் அசங்கிப்போகாமலிருக்கின்றனவென்பதும் மிகவும் வியக்கத் தக்கவையேயாம்.' என்று இவ்வாறு அவன் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, யுவராஜன், புற்களாலாக்கிய மதில்களுடன் கூடிய பல்லாயிரம் வீடுகளால் நெருங்கியதும், ஆங்காங்கு நாட்டிய நூற்றுக்கணக்கான படக்குடில்களால்* விளங்குவதுமான வாஸஸ்தலம் போய்ச் சேர்ந்தனன். ஆங்கு தானிறங்கி, அரசனுக்கேற்க எல்லாப்பணிகளையும் செலுத்தலானான். அவ்வரசரனைவருடனும், அமைச்சமாருடனுங் கூட, விநோதமாகப் பற்பல கதைகளாற்பொழுது போக்கிக்கொண்டு, புதிதாகத் தந்தையைவிட்டுப் பிரிந்ததாலுண்டான சோகவேகத்தினால் ஆயாஸமுற்ற இருதயத்தையுடையவனாய், அப்பகற்பொழுது முழுதையும் கஷ்டத்துடனே கழித்தனன். இவ்வாறு பகற்பொழுதைப் போக்கியவனாய், தனது சயனத்துக்குச்சற்றுத் தூரத்திற்போட்டிருந்த படுக்கையில் அமர்ந்திருக்கும் வைசம்பாயனனோடும், மற்றொரு புறத்தில் தரையிலிடப்பெற்ற மெத்தையின் மீது படுத்திருக்கும் பத்திரலேகையோடும் அடிக்கொருதரம் பிதாவைப் பற்றியதும், நடுவில் மாதாவைச் சார்ந்ததும் பின்னும் பலமுறை சுகநாஸனுக்குச் சம்பந்தமுள்ளதுமான ஸல்லாபத்தைச் செய்துகொண்டு, அதிக நித்திரை கொள்ளாமல் பெரும்பாலும் விழித்துக்கொண்டே அவ்விரைவையும் கழித்தனன். அதிகாலையில் எழுந்திருந்து அதே க்கிரமமாக இடைவிடாப் பிரயாணஞ்செய்து, ஒவ்வொரு பிரயாணத்திலும் மேன்மேலும் (போர் செய்து ஜயிப்பதால்) விருத்தியடையும் படைத்திரளால் மேதினியைச் சிதறடித்துக்கொண்டும், கானகங்களைப் பொடியாக்கிக் கொண்டும், மேடு பள்ள

---

*'படக்குடில்=கூடாரம்.

ங்களைச் சீர்திருத்திக்கொண்டும் புறப்பட்டான். மெல்ல மெல்லத் தன் மனதுக்கிசைந்தவாறு முற்றிலும் சுற்றிக்கொண்டு செல்லுகையில், மிக்க மேட்டிமை பொருந்தியோரைத் தலைவணங்கச் செய்தான்; கீழ்ப்படிந்தோரை உயர நிமிர்த்தினன்; பயந்தோரைப் பரிவுடன் பாதுகாத்தான்; அடைக்கலம் புகுந்தவரை ஆதரித்தனன்; விடபுருடரை வேருடன் அழித்தான்; அற்பப் பகைவர்களை அடியோடொழித்தனன்; அவ்வவ்விடங்களில் அரச குமாரர்களுக்கு அபிஷேகம் செய்து வைத்தான்; அரும்பொருட்களைச் சம்பாதித்துக் கொண்டான்; பரிசுகளைப்பெருமையுடன் பெற்றான்; கப்பங்களைக் கிரஹித்துக்கொண்டான்; தேயங்கள்தோறும் பற்பல நியமங்களை யேற்படுத்தக் கட்டளையிட்டனன்; தனது ஞாபகக் குறிகளை ஸ்தாபனஞ் செய்தனன்; தன் கீர்த்திகளைக் கோரும் கீர்த்தனங்களைப் பாடச்செய்தனன்; சாஸனங்களை யெழுதி வைத்தான்; அந்தணரை ஆராதித்தான்; தபோதனரது தாள்களைப் பணிந்தான்; ஆச்ரமங்களைப் பரிபாலித்தனன்; ஜனங்கள் அனைவருக்கும் அன்னியோன்னியம் அன்பை அதிகம் உண்டாக்கினான்; தனது பராக்கிரமத்தைப் பிரகாசப்படுத்தினான்; புகழைச் சம்பாதித்தான்; குணங்களைப் பரவச்செய்தான்; இவ்வாறாகத் தனது ஸச்சரிதங்களை ஸகல விடங்களிலும் பிரவிஷ்த்தப் படுத்திக்கொண்டு இப்பூமியெங்கும் ஸஞ்சாரம் செய்தனன். ஆதியில் கீழ்த்திசையையும், பின்னர் திரிசங்குவைத் திலகமாகவுடைய தென்திசையையும், பிறகு பச்சிமதிக்கையும், அதன் பின்பு ஸப்தருஷித் தாரகைகளால் வெளிறிய வடதிசையையும் வென்றான். மூன்று வருடத்தில் த்வீபாந்தரங்கள் அனைத்தையுமே தன் வசமாக்கிக்கொண்டு, சுற்றிலும் நான்கு ஆழிகளாகும் அகழிகளாற் சூழப்பெற்ற அகில அவனிமண்டலத்தையுமே சுற்றி வந்தான். பிறகு கிரமமாக ஜகத்தையெல்லாம் ஜயித்து, பூமியையும் பிரதக்ஷிணம் பண்ணிவிட்டு, ஒரு கால், கைலயங்கிரிக்கு அருகிலிருப்பவரும், ஹேமகூடமென்னும் குன்றத்திற் குடியிருப்பவருமான மறவர்களுடைய தான கிழக்குக் கடற்கரைக்குச் சிறிது ஸமீபத்திலிருக்கும் ஸுவர்ணபுரம் என்கிற வாஸஸ்தானத்தைக் கைப்பற்றிக் கொண்டான். அங்கு, தரணியெல்லாம் அலைந்து திரிந்து ஆயாஸமடைந்த தனது சேனை இளைப்பாறும் பொருட்டுச் சிலநாட்கள் தங்கியிருந்தனன்.

இப்படி அவ்விடத்திலிருக்கையிலேயே ஒருகால், சந்திராபீடன் இந்திராயுதமேறி, வேட்டையாடும் நிமித்தம் வெளியிற்போய், கானகத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கையில், ஏதோ தற்செயலாய் தம்பதிகளான கின்னரர்* இருவரைக் கண்டான். அபூர்வமான ஜாதியைக் கண்டதினால் உத்ஸாஹம் மேலிட்டு, அக்கின்னர தம்பதிகளைப்பற்றிக்கொள்வதில் ஆசையுள்ளவனாய், அவர்களது அருகில் அச்வத்தை யோட்டி, ஆவலுடன் கிட்டப் போக, அதுவரையிலும் காணாத புருடனது தரிசனத்தால் அவர் பயந்தோடத் தொடங்கினர்; இவனும் இடைவிடாது குதிகால்களால் அடித்து இந்திராயுதத்தை இரண்டு மடங்கு அதிக வேகமாகத் துரத்திக்கொண்டு, தானொருவனாகவே ஸேனையனைத்தையும் விட்டுப் பிரிந்தவனாய், விரைந்தோடும் அத்தம்பதிகளுடன் வெகு தூரம் பின் தொடர்ந்தோடினான். 'இதோ அகப்பட்டுக்கொண்டனர், இதோ பிடித்துவிட்டோம்.' என்று வெகு துரிதமாய் மனமிழுக்கப்பட, குதிரை மஹா வேகசாலியானதுபற்றி, ஓர் முகூர்த்த நேரத்திற்குள்ளாகவே, ஸஹாயமற்றவனாய்.ஒரடி போல் அவ்விடமிருந்து பதினைந்து யோஜனையளவான வழியைக் கடந்துவிட்டான். அந்தக் கின்னர தம்பதிகளோ, இவன் பார்த்துக் கொண்டிருக்கையிற்றானே, எதிரில் தோன்றிய ஓர் குன்றத்தின் உன்னதமான உச்சியின் மீது ஏறிவிட்டனர்.

அதன் பிறகு, மெதுவாக அக்கின்னர தம்பதிகளிடமிருந்து திருஷ்டியைத் திருப்பிக்கொண்டு, குன்றங்களின் கற்களால் தடுக்கப்பெற்ற கமனத்தை யுடையவனாய்ச் சந்திராபீடன், குதிரையை இழுத்துப் பிடித்துக்கொண்டு, அக்காலே சிரமத்தினாலுண்டான வியர்வை நீரால் உடம்பெல்லாம் நனைந்த இந்திராயுதத்தையும் தன்னையும் பார்த்து, க்ஷணகாலம் யோசித்து விட்டு, தனக்குத் தானே நகைத்துக் கொண்டு, இப்படிச் சிந்திக்கலானான்:—'பிரயோஜனமின்றி நான் சிசுப்போல் எந்தனை ஏன் இவ்வாறு ஆயாஸப் படுத்திக் கொள்ளவேண்டும்? இவ்விரண்டு கின்னரரையும் பிடித்து விட்டோமானல், அதனால் தான் என்ன பயன்? இல்லை, பிடிக்காமலிருந்தோம், அதனால் தானென்ன? ஓ! எனது மூடத்தன்மை யெத்தகையது! தோன்றிய

* கின்னரர்=பாதி உடல் குதிரை, பாதி மனிதனுடலுள்ள ஓர்வகை தேவஜாதி.

விட்டுக் கீழிறங்கினன். இறங்கியதும் இந்திராயுதத்தின் மேலிருந்து சேணத்தையும் அவிழ்த்துப்போட்டான். பின்னர் புவிதனிற் புரண்டெழுந்து, சிறிது புற்களை மேய்ந்து, குளத்தில் இறங்கித் தண்ணீரைக் குடித்த பின்பு அக் குதிரையை இஷ்டப்படி குளிப்பாட்டிக் கரையிற் கொண்டுவந்து, கடிவாளத்தைக் கழற்றி அங்கு அருகிலிருந்த ஓர் மரத்தின் அடிக் கிளையில் பொற்சங்கிலி கொண்டு கால்களைக் கட்டிவிட்டு, மறுபடியும் தண்ணீரில் இறங்கினன்; பிறகு கைகளிரண்டையும் அலம்பிக்கொண்டு, சாதகப் பறவைபோல் ஜலமயமான உணவை யருந்தியவனாய், கயத்து நீரைவிட்டுக் கரையேறினான். கிழங்குகளுடன் அப்பொழுதே பறித்ததால் குளிர்ந்திருப்பவைகளும், தண்ணீர்த் திவலைகள் சேர்ந்து நனைந்திருப்பவையுமான தாமரை யிலைகளை, கொடிவீடு சூழ்ந்த பாறை யொன்றின்மீது படுக்கையாகப் பரப்பி, தலைமாட்டில் உத்தரீயத்தைச் சுற்றித் தலையணையாக வைத்துக்கொண்டு சயனித்தான். முகூர்த்த நேரம் இளைப்பாறியவனாய், புற்கவளத்தையும் எடுக்காது காதுகளை யசைக்காமல் நெறித்துக்கொண்டு, உயர நிமிர்த்திய கழுத்துடன் அதே திசைக்குளதிர்முகமாயிருந்து கொண்டு இந்திராயுதத்தினால் முதலில் கேழ்க்கப்பெற்றதும், அக்குளத்தின் கரையிலிருந்து வருவதும், வீணையின் ஜங்கார சப்தத்துடன் கூடியதும், மானிடரதல்லாததும், காதுகளுக்கினிமையானதுமான ஸங்கீதத் தொனியொன்றைக் கேட்டான். அதைச் செவியுற்றதும், மனித ஸஞ்சாரமற்ற இப் பிரதேசத்தில் ஸங்கீதத் தொனி யுண்டாவதெங்ஙனம் என்று வியப்புற்றவனாய் பங்கயத்தளிர்ச் சயனத்திலிருந்து எழுந்து, கீத சப்தத்தினால் குறிக்கப்பட்ட அதே திசையிற் கண் வைத்துப் பார்த்தான். கீதசப்தமுண்டாகும் அவ்விடம் வெகு தூரத்திலிருப்பதுபற்றி, பெரும் முயற்சியுடன் கண்கொண்டு பார்த்தும் அவனுக்கு எதும் புலப்பட்டதில்லை. இடைவிடாது அக்கீதத் தொனி யொன்றையே கேட்டான். அந்த ஸங்கீத சப்தத்திற்கு முகாந்திரம் யாதென்று அறியப் பேராவலுண்டானதுபற்றி, அங்குப் போக விரும்பியவனாய், இந்திராயுதத்தின் மீது சேணத்தைப் பூட்டி யேறிக்கொண்டு, கீதத்தைப் பிரியமாகக் கேட்டுக்கொண்டு முன் செல்லும் மான்களால் வேண்டாமலிருக்கையிலும் வழி காட்டப் பட்டவனுமாய், குளத்தின் மேற்

கரைக் கானகப்பந்தியின் வழியே கீதத் தொனியையே குறிப்பாக வைத்துக்கொண்டு அதை நோக்கிப் புறப்பட்டான்.

வெகு தெளிவான மலையருவி நீர்த் திவலைகளால் குளிர்ச்சி பொருந்தியதும், மிக்க பரிசுத்தமுமான எதிர்கொண்டு வரும்கைலையங்கிரியினது காற்றினல் களிப்புறச் செய்யப்பெற்றவனுய் அவ்விடஞ்சென்று, நூற்றுக்கணக்கான கிளிகளின் மூக்குகளாலும் அவற்றின் நகங்களின் முனைகளாலும் கோதப்பெற்ற கனிகள் நிரம்பியவையும், மேகங்களிலிருந்து விழும் ஜலங்களில் ஆசை வைத்த எளிய சாதகப் பறவைகளின் கூக்குரல்களுடன் கூடிய பச்சிலைத் தோப்புகளையுடையவையும், குஞ்ஜரங்களது குட்டிகள் தளிர்களைப் பறிப்பதற்கு வணக்கிய ஆனைவணங்கி யென்னும் சிறு மரங்களடர்ந்தவையும், அபரிமிதமான தேங்காய்களின் சுமையால் வளைந்துபோன தென்னமரங்களின் காடுகளால் சூழப் பெற்றவையும், இடை யிடையில் கைலையிலிருந்து பெருகும் நதியினல் அலைக்கப்பெற்ற மணற்றரைகளையுடையவைகளுமாகிய இத்தகைய விருக்ஷங்களால் கவியப் பெற்றதும், அக் குளத்தின் மேற்கரையிலிருப்பதும், 'சந்திரப்பிரபை' என்று பெயர் பெற்றதுமான கைலைமலைச் சாரலின் கீழ்த்தரையின்கண் ஸித்தர்களால் நிர்மிக்கப்பெற்ற பகவானுன சூலபாணியினது சூன்னியமான ஆலயமொன்றைக் கண்ணுற்றனன்.

அங்குட்சென்று, நாற்கால்கள் நாட்டிய படிகமயமான சிறிய மண்டபத்தின் அடித்தடத்தில் பிரதிஷ்டை செய்யப்பெற்று, மாசற்ற முத்துச் சிலையாலாக்கிய லிங்கத்தின் உருவத்துடன் கூடியவரும், மூவுலகங்களாலும் தொழப்பெற்ற தனது தாள்களையுடையவரும் ஜங்கம ஸ்தாவர ரூபமான ஜகத்துக்கெல்லாம் குருவாயிருப்பவரும், நான்கு திருமுகங்களை யுடையவருமான மஹா மஹிமை தங்கிய முக்கண்ணப் பெருமானைத் தரிசித்தனன்.

அவ்வீச்வரனது தென் திசையை நோக்கிய மூர்த்திக்கு எதிர்முகமாய்ப் பிரம்மாஸனத்தில் வீற்றிருப்பவளும், சிறிய சங்குகளின் பாளங்களாலாக்கிய கணையாழிகள் நிறைந்த விரல்களுடன் கூடி, மூன்று புண்டரங்களிட்டு மிகுந்த திருநீறு பூசி வெளுத்ததும், மணிக்கட்டிற் சங்கினற் செய்த கங்கணத்தைப் பூணப்பெற்றதுமான தனது வலது கரத்தினல் தன் புதல்வியைப்போல் மடிதனில் அமர்த்தியிருக்கும் வீணையை மீட்டிக்கொண்டு, மிகவும் இனிதான பாடலால்

டான்; அது மூவுலகங்களின் புண்ணிய ராசியே பொய்கை யுருவங் கொண்டு வந்ததோவெனத் தோற்றும்; வைடூரியமணிக் குன்றங்களே உருகி இவ்வாறு தண்ணீராகப் பரிணமித்து விட்டனபோல் புலப்படும்; தண்ணீர் நன்கு நிரம்பியிருந்தும், ஜலத்தினுள் அடித்தடம் வரையிலும் அகில விஷயங்களும் நன்கு துலக்கமாகக் காணப்படுகின்றன வாதலின், நீர் வற்றிய வெற்றிடம்போல் அது விளங்குகின்றது; சாயைகளென்னும் பாவனையால் உட்புகுந்திருக்கும் கானகம், பர்வதம், நக்ஷத்திரம், கிரஹம் இவைகளின் கூட்டங்களுடன் கூடிய மூன்று உலகங்களையும் ஸ்ரீமந் நாராயணன்போல் பங்கயப்பூப் பூத்த தன் உதரத்தினுள் தாங்குகின்றது; பலமுறை நான்முகன் கமண்டலங்கொண்டு நீரெடுத்ததனால் தூய்மையாகிய தண்ணீரையுடையது; பல்லாயிரந்தடவை ஸப்தருஷிகள் வந்து நீராடி பரிசுத்தமாக்கப்பெற்றது; அதில் ஒரு புறம் வருணதேவனது அன்னப் பறவைகள் வந்து அம்புய மலர்களிலிருந்து மகரந்தத்தை அருந்துகின்றன; ஒரு பக்கத்தில் முக்கண்ணனது விருஷபத்தின் கொம்பு முனைகளால் கரையிலிருக்கும் கற்கள் பிளக்கப் பெற்றிருக்கின்றன; மற்றொருபுறம் ஐராவதத்தின் உலக்கைபோன்ற தந்தங்களால் ஆங்கு ஆம்பற் கிழங்குகள் பெயர்க்கப் பட்டிருக்கின்றன; இன்னும் ஒரு புறத்தில் இயமனது மஹிஷத்தின் கொம்பு முனையால் நுரைகளின் பிண்டங்கள் கொந்தியிறைக்கப் பெற்றிருக்கின்றன.

அதைக் கண்ட மாத்திரத்திலேயே சிரமம் நீங்கியவனாய், சித்தத்தில் இங்ஙனம் சிந்திக்கலானான்:— 'ஓகோ! அக்கின்னரரை யான் பின்பற்றியது பயனற்றதாயினும், இக்குளத்தைக் கண்ட பின்னர், அக்காரியம் பயனுள்ளதாயினது. இப்பொழுது என் கண்கள் இரண்டிற்கும் அவசியம் பார்க்கவேண்டியதைப் பார்க்கும் பலனானது நிறைவேறிவிட்டது. இரமணீயங்களுக்கெல்லாம் எல்லையைக் கண்டு கொண்டேன். பேரானந்தத்தைப் புகட்டக் கூடிய அனைத்துக்கும் அந்தத்தைப் பார்த்துவிட்டேன். கண்ணாரக் காணக்கூடிய காக்ஷிகளுக்கெல்லாம் முடிவைக் கண்ணுற்றவனானேன். இக்குளத்து நீரைப் படைத்துவிட்டுப் பிரமதேவன், மீளவும் அமுதத்தை யுண்டாக்கியதால், அவர் எற்கனவே செய்த ஸ்ருஷ்டியை மீண்டும் வீணிற் செய்தவரானார். இந்நீரும் அமுதம்போல் புலன்கள் அனைத்

தையும் ஆனந்தப்படுத்த வல்லது; ஆம்; மிகவும் நிர்மலமாயிருப்பதால், இக்குளம் கண்களைக் களிக்கச் செய்கின்றது; குளிர்ந்திருக்கின்றதாகையால், பரிச ஸுகத்தை யளிக்கின்றது; கமல மலர்களின் பரிமளம் பொருந்தியதால், நாசியைத் திருப்தி செய்து வைக்கின்றது; அன்னப்பறவைகள் ஆர்ப்பரிப்பதால், செவியை ஆனந்தப் படுத்துகின்றது; நற்சுவை பொருந்தியதானதால், நாவை ஸந்தோஷிக்கச் செய்கின்றது. உண்மையாக இதைப் பார்த்துக் கொண்டிருப்பதில் பேராவலாற்றானே பகவானான பரமேச்வரனும் கைலாஸவாஸத்தில் விருப்பத்தை விட்டாரில்லை. அமுதம்போல் நற்சுவையுள்ள இந்த ஜலத்தை விட்டுவிட்டு இலவணரஸம் பொருந்தி, பானம் முதலியதற்குப் பயன்படாத ஸாகரத்தில் படுத்துறங்கும் அப் பரம புருடன், ஜலசயனத்திலுண்டான தனது ஆவலைத் தகுந்தவாறு செலுத்திக் கொண்டாரில்லை. வாஸ்தவமாய் இப் பொய்கையானது முதலில் உண்டாக்கப்பட்டதல்ல; ஆனதுபற்றியே, பிரளய காலத்து மஹாவராஹனது மூக்கினால் தாக்கப்படுவதிலிருந்து பயந்த பூதேவியானவள், சிறு கும்பத்திலுதித்த முனிவரால் அருந்தப்பெற்ற நீரனைத்தையுமுடைய கடலிலல்லவோ மறைந்துகொள்ள இறங்கினள்? அப்படியல்லாமல், அகாதமான அனேக பாதளங்கள்போல் மிகவும் ஆழமான ஜலத்தையுடைய இம் மஹாஸரஸ்ஸில் இழிந்திருப்பாளாகில், ஒருவரேயல்ல, ஆயிரம் மஹாவராஹராலும் அடையக்கூடாதவளாய் விட்டிருப்பள். பிரளய காலத்துப் பெரும் முகில்கள் இதிலிருந்தே சொற்ப நீர்களை யெடுத்தெடுத்து, மஹாப் பிரளயங்களில் புவனமெங்கும் பொழிந்து அவைகளை யெல்லாம் அமிழ்த்திவிடுகின்றனவென்பது திண்ணம். ஆதியில் பிரம்ம ஸ்ருஷ்டிக்கு முன்பு, ஜலமயமாயிருந்த பிரம்மாண்ட ரூபமான இப் புவனமானது, இவ்வாறு ஒருமிக்கத் திரண்டு, கயமென்னும் பெயர் பெற்று நிலைத்திருக்கின்றதென யான் நினைக்கின்றேன்.

இங்ஙனம் ஆலோசித்துக்கொண்டே, வன்மையான வெகு சிறிய கூழாங்கற்களுடன் கூடிய மணற்குன்று மயமானதும், காம்புடன் கொய்த நெய்தல் மலர்களின் திரள் கொண்டு வித்தியாதரரால் அர்ச்சிக்கப்பெற்ற மணலாலாக்கிய அழகான அனேக சிவலிங்கங்களையுடையதுமான அக் குளத்தின் தென் கரை சென்று குதிரையை

வாறு யாதேனுமொன்றைச் செய்வதில் இஃதென்ன விருப்பம்! பயனற்ற வியாபாரங்களில் இத்தகைய முயற்சி மிகவும் ஆச்சரியத்தை யுண்டாக்குகின்றது; ஆ! சிறு பிள்ளைத்தனமாக இவ்வித காரியங்களில் இதென்ன ஆதரவு? நற்பயனை விளைவிக்குமாறு செய்து வந்த அவசியமான காரியம் வீணாய்விட்டது; இராஜதர்மத்தைச் செய்ய முயன்றும் அதை நிறைவேற்றினேனுமில்லை; வெற்றி பெறத்தகும் வியாபாரத்தை ஆரம்பித்தும் ஸித்திபெறவில்லை; ஏதோ ஆவேச முடையவன்போல் எனது பரிவாரங்களையும் விட்டு விட்டு, நான் ஏன் இவ்வளவு தூரம் வரவேண்டும்? பிரயோஜன மில்லாமலே இக்குதிரைமுகத்தோரை எதற்காக யான் பின் தொடர்ந்தேன்? இங்ஙனம் விசாரிக்கையில் எனது ஆத்மாவே, எவனோ வேற்று மனிதனைப்போல் எந்தனுக்கு நிச்சயமாய் நகைப்பை யுண்டாக்குகின்றது; எனக்குத் தெரியவில்லை, என்னைப் பின் தொடர்ந்த ஸேனை எவ்வளவு தூரத்தில் தங்கி விட்டதோ? மஹா வேகசாலியான இவ்விந்திராயுதமோ, நொடிப்பொழுதில் நெடுந்தூரத்தையும் கடந்து விடுகின்றது; திரும்பிப் போய்விடுவோமெனினும், வரும்போது நான் அச்வத்தின் அதிசயிக்கத்தக்க வேகத்தினால் கின்னர தம்பதிகளின்மீதே கண் வைத்தவனாய், அபரிமிதமான மரங்களின் கிளைகளும், புதர்களும், கொடிகளும் இடைவிடாது அடர்ந்ததும், இலைச் சிறகுகள் விழுந்து முற்றிலும் மூடப்பெற்ற தரையை யுடையதுமான இம் மஹாரண்ணியத்தில் மார்க்கத்தையும் உற்று நோக்கினேனில்லை; இப் பிரதேசத்திற் பெரும் முயற்சியுடன் தேடித்திரிந்து பார்த்தபோதிலும், ஸுவர்ணபுரமேகும் பாதையை யறிவிக்கக் கூடிய ஓர் மானிட உருவையும் காண்கிலேன். பூமியில் தேயங்கள் அனைத்துக்கும் ஸுவர்ணபுரமென்பது வடக்குத் திசையிலிக்கும் எல்லைப் புறமென்றும், அதற்கப்பால் நிர்மானுஷமான அரண்ணியமெனவும், அதற்கப்புறம் கைலையங்கிரியென்றும் யான் பலமுறை சொல்லக் கேட்டிருக்கின்றேன்; கைலாஸமும் இதுதான். ஆகையால் இப்பொழுது தனியாக நானே அடிக்கடி ஊஹித்துக்கொண்டு, தென் திசையையே நோக்கித் திரும்பிப்போகவேண்டும். தாம் செய்த தப்பிதங்களின் பயனைத் தாமே அனுபவித்துத் தீரவேண்டுமல்லவா; என்று தீர்மானித்துக்கொண்டு, இடது கரத்தினால் கடிவாளத்தைச் சற்று இழுத்துக்

குதிரையைத் திருப்பினன். பின்பு அவனுய் மீளவும் இவ்வாறு எண்ணலானுன்:—'இதோ சூரிய பகவான் இப்பொழுது தனது சுடரொளிகளை வீசிக்கொண்டு, பகற் பொழுதின் சீர்மையாகும் மாதரசின் மேகலையினது மத்திய மணிபோல் ஆகாயத்தின் உச்சியை அலங்கரிக்கின்றுன்; இந்த இந்திராயுதமும் மிகவும் களைத்துப் போயினது. ஆனதுபற்றி இதைச் சிறிது பசும்புற்களை மேயச்செய்து, யாதேனும் கயமொன்றிற் குளிப்பாட்டி, தண்ணீர் காட்டி, களைப்புத் தீரச் செய்துவிட்டு, நானும் தண்ணீரருந்தி, ஓர் விருக்ஷத்தின் அடி நிழலில் முகூர்த்த நேரமேனும் சிரம பரிஹாரம் பண்ணிக்கொண்டு, அதன் பின்பு திரும்பிப் போவேனுக.' என்று சிந்தித்துக்கொண்டு, தண்ணீரிருக்குமிடம் தேடுபவனுய், அடிக்கொரு முறை இங்குமங்குமாய் பார்த்துக்கொண்டு திரிந்து செல்லுகையில், அப்பொழுதே தாமரை யோடையின் தண்ணீரில் மூழ்கிக் கரையேறிப்போன பெருங்காட்டானைக் கூட்டத்தின் சரணங்களிலிருந்து விழுந்த சேற்றுப் படைகளால் ஈரமான மார்க்கம் ஒன்றைப் பார்க்கலானுன்.

நீரோடை யொன்று ஆங்கு இருக்குமென்று இவன் ஆலோசித்து, தலை நிமிர்ந்து காணக்கூடிய அவ்வளவு உன்னதமானவைபும், மேலே குடையின் வட்டத்திற்கிடானவைகளும், இடை விடாது நெருக்கமாயிருப்பினும் கிளைகளில்லாமையால் இடைவெளி யுடையவைபோல் தோற்றுபவையுமான வெவ்வேறு வகையான விருக்ஷங்களுடன் கூடியதும், கஸ்தூரிமிருகங்கள் படுத்திருந்ததால் பரிமளங் கமழும் கற்பாறைகளை யுடையதும், பிரப்பங்கொடிப் புதர்களில் முளைத்த மூங்கில்களுடன் கூடியதுமான கைலையின் அடித்தடத்தோடு சிறிது தூரம் சென்று, அதே கைலாஸகிரிக்கு வட கிழக்கில் விருக்ஷங்களடர்ந்த விசாலமான சோலையைக் கண்ணுற்றனன்; கமல மலர்களின் மதுவையருந்தி மதங்கொண்ட காரன்னங்களுடைய காதுக் கினிமையான கலகலவென்னும் கோலாஹலத் தொனிகளால் அழைக்கப்படுபவன்போல் அச்சோலையினுட் புகுந்தனன்.

அங்குச் சென்று, அச்சோலைக்கு மத்திய பாகத்தின்கண் கடல்களெல்லாம் கடந்து செல்லும் பாதைபோல் பார்க்கவியலாத தீரங்களின் அந்தங்களையுடையதும், மிக்க மனோஹரமானதும், கண்களைக் களிப்புறச் செய்வதுமான அச்சோதம் என்கிற குளமொன்றைக்கண்

பரமேச்வரனைப் போற்றிக்கொண்டிருப்பவளும், பிரத்யக்ஷமாய் உருவெடுத்து வந்த கந்தர்வ வித்தையோவெனக் கூறக்கூடியவளும், அஹங்கார மமகாரமற்றவளும், இருமாப்பொழிந்தவளும், மானிடப் பிறப்புக்கு மேலான மேனியழகை யுடையவளும், தேவாம்சமா யிருப்பதால் வயதின் அளவு அறியக்கூடாமலிருப்பினும் பதினெட்டுப் பிராயம் வாய்ந்தவளைப்போல் காணப்படுபவளும், பாசுபத விரதத்தை யனுஷ்டிப்பவளுமான கன்னிகை யொருத்தியைக் கண்டான். திசைகடோறும் மிகவும் விசாலமாகப் பரம்புவதும், வெகு நீண்ட காலமாய்த் திரட்டிய தவத்தின் இராசிபோல் எங்கும் வியாபிப்பதுமான உடலொளித்திரளால் அவள் குன்றங்கள் கானகங்களுடன் கூட அப் பிரதேசத்தைத் தந்தமயமா யிருப்பதுபோலச் செய்பவளாகக் காணப்பட்டாள்; அங்கங்களைப் படைப்பதற்குக் கருவிகளான பஞ்சமஹாபூதமயமாயிருக்கும் பொருள்களைச் சேராது, கேவலம் வெண்ணிற மென்னும் குணத்தினாலேயே உண்டாக்கப் பட்டவள் போலப் புலப்பட்டாள்; கூட வஸித்த பரிசயத்தின் காரணமாக ஈச்வரனது சிரந்தனிலிருக்கும் சந்திரனிட முண்டான நேசப்பாசத்தினால் இழுக்கப்பெற்ற பாற்கடலின் அதிஷ்டானதேவதைபோல் தோற்றினாள்; கலியுகத்தினால் அறங்கள் அழிந்துபோயினவென்று துயரமுற்று வனவாஸஞ் செய்யப்புகுந்த மும்மறை † போலவும், வேறுத்வீபங்களைக்காண ஆவலுடன் வந்த ச்வேதத்வீபத்தினது * சீர்மை போலவும் விளங்கினாள்; அன்றியும் அவள், தர்ம தேவதையின் இருதயத்திலிருந்து வெளி வந்தவள் போலவும், சங்கத்தினால் கடைந்தெடுக்கப்பெற்றவள் போலவும், நல்முத்துக்களிலிருந்து உருவியெடுக்கப்பட்டவள் போலவும், வெண்ணிறத்திற்கு ஓர் எல்லைபோலவும் காணப்பட்டாள்; சிவபெருமானது நாமாக்ஷரங்களெழுதி அவரது பாதங்கள் பதிக்கப்பெற்ற மணிமயமான அணி யொன்றை அவள் தனது தலைமயிர்ச் சடையில் தரித்துக்கொண்டிருந்தாள்; பரமசிவனிடமிருந்து அவரருளால் அடைந்த அவரது முடிமணியான மதியின் கதிரொளி ஜாலம்போன்ற பூணூலைத் தரித்து அவளது தேஹம் தூய்மையாயிருந்தது.

---

† மும்மறை = மூன்று வேதம், [ருக், யஜுஸ், ஸாமம்.]

* ச்வேதத்வீபம் = வைகுந்தம் மாதிரியான திருமால்வஸிக்கும் ஓரிடம்.

அதன் பின்னர் அவன், குதிரையை விட்டிறங்கி ஓர் மரக் கிளையில் அதைக் கட்டி விட்டு, கிட்டிப் போய் பகவானான முக்கண்ணக் கடவுளுக்குத் தண்டனிட்டு, தைவப் பிறப்பான அம்மாதினிடமே கண்களை யசையாமல் நாட்டி இமை கொட்டாது மீண்டும் அவளைப் பார்க்கலானான். அவளது அளவற்ற அழகையும், மிக்க சாந்தமான காந்தியையுங் கண்டு வியப்புற்ற அவனுக்கு மனதில் தோன்றியதாவது:—"ஓ! எதிர்பாராமலே ஜகத்தில் ஜந்துக்களுக்கு விதம் விதமான விருத்தாந்தங்கள் வந்து சேருகின்றனவே! ஆம்; வேட்டையில் ஏதோ தற்செயலாய் பயனில்லாமலே கின்னர தம்பதிகளைப் பின்பற்ற, வெகு மனோஹரமானதும், மானிடர் நடமாடக் கூடாததும், தேவஜனங்களின் ஸஞ்சாரத்திற் குரியதுமான பிரதேசமொன்றைப் பார்க்கலானேன்; இங்கு தண்ணீரிருக்கு மிடத்தைத் தேடிவருகையில், ஸித்த ஜனங்களால் பரிசிக்கப்பெற்ற ஜலத்தை யுடைய, இருதயத்தைப் பறிக்கும் இக்குளத்தையும் கண்டேன்; இதன் கரையின்கண் இளைப்பாறிக் கொண்டிருக்கையில் மானுடரதல்லாத மேன்மையான கீதத் தொனியொன்று செவியுறப் படலாயினது; அச் சப்தத்தையும் அனுஸரித்து வந்ததில் மனிதரால் தரிச்சிக்கக்கூடாத இத்திவ்யகன்னிகையும் காணப் பெறலாயினள். இவள் தேவகன்னிகை யென்பதில் எனக்கு ஐயமேதுமிலது. இவளது வடிவமே மானிடப் பிறப்பல்லாததை யறிவிக்கின்றது; இல்லையேல், இத்தகைய கந்தர்வரது கண்டத்தொனி விசேஷங்களும் இம்மானிடவுலகின்கண் எங்ஙனம் உண்டாகக் கூடும்? ஆகையால் இவள் பார்த்திருக்கையிலேயே திடீரென மறைந்து விடாமலாகிலும், கைலையின் சிகரத்தின் மீது ஏறிவிடாமலாகிலும், அல்லது மேலே வானத்தில் எழும்பிவிடாமலாவது இருக்கையிலேயே, 'நீ யார்? நீ எப்பெயர் கொண்டவள்? இவ்விளம் பிராயத்தில் இந்நோன்பை யனுஷ்டிக்க முயன்றதற்கு முகாந்தரம் யாது?' என்று இவை யனைத்தையும் இவளுக்கு அருகிற் சென்று வினவுவோம். வியக்கத் தக்க விஷயங்களுக்கெல்லாம் இதுதான் வெகு விசேஷித்த ஸமயம்." என்று தீர்மானித்துக் கொண்டு, அதே படிகமணிமண்டபத்தின் தூண்களில் ஒன்றின் அருகில் உட்கார்ந்தவனாய்க் கீதத்தின் முடிவு நேரத்தையே எதிர் பார்த்தவாறு இருந்தனன்.

பின்னர், கீதத்தின் இறுதியில் அக்குமரியும் எழுந்து பிரதக்ஷிணஞ் செய்து பரமேச்வரனைப் பணிந்து விட்டு, திரும்பி சந்திராபீடனைக் கண்டு இவ்வாறுரைத்தனள் :—‘ அதிதிகளான தமது வரவு நல்வரவா? மஹாபாக்கியசாலிகளான தாம் இவ்வளவு நெடுந்தூரமான தேயத்திற்கு எங்ஙனமோ வந்தீர்களே! ஆகலால் எழுந்திரும்; என்னுடன் வந்து அதிதி பூஜையைப் பெறவேண்டும்.’ என்று இப்படி அவள் கூறியதும், அவளது ஸம்பாஷணையினாலேயே தன்னை அனுக்கிரஹிக்கப் பெற்றவனாகக் கருதியவனாய், எழுந்து, பக்தியுடன் தலைவணங்கி, ‘ அம்மணி! தமது உத்தரவின் படியே!’ என மொழிந்து, விநயத்தை நன்கு விளக்கிக்கொண்டு, சீடன் போல் இவன், நடந்து சொல்லும் அவளைப் பின்பற்றலானான்; சென்று கொண்டே அவன் மனத்தில் நிச்சயித்துக்கொண்டதாவது:—‘ ஆ! இவளென்னமோ என்னைக் கண்டதும் மறைந்து போனாளில்லை; குதூஹலத்துடன் இவளை வினவுவதிலுண்டான விருப்பமும் என் இருதயத்திற் குடிகொண்டு விட்டது; முனிஜனங்களுக்கும் துர்லபமான திவ்யவடிவம் பெற்றிருந்தும் இவளது தாக்ஷிண்ணியம் மேலிட்ட இவ்வாதராதிசயம் வெகு சிறந்ததாகக் காணப்படுவதற்கேற்க, நாம் வினவினோமாகில் தவறாது தனது செய்திசளை முற்றிலும் இவள் மொழிந்திடுவளென்று நான் நிச்சயமாய் நம்புகிறேன்.’ என்று தீர்மானித்தவனாய், நூறடி தூரம்போல் சென்று, குகையொன்றைக் கண்டான் அக்குகையி னுட்புறத்தில் மணிமயமான கமண்டலங்கள் வரிசை வரிசையாய் வைக்கப் பெற்றிருந்தன; ஒரு புறத்தில் யோகபட்டை * ஊசலாடிக் கொண்டிருந்தது; ஓர் வகைச் சுமைதாங்கியின் சிகரத்தில் தேங்காய் மட்டையினாற் செய்த தூய்மையான பாதரக்ஷைகளிரண்டு கட்டி விடப்பட்டிருந்தன; ஒரு மூலையில் சங்கமயமான பிக்ஷைக் கலமொன்றும், மற்றொரு பாரிசத்தில் திருநீறடங்கிய சுரைக் குடுவையும் வைக்கப்பட்டிருந்தன. இவன் அக்குகையின் வாயிற் படியிலிருந்த சிலாதலத்தின்மீது அமர்ந்தனன். அவளும், மரவுரிமயமான படுக்கையின் தலைமாட்டில் வீணையை வைத்துவிட்டு, பின்பு இலைகளாற் செய்த தொன்னை

* யோகபட்டை=ஜபம் முதலியது செய்கையில் பூணூலுடன் போட்டுக் கொள்ளும் கிருஷ்ணாஜினப் பட்டை.

யில் மலையருவியிலிருந்து அர்க்கியநீர் எந்தி வந்தனள்; அங்ஙனம் வந்த அக் கன்னிகையை நோக்கி, 'அதிகமாய் நிர்ப்பந்திக்க வேண்டாம்; தாம் இவ்வளவு பிரஸன்னமாயிருத்தலே போதும்; அம்மணி! அருள்புரிந்து இத்தகைய மிகுந்த ஆதரத்தை விட்டுவிடவேண்டும்; உமது பார்வையே அகமர்ஷண மந்திரம்போல் ‡ பாவங்களனைத்தையும் அகற்றிப் பரிசுத்தமாக்குவதற்குப் போதுமானது; ஆகையால் உட்காருங்கள்.' என்று கூறலானான். அவளால் பின்பு நிர்ப்பந்திக்கப் பட்டவனாய், நன்கு தலைவணங்கி அதிதிபூஜையாவையும் பணிவுடன் பெற்றுக்கொண்டான்.

அவள் அதிதிபூஜை செய்து விட்டு, மற்றொரு பாறையின் மீதுட்கார்ந்தவளாய், ஓர் நொடிப்பொழுது சும்மா விருந்து, மெதுவாக சந்திராபீடனது செய்திகளை வினவ, அவனும் திக்விஜயம் முதற்கொண்டு கின்னர தம்பதிகளைப் பின்தொடர்ந்த தீருக தனது வரவின் வரலாற்றை முற்றிலும் மொழிந்தனன். இவனது ஸகல விருத்தாந்தங்களையும் அறிந்தவளாய் அவள் எழுந்திருந்து, பிக்ஷைக் கலத்தைக் கையிலேந்தி, அவ்வாச்ரம விருக்ஷங்களின் அடித்தடங்களிற் போய் ஸஞ்சரித்தாள். சிறிது நேரத்திலேயே அவளது அப் பிக்ஷாபாத்திரமானது தானாகவே விழுந்த பழங்களால் நிறைந்து விட்டது. திரும்ப வந்து அக்கனிகளை யுபயோகிக்குமாறு சந்திராபீடனைத் தூண்டினள். அக்காலை அவனது சித்தத்தில் இங்ஙனம் தோன்றியது:—'தவங்களுக்கு அஸாத்தியமென்னதாபதேதுமிலது; இதைவிட வேறு விந்தையுமுளதோ? அசேதனங்களான அடவி விருக்ஷங்களும் அறிவுள்ளவர்போல் அதிகமஹிமைவாய்ந்த இவ்வம்மணிக்கு கனிகளைக் கொடுத்து, தமது அனுக்கிரஹத்தை யறிவிக்கின்றனவே! இதுகாறுங்காணாத இவ் விசித்திரம் இப்பொழுது காணப் பெறலாயினது.' என்று இன்னும் விசேஷமாக வியப்புற்றவனாய் எழுந்து, அதே இடத்திற்கு இந்திராயுதத்தையோட்டிவந்து, சேணத்தைக் கழற்றி, சற்றுத் தூரத்தில் கட்டிவிட்டு, மலையருவிநீரில் நீராட்டஞ்செய்து, அமிருதரஸம்போல் சுவையுள்ள அக்கனிகளைப் புசித்து, பனிபோல் மிகக் குளிர்ந்த மலை

‡அகமர்ஷண மந்திரம்=தீவினைகளைத் தீர்க்கும் மஹாமந்திரம்.

ச்சாரலின் தண்ணீரையும் அருந்தி, ஆசமனம் செய்து விட்டு, அக் கன்னிகையும் ஜலம் பலம் மூலம் முதலிய இத்தகைய உணவுகளை யுண்ணும் வரையில், தான் தனியாக ஓரிடத்தில் அமர்ந்திருந்தான்.

பிறகு உண்டிவினை முடித்துக் கொண்டு,ஸந்தியா காலத்திற் கேற்ற சடங்குகளையும் நிறைவேற்றியவளாய். ஓர் பாறையின் மேல் அவள் அமைதியுடன் அமர்ந்ததும், சந்திராபீடன் மெதுவாக நெருங்கிப் போய்ச் சற்று ஸமீபத்தில் உட்கார்ந்து கொண்டு, ஓர் முகூர்த்த நேரம் சும்மா விருந்து விட்டு, வெகு விநயத்துடன் இவ்வண்ணம் கூறலானான்:—'அம்மணி! பெருமைபொருந்திய உமது பேரருளை யடைந்ததனால் தூண்டப்பெற்ற எனதாவலால், கலக்கமுற்றதான மானிடருக்குரிய எளிமைத் தன்மையானது, விருப்பமற்றிருப்பினும் வலுவில் எந்தனை வினவுஞ்செயலில் ஏவுகின்றது; யஜமானனது அற்பமான நட்புங்கூட, துணிபில்லர்த் தன்மையருக்கும் பெருந்தைரியத்தைத் தருகின்றதல்லவா? ஓரிடத்தில் வெகு சொற்பநேரம் நேரிட்ட ஸஹவாஸமும் பரிசயத்தை யுண்டுபண்ணுகிறது; வெகு சிறிதளவான உபசாரமும் உள்ளத்தில் அன்பைப் புகட்டுகின்றது; ஆகவே உமக்கு இது அதிக ஆயாஸகரமாக வில்லாதிருப்பின், இவ்விஷயங்களைக் கூறி எந்தனை யனுக்கிரஹிக்கக்கோருகிறேன். உம்மைத் தரிசித்தது முதல் இப்பொழுது நான் வினவப்போகும் விஷயத்தில் எனக்குண்டாயிருக்கும் ஆவலுக்கு அளவில்லை—தேவர், முனிவர், கந்தர்வர், குஹ்யகர் அப்ஸரஸ்ஸுகள் இவர்களுக்குள் எவர் குலமானது உமது பிறப்பினால் பெருமைப் படுத்தப் படலாயினது? மலர்கள்போல் ஸுகுமாரமான இவ்விளம் பிராயத்தில் விரதங்களைக் கைப்பற்றுவானேன்? இவ்வயதெங்கே! இவ்வடிவமெங்கே! அதிசயிக்கத்தகுந்த இவ்வழகெங்கே! இந்திரியங்களை யடக்கியாளும் இத்தன்மை யெங்கே! ஆகையால் இது வெகு விந்தையென எனக்குத் தோன்றுகிறது; ஸித்தர், ஸாத்தியர் இவர்களால் விசேஷமாக வஸிக்கப் பெற்றனவும், விண்ணுலகத்திற் கிடைப்பவையுமான திவ்யாச்ரமஸ்தலங்களை விட்டு விட்டு, தனிமையாய் ஒருத்தியாகவே ஜனஸஞ்சாரமற்ற இவ்வனந்தனில் வஸிக்கக் காரணம் யாது? உலகில் அனைவரது படைப்புக்

கும் ஸாதனங்களான அதே பஞ்சமஹாபூதங்களால் ஆக்கப்பெற்ற உமது சரீரம் இத்தகைய வெண்ணிறம் பொருந்தியிருக்கின்றதென்னும் இவ் விஷயந்தான் எவ்வகைத்தானது? இதை யாம் இதுகாறும் வேறெங்கும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை; இதை யெல்லாவற்றையுங் கூறி, நீர் எமதாவலைத் தீர்க்கவேண்டும்.' என்று இவன் மொழிந்ததும், அவள் ஏதோ சித்தத்திற் சிந்தித்துக் கொண்டு, சிறிது நேரம் பேசாமலிருந்து, பெருமூச்செறிந்து, கண்களை மூடிக்கொண்டே, இடைவிடாது பெருங் கண்ணீர்த் துளிகளைப் பெருக்கியவளாய் நிச்சப்தமாகப் புலம்பத்தொடங்கினள்.

அவள் அங்ஙனம் அழத்தொடங்கியதைக் கண்டு சந்திராபீடன், அக்காலை யிவ்வாறு ஆலோசிக்கலானான்:—'ஓ! துயரங்கள் எங்கும் தடையின்றிப் பிரவ்ருத்திக்கின்றனவே! ஏனெனில், பரிபவத்திற்குரியதாகாத இத்தகைய வடிவத்தையும் வியஸனங்கள் தமக்குப் புகலிடமாக்கிக் கொள்கின்றனவே! எவ்வகையிலும் மனத் துயரங்கள் ஒருவரையும் பரிச்சிக்காமலிருப்பதில்லை; இன்ப துன்பங்கள்முதலிய த்வந்த்வங்களுடைய * பிரவ்ருத்தியென்பது வெகு வலுவானது. இவளது கண்ணீர்ப் பெருக்கினால் இப்பொழுது வேறோர் ஆவலானது என் மனத்திற் செழித்தோங்குகின்றது; இவ்வகையான மூர்த்திகள் வெகு அற்பமான சோகங்களால் பாதிக்கக் கூடியவைகளல்ல; அற்பமான இடியின் வீழ்ச்சியால் தரணியானது சலித்துவிடாதன்றோ?' என்று மேலோங்கிய குதூஹலமுடையவனாகவும், துயரத்தை அவளுக்கு நினைப்பூட்டுவதற்குக் காரணமானேனென்று தன்னை அபராதஞ் செய்தவனைப்போலவும் எண்ணியவனாய், எழுந்து, மலையருவியிலிருந்து முகத்தைக் கழுவுவதற்காக ஜலத்தைக் கைகளில் ஏந்திவந்தான். அவளோ, அவனது வேண்டுகோளுக்கிணங்கி, இடைவிடாது தாரைதாரையாய்க் கண்ணீர்ப் பெருகிக் கொண்டிருப்பினும் சிறிது கலங்கிய தனது கண்களைக் கழுவிக் கொண்டு, மரவுரியின் முந்தானையை யெடுத்து முகத்தைத் துடைத்துவிட்டு, சுடச்சுடப் பெருமூச்செறிந்து, மெதுவாக மறுமொழி யுரைத்தனள்:—"இராஜபுத்திர! துரத்ருஷ்டசாலியும், வெகு வன்னெஞ்சுக்காரியும், பாவியுமான எனது ஜன்மம் முதற்கொண்டு இதுகாறும் நடந்துவரும் செவியுறத்தகாத இந்த

* த்வந்த்வங்கள் = விருப்பு வெறுப்பு, இன்பம் துன்பம், ஞானம் அஞ்ஞானம் முதலியவை.

வைராக்ய விருத்தாந்தத்தைக் கேள்வியுறுவதிற் பயனென்ன? எனினும், பேராவலிருப்பின் யான் கூறக் கேழ்ப்பீராக :—

தைவலோகத்தில் அப்ஸரஸ்ஸுகள் என்னும் கன்னிகைகள் இருக்கின்றனர் என்பது உமது காதில் விழுந்திருக்கவே கூடும். அவர்களுள் பதினான்கு குலங்கள் உள. அவற்றுள் ஒரு குலம் பகவானான பிரம்மதேவனிடமிருந்து பிறந்தது; வேறொன்று வேதங்களிடமிருந்துண்டாயினது; மற்றொன்று அக்கினியினிடமிருந்து ஆவிர்ப்பவித்தது; இன்னுமொன்று வாயுவினிடமிருந்துற்பவித்தது; வேறொன்று அமுதங்கடைகையிற் கிளம்பிவந்தது; பின்னுமொன்று தண்ணீரிலிருந்து தோன்றியது; கதிரவனது கதிரொளிகளிலிருந்து வேறொன்று வெளிவந்தது; சந்திரகிரணங்களிலிருந்து மற்றொன்று ஜனித்தது; புவியிலிருந்து ஒன்று உற்பவித்தது; மின்னல்களிலிருந்து ஒன்று ஸம்பவித்தது; மற்றொன்று மன்மதனால் படைக்கப் பெற்றது; நமனால் ஒன்று நிர்மிக்கப்பட்டது; தக்ஷப்பிரஜாபதியின் அளவற்ற கன்னிகைகளுக்குள் முனி யென்றும் அரிஷ்டை யென்றும் இரு கன்னிகைகள் உளர். அவ்விருவராலும் கந்தர்வருடன் சேர்ந்து குலங்கள் இரண்டு உண்டாக்கப்படலாயின; இங்ஙனம் இவையனைத்தும் சேர்ந்து பதினான்கு குலங்கள். அவ்விரு குலமே கந்தர்வருக்குத் தக்ஷப் பிரஜாபதியின் இரு புதல்விமாரிடமிருந்து ஜனித்தவை; அவற்றுள் முனியென்பவளுககுப் பிறந்த சித்திரஸேனன் முதலிய பதினாறு புதல்வரில் கடைசிக் குமாரனான **சித்திரரதன்** என்பவர், மற்ற உடன்பிறந்தோர் பதினைவரிலும் குணங்களால் மிகவும் மேலானவர்; அவர் பாலியப் பருவத்திற்றானே கந்தர்வர் அனைவருக்கும் அதிபதியாய்விட்டார். இதற்குச் சற்றுத் தூரத்தில் இப்பாரதவர்ஷத்திற்கு வடக்கில் கிம்புருஷவர்ஷமென்னும் தேசத்தில் வர்ஷபர்வதமான § **ஹேமகூடம்** என்னும் குன்றமே அவரது வாஸஸ்தலம். ஆங்கு, அவரது புயபலத்தால் பரிபாலிக்கப்பட்டு அனேக இலக்ஷக்கணக்கான கந்தர்வர் குடிகொண்டிருக்கின்றனர். அவராலேயே 'சைத்திரரதம்' என்னும் மிக மனோஹரமான இக்கானகமும், அச்

---

§ வர்ஷபர்வதம் = வர்ஷிக்கும்மேகங்கள் தங்கியிருக்கும் பெருங்குன்றங்கள்.

சோதமென்கிற இப்பெருங் கயமும் நிர்மிக்கப்பட்டன; பகவானுன இப்பரமேச்வரனையும் அவரே பிரதிஷ்டை செய்தார். அரிஷ்டையென்பவளுடைய புத்திரர்களான தும்புரு முதலான ஆறு ஸஹோதரர்களுள் மூத்தவரும், உலகெங்கும் புகழ்பெற்றவருமான ஹம்ஸன் என்னும் கந்தர்வர், சித்திரரதன் என்னும் இக்கந்தர்வராஜனுல் அவ்விரண்டாவது கந்தர்வகுலத்திற் பட்டாபிஷேகஞ் செய்விக்கப்பெற்று, சிறு பிராயத்திலேயே செங்கோலைச் செலுத்தலானர். அளவற்ற கந்தர்வப் படைகளால் சூழப்பெற்ற அவருக்கும் அக்குன்றமே குடியிருக்குமிடம். சந்திரகிரணங்களிலிருந்து பிறந்த யாதொரு அப்ஸரஸ்ஸுகளின் குலமுண்டோ, அதிலிருந்து பூஜ்யையான பார்வதிதேவி போன்றவளான கௌரி யென்று பெயர்பெற்ற கன்னிகையொருத்தி ஜனித்தனள்; அவள் மதியினது கதிரொளிகளின் ஜாலங்களினூடாக ஒழுகிய அவனது கலைகளின் இலாவண்ணிய மனைத்தையுங்கொண்டு படைக்கப்பெற்றவள் போல் மூவுலகங்களின் கண்களுக்கும் களிப்பூட்டும் வடிவழகு வாய்ந்தவளும், சந்திரகிரணங்களுக்கொப்ப வெகு வெண்ணிறம் பொருந்தியவளுமாயிருப்பவள். அவளை இரண்டாவது கந்தர்வகுலத்திற்கு அதிபதியான ஹம்ஸன் மணம்புரிந்தனர். அவளும் ஹம்ஸனை யடைந்து தனக்கேற்ற புருடனுக்கு வாழ்க்கைப்பட்டதனுலுண்டான பேரின்பத்தைப் பெற்ருள்; அவள் அவரது அந்தப்புரத்தேவிமார்களுக்கெல்லாம் தலைவியாகவும் ஆயினள்.

அத்தகைய மஹாத்மாக்களான அவ்விருவருக்கும், இவ்வாறு சீர்குலைந்த சுருபத்துடன் அளவற்ற சோகங்களுக்கு ஆதாரமான நானொரு புதல்வியே துயரத்திற்கென்றே வந்து பிறந்தேன். எனது தந்தையோ, வெகு நாட்கள் மக்கட்பேறு இல்லாதவராதலால், மைந்தன் பிறந்ததற்கும் மேலாகக் கருதி, மஹோத்ஸவஞ் செய்து, எனது ஜன்மத்தைப் பேராதரவுடன் கொண்டாடினர். பின்பு பத்தாவது தினத்தன்று தகுந்தவாறு சடங்குகளையெல்லாம் செய்து முடித்து, நிகரற்ற வெண்ணிறம் வாய்ந்திருப்பதற்கேற்க மஹாச்வேதை யென்று நாமகரணமும் செய்தார். நானும், குழந்தையாயிருந்ததால் தந்தையின் மாளிகையில் மிகவும் இனிய தொனியுடைய வீணைபோல், மிக மதுரமான மழலைச் சொற்களைச் சொல்

விக்கொண்டு, கந்தர்வரது மடிகளின்மீது ஒன்றைவிட்டொன்றில் ஸஞ்சரித்துக்கொண்டு, இன்ப துன்பங்களை யறியாது மனோஹரமான குழந்தைப்பருவத்தைக் கழித்துவந்தேன். நாளடைவில், வஸந்தருதுவில் சித்திரைமாதம் போலவும், சித்திரையில் இளந்தளிர்போலவும், இளந்தளிரில் மலர்போலவும், மலரின்கண் மகரந்தம் போலவும், மகரந்தத்தினிடம் மதம்போலவும் எனதிடம் புதிதாக யௌவநப்பருவம் வந்தடைந்தது.

பிறகு செந்தாமரைமலர்கள் செழித்தோங்கக் கூடியனவும், ஸகலப் பிராணிகளின் இருதயத்திலும் பரமானந்தத்தைப் புகட்டத் தகுந்தவையுமான சித்திரைமாதத்துத் தினங்களில் ஒருநாள் எனது அன்னையோடு நான், சித்திரைமாதத்தினுற் பின்னும் பெருகிய சோபையைப் பெற்றதும், மிக்க மலர்ந்த புதிய வெண்குவளை கருங்குவளை செங்குவளை செந்தாமரை முதலிய மலர்களையுடையதுமான இந்த அச்சோதஸரஸ்ஸில் நீராட வந்தேன். இங்கு மிகுதியான புஷ்பங்களிலிருந்து படிந்த தூள்களின் திரள்களால் நன்கு மறைக்கப்பெற்ற காரன்னங்களின் காலடிக்கோடுகளையுடைய இக்கரையோரத்து மரத்தடிகள் மிக மனோஹரமானவை யென்றெண்ணி இரமணீயமாகச் செழித்தோங்கிய பிரதேசங்களைப் பார்ப்பதிற் பேராசையால் இழுக்கப்பெற்ற இருதயத்தையுடையவளாய், தோழிமாருடன் திரியலானேன்.

ஓரிடத்தில், விரைவுடன் வாயுவால் கொண்டுவரப்பட்டதும், இடைவிடாமல் மலர்ந்த பூக்களையுடையதாயிருப்பினும் அக்கானகத்தில் மற்ற மலர்களின் மணங்களை முற்றிலும் மறைக்கச் செய்து கொண்டுப் பரவுவதும், நான் முன்னே நான் முன்னே யென்று ஆவலுடன் பறந்துவரும் வண்டுகளால் அநுஸரிக்கப்பெற்றதும், இம்மானுடலோகத்ததாகாததும், அதுகாறும் முகக்கப்பெறாததுமான ஓர் புஷ்பவாஸனையை முகந்தேன். இவ்வாஸனை யெங்கிருந்து வருகிறதென்று அறிய ஆவலுள்ளவளாய் நானும், கண்களை மூடிக்கொண்டு வண்டின் பேடுபோல் வலுவில் அம்மலரின் மணத்தால் இழுக்கப்பட்டு சிறிது தூரம் திரிந்ததும், மஞ்சனமாடுவதற்கு வந்திருக்கும் வெகுமனோஹரரான முனிகுமாரரொருவரைக்

கன்னுற்றேன். அவர், ஹரனது நெற்றிக்கண் நெருப்பினால் தன் தோழனான மன்மதன் எரிந்துபோனனெனத் துயரமுற்று, வெறுப்புண்டு தவம்புரியும் வஸந்தன்போல்* விளங்கினர்; அவரது சரீரம் அதிகமாய்ச் சுடரொளி வீசுவதால், பளபளவென்று மின்னும் மின்னற்கொடிகளாலாக்கிய ஒரு கூட்டினிடையில் இருப்பவர்போல் அவர் காணப்பெற்றார்; அவர் காம்புடன் கூடிய மகிழங் கனிபோன்ற கமண்டலத்தை ஒரு கரத்திலும், மற்றொரு கரத்தில் படிகக்கற்களாலாகிய ஜபமாலையையும் ஏந்திக் கொண்டிருந்தனர்; தம் தேஹகாந்தியால் சூரியனை வென்று, அவனிடமிருந்து அபஹரிக்கப் பெற்ற பரிவேஷமென்னும் மண்டலம் போன்ற முஞ்சியென்னும் மேகலையை அவர் அரையைச்சுற்றி யணிந்திருந்தார்; மேலும் அவர் பிரம்மசர்யத்திற்கு அலங்காரம் போன்றவரும், (உருவெடுத்த) தர்மத்தின் யௌவனப் பருவமெனத் தோற்றுபவரும், கலைமகளின் விலாஸம்போல் விளங்குபவரும், ஸர்வ வித்தைகளுக்கும் ஸ்வயம்வரபதிபோலிருப்பவரும், ஸகலசாஸ்திரங்கட்கும் ஸங்கேதஸ்தானமெனத் தகுந்தவருமாய் இருந்தனர்; தனக்கிடான வயது வடிவங்களை யடைந்த வேறொரு இருஷி புத்திரர், தேவதார்ச்சனையின் பொருட்டு பூக்களைப் பறித்துக்கொண்டே இவருடன் பின் தொடர்ந்து வந்தார்.

அவரால் காதிலணியப்பெற்றதும், கிருத்திகையெனப் பெயருடையதாரகைக் கொத்துக்கு நிகரானதும், அதற்குமுன் காணப்பெறுதற்குமான பூங்குலை யொன்றைப் பார்க்கலானேன். மற்ற மலர்களின் மணங்களையெல்லாம் மறையச் செய்யும் இந்த பரிமளமானது இப் பூங்குலையினுடையதே என்று நிச்சயித்து, வாலிபப் பருவத்திலிருக்கும் அம்முனிகுமாரனையே பார்த்துக்கொண்டு சிந்திக்கலானேன்:— 'ஓகோ! மிகவும் அதிசயிக்கத்தக்க அழகுகளைப் படைப்பதற்கு வேண்டிய ஸாதனங்கள் நிறைந்த நான்முகனது பண்டசாலைக்கு இஃதென்ன அழியாத்தன்மை! ஏனெனில், மூவுலகங்களும் வியப்புறத் தகும் அளவற்ற அழகையுடையவனான மேன்மைதங்கிய மன்மதனை யுண்டாக்கி, மீளவும் அவனது வடிவழகையும் மீறிய அபாரஸௌந்

* வஸந்தன் = வஸந்த ருதுவுக்கு அதிபதியான ஓர் தேவ புருடன்.

தர்யம் வாய்ந்த மாயமான முனிகுமாரரென்னும் மற்றொரு இம் மன்மதனும் படைக்கப்பெற்றானன்றோ? நான்முகன் இப்பாருலகில் அனைவரது அக்ஷிகளுக்கும் ஆனந்தத்தை அளிக்கும் அம்புலிமானை யுண்டாக்கியும், ஸ்ரீதேவியின் கிரீடாகிருஹங்களான பங்கயங் களைப் படைத்தும், முதலில் இவரது வதனத்தின் வடிவத்தைச் செய் யும் திறமைபெருவதற்காக வேலையை அப்பியஸித்தாரென்றே நான் எண்ணுகிறேன்; இல்லையேல், ஸமானவடிவத்தையுடைய இத் தகைய வேறொரு பொருளைப் படைப்பதிற் பயனென்ன? கிருஷ்ண பக்ஷந்தன்னிற் க்ஷயத்தையடையும் சந்திரனது ஸகலகலைகளையும் ஸுஷும்னையென்னும் கிரணநாடியின் வாயிலாக சூரியன் உறிஞ் சுகிறானென்பது உண்மையல்ல; ஆனால், அவனது அக்கதிரொளி கள் யாவும் இம்முனிகுமாரரது உடலில் உண்மையாய் உட்புகுந்து வருகின்றன; அன்றேல், அழகையெல்லாம் அபஹரிக்கக்கூடிய தும், அபாரஆயாஸகரமுமான அருந்தவம் அனுஷ்டிப்பவருக்கு இத்தகைய இலாவண்ணியமேது?' இவ்வாறு சிந்தித்துக்கொண் டேயிருக்கும் எந்தனை, குணதோஷங்களின் விசேஷத்தை விசாரிக் குந்தன்மையற்றவனும், ரூபத்தில் மாத்திரம் பக்ஷபாதம் பாராட்டுப வனும், புதியயௌவனப்பருவத்திற்கு இயல்பானவனுமான மன்ம தன் முற்றிலும் பரவசமாகச் செய்துவிட்டான்.

மூச்சு விடுதலோடு கண்கொட்டுதலையும் மறந்து, சிறிது மூய்ந்த இமைகளையுடையதான வலதுகண்ணால் காதலுடன் அவனை உறி ஞ்சுபவள் போலவும், ஏதோ வேண்டுபவள் போலவும், 'ஆ! ஆ! இஃதென்ன! மிகவும் இகழக்கூடியதும், நற்குலத்துதித்த நங்கையரு க்கு ஏற்காததுமான இந்த அடாத செயலைச் செய்ய முயன் றேனே!' என அறிந்தவளாயினும், புலன்களை யடக்கியாளத்திற மையற்றவளாய், சிலையாக ஓரிடத்தில் அழுத்தப்பெற்றவள்போல வும், சித்திரத்திலெழுதியவளைப்போலவும், வலுவுடன் எவராலோ பற்றிக்கொள்ளப்பட்டவள் போலவும், அசைவற்ற அகில அவயவங் களையுமுடையவளாகவே அவனையே வெகு நேரம் பார்த்துக்கொ ண்டிருந்தேன். பின்னர், உள்ளத்தில் அனங்கன் தங்கியிருக்கத் தகுந்த இடம் தர விரும்பியதுபோல், மேன்மேலும் உள்ளிருந்து

பெருமூச்சு வெளிக் கிளம்பியது; அக்காலை வெளியாகும் வியர்வை நீர்த்துளிகளின் தாரைகளால் கழுவப்பெற்றதுபோல் இலஜ்ஜையும் விலகிவிட்டது.

பிறகு என் மனத்தில் தோன்றியதாவது:—‘இந்திரியவிருப்பங்களைத் தூரவிலக்கி, வெகு சாந்தத் தன்மை பொருந்திய இம் முனி ஜனத்தின்பால் எந்தனைத் தள்ளி, அயோக்கியனான இம்மன்மதன் என்ன இவ்வாறு முறைகேடான தொழிலைச் செய்ய முயன்றானே! பெண்மக்களின் இருதயத்திற்கு இவ்வளவு பெரும்பேதமைத்தன்மையுமோ! இவர்கள் தம் காதலுக்கு விஷயமாயிருப்பவரின் யோக்கியதையையறிய இவ்வளவுவல்லமையற்று இருக்கின்றனரல்லவா? தவங்களுக்கும் சாந்திகளுக்கும் இருப்பிடமான சுடரொளிவீசும் இவ்வுருவமெங்கே? ஸாதாரணஜனங்களால் கொண்டாடக்கூடிய இக்காமவிகாரங்களெங்கே? அனங்கனால் இங்ஙனம் ஆட்டிவைக்கப்படும் எந்தனைக் கண்டு இவர் தமதுள்ளத்தில் ஐயமின்றி நகைப்பரே! இவ்வண்ணம் இதை யான் அறிகிறேனென்றாலும், இச்சமயம் என்னிடம் உண்டாயிருக்கும் இவ்விகாரத்தை யடக்கிக்கொள்ள அசக்தையாயிருக்கிறேன் என்பது வெகு விசித்திரம். இதென்ன! இந்த க்ஷணத்தில் எனதுள்ளம் இவருருவத்தை மாத்திரமே கண்டு குழப்பமுற்று, இவ்வாறு பராதீனமாய் விட்டதே! நினைவு தடுமாற்றம் நேரிடுவதற்குள்ளாகவே, எனது இவ்விதிய மன்மதசேஷ்டைகளை இவர் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்கும் முன்னமே நாம் இவ்விடம் விட்டு விலகிப்போவதே நன்று. ஒருவேளை இவர், தான் விரும்பாத மன்மதவிகாரங்களைக் கண்டு கோபங்கொண்டு, எந்தனைச்சபித்தும் விடக்கூடும்; இருஷிஜனங்களின் தன்மைக்கோ, சினமென்பது சிறிதும் தூரமல்ல.’ என்று நினைத்து நான் அவ்விடம் விட்டுப்போக விரும்பினேன். இருஷிஜாதியோ, ஜனங்கள் யாவராலும் தொழக்கூடியதென்று எண்ணி, அம்முனிகுமாரருக்கு வந்தனஞ்செய்தேன்.

வந்தனஞ் செய்ததும் பின்பு, மஹாசக்திவாய்ந்த மன்மதனுடைய கட்டளை கடக்கமுடியாததலாலும், நூதனமான யௌவநமும் அவிநயங்களுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பதுபற்றியும், மனப்போக்

கும் மிகச் சபலத்தன்மையதானதாலும், அந்தந்த விஷயத்திற்கு அவ்வவ்வாறு ஸம்பவிக்க வேண்டி விதி யேற்பட்டிருப்பதாலும், விரிவாகக்கூறுவானேன்?--எனது துர்பாக்கியத்தின் பொல்லாத்தன்மையால் நான் இத்தகைய துன்பம் அனுபவிக்கவேண்டியிருப்பதாலும், அவரையும் மன்மதவிகாரங்களைக் கண்டு தைரிய மொழிந்தவராகச் செய்து, ஓர் விளக்கை வாயு குலைந்துவிடுவதுபோல், சாமனுனவன் குழப்பமுறச் செய்தான். அவரது அவ்வெளிப்படையான விகாரத்தினால் நான்இருமடங்கு அதிகமான மன்மதாவேசத்தைப்பெற்று, அந்தக்ஷணத்தில் வாயால் வர்ணிக்கக் கூடாத வதோ·ஓர்அவஸ்தையை அனுபவிப்பவளானேன்.

சிறிது அவகாசம் அகப்படவே, அருகிற்சென்று, கூடவந்த அந்த இரண்டாவது இருஷிகுமாரனைப் பணிந்து இவ்வாறு வினவினேன் :—‘பகவன்! இத்தபோதனவாலிபரது நாமதேயம் யாது? எவரது புதல்வர்? இவர் காதிலணிந்திருச்கும் இப்பூங்கொத்து எப்பெயர் கொண்ட விருக்ஷத்தினுடையது? இதற்கு முன் முகக்கப்பெருத இம்மலரிலிருந்து பரவும் நிகரில்லாத இந்நறுமணமானது, எனது மனத்தினில் மஹத்தான வியப்பை விளைவிக்கின்றது.’ என்று நான் செப்பியதை யவர் செவியுற்று, சிறிது சிரித்துக்கொண்டு இங்ஙனம் சொல்லலுற்றார் :—“நங்காய்! இதைக் கேட்பதில் உனக்கு யாது பயன்? ஆயினும் உனக்கு ஆவலிருப்பின் கூறுகிறேன் கேள் :—

மூவுலகெங்கும் பெரும் புகழடைந்த ச்வேதகேது என்னும் ஓர் மாமுனிவர் விண்ணுலகத்தின்கண் வஸிக்கின்றனர். தேவதார்ச்சனையின்பொருட்டு அவர் ஒருநாள் பங்கயங்களைப் பறித்துவர கங்கையில் இறங்குகையில் உலகெங்கும் உசுக்கத் தகுந்த ஸௌந்தரமான இவருருவத்தைக் கண்களால் அருந்தி, மன்மதவிகாரமடைந்தவளான மலர்ந்தக் கமலமலரதனில் அமர்ந்திருக்கும் மஹாலக்ஷ்மியிடமிருந்து அந்தக்ஷணமே ஒரு குமரன் பிறந்தனன். பிறகு அவனை மடிதனில் ஏந்திவந்து, ‘ஐயன்மீர்! இவன் தமது புதல்வன்; தாம் இவனை யேற்கவேண்டும்.’ என மொழிந்து, அந்த ச்வேதகேதுவினிடம் அவனை அளித்தனள். இம் முனிவரும், அக்குழந்தை

னை யெடுத்துப்போய், அவனுக்குச் சிறுவருக்குரிய செய்முறைகளை யும் செய்து, அவன் தாமரைப் பூவிலுதித்ததால், புண்டரீகன் என அவனுக்கு அப்பெயரையே வைத்தார். பிரம்மசரியவிரதமேற்ப டுத்தி, ஸகலகல்விகளையும் அவனுக்குக் கற்பித்தனர். அப்புண் டரீகன்தான் இவன்.

இப் பூங்கொத்தோ, தேவாஸுரர்களால் கடையப் பெற்ற பாற் கடலிலிருந்துதித்த பாரிஜாதமென்னும் விருக்ஷத்தினுடையது. விரதத்திற்கு விரோதமாக இப்பூங்கொத்து இவனது செவியிற் சம் பந்தித்த வரலாற்றையும் கூறுகிறேன் கேள்.—இன்று சதுர்த்தசி யென்று, கைலையில் வீற்றிருக்கும் பெருமைபொருந்திய பார்வதீ பதியைப் பணிவதற்கு விண்ணுலகமிருந்து என்னுடன் இவன் நந்த னவனத்திற்கு அருகே வந்துகொண்டிருக்கையில், இப்பாரிஜாதப் பூங்கொத்தை யேந்திக்கொண்டு, அந்நந்தனவனதேவதையே நே ரில் வந்து, நமஸ்கரித்துக் கூறியதாவது:—'ஓ ஸ்வாமி! விலாஸ மாய் அணிந்துகொள்வதற்கு இன்றியமையாத இப்பூங்கொத்து உமது காதிலிடப்படவேண்டும்; பாரிஜாதத்தின் ஜன்மம் பயன் பெற்றதாகட்டும்.' என்று சொல்லிக்கொண்டு பின்தொடரும் அவ் வனதேவதையைக் கண்டபின், 'நண்பனே! குற்றமென்ன? இவள் அன்புடன் அளிப்பதை அங்கிகரிப்பாயாக.' எனச் செல்லி, விரும் பாமலிருப்பினும் வலுவில் இவனது காதில் இதை யணியச் செய் தேன். ஆகையால், யாவன் இவன்? இப்பூங்கொத்து எது? இது இவனது செவியில் வந்து சேர்ந்ததெங்ஙனம்? என்கிற இவ்வர லாற்றை முற்றிலும் மொழிந்துவிட்டேன்." என்று அவர் கூறிய தும், அத்தபோதனவாலிபர் சிறிது புன்னகை புரிந்தவராய் என் னை நோக்கி, 'வெகு குதூஹலமுள்ள ஓ அம்மணி! இவ்வாறு வினவி ஆயாஸப்படுவானேன்? இந்நறுமணம் உனக்கு நன்கு உகப்பாயிருக்குமாயின் இதை நீ யெடுத்துக் கொள்.' என்றுரை த்து, கிட்டத்தில் வந்து, தனது செவியிலிருந்து அப்பூங்கொத்தை யெடுத்து எனது காதுதனிலிட்டனர். அப்பொழுது என் தன் னத்தின் பரிசத்தினால் நன்கு நடுக்கமுற்ற விரல்களையுடைய தன் கரதலத்திலிருந்து இலஜ்ஜையுடன் ஜபமாலை நழுவி வீழ்ந்ததையும் அவர் அறிந்தவர் அல்லர். உடனே நான், அஜ்ஜபமாலை பூமியில்

விழுவதற்கு முன்னமே எளிதில் அதை யேந்தி, என் கண்டந்தனில் அணிந்துகொண்டேன்.

இத்தகைய ஸந்தர்ப்பத்தில் குடைதாங்கும் மடந்தையானவள், ‘ ஓ இராஜகுமாரி! மஹாராணியார் மஞ்சனமாடிவிட்டனர்; மாளிகைக்குப் போகும் நேரமும் நெருங்கியது; ஆகையால் நீராட்டத்தை நிறைவேற்றுவீராக.’ என்று எந்தனை நோக்கி மொழிந்தனள். நானோ, முதன்முதல் மாவட்டியால் தாக்கப்பெற்றதான புதியதாகப் பிடிபட்ட பெண்யானைபோல், அவளது அவ்வசனத்தினால் வெகு பிரயாஸைப்பட்டு வலித்திழுக்கப்பட்டவளாய், மிகவும் கஷ்டப்பட்டு அவரது முகத்திலிருந்து என் பார்வையை இழுத்துக்கொண்டு நீராடப் புறப்பட்டேன். நான் புறப்பட்டதும், இரண்டாம் இருஷிகுமாரர், அவருக்கு அவ்வாறு தைரியத்தடுமாற்றம் உண்டானதைக் கண்டு, சற்றுப் பிரணயகோபத்தைப்* பிரகடனம் பண்ணுபவர்போல் இங்ஙனம் உரைத்தனர்:—‘ ஏ! எனதன்பார்ந்த புண்டரீக! இஃது உனக்குற்றதல்ல. அற்பஜனங்கள் போய்ப் பழகிய பாதையிது. ஸாதுக்களுக்குத் தைரியமல்லவோ பெருந்தனம்? எவனோ ஸாமான்னியனைப்போல் நீயும் என்ன இக்குழப்பத்திலிருந்து உன்னை விலக்கிக்கொள்ளமாட்டவில்லையே? இந்திரியங்களுக்கு இத்தகைய அபூர்வமான கலக்கம் உனக்கேது? இந்த கலக்கத்தினால் நீ இவ்வாறாய் விட்டனையே! உனது அத் தைரியம் எங்குப் போயிற்று? அவ்விந்திரியநிக்கிரஹ சக்திதான் எங்கே? அந்தச் சாந்தத்தன்மை யெவ்வாறாயினது? நமது குலத்தில் தொன்று தொட்டுவந்ததான அந்த பிரம்மசர்யம் எங்கே? உனது ஆசாரியர் செய்த உபதேசங்கள் எங்குப்போயின? அச்சாஸ்திரங்கள் எப்படியாயின? அவ்வைராக்கியக் கொள்கைகள் எங்கே? தவந்தனில் இருந்த அவ்வாவலானது எவ்வாறாயினது? அவ்வாலிபப்பருவத்து சிக்ஷைதான் எங்கே? அறிவானது பலவகையிலும் பயனற்றதாயிருக்கின்றது. தர்மசாஸ்திரப் பயிற்சி குணமேதுமில்லாதது. உபநயநம் முதலிய ஸம்ஸ்காரமெல்லாம் உபயோகமற்றது. குருமார்களின் உபதேசங்களால் உண்டான பகுத்தறிவால் உபகார

* பிரணயகோபம் = அன்பினாலுண்டாகும் கபடமான கோபம்.

மேது மிலது. படித்தறிந்ததனால் பிரயோஜனமொன்றுமில்லை. ஞானமும் காரணமற்றதாகிறது. எனெனில், உன்னைப் போன்றவரும் இங்ஙனம் ஆசைகளால் மிகவும் கலக்கப்பெற்று, தவறுதல்களாலும் துன்பப்படுத்தப் படுகின்றனரே! கரத்திலிருந்து நழுவிய ஜபமாலையை அயலார் அபஹரித்துக்கொண்டனரென்பதையும் நீ காணவில்லையே! ஓ! இஃதென்ன உணர்ச்சியில்லாத்தன்மை! இவ் வக்ஷமாலை அபஹரிக்கப்பட்டுப் போயினதே! மிகவும் இழிந்தவளான இவளால் இருதயமாவது இனி வலுவில் இழுக்கப்படாதபடி தடுப்பாயாக.'

இங்ஙனம் அவர் மொழிந்ததைக் கேட்டுச் சிறிது வெட்கங்கொண்டவரைப்போல், புண்டரீகன் மறுமொழியுரைத்தனர்:—'நண்ப! கபிஞ்ஜல! என்னை நீ யென்ன வேறுவிதமாய் நினைக்கின்றனையே? துர்விநீதையான இக்கன்னிகை எனது அக்ஷமாலையை அபஹரித்ததாகும் இவ்வபராதத்தை யான் ஸஹியேன்.' எனக் கூறி, சந்திரபிம்பம்போன்ற தனது வதனத்தைக் கள்ளக்கோபத்தினால் ஒருவாறு இரமணீயமாக்கிக்கொண்டு, எந்தனை நோக்கி மொழிந்தனர்:— 'ஓ! சபலத்தன்மையாளே! இஜ்ஜபமாலையைக் கொடாமல் இவ்விடம் விட்டு ஓர் அடிகூட எடுத்துவைக்கக்கூடாது.' என்கிற இம்மொழிகேட்டு, நான் எனது கண்டத்திலிருந்து முத்துமாலையைக் கழற்றி, 'ஸ்வாமி! ஜபமாலையைப் பெற்றுக்கொள்ளுங்கள்.' என்று என் முகத்திற்றுனே திருஷ்டியைப்பற்றவைத்து உணர்ச்சியேதுமில்லாத உள்ளத்துடன் நீட்டிய அவரது கரத்தில் அதை வைத்துவிட்டு, நீராடும் பொருட்டுப் பொய்கையில் இறங்கினேன். பின்பு கரையேறி, எதிரிடையாகத் திருப்பப்படும் ஆறுபோல், தோழிமார்களால் வலுவில் அழைத்துச் செல்லப்பட்டவளாய், அவரையே சிந்தித்துக்கொண்டு வெகுப் பிரயாஸைப்பட்டு, அன்னையுடன் எனது மாளிகைபோய்ச் சேர்ந்தேன். போனதும், கன்னிகைகளுக்கென்று ஏற்பட்டிருக்கும் அந்தப்புரத்தினுட் பிரவேசித்ததுமுதல், நான் அவரது பிரிவாற்றாமையினால் சோர்படைந்து,—அரண்மனையை அடைந்தேனா? அக்குளக்கரையிலேயே இருக்கின்றேனா? நான் தனியாயிருக்கின்றேனா? பலர் என்னைச் சூழ்ந்திருக்கின்றனரா? சும்மாவிருக்கின்றேனா? பேசுகிறேனா? விழித்துக்கொண்டிருக்

கின்றேனா? தயிலுறுகின்றேனா? எவை ஒழுங்கானவை? எவை ஒழுங்கற்றவை? என்கிற எல்லாவற்றையுமே யான் அறிந்தவளல்லள். மன்மதச் செயல் இன்னதென்று சற்றும் அறியாதவளாய்,—எங்கு செல்வேன்? என் செய்வேன்? எவரைக் கேட்பேன்? எதைக் காண்பேன்? என்ன சொல்வேன்? எவரிடம் கூறுவேன்? இதற்கென்ன பரிஹாரம்? என்கிற எதுவுமே எனக்குத் தெரியவில்லை. குமாரிகளின் அந்தப்புரத்து உப்பரிகையில் ஏறி, தோழிமாரையும் விட்டு விட்டு, ஸகலபரிஜனங்களையும் உள்ளே வராதபடி வாயிலிற்றானே நிறுத்தி, தொழிலனைத்தையும் ஒழித்துவிட்டு, நான் ஒருத்தியாகவே மணிமயமான சாளரத்தின்கண் முகம் வைத்தவளாய், அவர் அங்கிருப்பதால் அத்திசையைப் பூணணிந்ததைப் போலவும், பூர்ணசந்திரோதயத்தினால் அலங்கரிக்கப்பெற்றதைப் போலவும் காண்பதற்கு இன்பமானதெனக் கருதி, அதே திசையைப் பார்த்துக்கொண்டிருந்தேன்; அத்திக்கிலிருந்து வரும் வாயுவினிடமிருந்தும், வனத்தின் மலர்களது மணத்தினிடமிருந்தும், பறவைகளின் தொனியினிடமிருந்துங்கூட அவரது விருத்தாந்தத்தைக் கேழ்க்க விரும்பியவளாகவும், அவருக்கு இஷ்டமாயிருப்பதுபற்றித் தவத்தின் வருத்தத்தையும் விரும்புபவளானேன்; அவர் முனிவர்தன்மையைப் பெற்றிருப்பதால் அவ்வேஷம் நாகரிகமாயிருப்பதாகவும், அவரது செவியின் பரிச்சத்தினால் பாரிஜாதமலா மனோஹரமாயிருக்கின்றதெனவும், அவர் வஸிப்பதாலேயே தைவலோகம் இரமணியமானதென்றும் இவ்வாறு அவற்றுக்கு இவரது ஸம்பந்தத்தினாலேயே சிறப்பேற்ற விரும்பினேன்; வெகு தூரத்திலிருக்கும் கதிரவனுக்கு எதிராக மலரும் கமலம்போல் அவருக்கு எதிர்முகமாயிருந்தவளாய், அந்த ஜபமாலையை அங்ஙனமே கண்டத்தில் தரித்துக்கொண்டு, அவ்வாறே காதிலிட்ட பாரிஜாதப் பூங்கொத்தால் மயிர்ச்சிலிர்க்கையுண்டான ஓர் கபோலத்தையுடையவளாக அசையாமலிருந்தேன்.

பிறகு, எனது தாம்பூலத்தட்டேந்தும் தரளிகை யென்பவள் என்னுடனே நீராடப் போயிருந்து, பின்பு நெடுநேரம் சென்று திரும்பி வந்து, அவ்வித நிலைமையிலிருக்கும் என்னை நோக்கி மெதுவாக மொழிந்தனள் :—"இராஜகுமாரி! அச்சோத குளக்கரையில் நாம்

கண்ட அத்தாபஸகுமாரரிருவரில் ஒருவரான பாரிஜாதப் பூங்கொத்தை உமது காதில் சூட்டியவர், மற்றொரு முனிகுமாரரது பார்வையிலிருந்து தன்னை மறைத்துக்கொண்டு, நன்கு புஷ்பித்திருக்கும் கொடிப் புதருகளின் இடையிற்பதுங்கி, காலடியோசை கேளாது மிகமெதுவாக நடந்து வந்து, அங்கிருந்து வந்துகொண்டிருக்கும் என்னைப் பின்தொடர்ந்தவராய் உன்விஷயமாக இங்ஙனம் வினவினர்:—'பாலிகே! இக்கன்னிகை யாவள்? எவரது மகள்? எப்பெயர் கொண்டவள்? எங்குச் செல்லுகின்றனள்?' என்பதைக் கேட்டு யான் கூறினேன்:—'ஐயா! இவளோ, ஹம்ஸனென்னும் கந்தர்வாதிபதியினுடைய புதல்வியான மஹாச்வேதை யென்பவள்; கந்தர்வருக்கு வாஸஸ்தலமான ஹேமகூடகிரிக்குப் போகின்றனள்.' என்று நான் சொன்னதும், ஏதோ சிந்தித்துக்கொண்டு, முகூர்த்தகாலம் மௌனமாயிருந்து, கண்கொட்டாது நெடுநேரம் என்னை நோக்கி விட்டு, ஏதோ வேண்டுபவர்போல்என்னைப் பார்த்து மீளவும், 'நங்காய்! மங்களகரமான உனது இவ்வுருவம் பாலியப் பருவத்திலுங்கூட வஞ்சகத்தன்மையற்றதும், நிலையற்றநிலைமையொழிந்ததுமாகத் தோற்றுகின்றது; நான் உன்னை வேண்டிக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறேன்; அதன்படி நீ செய்வாயா?' என வினவினர். பின்னர், வணக்கத்துடன் கரங்களைக் கூப்பி, ஆதராதிசயத்தை விளக்கிக்காட்டுபவளாய் இவ்வாறுரைக்கலானேன்:—'ஸ்வாமி! தாம் இவ்வண்ணமேன் கூறுகிறீர்கள்? நான் எத்தன்மையள்? மூவுலகத்தோராலும் ஆராதிக்கத் தகுந்த தம்மைப்போன்ற மேன்மக்கள், புண்ணியப்பேறு பெறாத எம்மைப்போன்றவரிடத்தில் மாசுகளனைத்தையும் மறுக்கவல்ல தமது திருஷ்டியையும் செலுத்தக்கூடாதவராயிருக்க, அத்தகையவர் கட்டளையிடுவதெங்ஙனம்? ஆகையால், செய்யவேண்டுவதைப்பற்றித் தடையின்றிக் கட்டளையிட்டு, இந்த ஜனத்தையும் அனுக்கிரஹிப்பீர்களாக.' என்று இவ்வாறு மிகவும் அன்புடன் யான் பகர்ந்ததும், ஸகியைப்போலவும், பேருபகாரம் செய்பவளைப்போலவும், உயிரையளிப்பவளைப் போலவும் என்னைத் தனது பார்வையினால் மகிழ்வடையச்செய்து, அருகிலிருந்த பச்சிலை மரத்திலிருந்து தளிர்களைப் பறித்து, ஓர் சிலையின்மீது

அதன் சாற்றைப் பிழிந்து, மரவுரிமயமான தனதுத்தரீயத்தின் ஒரு மூலையிற் சிறு துண்டொன்றைக் கிழித்து, அதனில் அந்தப் ச்சிலைச் சாற்றில் நனைத்த தன் கரத்தின் நகமுனையினால் வரைந்து, 'இக்கடிதத்தை நீ மறைத்து எடுத்துப்போய், அக்கன்னிகைத் தனித்திருக்கும் ஸமயத்தில் அவளிடம் இதைக் கொடுக்கவேண்டும்.' என்றுரைத்து என்னிடம் அப்பத்திரிகையை அளித்தனர்." என மொழிந்துகொண்டே அவள், தாம்பூலக் கரண்டத்திலிருந்து இழுத்து அக்கடிதத்தைக் காட்டினாள். நானும், அம்மரவுரிப்பட்டையை அவளது கையிலிருந்து வாங்கி, அதில் வடமொழியில் ஆர்யையெனப் படும் விருத்தத்தில் வரைந்திருந்த செய்யுளொன்றைப் * பார்த்தேன்; அதன் பொருள் பின்வருமாறு:—

'முத்துமாலைபோல் மிக வெண்ணிறம் பொருந்திய பங்கயத் தண்டினால் மயக்கப்பெற்ற மானஸப் பொய்கையிலிருக்கும் அன்னப்பறவையானது, திசைகாட்டித் தொலைதூரம் இழுக்கப்படுவது போல், தாமரைத்தண்டுபோல் தவளமான தனது முத்துமாலையினால் மயங்கச்செய்து, நீ ஆசைகாட்டி எந்தனிடம் நெடுந்தூரம் மன்மதனை மேலோங்கச் செய்தனையே.' என்று.

இதைக் கண்டு என் மனத்தினில் விகாரங்கள் மேன்மேலும் விருத்தியடைந்தன; வெள்ளத்தினால் ஆறுபோல் மிகவும் இவ்விகாரங்களால் கலக்கத்தையடைந்தேன். அப்பத்திரிகையை இரண்டாமுறைப் பார்ப்பதினால் மூவுலகமாகும் இராஜ்யத்திற் பட்டாபிஷேகம் செய்யப்பட்டவளைப்போல் எண்ணியவளாய், கபோலங்களிலும், முன்னெற்றிமயிர்க் குழற்சிகளிலும் மிகவும் ஆவலுடன் அப்பத்திரிகையை யெடுத்துப் பரிசித்துக்கொண்டேன்; பரிஜனங்களுக்கும் யஜமானருக்குமுள்ள ஸம்பந்தத்தை மாறுபாடடைந்திருப்பது போல் காட்டுப்பவளாய், 'தரளிகே! நீ சொல்; அவர் எவ்வாறிருக்க நீ கண்டாய்? அவர் உன்னிடம் ஏதேது கூறலானார்? அங்கு எவ்வளவு நேரம் நீ தங்கியிருந்தனை? நம்மை எவ்வளவு தூரம் அவர் பின்தொடர்ந்து வந்தார்?' என்று பலமுறை வினவினேன். ஊழியர் அனைவரையும் உட்புகவிடாமல் தகைந்துவிட்டு, அவளுடன்கூட

* 'தூரம் முக்தாலதயா பிஸஸிதயா விப்ரலோப்யமானோ மே. ஹம்ஸ இவ தர்சிதாசோ மானஸஜன்மா த்வயா நீத:'.

அதே உப்பரிகையின்மேல் இச்செய்தியையே செப்பிக்கொண்டு பகற்பொழுதைப் போக்கினேன்.

பிறகு சூரியபிம்பமானது சென்னிறம் பொருந்தியதாய் வானத்தின் ஓரந்தனிற் சாய்ந்து போக, வண்டுகள் உட்புகுந்திருக்கையில் தானே மூய்ந்துகொள்ளும் செந்தாமரை மலர்களின் திரள்கள், கதிரவனது பிரிவாற்றாமையினாலுண்டான மூர்ச்சையினால் இருளடைந்த இருதயத்தையுடையவைபோல் (கண்களைப்போல்) மூய்ந்துகொள்ள முயல, அக்குடையேந்தும் மடந்தை வந்து, "இராஜகுமாரி! அவ்விரு முனிகுமாரரில் ஒருவர் வந்து வாயிலில் நிற்கின்றார்; 'ஜபமாலையைக் கேழ்பதற்கு வந்தேன்.' என்றும் கூறுகிறார்." என்றனள்.

நானோ, முனிகுமாரனென்னும் பெயரை யெடுத்தமாத்திரத்திலேயே இருக்குமிடத்தைவிட்டுப் பெயராமலிருந்தும், என்னை வாயிற்படியண்டைச் சென்றவளைப்போல் எண்ணலானேன்; அவர்தான் வந்திருக்கவேண்டுமென நினைத்து, கஞ்சுகிகளில் ஒருவனை யழைத்து, 'போய் அவரை யழைத்துவா.' என்றுத்தரவு செய்து அனுப்பினேன். பின்புச் சற்றுநேரத்திற்கெல்லாம், மன்மதனுக்கு வஸந்தகாலம் போலவும், வஸந்த காலத்திற்குத் தென்றற்காற்று போலவும் அவருக்கு அனுரூபஸகாவான கபிஞ்ஜலன் என்னும் இருஷிகுமாரர் வந்துகொண்டிருக்கக் கண்டேன். அருகில் வந்ததும், அவருருவம் ஏதோ குழப்பமுற்றதாகவும், சூன்னியமாகவும் இருப்பதுபோல் பார்க்கப்பட்டது. எழுந்து வந்தனஞ் செய்து, நானே ஆதரவுடன் ஆஸனங்கொண்டளித்தேன். அவர் அதில் அமர்ந்ததும், விரும்பாமலிருப்பினும் வலுவில் அவரது சரணங்களை யலம்பி, தளிர்போன்ற எனதுத்தரீயத்தலைப்பினால் அவற்றைத் துடைத்துவிட்டு, மேல்விரிவேதுமில்லாத வெறுந்தரையிற்றானே அவரது ஸமீபத்திலுட்கார்ந்தேன். பின்னர் முகூர்த்தநேரம் சும்மாவிருந்து, அவர் ஏதோசொல்ல விரும்பியவர்போல், எனதருகில் உட்கார்ந்திருந்த அந்தத் தரளிகையின்பால் தன் கண்ணை யெறிந்தனர். நானும் திருஷ்டியினாலேயே அவ்வபிப்பிராயமறிந்து, 'ஸ்வாமி! இவள் எனதுடலினும் வேறுபடாதவள்; சங்கையின்றி தாம் செப்புவீர்களாக.' என்றுரைத்தேன்.

இங்ஙனம் யான் மொழிந்ததும், கபிஞ்ஜலன் பின்வருமாறு மறுமொழி கூறலானார்:—"இராஜபுத்திரி! யான் என்னென்று சொல்வேன்! வெட்கத்தினால் சொல்லவேண்டும் விஷயத்தில் எனது நாவெழும்பவுமில்லை. காய் கிழங்குகளைப் புசித்து, சாந்தமாக வனங்களில் வஸித்துவரும் முனிஜனமெங்கே? சாந்தத்தன்மையற்ற ஜனங்களுக்குற்ற சிற்றின்பவாழ்க்கையிலிருக்கும் விருப்பங்களால் கலக்கமுற்று பெரும்பாலும் இராகத்தில் மூழ்கிய இப்பிரபஞ்சமெங்கே? இவையனைத்துமே யுக்தமல்ல. தைவம் எவ்வாறு செய்ய முயன்றது பார்த்தையோ! ஈசன் மிகவும் எளிதாகவே ஜனத்தைப் பரிஹாஸஸத்திற்குப் பாத்திரமாகச் செய்து விடுகிறானல்லவா? நான் அறியேன்; இஃது இம்மரவுரிகளுக்குரியதோ? இல்லையேல், சடைமுடிகளுக்கு உசிதமானதோ? அல்லது, தவத்திற்குத் தகுந்ததோ? அன்றேல், தர்மோபதேசங்களுக்கு அங்கமோ? தைவத்தின் ஓர் வகையான புதிய பரிஹாஸமிது. இதுவோ மிகவும் அவசியம் சொல்லித்தீரவேண்டிய விஷயம். வேறு வகையான உபாயமொன்றையும் காணேன். பரிஹாரம் வேறேதும் தோன்றவில்லை. வேறு கதியொன்றும் கிடையாது. சொல்லாமலிருப்பின் பெருந்தீங்கு வந்து ஸம்பவிக்கும். பிராணனைப் பரிகொடுத்தேனும் மித்திரனது உயிரைக் காக்கவேண்டுமெனக் கருதியே கூறுகிறேன். வெகு சினங்காட்டி நான் உமது முன்னிலையிற்றானே அவனை அவ்வாறு கடுமையாகப்பேசி யிருக்கின்றேன். அங்ஙனம் மொழிந்து, வெகு கோபத்துடன் அவனை விட்டுப்பிரிந்து, பூப்பறிப்பதையும் விட்டுவிட்டு, அவ்விடத்திலிருந்து வேறிடஞ் சென்றேன். நீ அவ்விடம் விட்டுப் போனதும், முகூர்த்தநேரங் கழித்து, 'இப்பொழுது இவன் தனித்து நின்று யாது செய்கிறானோ?' எனச் சங்கையுண்டானவனாய், திரும்பி மரக்கிளைகளில் தேஹத்தை மறைத்துக்கொண்டு அப்பிரதேசத்தைப் பார்த்தேன். அங்கு நான் அவனை அப்பொழுது காணமற்போகவே, மனதில் இங்ஙனம் எண்ணலானேன்:—'மன்மதனால் பரவசமாக்கப்பெற்ற மனப்போக்கையுடையவனாய், இவன் அவளையே பின்தொடர்ந்துப் போயிருப்பானோ? அல்லது, அவள் சென்றவிட்டதும், உணர்ச்சியுண்டாய் வெட்கப்பட்டவனாக, ஒருகால் என் கண்முன்னிலையில் வரமாட்டாதவனாயிருக்கின்றானோ? இல்லையேல்,

கோபித்துக்கொண்டவனாய், என்னிடமிருந்து விலகிப்போய் விட்டானோ? அன்றேல், என்னையே தேடிக்கொண்டு இவ்விடம் விட்டு வேறிடம் போய்ச்சேர்ந்தானோ?" என்று இப்படிப் பலவாறாகச் சிந்தித்துக்கொண்டே சிறிது நேரமிருந்தேன். பிறந்ததுமுதல் நொடிப்போழுதேனும் என்றைக்கும் நேரிடாத அவனது அம்மறைவினால் துயரமுற்றவனாய் மீண்டும் சிந்திக்கலானேன் :—'அவன் ஒருகால் தைரியத்தடுமாற்றதினால் வெட்கமுற்று, ஏதேனும் அனிஷ்டமான காரியத்தையும் செய்துவிடுவன்; இலஜ்ஜையினால் செய்யப்படாதது ஏதுமிலது; ஆதலால் இவனைத் தனியாக விட்டிருப்பது யுக்தமல்ல.' எனக்கருதி, ஆவலுடன் தேடமுயன்றேன். தேடிப்போகையில், அவனை நான் எவ்வளவுக்கெவ்வளவுக் காணவில்லையோ, அவ்வளவுக்கவ்வளவு நேசப்பான்மையினால் பயந்த என் சித்தத்தில் அந்தந்த அமங்களங்களையெல்லாம் எண்ணியவனாய், செடிகொடிகளின் புதர்களிலும், சந்தனமரப் பந்திகளிலுள்ள கொடிவீடுகளிலும், குளக்கரைகளிலும் பார்த்துக்கொண்டு, வெகு கூற்மையாக இங்குமங்குமாய் அலைபாயும் திருஷ்டியுடன் வெகு நேரம்அலைந்து திரிந்தேன். அதன்பின்னர், ஓர் குளத்தின் அருகிலிருப்பதும், மலர்களும் வண்டுகளும் குயில்களும் மயில்களும் இடைவிடாது அடர்ந்திருப்பதால் அவ்வவற்றின் மயமாகவே இருப்பதுபோல் தோற்றுவதும், வஸந்தருதுவுக்குப் பிறப்பிடமாயிருப்பதும், மிக மனோஹரமானதுமான ஓர் இலதாமண்டபத்தில் அவன் மன்மதாவேசத்தை அபரிமிதமாய் அடைந்து, முன்னிருந்த வடிவம் இதுதானோவென்று அறியக்கூடாத நிலைமையிலிருக்கக் கண்டேன். உடலின் தொழில்கள் யாவும் ஒழிந்திருப்பதால், அவன் சித்திரத்தில்எழுதப்பட்டவன் போலவும், செதுக்கப்பெற்றவன்பொலவும், நிலைநிருத்தப்பெற்றவன்போலவும், துயிலுறுகின்றவன்போலவும், யோகாப்பியாஸத்திலிருப்பவன்போலவும் தோற்றினான்; அசைவற்றிருந்தும், தனது நடக்கையிலிருந்து அவன் சலித்தவனானான் ; சபித்துவிடப்போகிறானேயென்று பயந்தவனைப்போல் தரிசனந்தராமலே மன்மதனால் மிகவும் அவன் தபிக்கப்படுபவனாயிருந்தான்; புலன்கள் யாவும் சலனமற்றிருந்ததால், அவை இருதயத்தில் இருக்கும் இவனது காதலியைக் காண்பதற்கு உட்புகுந்திருப்பவைபோலவும், ஸஹிக்கக்கூடாத சரீரத்தின் கடுஞ்சூட்டினிட

யிருந்து பயந்து மறைந்திருக்கின்றவை போலவும், மனக்கலக்கத்தினல் கோபித்து சரீரத்திலிருந்து விலகிப்போயிருப்பவை போலவும் இவனது சரீரத்தைச் சூன்னியமாகச் செய்திருந்தன; இமைகளசையாது மூடியிருக்கும் அவனது நேத்திரங்களிலிருந்து மாரிபோல் கண்ணீர் சொரிந்துகொண்டிருந்தது; பரிமளத்தைப் பானஞ்செய்யும் மதுகரங்களுடன் கூடிய செண்பக மொட்டுகள், மன்மதனல் பழுக்கக் காய்ச்சப்பெற்று ஜொலிப்பவையும் சிறிது தூமத்துடன் கூடியவையுமான அம்புகள்போல் அவன்மீது விழுந்துகொண்டிருந்தன; விடியற்காலத்து சந்திரன்போல் அவன் வெளிறியிருந்தான்; கோடைகாலத்து கங்காபிரவாஹம்போல் அவனுடல் மிகவும் மெலிந்திருந்தது; அழலை யுள்ளடக்கிய சந்தனமரக்கிளைபோல் அவன் வாடிவதங்கித் தவித்தான்; அவன் எவனே வேற்று மனிதனைப் போலவும், அதுகாறும் காணப்படாதவனைப் போலவும், வேறு ஜன்மத்தைப்பெற்றிருப்பவனைப்போலவும் தோற்றினன்.

அந்நிலைமையிலிருக்கும் அவனைக் கண்கொட்டாது வெகுநேரம் உற்று நோக்கி மிகவும் துயரமுற்றவனய், இருதயம் படபடத்துத் துடிக்கப் பின்வருமாறு சிந்திக்கலானேன் —‘ இம்மன்மததாபத்தின் வேகமானது, இப்படியும் மிக்க ஸஹிக்கக்கூடாததாகவாயிருக்கின்றது! இந்த மன்மதனல் ஒரு நொடிப்பொழுதில் இவ்வாறு பரிஹரிக்கமுடியாத புதிதான அவஸ்தையை இவன் அடைந்துவிட்டானே! இத்தகைய ஞானராசியெல்லாம் ஒருக்ஷணத்தில் இவ்வண்ணம் வீணகவும் ஆய்விடுமோ! அந்தோ! இது வெகு விந்தை! இவன் சிறுகுழந்தைப்பருவம் முதற்கொண்டு அப்படி வெகு தீரத்தன்மையனகவும், ஒழுங்கு தவருதவனகவும், நானும் வேறு முனிகுமாருங்கூட கண்டுகளிக்கக்கூடிய நடத்தையையுடையவனகவும் இருந்தானே! இப்பொழுது எவனே வேருருவன்போல் இவன் ஞானத்தைப் பாழாக்கி, தவத்தின் பெருமையைப்பாராது, கம்பீரத்தன்மையை வேருடன் அழித்து மன்மதனல் மூடனக்கப்பட்டானே! எவ்விதத்திலும் வாலிபப்பருவத்தில் ஒழுக்கக்கேடு நேரிடாமலிருப்பது மிகவும் அரிது.’ என்று இவ்வண்ணம் எண்ணிக்கொண்டு, அருகிற்போய், அதே பாறையில் ஒரு பக்கத்தில் உட்கார்ந்து, அவனது தோள்களில் என் கரத்தைவைத்து, கண்களை மூடிக்கொண்டு

அந்நிலைமையிலிருக்கும் அவனை 'எனது நண்பனே! புண்டரீக! இஃதென்ன! நீ சொல்லப்பா.' என வினவினேன். பிறகு, வெகு நேரம்மூடியிருந்ததால் ஒட்டிக்கொண்ட இமைகளையுடையதுபோன்றதும், இடைவிடாது புலம்புவதால் செவ்வெனச்சிவந்ததும், அளவற்ற கண்ணீர்ப் பெருக்கினல் நன்கு நனைந்ததும், வீக்கங்கொண்டிருப்பது போன்றதும், வேதனையுடன் கூடியது போலிருப்பதும், தூய்மையான துகில்கொண்டு மறைக்கப்பெற்ற செந்தாமரையின் சாயலையுடையதுமான நேத்த்திரத்தை விழித்து, மிக்க மழுக்கங்கொண்ட திருஷ்டியினல் என்னை வெகுநேரம் பார்த்துவிட்டு, பெருமூச்செறிந்து, வெட்கத்தினல் தழுதழுத்து, எழுத்துக்களை நன்கு விளங்கச் சொல்லமாட்டாது, 'என் தோழனே! கபிஞ்ஜல! விருத்தாந்தத்தை அறிந்திருந்தும் என்னை யேன் வினவுகின்றனை?' என்று வெகு கஷ்டத்துடன் மிக மெதுவாகக் கூறினன். நானும் அதுகேட்டு, 'அவ்வவஸ்தையினுற்றுனே இவன் இவ்விகாரத்தினின்றும் விலக்கக்கூடாதவனுயிருக்கின்றுன்; என்றுலும், தீயவழியிற்செல்லும் தோழனுனவன் அவனது மித்திரனல் சக்திக்கியன்றமட்டும் எவ்வகையிலும் அவ்வழியிற் செல்லவிடாது மறுக்கப்படவேண்டும்.' என்று மனத்தினில் தீர்மானித்துக்கொண்டு மீண்டும் மொழியலானேன் :—

'எனதன்பார்ந்த நண்ப! புண்டரீக! இஃதென்றனுக்கு நன்றுகத் தெரிந்ததே; ஆகிலும் இதை யொன்றையே யான் வினவுகின்றேன். இப்பொழுதுநீ ஆரம்பித்திருக்கும் இச்செயலானது உன் ஆசிரியோரால் உபதேசிக்கப்பெற்றதோ? இல்லை, தர்மசாஸ்திரங்களிற் படித்திருக்கின்றனையோ? அல்லது, தவங்களின் வேறோர் புதிதான வகையோ? அன்றேல், இது விண்ணுலகம் எகுவதற்கு வழியோ? இல்லையேல், இது ஏதேனும் விரதத்தின் இரஹஸ்யமோ? அல்லது இஃதோர் முக்திபெறும் யுக்தியோ? அன்றேல், அன்னியமான ஓர் நியமத்தின் மாதிரியோ? நீ எங்ஙனம் இதை மனத்தினுலுஞ் சிந்திக்கவுங்கூடும்? பின்னர் இதைக் கூறுவது அல்லது காண்பது என்பவை முற்றிலும் உற்றதல்லவென்பதில் ஐயமுமுளதோ? அறிவுள்ளவனுயிருந்தும், இப்பாழும் மன்மதன் உன்னைப் பரிஹாஸத்திற்குப் பாத்திரமாகச் செய்துவிடுகிறுனே என்று நீ யேன் அறியவில்லையோ? மூடனல்லவோ மன்மதனல் துன்பப்படுத்தப்படுவான்?

ஸாதுக்களால் இகழப்பெற்றதும், ஸாதாரணஜனங்களால் புகழப்பெற்றதுமான இவ்வித விஷயங்களிற் பேரின்பமுண்டென்று உன்றனுக்கு இஃதென்ன வீணாசை? கேடுகளை விளைவிப்பவையான சிற்றின்பங்களை அனுபவிப்பது ஸுகமென்று எவ்வறிவீனன் கருதுகின்றானோ, அவன் தர்மமாகுமென்றெண்ணி விஷக்கொடிவனத்தை நீரூற்றி வளர்ப்பான்; கருங்குவளை மலர்களாலாக்கிய மாலையென்றெண்ணி வாளை யாலிங்கனஞ் செய்வான்; காரகிற் கட்டையின் தூமக்கொடியென்று கிருஷ்ணஸர்ப்பத்தைக் கட்டிக்கொள்வான்; மாணிக்கமென்றெண்ணி நன்கு மினுங்கும் கனலைப் பரிசிப்பான். விஷயங்களனைத்தின் உண்மையையும் உள்ளபடி நீ அறிந்திருந்தும், மின்மினியினிடமிருக்கும் ஒளிபோல் எதற்கென்று இஞ்ஞானத்தை வீரியமற்றதாக வீணில் வஹிக்கின்றனை? ஏனெனில், ஏராளமாய் இராஜஸ்ஸுபடிந்து * கலங்கியவையும், வரம்புமீறிச் செல்லுபவையுமான‡ வெள்ளங்களைப்போலப் புலன்களையும், குழப்பமுற்ற மனதையும் நீ கட்டியாளமாட்டாதவனாய் போனபடியெல்லாம் விட்டனையல்லவா? எவனடா இம்மன்மதனென்பவன்! நீ தைரியத்தைக் கைப்பற்றியவனாய் இழிதொழில் புரியும் இவனை வெருட்டியோட்டுவாயாக.' என்று இங்ஙனம் மொழிந்துவரும் எனது பேச்சை மறுத்து, இமைமயிர்களின் இடைகள் தோறும் உதிரும் கண்ணீர்த்தாரையைத் துடைத்துவிட்டு, தனது கரத்தினால் என் கையைப் பற்றிக்கொண்டு இவ்வாறு செப்பலானான்:—'நேசனே! விரிவாகச் சொல்வதில் யாது பயன்? எவ்வகையிலும் நீ ஸுகமாயிருக்கின்றனை. ஸர்ப்பத்தினது விஷவேகம்போல் மிகவும் விஷமமான இவ்வனங்கனது பாணங்களின் வாயில் நீ விழுந்தனையில்லை. பிறருக்கு உபதேசிப்பது எளிது. எவனுக்கு இந்திரியங்கள் இருக்கின்றனவோ, மனதேனும் உளதோ, எவன் பார்க்கின்றானோ, அல்லது செவியுறுகின்றானோ, கூறுவனவற்றைக் கிரஹிக்கின்றானோ, எவன் இது நன்மை இது தீமையென்று பகுத்தறிய வல்லவனோ, அவனல்லவோ உபதேசத்திற்கு உரியவன்? எனக்கே, இவை யனைத்துமே நெடுந்தூரம் கடந்துபோயின. பிரயத்தினமேதுமின்றித் தரிக்கப்பெற்று

* இராஜஸ்ஸு=இரஜோகுணம், புழுதி.

‡ வரம்புமீறுதல்=ஒழுக்கத்தவறு, கரைபுரண்டோடுதல்.

பிராணன் மாத்திரம் போகாமல் எவ்வகையிலோ தங்கியிருக்கின்றது. உபதேசிக்கும் காலமோ வெகுதூரம் சென்று விட்டது. தைரியத்தைத் தாங்கிநிற்கும் வேளையும் தாண்டிப் போயினது. பகுத்தறிவுக்கேற்ற ஸமயமோ பறந்தோடியது. ஞானத்தை நிலைநிறுத்தும் நேரமும் அதிக்கிரமித்து விட்டது. நீயன்றி வேறு எவர்தான் இந்தஸமயத்தில் எனக்கு உபதேசிக்கப் போகின்றனர்? எவர் வரம்புகடந்துச் செல்லவிடாமலேனும் விலக்கப்போகின்றனர்? வேறு எவரது பேச்சுப்படி நானுந்தான் நடக்கப்போகிறேன்? உலகத்தில் உனக்கீடான வேறு உறவினரும் என்றனுக்கு உளரோ? என் செய்வேன்? நான் என்னைக் கட்டுப்படுத்த மாட்டாதவனாயிருக்கின்றேனே. இந்தக்ஷணத்தில் இக்கஷ்டநிலைமையை நீயும் இதோ பார்க்கின்றனையே. ஆகையால் இப்பொழுது உபதேசகாலம் ஒழிந்துப்போயிற்று. நான் பிழைத்திருக்குமளவிலும் இந்த மன்மதஸந்தாபத்திற்குப் பரிஹாரம் ஏதேனும் செய்துகொள்ள விரும்புகிறேன். எனது அங்கங்கள் அவிந்துபோகின்றனபோலவும், இருதயம் கொதிப்பிக்கப்படுவதுபோலவும், திருஷ்டி தஹிக்கப்படுவதுபோலவும், சரீரம் எரிகின்றதுபோலவும் நான் உணருகிறேன். இந்த ஸமயத்திற்குற்றது எதுவோ அதை நீ செய்வாயாக.' என மொழிந்துவிட்டு மௌனமாயிருந்தனன்.

இவ்வாறு கூறியும் மீண்டும் நான் இவனை அடிக்கடித் தெளியச்செய்ய முயன்றேன். சாஸ்திரோபதேசங்களால் தூய்மையானவையும், திருஷ்டாந்தங்களுடன் கூடியவையும், இதிஹாஸங்களைச் சார்ந்தவையுமான சொற்களால் நேசப்பான்மையுடனும் பேராவலுடனும் வற்புறுத்திக் கூறியும் அவன் அவற்றைச் செவியுறுமற்போகவே, அக்காலை யான் இவ்வாறு சிந்திக்சலானேன்:—'இவன் மிகவும் மிதமிஞ்சிப் போயினன்; இந்நிலைமையிலிருந்து இவனை மீட்பது முற்றிலும் முடியாதவிஷயம். இப்பொழுது உபதேசமொழிகளெல்லாம் உபயோகமற்றவையே. ஆகையால் உயிரைக் காப்பதற்குரிய முயற்சியையேனும் யான் செய்கின்றேன்.' எனத் தீர்மானித்து, அடிக்கடி வெவ்வேறு தாமரையிலைச் சயனத்தை யேற்படுத்தியும், அடிக்கொருமுறைச் சந்தனப்பூச்சு பூசியும், பலமுறை வியர்வையுண்டாகாவண்ணம் பரிஹாரம் பண்ணியும், வாழையிலையெடுத்து இடைவி

டாது வீசிக்கொண்டும் இருக்கையில் எனதுள்ளத்தில் தோன்றியதாவது :—' மஹாமஹிமைபொருந்திய மன்மதனுக்கு அஸாத்தியமென்பதேதுமிலது. மான்போல் இயற்கையாகவே உலகவாழ்க்கையேதுமறியாது, நியதமாகவே வனவாஸஞ்செய்யும் இந்த இருஷிஜனமெங்கே! பற்பலவிலாஸரஸங்களின் இராசியெனத்தகும் கந்தர்வாதிபதியின் புதல்வியான மஹாச்வேதை யெங்கே! எவ்வகையினும் இவ்வனங்கனுல் இணைக்கக்கூடாததும், செய்யமுடியாதது அல்லது செய்யத்தகாததும், ஸ்வாதீனமாக்கப்படவியலாததும் இவ்வுலகத்தில் ஒன்றுமில்லை. பொருந்தக்கூடாத விஷயங்களிலும் அலக்ஷியமாய் பிரவிருத்திக்கின்ருன். எவராலும் இவன் எதிர்த்துத் தடுக்கக் கூடியவனல்லன். அசேதனங்களையும் சேர்க்கவல்ல இம் மன்மதனுக்குச் சேதனரான மற்றவரெவ்வளவு? இவன் விரும்பினுனுகில், ஆம்பலும் ஆதித்தனது கதிரொளிகளில் ஆசையுள்ளதாகும்; தாமரையும் தாரகாபதியினிடமிருக்கும் பகைமையைப் பரிஹரித்துவிடும்; இரவுகூட பகலுடன் ஒன்று சேரும்; நிலவும் இருளைத் தொடர்ந்து நிற்கும். இவனுக்கு வேறெதுதான் ஸாதிக்கமுடியாதது? இவனுல், மிகவும் ஆழமான கம்பீரத்தன்மைக்குக் கடலெனத்தகும் இத்தகையபுருஷனும் திருணத்தைப்போல் வெகு இலகுவானத்தன்மையை யடைவிக்கப்பெற்ருனல்லவா? அந்த அருந்தவமெங்கே! இந்த அவஸ்தையெங்கே! பலவகையிலும் பரிஹரிக்கக் கூடாத ஆபத்து வந்து நேர்ந்தது. இப்பொழுது செய்யத்தகுந்தது யாது? நடக்கவேண்டிய விதம் என்ன? எத்திசைக்குப் போகலாம்? கதி யென்ன? உபாயம் யாது? ஸஹாயம் யாவர்? செய்யத்தகுந்த வகைகள் எவை? யுக்தி யென்ன? புகலிடம் யாது? எதைக்கொண்டு இவனை உயிர்பிழைக்கச் செய்வேன்? எந்த ஸாமர்த்தியத்தினுல், எவ்வித யுக்தியினுல், எந்தெந்த வகையினுல், எந்த ஆதாரத்தினுல், எந்த அறிவால், எத்தகைய ஆற்றுதலால் இவன் ஜீவித்து எழுந்திருப்பான்?' என இவையும், இன்னும் வெவ்வேறு எண்ணங்களும் துயரமுற்றநெஞ்சனுன என்றனுக்குண்டாயின. மீளவும் ஆலோசித்தேன் :—' இங்ஙனம் பலவாருக எண்ணப்படும் பயனற்ற இச் சிந்தை யெதற்கு? நல்லதான அல்லது பொல்லாததான எந்த உபாயத்தினுலாகிலும் இவனுடைய பிராணனைக் காக்க

வேண்டும். அப்படியானுல் அவளுடன் சேர்த்தல் ஒன்றைத் தவிர்த்து, இவனை உயிர்பிழைக்கச் செய்யும் வழி வேறொன்று மிலது. பாலத்தன்மையினுலும், தைரியமின்மையாலும், தவத்திற்குத் தகாததும் அநுசிதமானதுமான மன்மதவிகாரச்சுறியானது தன்னைப் பரிஹஸிப்பதற்கு இடமாகுமென நினைத்து—நிச்சயமாய் இவனது பிராணன் இன்னும் ஒரே மூச்சில் தங்கியிருந்தும்—இவன் தானே சென்று அவளிடமிருந்து தனது மனோரதத்தைப் பூர்த்திசெய்து கொள்ளக் கூடியவனல்லன். இவனது மதனவிகாரமோ, காலவிளம்பத்தைச் சற்றும் ஸஹிப்பதாயில்லை. எப்பொழுதும் [illegible]ம் இழிதொழில் புரிந்தேனும் தோழரது உயிரைக் காப்பது கடமையாமெனச் சான்றோர் கருதுகின்றனர். ஆனதுபற்றி மிக இகழக்கூடிய அடாத செயலாகவிருப்பினும், இப்பொழுது எமக்கு இஃது அவசியம் செய்துதீரவேண்டியதாய் வந்து நேர்ந்தது. [illegible]றெ[illegible]தான் செய்ய வியலும்? வேறு கதிதான் ஏது? எப்படியும் அவளிருக்குமிடம் சென்று இவனது இந்நிலைமையைக் கூறுகிறேன்.' என்று சிந்தித்துக்கொண்டு, 'ஒருவேளை என்னைத் தகாதசெயலைச் செய்ய முயன்றதாக அறிந்து, வெட்கங்கொண்டு மறுத்துவிடுவான்.' என்று நினைத்து, அவனிடம் சொல்லாமலே, ஏதோ தந்திரமாக எழுந்து அவ்விடமிருந்து இதோ வந்து சேர்ந்தேன். ஆதலால் இந்நிலைமையில், இந்த ஸந்தர்ப்பத்திற்குரியது எதுவோ, இத்தகைய அன்பிற்கு எது அநுரூபமானதோ, எமது வரவுக்கு எது ஏற்றதாகுமோ, உனக்கும் யாது உசிதமானதோ அவ்வாறு செய்வதில் நீதான் அதிகாரம் பெற்றவளாகிருய்." என்று மொழிந்துவிட்டு, 'இவள் என்ன சொல்லப்போகிருள்?' என்று எனது முகத்திற்ருனே திருஷ்டியை வைத்தவாறு சும்மாவிருந்தார்.

நானும் அதுகேட்டு, ஸுகமென்னும் அமுதநீரோடையில் மூழ்கியவள்போல், மேலான ஆனந்தத்தையடைந்து, ஸகல மனோரதங்களுடையவும் உச்சியில் ஏறியவளாய், அக்காலை நாணத்தினுற் சிறிது வதனத்தை வணக்கிக்கொண்டதால் கபோலபாரிசத்தைப் பரிசிக்காது பெருகிவிழும் பேரின்பக்கண்ணீரால் விசேஷமான ஆனந்தத்தை விளக்கிக்காட்டுபவளாக அந்த க்ஷணத்தில் இ-

னம் ஆலோசிக்கலானேன் :—'தைவாதீனமாய் இந்த அனங்கனானவன் என்னைப்போல் அவனையும் தொடர்ந்து நிற்கின்றானே. இவன் ஸந்தாபத்தைத் தந்தாலும் வேறோர் அம்சத்தினால் உண்மையாய் என்றனுக்கு அநுகூலமாயிருத்தலையுங் காட்டிவிட்டான். அந்தஇருஷிகுமாரருடைய நிலைமை நிச்சயமாகவே அத்தகையதாயிருக்குமாயின், அப்பொழுது இவ்வனங்கனால் எவ்வுதவிதான் எனக்குச் செய்யப்படவில்லை? வேறெவர்தான் இவனுக்கு ஈடான பந்து? மிக்க சாந்தஸ்வபாவமான கபிஞ்ஜலனுடைய இந்த முகத்திலிருந்துங்கூட கனவிலேனும் வீண்வார்த்தை யென்பதும் வெளிவருமோ? இவ்வண்ணமிருக்கையில் யான் என்னென்று நம்பவேண்டும்? அவருக்கு முன்னிலையில் மொழியவேண்டுவதுதான் யாது?' என்று இங்ஙனம் யோசிக்கையிற்றானே, வெகு விரைவாக வாயிற்காப்பவள் என்னிடம் ஓடிவந்து, 'இராஜகுமாரி! நீர் சற்று ஸௌகவீனமாயிருப்பதாய் பரிஜனங்களின் வாயிலாக அறிந்து, மஹாராணியார் இதோ வந்துவிட்டார்கள்.' எனக் கூறினள். அதைக் கேட்டதும் கபிஞ்ஜலன், ஜனக்கூட்டத்தின் நெருக்கத்திற்கு அஞ்சி, துரிதமாய் எழுந்து, 'இராஜபுத்திரி! இப்பொழுது நெடுநேரமாய்விட்டது; மூவுலகங்களுக்கும் சூடாமணிபோன்ற சூரியபகவானும் இதோ அஸ்தமிக்கின்றான்; ஆகையால் நான் போகின்றேன். ஸர்வவிதத்திலும் மனதுக்கிசைந்த மித்திரனது பிராணனை இரக்ஷிப்பதற்காக இதோ யான் அஞ்ஜலி செய்கின்றேன்; இதுதான் என்றனுக்கு மிக மேலான செல்வம்.' எனச் சொல்லிவிட்டு, மறுமொழி சொல்லும் நேரத்தை யெதிர்பார்க்காமலே, எனது அன்னைக்கு முன்செல்லும் ஊழியக்காரரால் வாயிற்படி நாற்புறமும் நெருக்கமாகக் கவியப்பெற்றிருக்க, ஏதோ சிரமப்பட்டு வெளியிற்போக வழியைக்கண்டுபிடித்துக்கொண்டு, தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தார். தாயாரும் எனதருகில் வந்து, வெகு நேரம் இருந்துவிட்டு, தன் மாளிகையேகினள். அவள் அங்குவந்து—என் செய்தாள்? யாதுமொழிந்தனள்?—என்கிற எல்லாவற்றையுமே யான் மெய்ம்மறந்த மனத்தினளாய்க் கண்டவளல்லள்.

அவள் சென்றதும், கதிரவக்கடவுளும் மேற்கடற் கரையதனிற் சாய்ந்துவிட, இப்பாருலகெங்கும் பேரிருள் வந்து கவிந்துகொண்

டது; அப்பொழுது நானும் செய்யவேண்டுவது யாதென்று அறியாது, அத்தரளிகையையே வினவலானேன்:—'அடி! தரளிகே! என் நெஞ்சம் மிகக் கடுங்கவலைப் படுவதை நீ காணவில்லையோ? இந்திரியங்கள் யாவும் உணர்வின்றி, குழப்பமுற்றிருக்கின்றனவே. நான் சுயமாகச் செய்யவேண்டுவதை அணுவளவேனும் அறியக்கூடவில்லை. இவ்விஷயத்தில் உசிதமானது யாதென்று நீ தான் என்றனுக்கு உபதேசிக்கவேண்டும். உன் முன்னிலையிற்றானே இக்கபிஞ்ஜலனும் இங்ஙனம் உரைத்துவிட்டு ஏகினர். இதரகன்னிகைபோல் இலஜ்ஜையை இழந்து, தைரியத்தைத் துறந்து, விநயத்தை விட்டுவிட்டு, பழியைப் பாராட்டாது, ஆசாரத்தை அதிக்கிரமித்து, ஒழுக்கத்தை ஒழித்து, குலத்திற் கருத்துவையாது, அபயசஸ்ஸை அங்கீகரித்து, கேவலம் சிற்றின்பப்பற்றினால் மூடமான மனப்போக்கையுடையவளாய், தந்தையின் ஆஞ்ஞையைப் பெறாமலும், அன்னையினால் அநுமோதிக்கப்படாமலும் நானே சுயமாகச் சென்று மணம் புரிவேனாகில், இதனால் பெரியோரைப் புறக்கணித்தலாலுண்டாகும் மஹத்தான அதர்மம் வந்து ஸம்பவிக்கும். அல்லது தர்மத்தைத் தாங்கிக்கொண்டு மற்றொரு பக்ஷத்தைக் கைப்பற்றி உயிர்துறப்பதை அங்கீகரிப்பேனாகில், இதனாலும், தானாகவந்து முதன் முதல் நேசப்பான்மை பாராட்டியவரும், மிகப்பூஜ்யருமான அக்கபிஞ்லனது அன்பிற்கு அழிவு வந்து நேரிடும்; அல்லாமலும், என்னால் தனது காதலுக்குக் கேடுண்டானதுபற்றி, ஒருக்கால் அந்த புண்டரீகனது உயிருக்கு அபாயம் உண்டாகுமாகில், அதுவும் முனிவரது வதையினால் ஏற்பட்ட பெரும் பாவமாகும்.' என்று இவ்வாறு நான் உச்சரித்துக்கொண்டிருக்கையிலேயே, சந்திரோதய ஸமயம் ஸமீபித்ததால் ஸம்பவித்த வெகு விரளமான வெளிச்சத்தினால் கீழ்த்திசையானது வெளிறிப்போயினது.

பின்னர், சந்திரகிரணங்களாகும் சிங்கத்தின் உகிர்களால் இருளாகும் குஞ்ஜரத்தின் கும்பஸ்தலம் கிழிக்கப்பட, அதிலிருந்துண்டான நல்முத்துப் பொடிபோன்ற மதியின் கதிரொளிகளால் கீழ்த்திசை வெகு வெண்மையாகக் காணப்பெறலாயினது. மெல்ல மெல்ல சந்திரனைக் கண்டதினாற் புன்னகைபுரியும் இரவாகும் பெண்மணியின் பல்லொளிபோற் பரவும் நிலவானது அவ்விரவென்னும்

மங்கையினது முகத்தை (இரவின் முன்னேரத்தை) மிகவும் துலங்கச்செய்தது. பிறகு, இப்புவியைப் பிளந்து கொண்டு பாதாளத்திலிருந்து கிளம்பும் ஆதிசேஷனது படத்தின் மண்டலம்போன்ற இந்துமண்டலத்தினால் இரவும் இரமணீயமாய் விளங்கியது.

பிறகு, மிகவும் அருகிலிருக்கும் கடற்பவழங்களின் காந்திகளாற் சென்னிறங்கொண்டதுபோல், உதயகாலத்துச் சிவப்பினால் இரத்தநிறமான இந்துமண்டலம் உதிப்பதைக் கண்டு என் இருதயம் இருளடையவே, தரளிகையினால் மடிதனில் தாங்கிக்கொள்ளப்பெற்ற தேஹத்தையுடையவளான என்னை மூர்ச்சை வந்து கண்மூடச் செய்தது. சிறிது நேரத்திற்குள்ளே மிகவும் கவலையுற்ற தரளிகையினால் கொண்டுவரப்பெற்ற சந்தனப் பூச்சுகளாலும், சிற்றாலவட்டக் காற்றுகளாலும் யான் நினைவு மூட்டப்பட்டவளாய், வெகு வியாகுலத்துடன் அத்தரளிகை அழுதுகொண்டிருக்கக் கண்டேன். நான் கண்திறந்ததும் அவள் என் பாதங்களிற் பணிந்து கரங்களைக் கூப்பிக்கொண்டு இவ்வாறு கூறலானாள்:—'ஓ இராஜகுமாரி! இவ்வெட்கம் எதற்கு? தாய் தந்தை முதலிய பெரியோரைத்தான் ஏன் எதிர்பார்க்கவேண்டும்? அருள்புரிந்து என்னை அனுப்புவாயாக. உன் மனதுக்கிசைந்தமணாளனை இதோ நான் போய் அழைத்துவருகிறேன்; இல்லையேல் எழுந்திரு; சுயமாக நாமே அங்குச்செல்வோம்.' என்று இப்படி மொழிந்துகொண்டிருக்கும் அவளை, 'எழுந்திரு, எவ்வாறாயினும் உயிர் நீங்காதவளாய் எனதன்பார்ந்த அந்த ஜனத்தைப் போய் ஆதரிக்கின்றேன்.' என்று சொல்லாநின்று, வெகு பிரயாஸத்துடன் அவளையே பற்றிக்கொண்டு எழுந்திருந்தேன். எழுந்துச் செல்லுகையில், அவசகுனத்தை அறிவிப்பதாக எனது வலதுகண் துடிக்கலாயினது. சிறிது சங்கையுண்டானவளாய் 'இதேதோ தைவம் வேறொன்றைக் கொண்டுவிடுகின்றதே!' எனச் சிந்திக்கலானேன்.

அதன் பின்னர் சிறிதுதூரம் மேலோங்கிவந்ததும், சந்தனக்குழம்பின் வெள்ளத்தை வாரியிறைக்கின்றதுபோலிருப்பதும், அமுதக்கடற் பெருக்கைக் கொப்புளிப்பதுபோல் தோற்றுவதுமான சந்திரமண்டலம் தனது நிலவினால் இவ்வுலகமனைத்தையும் நனைத்துவிட,

ஆதிவராஹனது கோரப்பல்லின் வலயத்திற்கொப்பான சந்திரனுல் யாற்கடலிலிருந்து பூமண்டலம் பெயர்த் தெடுக்கப்படுவதுபோல் தோன்றியது. சந்திரோதயத்தைக் கண்டு உள்ளத்திற் பேரின்பம் நிரம்பிய ஜீவலோகம் யாவும் விலாஸமயம்போலவும், பிரீதிமயம் போலவும் ஆயினது. அந்த அந்திப்பொழுதில் அனேகவகையான புஷ்பம், தாம்பூலம், சந்தனம், கந்தப்பொடி இவைகளை யெடுத்து வரும் தரளிகையினுல் பின்பற்றப்பட்டவளாய், நான் சிவப்புச்சிலை யெடுத்துச் சிரந்தனில் போர்த்துக்கொண்டு, என்னைச்சார்ந்த பரிஜனங்களிற் கூட ஒருவருக்கும் தெரியாது அவ்வுப்பரிகையின் உச்சியிலிருந்து கீழிறங்கினேன்.

இறங்கியதும், உத்தியானவனத்தின் பிரத்தியேகமான ஓர் வாயிற்படியின் வழியாய் வெளிக்கிளம்பி, அவளுடன் அந்த ஸமயத்திற்கேற்ற ஸல்லாபங்களைச் செய்துகொண்டே அவ்விடத்தை நோக்கிச் சென்றேன். அங்கு பாதைகளிலுள்ள கொடிகளது மலர்களிலிருந்து சொரிந்த தூள்கள் பட்டு மலினமான சரணங்களை, கைலைமலைச்சாரலில் சந்திரோதயத்தினுல் சந்திரகாந்தச்சிலைகளிலிருந்து பொசிந்துவரும் மலையருவி நீர்தனில் அலம்பிக்கொண்டிருக்கையில், இப்பொய்கையின் பச்சிமதீரத்தில் அம்முனிகுமாரரிருக்குமிடத்திலிருந்தே, சற்றுத் தூரமாயிருப்பதால் நன்கு விளங்காததான புருடனது தொனிபோன்ற ஓர் அழுகுரலைக் கேட்டேன். வலதுகண் துடிப்பினுலேயே முன்னமே மனத்தினிற் சங்கித்துக்கொண்டிருந்தவளான நான், அத்தொனியினுல் இன்னும் விசேஷமாய் இருதயம் பிளவுபட்டவள்போல், வெகு துயரமுற்றதும் ஏதோ அனிஷ்டத்தைக் கூறுவதுபோலிருப்பதுமான உள்ளத்தையுடையவளாய், 'தரளிகே! இஃதென்ன?' என்று மிகவும் திகிலுடன் கூறிக்கொண்டு, உடலெல்லாம் நடுநடுங்க வெகு விரைவாக அவ்விடம் நோக்கிச் சென்றேன்.

பிறகு, இராத்திரியின் பிரபாவத்தினுல் தூரத்திலிருந்தவாறே நன்கு செவியுறக்கூடுமாறு குரல்விட்டு வெகு இரக்கமாகக் கதறும் கபிஞ்ஜலன், 'ஹா! அன்னியாயமாய்க் கெடுண்டுபோனேன். ஹா! நான் தஹிக்கப்படலானேன். ஆ! மோசம்போனேன். ஆ! இஃ

தென்ன இவ்வாறு ஸம்பவித்ததே! நான் ஒழிந்தேன். அடா! பாவி! துராத்மாவான மன்மதப் பிசாசே! கன்னெஞ்சனே! இஃதெ ன்ன, இவ்வடாத செயலைச் செய்தாயடா! ஓகோ! மஹாபாவியும், தீவினைபுரிபவளும், துர்விநீதையுமான ஓ மஹாச்வேதே! இவன் உன க்கு என்ன பொல்லாங்குச் செய்தானடி? ஆ! பாபி! தீச்செயல் செய்பவனான ஓ சண்டாளசந்திரனே! நீ இப்பொழுது கிருதார்த்த னாய் விட்டாய். ஓ! தாக்ஷிண்ணியமற்ற தென்றற்காற்றே! உனது பேராவக்கள் யாவும் பூர்ணமாயின; செய்வன செய்தாயின; இனி உன் இஷ்டம் வாய்ந்தவாறு வீசுவாயாக. ஹா! பகவன்! மைந்த னிடம் அன்பார்ந்தவரே! ஓ ச்வேதகேதோ! பறிகொடுத்துவிட்ட தாகத்தம்மை தாம் அறியமாட்டீர்களே! ஆ! தர்மமே! தாங்குவா ரற்றுப்போயினையே! ஆ! அருந்தவமே! ஆதாரமிழந்தனையே! ஹா! கலைமகளே! கைம்பெண்ணாய் விட்டனையே! ஹா! ஸத்திய மே! அநாதையாய்ப் போனாய். ஓ! விண்ணுலகமே! வீணிற் பாழ டைந்துபோயினையே! அப்பா! நண்பனே! என்றனுக்காகச் சற்றுக் காத்திருக்கவேண்டுகிறேன்; நானும் உன்னைப் பின்தொடர்ந்துவரு வேன். உன்றனைத் துறந்து யான் நொடிப்பொழுதேனும் தனித்தி ருக்கச் சற்றும் ஸஹியேன். ஓ! இஃதென்ன! பரிசயமற்றவனைப் போலவும், இதுகாறும் காணப்பெறாதவன்போலவும் இப்பொழுது ஒரேக்ஷணத்தில் என்னை விட்டுவிட்டுப் போகின்றனையே! உனக் கேது இத்தகைய கடோரத்தன்மை? நீ சொல்லேன், உன்னை விட்டுப் பிரிந்து நான் எங்கென்று செல்வேன்? எவரை வேண்டு வேன்? எவரிடம் அடைக்கலம் புகுவேன்? நான் கண்ணிழந்தவனா னேன். திசைகள் யாவும் என்றனுக்குப் பாழடைந்து விட்டனவே நான் உயிர்பிழைத்திருப்பது உபயோகமற்றது. தவத்தினாற் பிர யோஜனமேதுமிலது. இவ்வுலகமெல்லாம் இன்பமில்லாதவை. இனி எவருடன் நடமாடுவேன்? எவரோடு ஸல்லாபம் செய்வேன்? எழு ந்திருந்து, எனக்கு மறுமொழி கூறேன். என்னிடமிருந்த அந்த நிகரில்லா நேசப்பான்மை இப்பொழுது எங்குப் போயிற்று? முன்ன ராய்ப் புன்னகை புரிந்து அப்பேசுந்தன்மைதான் எவ்வாறாயினது?" என்று இங்ஙனம் இன்னும் பலவாறாகவும் புலம்பிக்கொண்டிருக்கக் கேட்டேன்.

அதுகேட்டு, என் உயிரிழந்துபோயினதுபோ லெண்ணி, தூரத்திலிருந்தே குரல்விட்டு மிகவும் உரக்கக் கதறிக்கொண்டு, குளக்கரையின் கொடிகளிற் சிக்கி உத்தரீயச்சீலை கிழிந்துபோக, மேடுபள்ள மறியாது வலிவுள்ளவளவும் விரைந்தோடுவதால் அடிக்கொருமுறை அடிவைப்புகளில் தடுமாற்றமுண்டானவளாய், எவராலோ எடுத்தேகப்படுபவளைப்போல் அவ்விடஞ்சென்று, பெரும்பாவியும் துரதிருஷ்டசாலியுமான யான் குளக்கரைக்கு அருகிலிருக்கும் ஓர் சந்திரகாந்த சிலாதலத்திற் பரப்பிய பங்கயக் கொடிமயமான சயனத்தின்மீது படுத்திருக்கும் மஹாபாக்கியசாலியான அம்முனிகுமாரர் அப்பொழுதே உயிரிழந்திருக்கப் பார்க்கலானேன். அவரது அங்கங்கள் அக்காலை அசைவற்று அமர்ந்திருந்தனவாதலால், எனது காலடியோசையைக் கேள்வியுறுகின்றவர்போலவும், மனக்குழப்பத்திற்கேற்ற பிராயச்சித்தம்செய்து கொள்ள பிராணாயாமத்தைப் பண்ணும் நிலைமையிலிருப்பவர்போலவும் தோற்றினர்.

'என்னைப்பார்க்கினும் இன்னும் மேலான பிரீதிக்குப் பாத்திரமாக வேறொருவர் உன்றனக்கு ஏற்பட்டுவிட்டனர்.' என்று சினங்கொண்டதுபோல் உயிரானது இவரைத் துறந்து விட்டது. 'ஓ கன்னெஞ்சுக்காரி! உன்னையடுத்தவனான எனக்குத் தரிசனந் தந்தாவது அநுக்கிரஹித்தாயில்லை.' என்று நேசப்பான்மையுடன் தனது கண்களால் என்னை நிந்திப்பவர்போல் காணப்பட்டார். சிறிது உதடுகள் திறந்திருந்தமையால், உள்நுழைந்து உயிரை அபஹரித்துக்கொண்டு வெளிவரும் இந்துகிரணங்களோவெனக் கூறக்கூடிய தந்தகாந்திகளால் அவரது முகத்தின் முன்புறம் வெளுத்திருந்தது. மன்மதபாதையினால் விரிந்துபோகும் இருதயத்திலிட்ட இடது கரத்தினால் 'பிராணனுக்கொப்பானவளே! தயவுபுரிந்து என் பிராணனுடன் நீயும் இங்கிருந்து நீங்கிப்போகாமலிருக்கவேண்டும்.' என்று இருதயத்திலிருக்கும் என்னைத் தகைந்து தாங்குபவர்போலிருந்தார். தவத்திற்கு அருமைத்தோழன் போன்ற நீண்ட கழுத்துள்ள கமண்டலமொன்று, சற்றுநேரம் முந்தியே வெளிக்கிளம்பிய அவரது ஜீவன் போகும் பாதையை நிமிர்ந்து பார்ப்பதுபோல் பக்கத்திலிருந்தது. என்னைக் கண்டதால் கண்ணீர் இருமடங்கு அதிகமாய்ப்பெருக, கரங்களைத் தூக்கிக்

கொண்டு 'ஐயோ!' என்று பெருங் கூக்குரலிட்டுக் கதறும் கபிஞ் ஜலனால் அவர் தழுவப்பெற்றிருந்தார்.

உடனே மூர்ச்சையுண்டாய் அதனால் இருளடைந்த இருதயத் தையுடையவளாய், பாதாளதலத்தினுள் இறங்கியவளைப்போல் அப் பொழுது 'நான் எங்கு சென்றேன்? என்ன செய்தேன்? எவ்வாறு புலம்பினேன்?' என்கிற எதையுமே யான் அறிந்தவளல்லள். அந்த க்ஷணத்தில் இந்த மூட இருதயம் மிகக் கடினமாயிருந்ததினாலோ, இப்பாழுமுடல் பல்லாயிரந் துயரங்களையும் ஸஹிக்கக்கூடியதா யிருக்கின்றமையாலோ, வெகு நீண்டசோகம் அனுபவிக்கவேண்டி யேற்பட்டிருப்பதினாலோ, துராத்மாவான பாழும் மன்மதன் ஒரு சார்பாகவே பிரதிகூலமாயிருப்பதாற்றானோ, அல்லது வேறு எக்காரணத்தினால் எனது ஜீவன் வெளிக்கிளம்பாமலிருந்ததோ, அதையும் நான் அறியேன். பின்னர் வெகுநேரங் கழித்து நினைவு வந்ததும் மிகவும் துயரமுற்றவளான நான், அக்கினியில் விழுந்தவளைப்போல் கேவலம் ஸஹிக்கக்கூடாத சோகத்தினால் தஹிக்கப்பட்ட என் தேஹத்தைப் புவிதனில் புரண்டு தவித்துக்கொண்டிருக்கக் கண்டேன். சிந்திக்கக்கூடாத அவரது அம்மரணத்திலும் நான் ஜீவித்திருப்பதிலும் நம்பிக்கையற்றவளாய், 'ஆ! ஆ! இஃதென்ன இவ்வண்ணம் நேர்ந்ததே!' என்று நினைத்து, தீனமாக பெருங் கூக்குரலுடன் அழுதுகொண்டு, 'ஹா! அன்னையே! ஹா! தந்தையே! ஹா! தோழிமார்களே!' என்று கதறிக்கொண்டு, 'ஹா! நாத! ஜீவிதேச்வர! சற்று மொழிந்திடுவீராக; வேறு கதியற்றவளான என்னைக் கருணையின்றித் தனித்துவிட்டு நீர் எங்கே செல்லுகிறீர்? உமது பிரிவாற்றாமையால் நான் எவ்வகையான அவஸ்தையை அனுபவித்தேன் என்பதைத் தரளிகையைக் கேளும். ஒரு பகலையும் ஆயிரம் யுகங்களென்றெண்ணி வெகு கஷ்டத்துடன் கழித்தேனே! அருள் புரிந்து ஒரு முறையேனும் என்னுடன் பேசவேண்டும். பக்தவாத்ஸல்லியத்தைக் காட்டுவீராக. சிறிதேனும் என்னைப் பாரும். என் ஆசாவைப் பூர்த்திசெய்யும். நான் மிகவும் தீனத்தன்மையளாயினேனே. நான் உமதிடம் பக்திசெய்தவள். உம்மிடத்திற் காதல்கொண்டவள். அநாதையாயினேன். நான் பாலை. கதியற்றவள். துயர்முற்றவள். வேறு புகலிடமில்லாதவள். மன்

மதன் என்னைப் பரிபவப்படுத்துகின்றானே! நீர் என் கருணைபுரிய வில்லை? சொல்லும், யான் யாது பிழை செய்தேன்? என்னால் செலு த்தப்படாத கடமை யாது? எந்த ஆஞ்ஞையை நான் ஆதரிக்க வில்லை? உமக்கு அனுகூலமான எவ்விஷயத்திற்றான் யான் பிரியப் பட்டவளல்லள்? எதனால் நீர் சினங்கொண்டு, இப்படி காரணமேது மில்லாது உமது அடியாளைத் துறந்துவிட்டுப் போகிறீர்? இதனா லுண்டாகும் அபவாதத்திற்கு நீர் அஞ்சவில்லையோ? ஓ! மாயப் பிரீதிகாட்டி மோசஞ்செய்ய வல்லவளும், வக்கிரத்தன்மையுடைய வளும், மஹாபாவியுமான என்னால் இப்பொழுது உமக்காக வேண் டுவது என்னை? நான் இன்னும் இதோ உயிர்பிழைத்திருக்கின் றேனே! ஹா! துரதிருஷ்டசாலியான நான் அநியாயமாய் அழி ந்துவிட்டேன்! ஓ! உம்மையும் இழந்தேன்; நல்லொழுக்கமும் ஒழி ந்தது; உறவினரையும் துறந்தேன்; பரலோகமும் பாழாயினது. சீ! தீச்செயல்புரியும் என்னைச் சுடவேண்டுமல்லவா? என்னிமித்தமா கவல்லவோ உமக்கு இந்நிலைமை வந்து நேர்ந்தது? எனக்கீடான குரூர இருதயத்தையுடையவளே கிடையாது; நான் இத்தகைய உம்மையும் விட்டுவிட்டு அப்பொழுது வீட்டிற்குச் சென்றேனே! எனக்கு அகத்தினால் என்ன? அன்னையினாற்றான் என்ன? தந்தை தான் எதற்கு? உறவினரால் யாது பயன்? பரிஜனத்தினாற்றான் ஆக வேண்டுவது யாது? ஹா! எவரைச் சரணமாய் அடைவேன்? ஓ தைவமே! கருணைபுரிந்து கடாக்ஷிப்பாயாக; உன்னிடம் விண்ணப் பம் ஒன்றுபண்ணிக்கொள்கின்றேன்; பர்த்ருபிக்ஷையைத் தரவே ண்டுகிறேன். எல்லா வல்லமையும் வாய்ந்த ஓ தலைவிதியே! தயவு செய்து இவ்வநாதைப் பெண்ணை இரக்ஷிக்கவேண்டும். ஓ மஹா மஹிமைசாலிகளான வனதேவதைகாள்! இவருக்கு உயிரை அளிப் பீர்களாக. ஓ பூதேவி! நீ காத்தருளவேண்டும். ஸகலலோகங் களுக்கும் அருளளிக்குந் தன்மையதான ஓ இரவின் அதிதேவ தையே! நீ என் இரக்கமுறவில்லையோ! ஐயா! கைலாஸமே! உன்னை அடைக்கலம் புகுந்தேன்; கருணைபுரியும் தன்மையைக் காட்டுவா யாக.' என்று இன்னும் பல வகையாக உரத்துக் கதறிக்கொண்டு —நான் எவ்வளவென்றுதான் நினைவு வைத்துக்கொள்வேன்?— ஏதோ பேய் பிடித்தவள்போலவும், பித்துப்பிடித்தவள்போலவும்

புலம்பலானேன். மேன்மேலும் வழியும் கண்ணீர்த் தாரைகளின் திரள்களென்னும் பாவனையினால் என் உடலெல்லாம் உருகிப் பெருகுவதுபோல் காணப்பெற்றவளாய், அவர் உயிர்பிழைத்தலைப் போல் எனது இறப்பையும் விரும்பிக்கொண்டு, என் கரதலங் கொண்டு அவரது கபோலங்களிலும், நெற்றியிலும், தோள்களிலும், மார்பிலும் தடவிக்கொடுத்து, ‘ புண்டரீக! மிகவும் கன்னெஞ்சராய் விட்டீரே; நான் இவ்வாறு துயரமுற்றிருக்கையிலும், நீர் என்னைக் கவனிக்கவில்லையே.’ என்று இவ்வண்ணம் மனவெறுப்புடன் மொழிந்துகொண்டு, இவரை அடிக்கடி நல்வார்த்தை சொல்லி வேண்டிக்கொண்டேன்; பலமுறை கழுத்தைக் கட்டிக்கொண்டு, கதறலானேன். ‘ஓ மிக மேன்மை தங்கியவரே! அருள்புரிந்து இவரை உஜ்ஜீவிக்கச் செய்யவேண்டும்.’ என்று அடிக்கொருமுறை கபிஞ்ஜலனது கால்களில் வீழ்ந்தேன். இன்னும் அனேகந்தடவை தரளிகையின் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதேன்.” என்று இங்ஙனம் தனது வரலாற்றைச் சொல்லிக்கொண்டிருக்கையிற்றானே, அவள் முன் கடந்துபோன வெகு கடுமையான அந்நிலைமையை இப்பொழுது அநுபவிப்பவள்போல், நினைவு தடுமாறி மூர்ச்சையையடைந்தனள். திடீரென சிலாதலத்தின்மீது சாய்ந்துவிடும் அவளை, வெகு துயரமுற்ற சந்திராபீடன் பரிஜனம்போல் மிக்க பரபரப்புடன் தாங்கிக்கொண்டான். கண்ணீர் விழுந்து நனைந்திருக்கும் அவளது மரவுரிமயமான உத்தரீயத் தலைப்பினாலேயே வெகு மெதுவாக விசி நினைவுவரச் செய்தனன். அவன் உள்ளங் கசிந்து, கண்ணீர்ப்பெருக்கினால் கழுவப்பட்ட கபோலங்களையுடையவனாய், மூர்ச்சையிலிருந்து தெளிவடைந்த அவளை நோக்கி மொழிந்தனன்:—‘அம்மணி! பாவியான நான் உமது பழைய துயரத்தை மீளவும் இதோ புதிதாகச் செய்துவிட்டேனே; இந்த துயரத்தினால் இத்தகைய அவஸ்தையை நீர் அடைந்துவிட்டீரே. ஆகையால் இக்கதை போதுமானது. இவ்வளவோடு இதை முடித்துவிடலாம். இதைக் கேட்க எனக்கும் ஸஹிக்கவில்லை. சென்றுபோன துன்பங்களையும் செப்புங்கால் ஆப்த ஜனங்களது அந்த வாஸ்தவமான வார்த்தைகள் நண்பருக்கு அப்பொழுதே அநுபவிக்கப்படுவது போன்ற வேதனையை யுண்டாக்குகின்றன. ஆனதுபற்றி, வெகு

சிரமத்துடன் தாங்கப் பெற்றுவரும் இந்த அருமையான உமதுயிரை, மீளவும் நினைவில் வரும் இத்துயரமாகும் தீக்கு இரையாக்கிவிட முயலுவது முற்றிலும் உற்றதல்ல.'

இவ்வாறு அவன் உரைத்ததும், அவள் சுடச் சுடப் பெருமூச்செறிந்து, கண்களில் தாரைதாரையாய் நீர் சொரிய, வெகு வெறுப்புடன் இங்ஙனம் மொழிந்தனள் :—'இராஜபுத்திர! அப்பொழுது மிகவுங் கொடுமையான அப்பாழும் இரவிலேயே எவ்வுயிரானது நீங்கிப்போகாது அவ்வளவு குரூரத்தன்மையதாயிருந்ததோ, அத்தகைய எனது இவ்வுயிர் இப்பொழுது என்னைத் துறந்துவிடுமென்பது வீணான விஷயம். உண்மையாகவே பகவானான இயமனுங்கூட, துரதிருஷ்டசாலியும் கொடும்பாவியுமான என்னைக் காண விரும்பார். வெகு வன்மையான இருதயத்தையுடையவளான என்றனக்குத் துயரந்தான் ஏது? இவையனைத்தும் தீயகுணமுள்ள இக்கொடிய நெஞ்சத்தின் வஞ்சகச் செயலேயாம். வெட்கங்கெட்ட இப்பாழும் நெஞ்சம், பலவகையிலும் என்னை இலஜ்ஜையிழந்தவருள் முதன்மையானவளாகச் செய்துவிட்டது. வன்மையான வஜ்ரம்போல் இதையெல்லாம் அநுபவித்தவளுக்கு இதைக்கூறுவதெவ்வளவு? செவியுறுவதற்கேனும் செப்புவதற்கேனும் சற்றும் ஸாத்தியப்படாத இதைவிட சொல்லவேண்டிய பெருந்துன்பம் வேறொன்றும் உளதோ? இப்பேரிடியின் வீழ்ச்சிக்குப் பிறகு ஸம்பவித்த அந்த அத்புதச் செயலைச் சொல்லுகின்றேன்; நான் உயிருடன் இன்னும் இருப்பதற்கு நன்கு விளங்காத வகையில் தோன்றிய சிறியதோர் காரணத்தின் வரலாற்றையும் உரைக்கின்றேன். இத்துராசை யென்னும் பேய்த்தேரில்* பற்றுள்ளவளாகவே, பெரும்பாலும் மடிந்துபோனதென்றே கூறக்கூடியதும், பிறருடையதுபோல் பெருஞ் சுமையெனத் தகுந்ததும், பயனற்றதும், நன்றியில்லாததுமான இப்பாழுமுடலை இன்னமும் சுமக்கின்றேன். அஃதிருக்கட்டும்; இனி சொல்லக்கேளும்— அதன்பிறகு அப்படிப் பட்டதான அந்த அவஸ்தையில், உயிர் துறப்பதாகவே நிச்சயித்தவளாய், அததைக்கூறி, பலவாறு புலம்பிவிட்டு, தரளிகையை நோ

* பேய்த்தேர் = கோடைகாலத்தில் மைதானங்களில் வெயிலின் வெப்பத்தாற்காணும் வெள்ளம்போன்ற கானல்.

க்கி ' அடி ! வன்னெஞ்சுக்காரி ! எழுந்திரு; எவ்வளவென்று அழு வாய்? விறகுகளைக் கொண்டுவந்து சிதையை அடுக்கடி; என் பிராண நாதனைப் பின்பற்றுகின்றேன்.' என்று கூறலானேன்.

இந்த ஸந்தர்ப்பத்தில், வெண்தளிர்போன்ற வெண் பட்டினுல் கட்டிய தலைப்பாகைத் தரித்தவனும், ஆம்பல் மலர்போன்ற வெண் ணிற மேனியையுடையவனும், மஹாபுருஷலக்ஷணங்களெல்லாம் அமையப்பெற்றவனும், மிகவும் உன்னதமான திவ்ய வடிவம் வாய் ந்தவனுமான புருஷனொருவன் திடீரென சந்திரமண்டலத்திலிரு ந்து கிளம்பி, ஆகாயம் விட்டு இறங்கிவந்து, பங்கயக் கொடிகளுக் கொப்ப வெண்மையான விரல்களையுடைய வெகு சீதளமான தனது புயங்களிரண்டாலும் மாண்டுபோயிருக்கும் அப்புண்டரீகனை யெடு த்துக்கொண்டு, பேரிகையென்னும் பறையின் பேரொலிபோல் வெகு கம்பீரமான தொனியுடன், ' வத்ஸே! மஹாச்வேதே! நீ பிராணபரித்தியாகம் பண்ணவேண்டாம்; மீண்டும் உன்றனக்கு இவ னது ஸங்கமம் ஸம்பவிக்கப்போகின்றது.' என இங்ஙனம் ஆதர வுடன் தந்தைபோல் மொழிந்துவிட்டு, அப்புண்டரீகனுடனே ஆகா யத்தில் எழும்பிச் சென்றனன். நானோ அந்த ஸம்பவத்தினுல் வெகு பயத்துடனும் ஆச்சரியத்துடனும் ஆவலுடனும் தலைநிமிர் ந்து ' இஃதென்ன?' என்று கபிஞ்ஜலனை வினவினேன். கபிஞ்ஜல னும் வெகு விரைவாக மறுமொழி கூறாமலே எழுந்து, ' ஓ! துராத் மாவே! எவ்விடத்திற்கு என் நண்பனை அபஹரித்துப்போகின் றனை?' என்று சொல்லி, உயர நிமிர்ந்து பார்த்து மிக்க கோபங் கொண்டு, தன் மேலிருந்த மரவுரியெடுத்து வெகு விசையாகக் கச்சு க்கட்டி, அத்திவ்ய புருஷனைப் பின்தொடர்ந்து தானும் வானத்தில் எழும்பிப் போயினர். நான் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அவர் அனைவரும் நக்ஷத்திரமண்டலங்களின் மத்தியத்தில் மறை ந்து விட்டனர்.

எனக்கோ, இரண்டாம் பிரியதமனுடைய மரணத்திற்கொப் பான அக்கபிஞ்ஜலனது போக்கினுல் இரண்டத்தனை துயரம் அதிக மாய், இருதயம் இன்னும் விசேஷமாக விரிந்துபோனதுபோலும்; இன்னது செய்வதென்று அறியாதவளாய் தரளிகையை நோக்கி, 'அடி! இஃதென்னவென்று உனக்குத்தெரியவில்லையோ?' என்று,

கேட்டேன். அவ்வேளைத்தரளிகையும் அது கண்டு, பெண்களின் தன்மைக்கேற்க திகிலடைந்து, அந்தக்ஷணத்திற் சோகத்தையும் மறைக்கவல்ல பயத்தினாற்றானே பிடிக்கப்பட்டு, உடல் நடுநடுங்க, நான் இறந்துவிடுவேனோ என்னும் சங்கையினால் துயரமுற்ற இருதயத்தையுடையவளாய் மிகவும் இரக்கத்துடன் கூறத்தொடங்கினள்:—

"இராஜகுமாரி! பாவியான என்றனக்குத் தெரியவில்லை; ஆகிலும் இதுவோ விந்தையிலும் பெரும்விந்தை. இப்புருடரது வடிவமோ மானிடத்தன்மையை மீறியது; திரும்பிச் செல்லுகையில், மிகவும் உள்ளங்கசிந்து இவர் உமக்கு ஆறுதலும் கூறினர். இத்தகைய திவ்ய வடிவம் வாய்ந்தவர் பெரும்பாலும் கனவிலுங்கூட முன்பின் மாறாக மொழியுந் தன்மையரல்லர்; இப்பொழுது நமது கண் முன் னிலையில் நடந்தேறிய இவ்விஷயம் பயனுள்ளதாகவே ஆகுமென்பதில் ஐயமுமுளதோ? நன்கு யோசிக்குங்கால், இத்திவ்யபுருடர் பொய் சொல்லிப் போவதற்கு வெகு நுண்ணிய காரணத்தையும் யான் காணவில்லை. ஆனதுபற்றி ஆலோசனைசெய்து, பிராண பரித்தியாகம் பண்ணும் இப்பிரயத்தினத்திலிருந்து நீர் திரும்புவதே சாலவும் நன்று. இவ்வித நிலைமையில் இதுவல்லவோ மேலான ஆறுதலுக்கு இடமாகின்றது? அன்றியும் கபிஞ்ஜலனும் அப்புருடரையே பின்பற்றிச் சென்றிருக்கின்றாரே; அவரிடமிருந்து, 'இத்திவ்யபுருடர் எங்கிருந்து வந்தார்? யாவரிவர்? உயிரிழந்த இவனை இவர் தூக்கிக்கொண்டு போனதேன்? எங்கு எடுத்துப் போனார்? மீளவும் அவரது சேர்க்கையுண்டாகுமென்று நம்பக்கூடாத இவ்வாசையைக் காட்டி எதற்கென்று உமக்கு ஆறுதல் கூறினர்?' என்கிற எல்லாவற்றையும் அறிந்துகொண்டு, பின்பு பிழைத்திருப்பதோ, உயிரிழப்பதோ இரண்டில் ஒன்றைக் கைக்கொள்வீராக. மரிக்கிறதென்று தீர்மானித்தபின்பு அம்மரணமென்பது துர்லபமானதல்ல; பிறகுகூட இது உண்டாகக்கூடும். கபிஞ்ஜலனும் பிழைத்திருக்குமளவிலும் உம்மைக் காணவராமல் எங்கும் நின்றுவிடார். ஆகையால் அவர் திரும்பிவரும் வரையிலேனும் இப்பிராணனை நீர் வைத்திருக்கவேண்டும்." என்று சொல்லி எனது பாதங்களில் வீழ்ந்தனள். நானும், உலகமனைத்திலும் உயிராசையென்பது மீறக்கூடாததுபற்றியும், பெண்மக்களின் தன்மையும் மிக இழிகுணமுடைய

தானகாலும், அவளெடுத்துக் கூறிய கானல்போன்ற அத் துராசை யினாலும், கபிஞ்ஜலன் திரும்பிவருகையிலுண்டான ஆவலாலும் அந்த ஸமயம் அவள் சொல்வதே யுக்தமென்று எண்ணி உயிரை யிழந்தேனில்லை. ஆசையினாற் செய்யவியலாததும் ஏதேனுமுளதோ? தூக்கமில்லாது அங்ஙனமே பூதலத்திற் புரண்டு தவித்துக்கொண்டு, தீச்செயல்புரிந்ததும், காளராத்திரிக்கொப்பானதும், ஆயிரம் ஆண்டு களெனத்தோற்றியதும், நரகமயம் அல்லது அக்கினிமயம் போன்ற துமான அவ்விரவை தரளிகையுடன்கூடவே அக்குளக்கரையிற் றுனே கழித்தேன்.

விடியற்காலத்தில் எழுந்திருந்து, அதே குளத்தில் நீராடி ஓர் தீர்மானம் செய்துகொண்டு, புண்டரீகனிடமிருக்கும் அன்பினால் அவரது அக் கமண்டலத்தையும், அதே மரவுரிகளையும், அவ்வக்ஷ மாலையையும் எடுத்துக்கொண்டு, ஸம்ஸாரம் ஸாரமற்றதென்று அறி ந்து, தைவம் கடோரத்தன்மையதென்பதையும் கண்டு, அன்பானது அதிக துன்பத்தைத் தரக்கூடியதென்பதையும் ஆலோசித்து, இன்ப ங்களனைத்தும் திடீரென அழியுங் குணமுடையவை யென்பதையும் நிச்சயித்து, தாய் தந்தையரையுங் கவனிக்காது, உறவினர் அனைவ ரையும் பரிஜனங்களுடன் பரிஹரித்து, சிற்றின்பங்களிலிருந்து சித்தத்தைத் திருப்பி, இந்திரியங்களையும் இறுகக் கட்டி, பிரம்மச ரியவிரதத்தைக் கைப்பற்றியவளாய், அந்த ஜனத்திற்குக் (புண்டரீக னுக்கு) கண்ணீரைப் பெருக்கியதொன்றையே நன்றி பாராட்டிய தாகக் காட்டிவிட்டு, அவரிடமிருக்கும் காதலால் மெலிந்துபோன தும், தீவினை நிறைந்ததும், வெட்கங்கெட்டதும், அமங்கலகரமான தும், பல்லாயிரந்துன்பங்களுக்கு இருப்பிடமானதுமான இப்பாழு முடலை பலவகையான நியமங்களாலும் உலர்த்துபவளாகவும், இப் பொய்கைதனில் த்ரிகாலஸ்நானம் அனுஷ்டித்து, காடுகளிலிருக்கும் காய், கிழங்கு, தண்ணீர் இவைகளையருந்தி ஜீவித்துவருபவளாகவும், என்னைக் காத்தருளவேண்டுமென்று, அநாதைகளுக்கெல்லாம் புகலி டமான இம் முக்கண்ணப் பெருமானை நாள்தோறும் அர்ச்சித்துக் கொண்டு, இதே குஹையினுள் தரளிகையுடனே நெடுநாள்வரையில் பெருந்துயரத்தை யனுபவித்துக்கொண்டு வஸித்து வந்தேன். நான் இங்ஙனம் பாவச்செயல் புரிந்தவளும், அவலக்ஷணமானவளும்,

வெட்கங்கெட்டவளும், நேசம்பாராட்டாதவளும், கொடுமைத் தன்மையளும், வெருக்கத்தகுந்தவளும், பிரயோஜனமின்றி பிறந்தவளும், பயனின்றி பிழைத்திருப்பவளும், ஆகாரமிழந்தவளும், ஸுகத்தைத்துறந்தவளுமானவள்; பிராம்மணவதைசெய்த மஹாபாபியான என்னைப்பார்ப்பதில் அல்லது கேட்பதிலாவது மஹாபாக்கியவானான உமக்கு யாது பயன்?' என மொழிந்து, சரத்காலத்து வெண்முகில் சந்திரனை மறைப்பது போல், வெண்ணிற மரவுரியின் முந்தானையை யெடுத்து முகத்தை மூடிக்கொண்டு, தடையின்றி யுண்டாகும் கண்ணீர்ப் பெருக்கின் வேகத்தைத் தடுக்கமுடியாதவளாய், குரல்விட்டு அலறியழுதனள்.

சந்திராபீடனோ, முதன் முதற்றானே அவளது வடிவழகாலும், வணக்கத்தினாலும், தாக்ஷிண்ணியத்தாலும், இன்பமுறத்தகுந்தன்மையினாலும், பற்றற்றிருக்கும் ஸ்வபாவத்தினாலும், அருந்தவத்தினாலும், தூய்மைத்தன்மையினாலும் அவளிடத்து அதிக கௌரவம் பாராட்டலானான்; அப்பொழுதோ உண்மையான ஸத்குணங்களை விளக்குவதான அவள் கூறிய தனது செய்தியாலும், அந்த நன்றி பாராட்டுந்தன்மையினாலும் இழுக்கப்பெற்ற இருதயத்தையுடையவனாய் இன்னும் அதிகமாய் பிரீதிபண்ணலானான். உள்ளங்கசிந்து மெள்ள மெள்ளக் கூறவுந்தொடங்கினான்:—"மஹாபூஜ்யையான ஓ அம்மணி! பற்பல ஆயாஸங்களைக் கண்டு அஞ்சுபவரும், நன்றிபாராட்டாதவரும், ஸுகங்களிற் பெரும்பற்றுள்ளவருமான ஜனங்களே, அன்பிற்குற்றவாறு அருஞ்செயல்களை அனுட்டிக்க அசக்தர்களாய், கண்ணீரைப் பெருக்குவதொன்றினால் மட்டும் பிரீதியை விளக்குபவராக வீணில் அழுகின்றனர்; நீரோ காரியத்தினாற்றானே ஸகலத்தையும் செய்துவர, பிரீதிக்குத் தகுந்தவாறு நீர் பண்ணாத பணியும் ஏதேனுமுண்டோ? ஆகையால் நீர் ஏன் அழவேண்டும்? அதற்கென்றே பிறந்தநாள்முதல் மேலோங்கிய பரிசயப்பற்றுள்ள அன்பார்ந்த உறவினரையும் பரிசயமில்லாதவரைப்போல் பரிஹரித்து விட்டீரே. அருகிலிருந்தபோதிலும் விஷயஸுகங்களை அலக்ஷியமாகவே திருணங்களைப்போல் திரஸ்காரம் செய்தீர். மஹேந்திரனது செல்வங்களுக்கும் மேலான ஐச்வரியஸுகங்களை யெல்லாம் இழந்துவிட்டீர். பங்கயக்கொடிபோல் இயற்கையாகவே மிக மெல்

லியதாயிருந்த இம்மேனியை அநுசிதமான ஆயாஸங்களால் இன்னும் அதிகமாய் இளைக்கச் செய்தீர். பிரம்மசரிய விரதத்தையும் ஏற்றுக்கொண்டீர். அருந்தவத்தில் ஆத்மாவையும் செலுத்தினீர். பெண்பாலரால் செய்தற்கரிதான அரண்ணியவாஸத்தையும் அங்கீகரித்தீர். மேலும் துயரங்களால் பீடிக்கப்பட்டவர் தமது ஆத்மாவை ஆயாஸமேதுமில்லாமலே மாய்த்துக்கொள்ளுகின்றனர்; ஆனல் அவர் மஹத்தான பிரயத்தினஞ் செய்து பெருந்துன்பத்திற்கே அவ்வாத்மாவை ஆளாக்குகின்றனர். உடன் கட்டையேறுவதென்னும் இவ்வழக்கமானது முற்றிலும் உபயோகமற்றது; தந்தை, உடன்பிறந்தார், கணவன் முதலியவர் எவரேனும் இறந்தாராகில் அவருடனே தாமும் உயிர்விடுவதென்பது கற்பில்லாதவர் போய் பழகிய பாதையாகும்; மூடத் தன்மையின் சேஷ்டையிது; இஃது அஞ்ஞானமார்க்கமேயாம்; யோசனையின்றித் திடீரெனச் செய்யும் செய்கையிது; இது வெகு அற்ப திருஷ்டியேயாகும். தானே பிரிந்து போகாதவுயிரை வலுவில் மாய்க்க முயலவே கூடாது. இங்கு நன்கு ஆலோசிக்குங்கால் ஸஹிக்கக் கூடாத தமது சோகத்தின் வேதனை பரிஹரிக்கமுடியாததுபற்றி, சுயநலங்கருதியே பிராணபரித்தியாகம் செய்யப்படுகின்றது. மாண்டுபோனவருக்கோ இதனல் குணமேதுமிலது; இது அவரை மீளவும் உஜ்ஜீவிக்கச் செய்யும் உபாயமுமல்ல. தர்மஞ் செழித்தோங்குவதற்கும் காரணமாகமாட்டாது. நல்லுலகங்களைத் தேடுவதற்கும் ஆதாரமானதன்று; நரகவீழ்ச்சியிலிருந்து தப்பிவைக்கத்தகுந்ததுமல்ல; பரலோகம் போனவரைப் பார்க்கும் உபாயமுமாகாது; பரஸ்பரம் சேர்க்கைக்கும் இது ஹேதுவாகமாட்டாது. தான் செய்த வினைப்பயன்களது பரிபாகத்திற் கேற்றவண்ணம ஏற்பட்டிருக்கும் வேறு கர்மபூமியிற்றனே பரவசமாக இவ்வாத்மாவானது கொண்டு சேர்க்கப் படுகின்றது; இதனிடமும் ஆத்மஹத்தி செய்துகொண்டவனது பாவம் மாத்திரம் பற்றிக்கொள்கின்றது; பிழைத்திருப்பாராகில் அஞ்ஜலி ஜலங்கொண்டு தர்ப்பணஞ்செய்வது முதலியவற்றல் இறந்தவருக்கும் ஆத்மாவுக்கும் பலவகையினும் உபகாரஞ்செய்பவராகின்றனர்; தற்கொலை புரிந்தவரோ இருவருக்குமே பயனற்றவராகினர்.

இவர் திரும்பி வருவதில் ஐயமேதேனும் இருப்பினும் உயிரை ஒருக்கால் இழந்தாலும் இழக்கலாம்; நீரோ அதன்பின்பு 'மீளவும் இவரது சேர்க்கையுனக்குண்டாகும்.' என்று தற்செயலாய் தைவ ஞ்சொல்லவும் கேள்வியுற்றீர். ஆகையால் ஸுகம் அனுபவிக்கப்போவதில் யாதுதடை? தைவத்தன்மைக்கேற்ற வடிவம் வாய்ந்தவரும், வீண்போகா வார்த்தையையுடையவருமான அத்தகைய மஹாத்மாக்களது மொழிதனில் பெரியதோர் காரணத்தினுலும் பொய் யென்பது இடம் பெறுவதெங்ஙனம்? ஜீவித்திருப்பவளுக்கு இறந்தவருடன் ஸங்கமமென்பதுதான் எத்தகையது? ஆதலால் ஐயமின்றி இம்மஹாத்மா கருணைபுரிந்து மீளவும் பிழைக்கச்செய்யும்பொருட்டே இவரை அமரலோகத்திற்கு எடுத்துப்போயிருக்கவேண்டும்; மஹாத்மாக்களது பிரபாவம் சிந்திக்கமுடியாததல்லவோ? ஸம்ஸாரசெய்திகளும் விதம் விதமானவை; தைவமும் வெகு விசித்திரத்தன்மையது; தபஸ்ஸித்திகளும் மிகவும் ஆச்சரியகரமானவை; கர்மங்களின் சக்திகளும் பலவகைப்பட்டவை; இன்னும் வெகு ஸூக்ஷ்மமாக யோசிப்போமாகிலும், உயிரையளிப்பதற்கல்லாது, அவரையெடுத்துப்போவதில் வேறு காரணம் எதுதான் சிந்திக்கக்கூடியது? நீர் இது நேரிடக்கூடாததென்று நினைத்தலாகாது; வெகு நாட்களாகவே தொடர்ந்துவரும் வழியிது. ஆம்; அர்ஜுனன் அச்வமேத யாகக் குதிரையைப் பின்தொடர்ந்து செல்லுகையில், போர்க்களத்தின்கண் தன் புதல்வனுன பப்ருவாஹனன் என்பவன் பாணங்களைப் போட்டு அவன் பிராணனைப் போக்கிவிட, உலூபி என்கிற நாக கன்னிகை அவனை மீளவும் பிழைப்பு மூட்டினுள்; அச்வத்தாமாவினுடைய அஸ்திரத்தின் அக்கினியினுல் எரிக்கப்பெற்று, உதரத்திலிருந்து இறந்தவாறே பிறந்த அபிமன்னியுவின் மைந்தனுன பரீக்ஷித்துக்கு ஸ்ரீகிருஷ்ணபகவான் உத்தரையின் புலம்பல்களைக் கண்டு கருணை புரிந்து அடையவரிதான பிராணனையும் அளித்தருளினுரன்றே? இவ்விஷயத்திலும் எப்படியாகிலும் இவ்வாறே ஸம்பவிக்கவேண்டும். ஆகிலும் என் செய்யலாகும்? எவரை வெறுக்கலாம்? ஸர்வவல்லமையும் வாய்ந்த அவ்விதியல்லவோ மேலானது? தைவச்செயலும் வெகு வலுவானது. தனதிஷ்டப்படி மூச்சுவிடுவதற்கும் முடியாது. வெகு கடோரத்தன்மையதான பாழுந்தைவத்தின்

பொல்லாத செயல்களோ, சுபாவமாகவே மிக மனோஹரமாயுண்டான பிரீதியை வெகு நாட்கள் நீடித்திருக்க ஸஹிப்பதில்லையே! பெரும்பாலும் இன்பங்களெல்லாம் இயல்பாகவே குறுகியவைகளாதலால் திடீரென பங்கத்தைப் பெறுகின்றன. துன்பங்களோ மிகவும் நீடித்திருப்பவை. ஆம்; எவ்வகையிலோ பிராணிகளுக்கு வெகு அரிதாக ஒரு ஜன்மத்திற் சேர்க்கையும், பலஜன்மங்களிற் பிரிவும் உண்டாகின்றன. ஆனதுபற்றி நிந்திக்கத் தகாத உம்மை நீர் வெறுத்துக்கொள்வது உமக்கு உற்றதல்ல. வெகு நெருக்கமான இந்த ஸம்ஸார மார்க்கத்தில் இறங்கியவருக்கு இத்தகைய விஷயங்கள் வந்துதான் நேரிடுகின்றன. தைரியசாலிகளே ஆபத்தைக் கடந்து விடுகின்றனர்." என்றும் இன்னும் இவ்வாறு வேறுவகைகளிலும் அவளுக்கு மெதுவாக ஆறுதல் சொல்லி, மறுபடியும் இருகரங்களாலும் தான் ஏந்தி வந்த மலையருவி நீர்கொண்டு, விரும்பாமலிருப்பினும் வலுவில் அவளை முகங்கழுவச் செய்தனன்.

இத்தருணத்தில் மஹாச்வேதையின் செய்திகளை யெல்லாம் செவியுற்று சோகங்கொண்டவன்போல் சூரியபகவானும் பகற்பொழுதின் பணியிலிருந்து நீங்கியவனுய்ச் சாய்ந்துவிடலானுன். பின்பு பகற்பொழுதும் கழிந்துபோக, மஹாச்வேதையும் மெள்ள வெழுந்து மேன்மைபொருந்திய ஸாயங்காலத்து ஸந்தியையை உபாஸித்துவிட்டு, கமண்டலுஜலத்தினுல் கால்களைக் கழுவிக்கொண்டு, வெகு சோகத்துடன் சுடச் சுடப் பெருமூச்செறிந்து, மரவுரிப்படுக்கையின் மீது உட்கார்ந்தனள். சந்திராபீடனும் எழுந்து ஸந்தியையைத் தொழுதுவிட்டு, அதே இரண்டாவது சிலாதலத்தின்மீது கொடிகளின் இளந்தளிர்களாற் சயனத்தை யேற்படுத்திக்கொண்டான். அதன் மீது அமர்ந்தபின்பு, மனத்தினில் மஹாச்வேதையினது அதே விருத்தாந்தத்தை அடிக்கடி ஆலோசிக்கலானுன். மறுபடியும் அவளை நோக்கி, 'மஹாமஹிமை பொருந்திய ஓ அம்மணி! வனவாஸத்தை விருப்புடனேற்று, துன்பங்களைக் கூடவிருந்து அனுபவிப்பவளான அத்தரளிகையென்னும் உமது ஊழியக்காரி எங்குச் சென்றனள்?' என வினவினன்.

அதன் பின்னர் அவள் இங்ஙனம் மொழிந்தனள்:—"ஓ பாக்கியவானே! அமுதத்திலிருந்து ஆவிர்ப்பவித்த அப்ஸரஸுக்களின்

குலமொன்று உளதென யான் கூறினேனல்லவா? அக்குலத்தில் மிக நீண்டு நேர்த்தியான நேத்திரங்களையுடையவளான மதிரா யென்று பெயருடைய மாது ஒருத்தி உதித்தனள்; அவளை சித்திர ரதன் என்கிற மன்னவர் மணம்புரிந்தனர்; அவர்களுக்கு காதம்பரீ யென்று பெயர்பெற்றவளான ஓர் பெண்மணி பிறந்தனள். அவ ளோ, எனது ஜன்மம் முதற்கொண்டு ஒரே ஆஸனத்திலும் ஒரே சயனத்திலுமிருந்து, ஒரே வகையான அன்னபானாதிகளை யருந்தி வந்து, எனது இரண்டாவது இருதயம்போல் அளவற்ற அன்பிற் கும் நம்பிக்கைக்கும் நல்லிடமான பிறவித்தோழி. அவளும் நானு மாக நர்த்தனம் ஸங்கீதம் முதலிய கலைகளை ஓரிடத்திற்றானே கற்று வந்தோம். கட்டு திட்டங்களேதுமில்லாது களிப்புடனே சிசுக்களுக் கேற்றவாறு வேண்டியமட்டும் விளையாடிக்கொண்டு குழந்தைப்பரு வத்தையும் கழித்துவந்தோம். அவளோ, எனது இப்பாழுஞ்செய் தியினாலேயே துயரமுற்றவளாய், 'மஹாச்வேதை மஹத்தான சோகத்தை யடைந்திருக்கையில் எப்படியும் நான் மணம் புரிந்து கொள்ளப் போவதில்லை.' என்று நிச்சயம் பண்ணினள். மேலும் தோழிமார் முன்னிலையில் 'நான் இச்சிக்காமலிருக்கையில் என் தந்தை யெப்படியாவது பலாத்காரமாக எவனுக்கேனும் ஒருக்கால் விவாஹம் செய்துகொடுக்க விரும்புவாராகில், அப்பொழுது நான் உபவாஸமிருந்தோ, அக்கினியில் வீழ்ந்தோ, கழுத்திற் கயிறிட்டுத் தூக்கிக் கொண்டோ, விஷத்தையுண்டோ உண்மையாய் எனதுபிரா ணனை மாய்த்துக்கொள்வேன்.' என்று சபதங்கூறினள். கந்தர்வராஜ னான சித்திரரதனும் தனது புதல்வியின் திடமான அவ்வார்த்தைக ளனைத்தையும் கர்ணபரம்பரையாகக்* கேள்வியுற்றான். பின்னர் பல நாட்கள் செல்ல, பூர்ணமாக வாலிபப்பருவத்தைப் பெற்றிருப்பவ ளாகத் தனது புதல்வியைப் பார்த்து, மிகுதியான மனத்துயரத்தி னால் பரவசமாகி, அவர் ஒருநொடிப்பொழுதேனும் கவலையற்று ஸுகம் பெறவில்லை. மகள் ஒருத்தியேயானதாலும் அவளை யேது ங்கூறவுங்கூடவில்லை. வேறு உபாயமொன்றையுங் காணாதவராய், 'இதுதான் இந்த ஸமயத்திற்கேற்றது.' என்று நினைத்து, பட்ட

*கர்ணபரம்பரையாக = ஒருவரிடமிருந்து வேறொருவரால், அவரிடமி ருந்து மற்றொருவரால் வரிசையாக செவியுறப்பட்டு பரவுதல்.

மஹிஷியான அம்மதிராயுடனும் ஆலோசித்து, 'குழந்தாய்! மஹா ச்வேதே! உனது ஸம்பதத்திஞலேயே துயரமுற்ற மனதையுடைய எமக்கு இதோ வேறென்றும் வந்து தோன்றியதே; இப்பொழுது காதம்பரிக்கு நல்வார்த்தை கூற நீதான் சதி.' என்கிற செய்தியை 'கூரோதன்' என்கிற சஞ்சுகியினிடம் செப்பி, இன்றைக்கே விடியற்காலத்தில் எனதிடம் அனுப்பினர். பிறகு நான் மூத்தோரது வார்த்தைகளில் வைத்திருக்கும் மதிப்பினுலும், ஸகியினிடமிருக்கும் அன்பினுலும் 'ஸகி! காதம்பரி! முன்னமே துயரமுற்றிருக்கும் என்னை இன்னும் என் அதிகமாய்த் துயரமுறச் செய்கின்றனை? நான் பிழைத்திருக்க விரும்புவாயாகில், பெரியோரது பேச்சைப் பயனுள்ளதாகப் பண்ணுவாயாக.' என்று சொல்லச்சொல்லி அத்தரளிகையையும் கூரோதனுடன் காதம்பரியினிடத்திற்கு அனுப்பினேன். அவள் சென்ற சற்று நேரத்துக்குள்ளாகவே மஹாபாக்கியசாலியான நீர் இவ்விடம் வந்து சேர்ந்தீர்.'' என்றுரைத்து, பிறகு மௌனமாயிருந்தனள்.

இதற்குள்ளாக இருஷிகுமாரனுடைய வதையிஞலுண்டான மஹாபாதகத்தை வஹிக்கின்றதுபோலிருக்கும், சோகமென்னும் அக்கினியினல் எரிக்கப்பெற்ற மத்தியபாகத்தையுடைய மஹாச்வேதையின் இருதயத்தைக்கண்டு அவ்வாறு நடித்துக் காட்டுபவன் போல், சந்திரன் உதித்தனன்*. கிரமமாக சந்திரனும் சற்று மேலோங்கிவர, சந்திராபீடனும் மஹாச்வேதை நித்திராபோயிஞளெனக் கண்டு, தளிர்களாலாக்கிய படுக்கையில் மெதுவாக உட்கார்ந்தனன். 'இந்த வேளையில் என்னை விட்டுப் பிரிந்திருப்பதால் வைசம்பாயனன் என்னவென்று சிந்தித்துக்கொண்டிருக்கின்றானே? ஏழைப் பத்திரலேகையும் என்ன எண்ணுகின்றனளோ? இராஜகுமாரர்கள் அனைவருந்தான் என்ன நினைக்கின்றனரோ?' என்று சிந்தித்துக் கொண்டே நித்திராபோயினன்.

பிறகு பொழுது விடிந்ததும் மஹாச்வேதை காலையிற் செய்ய வேண்டிய ஸந்தியாவந்தனச் சடங்குகளைச் செய்துவிட்டு, ஓர் சிலா

---

*களங்கத்துடன் கூடிய சந்திரன், பிராம்மணவதையென்னும் பாவமும், சோகமும் சேர்ந்த (இவ்விரண்டையும் கருப்பாக வர்ணிப்பது வழக்கம்) மஹாச்வேதையின் இருதயம்போலிருக்கின்றான் என்பது கருத்து.

தலத்திலுட்கார்ந்து, மஹாபரிசுத்தமான அகமர்ஷணமந்திரங்களை ஜபித்துக்கொண்டிருக்க, சந்திராபீடனும் விடியற்காலத்தில் அனுட்டிக்கவேண்டிய விதிகளையெல்லாம் நிறைவேற்றியவுடன் தரளிகையானவள் வெகு திரத்தன்மை பொருந்திய பதினறு பிராயம் வாய்ந்த கேயூரகன் என்கிற கந்தர்வ வாலிபனுடன் காலையில் வந்து சேர்ந்தாள். அவள் வந்ததும், 'இவர் யார்?' என்று வெகுநேரம் ஆவலுடன் சந்திராபீடனைப் பார்த்துவிட்டு, மஹாச்வேதையின் ஸமீபத்திற் சென்று அவளுக்கு வந்தனஞ்செய்து வணக்கத்துடன் உட்கார்ந்து கொண்டனள். பின்னர் கேயூரகனும் செவ்வெனச் சென்னி வணங்கி வந்தனஞ்செய்து, மஹாச்வேதையினல் கண்கொண்டு காட்டப்பெற்ற சற்றுத் தூரத்திலிருந்த ஓர் கற்பாறையின்மீது உட்கார்ந்தான். உட்கார்ந்தபின்பு, அங்கு அதுகாறும் காணப்பெருத மிக மேன்மையான சந்திராபீடனது வடிவத்தைக் கண்டு மிகவும் ஆச்சரிய முறலானன்.

மஹாச்வேதையானவள் ஜபத்தை முடித்ததும், தரளிகையை நோக்கி 'நீ எனதன்பார்ந்த தோழியான காதம்பரியைக் கண்டனையோ? அவள் க்ஷேமமா? நான் கூறியபடி அவள் செய்யப் போகின்றனளோ?' என வினவினள். பின்னர் அத்தரளிகை விநயத்துடன் தலைவணங்கிக்கொண்டு, காதணியும் சற்றுச் சரிந்து தொங்க, மிக மதுரமான மொழியுடன் இவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்தனள் :—'இராஜபுத்திரி! நான் இராஜகுமாரியான காதம்பரியைக் கண்டேன். பலவகையிலும் அவள் ஸௌக்கியமாகவே இருக்கின்றனள். தாம் சொல்லியனுப்பிய செய்தியனைத்தையும் செப்பினேன்; அதைக் கேட்டு, இடைவிடாது கண்ணீர் சொரிந்தழுது அவள் மொழிந்த மறுமொழி யனைத்தையும் அவளால் அனுப்பப்பெற்ற அவளது வீணை யேந்துபவனன இக் கேயூரகனே கூறுவான்.' எனச் சொல்லி முடித்தனள். அவள் முடித்தபின், கேயூரகன் கூறத் தொடங்கினன்:—"இராஜகுமாரி! மஹாச்வேதே! காதம்பரீ தேவியானவள் உமது கழுத்தைத் திடமாகத் தழுவிக் கொண்டவளாக இங்ஙனம் உமதிடம் விஞ்ஞாபனம் பண்ணுகின்ருள் :—'இத்தரளிகை யெனதிடம் வந்து யாதொன்று மொழிந்தனளோ—நீ சொல்லவேண்டும்—அஃதென்ன, மூத்தோரது வார்த்தை

களை அநுஸரிக்கும் விதமோ? அல்லது என் சித்தத்தைப் பரீக்ஷிக்கும் வகையோ? அன்றேல் அகந்தனில் தங்கி வஸிக்கும் குற்றத்தைச் சுட்டிக்காட்டும் நிபுணமான நிந்தையோ? இல்லையேல் பிரீதியை விலக்குவதிலிருக்கும் விருப்பமோ? இல்லை, பக்தஜனத்தைப் பரிஹரிக்கும் உபாயமோ? அன்றேல் சினந்தானே? ஸஹஜமான பிரீதிப் பெருக்கினல் நிரம்பிய எனது இருதயத்தை நீ முன்பே அறிவாய். இவ்வாறு வெகு கடுமையாகக் கூறுவதில் உன்றனக்குக் கூச்சமுமில்லையோ? அவ்வளவு மிகவும் இனிதாக மொழியுங்குணமுடைய நீ, இப்படிப் பிரியமில்லாதபடி பேசுவதற்கு எவரிடம் கற்றனை? இரஸிகர் எவரும் கவலையற்றிருப்பினும் இறுதியிற் சுவையற்றதான இத்தகைய இழிதொழிலிற் சித்தத்தைச் செலுத்தவேமாட்டார்; அப்படியிருக்க, பெருந்துயரத்தினல் தாக்குண்ட மனத்தையுடைய என்னைப்போன்றவர் இத்தகைய செயலைச் செய்யப் புகுவதெங்ஙனம்? தொழாது துக்கங்களால் மனது துன்பமுற்றிருக்கையில் ஸுகங்களில் விருப்பமேது? அமைதிதான் எவ்வாறுண்டாகும்? போகங்கள்தான் எப்படிப்பட்டவை? சிரித்தல் முதலியவைகளைச் சிந்திக்கவும் வழியுண்டோ? எனதன்பார்ந்த தோழிக்கு இத்தகைய நிலைமையை யுண்டாக்கி, விஷம்போல் விரும்பக்கூடாத கொடுஞ் செயல்களைச் செய்யும் வெகு குரூரத்தன்மையனான இந்த மன்மதனை நான் எங்ஙனம் திருப்தி செய்துவைப்பதியலும்? கமலமலர்கள் கதிரவன் அஸ்தமிப்பதாற் சோர்ந்துபோக, அம்மலர்களுடன் ஸஹவாஸ பரிசயத்தினுல் சக்கிரவாகப் பேடுகளுமல்லவா கணவனுடன் கூடியிருக்கும் ஸுகங்களை விலக்கி விடுகின்றன? அவ்வாறிருக்க மங்கையருக்குக் கேழ்க்கவும் வேண்டுமோ? மேலும், கணவனைவிட்டுப் பிரிந்திருப்பதால் துயரமுற்று, பிற புருடரது பார்வையைப் பரிஹரித்த என் பிரியஸகியான உன்னால் வஸிக்கப்பெற்ற எனது இந்த இருதயத்தினுள் வேறொருவர் எங்ஙனம் புகக்கூடும்? பர்த்தாவின் விரஹத்தினல் சோகங்கொண்டு, அருந்தவஞ்செய்து அங்கங்களை யிளைக்கச்செய்யும் எனது பிரியமுள்ள தோழியானவள் மஹத்தான துன்பத்தை யனுபவிக்குமிடத்து, இதை யான் அறிந்திருந்தும், தனது ஸுகமொன்றையே விரும்புபவளாய் எவ்வாறு மணம்புரிந்து கொள்வேன்? என்றனக்கு ஸுகந்தான் எப்

படியுண்டாகும்? உனதிடம் வைத்த அன்பினுற்றுன் இவ்விஷயத்தில் நான் கன்னிகைகளுக்குப் பொருந்தாத ஸ்வாதந்தரியத்தைக் கைப்பற்றியவளாய் அபகீர்த்தியையும் அங்கீகரிக்கத் துணிந்தேன்; வணக்கத்தையும் புறக்கணித்தேன்; மூத்தோர் வார்த்தையையும் அதிக்கிரமித்துவிட்டேன்; உலகத்தாரது அபவாதத்தையும் அலக்ஷியம் செய்தேன்; மாதர்களுக்கு ஸஹஜமான ஆபரணமெனத்தகும் இலஜ்ஜையையும் இழந்துவிட்டேன். அப்படிப்பட்டவள்—நீ சொல்—எவ்வாறு இக்காரியத்திற் பிரவேசிப்பாள்? ஆனதுபற்றி இதோ கைகூப்பி வந்தனஞ் செய்கிறேன்; இதோ உனது தாள்களைப் பிடித்துக் கொள்கின்றேன்; என்மீது அருள்புரியவேண்டும்; எனதுயிருடன் இங்கிருந்து கானகமேகிஞய்; கனவிலும் இவ்விஷயத்தை மனத்தினில் வைக்காதே.' இதுதான் அவள் மொழிந்தது." எனக் கூறினன்.

மஹாச்வேதையும் அதைக் கேட்டு வெகு நேரம் ஆலோசித்துவிட்டு, 'நீ போ; நானே நேரில் வந்து தகுந்தவாறு ஏற்பாடு செய்வேன்.' என்று சொல்லி கேயூரகனை அனுப்பி விட்டாள். கேயூரகன் போனதும், சந்திராபீடனை நோக்கி இவ்வாறுரைத்தனள்:—' இராஜபுத்திர! ஹேமகூடமோ இரமணீயமானது; சித்திரரத ராஜதானியும் விசித்திரமானது; கிம்புருஷர்களது தேசமும் மிகக் குதூஹலத்தையுண்டாக்கக் கூடியது; கந்தர்வஜனங்களும் வெகு ஸௌந்தரமானவர்; காதம்பரியும் ஸரஸமான இருதயத்தையுடையவளும், மேலான மஹிமைதங்கியவளுமாயிருப்பவள். அங்கு செல்வது அதிகசிரமமாகமாட்டாது என்று நினைப்பீராகில், பெருங்காரியமும் கெட்டுப் போகாமலிருக்குமாஞல், இதுகாறும் காணப்பெருத விஷயங்களைக் காண்பதில் மனத்துக்கு ஆவலுமிருப்பின், எனது மொழியையும் நீர் அநுஸரிப்பீராயின், அப்பொழுது எனது வேண்டுகோளை விஞக்காமலிருப்பீராக. மிகவும் அழகிய ஹேமகூடத்திற்கு இங்கிருந்து என்னுடன் வந்து, என்னைவிட வேற்றுமை யேதுமில்லாதவளான காதம்பரியைப் பார்த்துவிட்டு, மதிகேட்டினல் மனத்தினில் தோன்றிய அவ்வளவு அஞ்ஞானவிகாரத்தையும் அகற்றி, ஒருநாள் அங்கு தங்கியிருந்து நாளையதினம் திரும்பிவந்துவிடுவீர். காரணமேதுமில்லாமலே பந்துவான உம்மைப் பார்த்த மாத்திரத்திலேயே,

வெகு நாட்களாக துக்கமாகும் இருள்களின் திரளைப் பெற்றிருந்த எனது சித்தம் மூச்சுவிட்டு ஆறுதலை யடைந்ததுபோலும். எனது இச்செய்தியைச் செவியுறச் செய்ததால், இப்பொழுது சோகமும் ஸஹிக்கக் கூடியதுபோலாயினது. ஸத்புருடரது சேர்க்கைகள் துயரமுற்ற ஜனத்தையும் களிப்புறச் செய்கின்றன. உம்மைப்போன்றவரது குணாதிசயங்களும், பிறருக்கு இன்பங்களை யளிப்பதிற்றானே கடமைப்பட்டவைகளாயிருக்கின்றன.' என்று மொழிந்தவளான அந்த மஹாச்வேதையை நோக்கி சந்திராபீடன் 'அம்மணி! தம்மைத் தரிசித்ததுமுதல் நான் உமக்கு ஸ்வாதீனமாய் விட்டேன்; செய்யவேண்டிய காரியங்களிற் சங்கையின்றி இஷ்டப்படித் தாம் கட்டளையிடலாம்.' எனக் கூறி அவளுடன் ஏகினன்.

கிரமமாக சந்திராபீடன் ஹேமகூடஞ் சென்று, கந்தர்வராஜனது மாளிகையை யடைந்து, தங்கமயமான தோரணவாயில்களையுடைய ஏழு அங்கணங்களைத் தாண்டிக் கொண்டு, கன்னிகைகளது அந்தப்புரத்தின் வாயிலை யடைந்தனன். மஹாச்வேதையைக் கண்டு பொற்பிரம்பேந்திய கரத்துடன் விரைந்தோடி தூரத்திலிருந்தவாறே வந்தனஞ் செய்பவரான வாயிற்காப்பவரால் வழிகாட்டப்பட்டவனாய் உட்சென்று, கன்னிகைகளிருக்கும் அந்தப்புரத்தைக் கண்ணுற்றனன். அங்கு எண்ணமுடியாத பெண்மணிகள் ஆயிரமாயிரமாய்க் குவிந்திருந்தனர்; இவ்வளவென்று அறிய, மூவுலகங்களிலுள்ள ஸ்த்ரீஸமூஹமனைத்தும் ஓரிடத்திற் சேர்க்கப்பெற்றதுபோல் தோற்றியது; புருஷரில்லாது புதிதான ஓர் பிரம்மஸ்ருஷ்டிபோலிருந்தது; அனேக கல்பங்களிற் படைத்தற் பொருட்டு முன்னதாய் ஸ்ருஷ்டித்துச் சேர்த்துவைக்கப்பட்ட பெண்களின் களஞ்சியம்போற் புலப்பட்டது; மேலும் அவ்விடம் சிருங்காரமயமாகவும், ஸௌந்தரிய ஸ்வரூபமாகவும், குதூஹலமயமாகவும் இருப்பதுபோலக் காணப்பெற்றது.

அவ்விடத்திற் கன்னிகைகளுக்கு அவர்களுடைய கண்களே காதிலணியும் கருங்குவளைமலர்களாகவும், மூச்சுக்காற்றுகளே நறுமணங்கமழும் வாஸனைவஸ்துக்களின் கலப்புகளாகவும், மொழிகளே வீணையின் த்வனிகளாகவும், கரதலங்களே விலாஸமாக வைத்துக் கொள்ளும் கமலமலர்களாகவும், தமது தேஹகாந்தியே முக்காடணி

யும் ஆடையாகவும், கோமளமான விரல்களின் சிவப்பே சரணங்களிலி டப்படும் செம்பஞ்சுக் குழம்பாகவும் இருந்தன. அங்கு, செம்பஞ்சுக் குழம்பிடுதலும் பாதங்களுக்குப் பெரும் பாரமென்றும், மலர்களைத் தலையில் தரிப்பதும் மஹத்தான சிரமமென்றும், தோழிமார்களைக் காணும்போதுக் கைலாகில்லாது எழுந்திருத்தலும் வெகு ஸாஹஸ மெனவும், பூப்பறிக்கையில் இரண்டாவது புஷ்பத்தைப் பறித்த லும் பெண்பாலருக்குப் பொருந்தியதல்லவென்றும், கன்னிகைக ளுக்குற்ற கலைகளில் மாலைகட்டுதலும் மெல்லிய மேனியரல்லாதார் தொழிலெனவும் கருதப்படுகின்றது.

இவ்வகையான அப்பிரதேசத்தின் உட்புறத்திற் சிறிது தூரம் அவன் போனதும், இங்குமங்குமாய்த் திரிகின்ற காதம்பரியின் அருகிலிருக்கும் பரிஜனத்தின் அதிமனோஹரமான அந்தந்த ஸல் லாபங்களைக் கேட்டுக்கொண்டே, காதம்பரியினது மாளிகையின் ஸமீ பம் போய்ச் சேர்ந்தனன்.

ஆங்கு உத்தியானவனக் கொடிகளிலிருந்து சொரிந்த மலர்ப் பொடிகளின் குவியல்களால் மணற்குன்றுகளுடன் கூடியது போன்ற தும், பூஜைக்கென்று வரிசையாயிடப்பெற்ற செண்பகப்பூக்களால் தங்கத்திவுபோலிருப்பதும், தொழுவதற்கென்று வந்து இருபுறமும் நிற்கும் ஸ்த்ரீகளின் வரிசைகளை நோக்குங்கால் இலாவண்ணியமய மான மதில் கொண்டு ஏற்படுத்திய வெகு நீண்ட வீதியின் முன்புற த்துடன் கூடியதுபோல் தோற்றுவதுமான பாதை யொன்றைப் பார்க்கலானான். அங்கு உட்புறத்தில் ஆற்றுநீர்ப் பெருக்குப்போல் ஆபரணஜாலங்களின் கதிரொளிகள் வீழ்ந்து ஒருமிக்கச் சேர்ந்து பாய்வதையும் பார்வையிட்டான். அதன் நடுவில் ஆற்றுவெள்ள த்தை யெதிர்த்துப் போவது போற் சென்று, வாயிற் காப்பவரால் வட்டமிட்டுச் சூழப்பெற்ற முன்புறத்தையுடையதான 'ஸ்ரீமண்டப த்தை'க் கண்டான்.

அந்த மண்டபத்தின் மத்தியபாகத்தில் மிகவும் ஒளிவீசும் ஆபரணஸமூஹங்களை யணிந்து கொண்டு, கற்பகக் கொடிகளின் கூட் டங்களுக் கொப்பப் பல்லாயிரக்கணக்காகச் சுற்றிலும் வட்டமி ட்டு உட்கார்ந்திருக்கும் கன்னிகைகளால் சூழப்பெற்றவளாய், நீல நிறமான மேல்விரிப்பால் மறைக்கப்பெற்றதும் அதிக பெரிதல்லா

தருமான ஓர் கட்டிலின் ஓரத்தில் வெண்ணிறத்தலையணையிற் சற்று புயத்தை மடித்து ஆதாரமாக வைத்துக்கொண்டு அமர்ந்திருப்பவளான காதம்பரியைக் கண்டான். கீழே மணிமயமான தரையின்கண் இவளது பிரதிபிம்பம் விழுந்திருப்பதால் நாகங்களால் அபஹரித்துக்கொண்டு போகப் படுபவள் போலவும், பக்கங்களில் நாற்புறமுமிருக்கும் இரத்தினச் சுவர்களில் திக்பாலகரால் எடுத்தேகப் படுபவள் போலவும், மேலே மணிமண்டபங்களுள் தேவர்களால் தூக்கிக்கொண்டு போகப் படுபவள் போலவும் தோற்றினள்; இவளிடமிருக்கக்கூடிய அவ்வளவு புண்ணியத்தைப் பண்ணுததைப்போல் பாலியப்பருவத்தை அப்பொழுதே விட்டு வந்தனள்; பாதங்களில் அணிந்த ஆபரணங்களிலிழைத்திருக்கும் மணிகளின் கிரணங்களோவென ஸந்தேஹத்தை யுண்டுபண்ணுபவைகளும், மிகவும் கோமளமாயிருக்கின்றனவாதலின், நகச்சந்துகளின் வாயிலாக இரத்த தாரையைக் கக்குகின்றவைபோல் தோற்றுபவையுமான விரல்களுடன் கூடிய பாதங்களால் அவள் பவளநீர்மயமான நதியைப் பெருக்குபவள் போல் பார்க்கப்படலானள்; அவளது துடைகளிரண்டும், பிரம்மதேவனது கரத்தினால் வெகு திடமாகப் பிடிக்கப்பட்ட இடையிலிருந்து நழுவி, கடிதடமாகும் கற்பாறையின்மீது மோதியதால் இருபகுதியாகப் பிரிந்த இலாவண்ணியரஸபிரவாஹம் போலிருந்தன; பிற புருஷர்களது பார்வையைப் பொறுமையுடன் பரிஹரிக்க முயல்வதுபோல், நாற்புறமும் வெகு நீண்ட கிரணமண்டலங்களைப் பரப்புவதான மேகலைக்கொடியானது அவளால் கடிதடந்தனிற் சுற்றினும் வட்டமாகப் பூணப்பெற்றிருந்தது; சுழிந்து ஆழமான அவளது நாபியானது வெகு ஸுகுமாரமானதுபற்றி, ஸ்ருஷ்டிக்குங்கால் நான்முகன் பரிசிக்கையில் அழுந்திய அவரது அங்குலி முத்திரைபோல் தோற்றியது; நகங்களின் கிரணஜாலங்களைப் பொழிவதான அவளுடைய கரங்களிரண்டும், மாணிக்கவளைகளின் பாரத்தைச் சுமக்கும் சிரமத்தினால் வியர்வை நீர்த்தாரைகளைச் சொரிகின்றவைபோல் விளங்கின; புதிய வாலிபப் பருவமென்னும் வாயுவினால் அலைக்கப்பெற்ற காதலாகும் கடலிற் கிளம்பிய இரண்டு அலைகளுக்கொப்பான பவளக்கொடிபோற் சிவந்த உதடுகளாலும், மத்யம் கிளம்பிய மாணிக்கச் சிப்பிகளின் ஸம்புடங்கள்போல் செவ்வெண்

மையான நிர்மலக் காந்தி பொருந்திய இரு கபோலங்களாலும், இரதிதேவியின் இரத்தினமயமான வீணை மீட்டுங்கோல் போல வெகு அழகிய நாசியாலும், நெடுகச் செல்லமுடியாது தமது போக்கைத் தடுக்கும் காதுகளிடங் கோபங் கொண்டவைபோல் சிறிது சிவந்த கடைக்கண்களையுடைய நேத்திரங்களாலும் அவள் மிகவும் நேர்த்தியாய் பிரகாசித்தனள்; மிக்க மதங்கொண்ட யௌவனமாகும் குஞ்ஜரத்தின் மதநீர்ப் பெருக்குகள் போன்ற இரண்டு புருவங்களாலும், முகத்திற் பற்றியிருக்கும் மனச்சிலைச் சாந்துகொண்டு இடப்பட்ட திலகத்தினாலும் அவளது நெற்றிக்கட்டுத் துலங்கியது; சிறந்ததங்கத் தகட்டோலையாலாக்கிய ஓர் வகையான ஆபரணம் போன்ற அவளது காதுகளில், மரகதமணிமயமான குண்டலங்கள் ஊசலாடின; அவளது நீண்ட கூந்தல்கள் வகுட்டிலணிந்த சூடாமணியிலிருந்து நெற்றியைச் சிவக்கச் செய்துகொண்டு பெருகும் கதிரொளிகளால் கழுவப் பெற்றிருந்தன; இரவில் கண்விழித்ததால் சிரமமடைந்தவைகளான தன்னிடம் பழக்கமுள்ள ஆண் பெண்களான சக்கிரவாகப்பறவைகள் தூங்குவதற்கு, கிரீடைகளுக்காக ஏற்படுத்திய சிற்றாறுகளிற் கமலமலர்களின் தூள்களைக் கொண்டு சிறிய மணற்குன்றுகளைச் செய்வித்துக் கொண்டிருந்தனள்; தன்கையால்வளர்த்தகொடி முதன்முதற் பூப்பூத்ததென்று சொல்லிக்கொள்வதற்கு வந்த உத்தியானவனங்காப்பவளுக்கு ஆபரணங்கள் அனைத்தையுமளித்து அவளை கௌரவப்படுத்திக் கொண்டிருந்தனள்; வனத்திலிருந்து தொன்னை நிறம்பப் பூக்களையும் கனிகளையும் கொண்டுவந்திருக்கும் கிரீடாபர்வதத்திற் குடியிருப்பவளும், அறியக்கூடாமல் ஏதோ தட்டுத்தடுமாறிப் பேசுபவளுமான பச்சிலைக்குரத்தியை நகைப்பையுண்டாக்குமாறு அடிக்கடிப் பேசச்செய்துவந்தனள்; அவள் பார்வதியைப் போல் ச்வேதாம்சுகம் * கொண்டு சிரஸ்ஸை அலங்கரித்துக்கொண்டும், கற்பகக் கொடிபோல் காமபலத்தைத் தருபவ‡ளாகவுமிருந்தனள்; அருகில் எதிர்முகமாயுட்கார்ந்து அடிக்கடி சந்திராபீடனைப்பற்றிப் பற்பலஸல்லாபம்செய்துகொண்டு, அவனது ரூபத்தையே வர்ணித்துக் சொண்டிருக்கும் கேயூரகனை

---

* ச்வேதாம்சுகம் = வெள்ளைவஸ்திரம், சந்திரன்.

‡ காமபலம் = மன்மத ஸம்பந்தமான பலம், இஷ்டமான பயன்.

நோக்கி, யாவர் இவர்? எவருடைய புத்திரர்? எப்பெயர்கொண்ட வரும் 'அவரது ரூபம் எத்தகையது? யாது பிராயம்? என்ன சொன்னார்? அவரிடம் நீ யாது கூறலானாய்? நீ பார்த்து எவ்வளவுநேரம் ஆயினது? இவருக்கு மஹாச்வேதையுடன் பரிசயந்தான் எவ்வாறுண்டாயிற்று? இவர் இங்கு வரப்போகின்றாரோ?' என வினவினவாறிருந்தனள்.

காதம்பரியினது சந்திரபிம்பம் போன்ற வதனத்தின் சீர்மையைக் கண்டதும், அவனது இருதயமானது (சந்திரனைக்கண்ட) கடல் நீர்போல் கொந்தளித்தது. பின்னர் இவன் மனத்தில் தோன்றியதாவது :—'எனது மற்ற இந்திரியங்களையும் பிரம்மதேவன் ஏன் கண்களாகவே படைக்காமற் போனான்? தடையேதுமில்லாது இவளைப்பார்க்கும் வண்ணம் இக்கண் அவ்வாறு என்ன நல்வினையைச் செய்ததோ? ஓ! இரமணீயங்களெல்லாம் ஓரிடத்திற் சேர்ந்திருக்குமாறு வெகு விசித்திரமாக இவ்வடிவத்தை நான்முகன் நன்கு படைத்தனன்! இவ்வளவு மேன்மையான ரூபத்தைப் படைப்பதற்கு வேண்டிய பரமாணுக்கள் எங்கிருந்து கிடைத்தனவோ? இவளை யுண்டு பண்ணுகையில் பிரம்மதேவனது கரதலம்பட்டுண்டான நோவினால் இரு நேத்திரங்களிலிருந்தும் நழுவிய கண்ணீரின் பிந்துக்களினின்றும் உண்மையாய் உலகத்திலுள்ள ஆம்பல், அம்புயம், கருநைதல், செங்குவளை யென்னும் இம்மலர்கள் யாவும் உற்பத்தியாயின.' என்று இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருக்கையிற்றானே அவளது நேத்திரங்களிரண்டிலும் இவனுடைய திருஷ்டியும் வீழ்ந்தது. அக்காலை 'கேயூரகன் கூறிய அப்புருடன் நிச்சயமாய் இவர்தான்.' என்று யோசிப்பவளான அவளும், சிறந்தவடிவத்தைப் பார்த்த வியப்பினால் கண்களை மலரவிழித்து நெடுநேரம் அவனை யசையாது பார்க்கலானாள். அவனைப் பார்த்ததும், முதலில் மயிர்க்கூச்சு எழும்பியது; பின்பு ஆபரணங்களின் ஒலி யிசைந்தெழும்பியது; அதன் பின்னர் காதம்பரி யெழுந்தனள். பிறகு மன்மதன் தான் அவளுக்கு வியர்வையை யுண்டாக்கினன்; பரபரப்புடன் எழுந்திருத்தலாலுண்டான சிரமமோ அதற்கு ஓர் வியாஜமாயிற்று. துடை நடுக்கமே அவளது போக்கைத் தடுக்கியது; தண்டை சிலம்புகளின் ஒலி கேட்டு ஓடிவந்த அன்னப்பறவைகளின் கூட்டமோ வீணிற்

பழிக்குப் பாத்திரமாயிற்று *. பெருமூச்செறிதலே ஆடையை அசைத்தது; சாமரைக் காற்றோ வெறுங்காரணமாயினது. ஆனந்தமே கண்ணீரைப் பெருகச் செய்தது; காதிலணிந்த மலரிலிருந்து தீர்ந்த பூம்பொடியோ பொய்க் காரணமாகப்போயிற்று. வெட்கமே வாய்ப்பேச்சைத் தடுத்தது; கமலமலர்போன்ற முகத்தின் நறுமணமறிந்து வந்த வண்டுகளின் திரள்களோ (வாய் திறவாமைக்கு) வழியாக ஆயிற்று.

காதம்பரி யானவள், சிரமப்பட்டு சிறிதடி தூரஞ்சென்று, பார்த்து நெடுநாளாய் விட்டதுபற்றி அபரிமிதமாயுண்டான அன்புடன் கூடியவளான மஹாச்வேதையை மிகவும் ஆவலுடன் கண்டத்திற் கட்டிக்கொண்டனள். மஹாச்வேதையும் நன்கு கழுத்தைத் தழுவிவிட்டு அவளை நோக்கி மொழிந்தனள்:—'ஸகி! காதம்பரி! பாரதவர்ஷந்தன்னில் பிரஜைகளைப் பீடைகளினின்றும் பாதுகாப்பவரான 'தாராபீடன்' என்று பெயர்பெற்ற மன்னவர் ஒருவருளர். அவருடைய புதல்வரான 'சந்திராபீடன்' என்னும் இவர், கற்றூண்களுக்கொப்பான தமது புயங்களால் புவனத்தின் பீடைகளையெல்லாம் போக்கி திக்விஜயம் செய்துகொண்டுவருகையில் இவ்விடம் வந்து சேர்ந்தனர். இவரோ தற்செயலாகவே பார்த்தது முதல் எனக்கு நிஷ்காரணமானபந்துவாக ஆய்விட்டனர். பற்றுகளனைத்தையுமொழித்து வெகு வன்மையுற்றிருக்கும் எனது மனப்போக்கையும், இயற்கையாகவே மிகவும் ஸரளமான தமது சிறந்த நற்குணங்களாகும் கயிறுகளால் கவர்ந்திழுக்கின்றனர். தாக்ஷிண்ணியத்திற்குப் பரவசமாய், நிஷ்காரணமாகவே நேசப்பான்மை பொருந்திய, கபடமில்லாது களங்கமற்ற நெஞ்சத்தையுடையவரான இத்தகைய கற்புடைய திறமை பொருந்தியவர் கிடைப்பது மிகவும் அரிதல்லவோ? பிரம்மதேவனது ஸ்ருஷ்டிக்குந் திறமையையும், ஸ்ரீதேவிக்கு இத்தகைய ஸ்தானவிசேஷத்திலிருக்கும் ஒப்பற்ற பற்றையும், நல்ல அதிபதியை அடைந்ததால் இம்மேதினிக்குண்

* சிலம்போசையைக் கேட்டுத் தங்கள் இனத்தின் கண்டத்தொனியென்று நினைத்து ஓடிவந்த அன்னங்கள் காலைச் சுற்றிக் கொள்வதால் அவள் போக்குத் தடைப்படவில்லை; துடை நடுக்கமே தடை செய்தது என்று கருத்து.

டான இன்பத்தையும், இம்மண்ணுலகுக்கு விண்ணுலகினும் மேலாக உண்டான மேன்மையையும், மானிட மாதரது நேத்திரங்கள் நேர்மையாகப் பயன் பெற்றவகையையும், ஸகல கலைகளும் ஓரிடத்திற் சேர்ந்திருக்கும் சீர்மையையும் நீயும் என்னைப்போல் தெரிந்துகொள்ளவேண்டுமென்று கருதியே இவரை வலுவில் இங்கு அழைத்துவந்தேன். எனதன்பார்ந்த தோழியான உன்னைப்பற்றியும் இவரிடம் விசேஷமாகக் கூறியிருக்கின்றேன். ஆகையால், இவர் இதுகாறும் காணப்பெருதவரென்கிற வெட்கத்தை விட்டுவிட்டு, பழக்கமற்றவரென்கிற அவநம்பிக்கையை யகற்றி, இவரது ஒழுக்கத்தை யறியோமென்கிற சங்கையை ஒழித்துவிட்டு என்னிடத்திலிருப்பதுபோலவே நீ இவரிடத்திலும் வேற்றுமையின்றி இருப்பாயாக. இவர் உனக்குத்தோழனுகவும், பந்துவாகவும், பரிஜனமாகவும் ஆகின்றனர்.' என்று அவள் கூறிமுடித்ததும், சந்திராபீடன் அவளுக்கு வந்தனஞ் செய்யலானுன்.

காதம்பரியும் காதலாலுண்டான மனக்குழப்பத்துடன் பணிந்துவிட்டு, மஹாச்வேதையுடன் மஞ்சத்தின்மீது அமர்ந்தனள். வெகு பரபரப்புடன் பரிஜனமெடுத்துவந்த பொற்கால்களையுடைய பீடந்தனில் சந்திராபீடனும் உட்காரலானுன். மஹாச்வேதையின் அபிப்பிராயத்திற்கிணங்க காதம்பரியின் கொள்கையைக் கண்டுகொண்ட வாயிற்காக்கும் மங்கையர் வாயை மூடிக்கொண்டு, முகந்தனிற் கரம்வைத்து, சப்தங்களை யடக்கும் ஸம்ஞைசெய்து, புல்லாங்குழல்களின் ஒலிகளையும், வீணைகளின் கோஷங்களையும், ஸங்கித சப்தங்களையும், புகழ்கூறும் மாதரது வாழ்த்துத் தொனிகளையும் எங்கும் தடுத்துவிட்டனர். காதம்பரி யெழுந்து வெகு விரைவாக ஊழியரெடுத்துவந்த ஜலத்தினுல் தானுகவே மஹாச்வேதையின் தாள்களை யலம்பி, உத்தரீயச்சீலையினுல் துடைத்துவிட்டு, மீளவும் மஞ்சத்திலேறினள். காதம்பரியின் உயிரெனத்தகுந்தவளும், அவளுக்கிடான வடிவழகு வாய்ந்தவளும், நம்பிக்கை யனைத்தையும் வைக்க நல்லிடமாயிருப்பவளுமான மதலேகை யென்னும் அவளுடைய தோழியொருத்தி, சந்திராபீடனது சரணங்களை அவன் விரும்பாமலிருப்பினும் வலுவில் அலம்பினள். மஹாச்வேதையும், காதிலணிந்தபூண்களின் ஒளிகள் வீழ்ந்து விளங்குவதான காதம்பரியின்

தோள்தனில் அன்புடன் கரம்வைத்து, சாமரைக்காற்றுப் பட்டுக்கலைந்துபோன முன்னெற்றிமயிர்களை யொருவாறு கோதிக் கொண்டே, அவளது க்ஷேம விருத்தாந்தங்களை வினவினள். காதம்பரியும் ஸகியினிடமிருக்கும் அன்பினால் தான் வீட்டில் வஸிப்பதையும் பிழையென்றெண்ணியவளாய், தான் ஸுகமாக இருப்பதாற்றானே வெட்கமுற்று வெகு பிரயாஸத்துடனே க்ஷேமச் செய்தியைச் செப்பலானாள். முகூர்த்தநேரஞ் சென்றதும் தாம்பூலம் தருவதற்கு முயன்றவளான காதம்பரியை நோக்கி மஹாச்வேதை இவ்வாறு மொழிந்தனள் :—'ஸகி! காதம்பரி! இதோ புதிதாக வந்திருப்பவரான சந்திராபீடனை நாமனைவரும் சேர்ந்து உபசரிப்பதல்லவோ உவப்பாகும்; ஆகையால் இதை அவரிடம் அளிப்பாயாக.' இது கேட்டு காதம்பரியும் சிறிது முகத்தைச் சாய்த்துக் குனிந்துகொண்டு, நன்கு விளங்காதபடி மெதுவாக 'எனது அன்பார்ந்த தோழி! பழக்கமற்றவளான நான் இவ்வளவுதூரம் துணிவுபெற வெட்கப்படுகிறேன்; வாங்கிக்கொள்; நீயே அவரிடம் அளித்துவிடு.' என மஹாச்வேதையை நோக்கி மொழிந்தனள். அடிக்கடி அவளால் கூறப்பெற்றும் காதம்பரியானவள் வெகு கஷ்டத்துடன் அநாகரிகைபோல் நெடுநேரஞ்சென்று அவ்வாறு அளிப்பதற்கு மனமொப்பினள். மஹாச்வேதையின் முகத்திலிருந்து திருஷ்டியைத் திருப்பாமலே, மிகவும் அச்சமுற்றவளாய், அஞ்சி வீழ்ந்து விடுவேனோவென்று பற்றிக்கொள்வதற்கு முயன்றவள்போல், தாம்பூலத்துடன் கூடிய தனது தளிர்போன்ற கரத்தை நீட்டினள். சந்திராபீடனும், ஜயகுஞ்ஜரங்களது கும்பஸ்தலங்களை யடிக்கையிற் பற்றிய விந்தூரத்துடன் கூடியதுபோன்ற, இயல்பாகவே சென்னிறமான தனது புயத்தை நீட்டினன். அவளும், அவனது கையிருக்குமிடத்தையுங் குறித்துப் பாராது, தனக்குந் தெரியாமலே நீட்டிய கரத்தினால் முன்னிட்டு வியர்வையாகும் தானநீரைப் பெருக்கி, 'இதோ மன்மதனால் அர்ப்பணம் பண்ணப்படும் இந்ததாஸஜனத்தை (என்னை)ப்பெற்றுக்கொள்வீராக.' என்று தன்னையே தத்தம் செய்பவள்போல் தாம்பூலத்தை அவன் கையில் அளித்தனள். மற்றொரு தாம்பூலத்தை யெடுத்து மஹாச்வேதைக்கும் கொடுத்தாள்.

பிறகு இந்திரதனுஸ்ஸுபோல் கண்டத்தில் குண்டலாகாரமான மூன்று வர்ணக்கோடுகளைத் தரிப்பதான மெதுவாக நடந்து வரும் ஆண்கிளியினால் பின் தொடரப் பெற்ற கிளிப்பெடொன்று திடீரென வெகு வேகமாக ஓடிவந்து கோபத்துடன் இங்ஙனம் கூறியது:—'இராஜகுமாரி! காதம்பரி! வீணில் அழகுவாய்ந்ததாக அபிமானங்கொண்டதும், மிக்க துர்நடத்தையுள்ளதுமான இந்த இழிகுணமுள்ள பறவை என்னைப் பின்பற்றுதபடி நீ தகையாமலிருப்பதேன்? இது இவ்வாறு பரிபவப்படுத்துகையில் என்னையுபேக்ஷிப்பாயாகில், பின்னர் உடனே நான் உண்மையாகவே உயிரை மாய்த்துக் கொள்வேன்; ஸத்தியமாக உன் பாதகமலங்களின் மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன்.' அது இவ்வாறுரைப்பதைக் கேட்டு, காதம்பரியும் சிறிது நகைத்தனள். அதன் செய்தியையறியாதவளான மஹாச்வேதையும் 'இஃதென்ன சொல்லுகிறது?' என்று மதலேகையை வினவினள். அவளும் இங்ஙனம் கூறலானாள்:—'இக்கிளிப்பேடு, இராஜபுத்திரியான காதம்பரியின் தோழி; இதற்கு காளிந்தீ யெனப் பெயர். பரிஹாஸன் என்னும் இவ்வாண்கிளிக்கு நமது இராஜபுத்திரியே இக்காளிந்தியைக் கல்யாணம் செய்துவைத்து மனைவியாகவும் ஆக்கினள். இன்றைக்கு விடியற்காலத்திற் காதம்பரியின் தாம்பூலக் கரண்டமேந்தும் இந்த 'தமாலிகை' யென்பவளை யேகாந்தத்தில் இப்பரிஹாஸன் ஏதோ படிப்பித்துக் கொண்டிருந்ததை இக்காளிந்தியானது பார்த்துவிட்டதாகையால், அது முதலாக வெகு பொறாமையுடன் சினங்கொண்டு பராமுகமாக விருக்கதாய், இப்பரிஹாஸனிடம் அணுகுவதுமில்லை; ஸல்லாபம் செய்வதுமில்லை; பரிசிப்பதுமில்லை; கண்ணெடுத்துப் பார்ப்பதுமில்லை; நாங்களனைவருமாக நல்வார்த்தை சொல்லியும் தெளிவு பெறவில்லை.' என்கிற இப் பேச்சைச் செவியுற்று, சந்திராபீடனும் நன்கு கபோலங்கள் வெளிறித் துலங்குமாறு மெல்ல மெலல நகைத்துவிட்டுரைத்தனன்:—'ஆம், பரிஹாஸனென்னும் பைங்கிளியொன்று, காதம்பரீதேவியின் தாம்பூலக் காண்டமேந்துபவளான தமாலிகை யென்பவளிடம் காதல்கொண்டு காமவிகாரமடைந்து கடந்துபோன தினங்களையும் கவனிக்காமலிருக்கின்றது என்கிற இத்தகைய செய்தி யொன்றுண்டு; மன்னவரது மாளிகைகளிலும் இவ்வாறு

செவியுறப்படுகின்றது; பரிஜனங்களும் இப்படியே கூறுகின்றனர்; வெளியில் ஜனங்களும் இங்ஙனமே மொழிகின்றனர்; திசைகள் தோறும் இப்பேச்சு பரவியிருக்கின்றது; நாமும் இதை முன்னமே கேள்வியுற்றிருக்கின்றனம். ஆகையால் தனது மனைவியைத் துறந்து ஒழுங்கற்ற ஒழுக்கமுடையதான வெட்கங்கெட்ட இவ்வாண்கிளி இருக்கட்டும்; அக்காளிந்தியும் அங்ஙனம் கிடக்கட்டும். சபலத்தன்மையளான இந்த துஷ்ட தாஸியை அடக்காமலிருப்பது காதம்பரிதேவிக்குத் தான் எங்ஙனம் அடுக்கும்? என்றாலும் முதலிற்றானே இத்தகைய துன்மார்க்கப் பறவைக்கு இவ்வெளிய காளிந்தியைக் கொடுக்கையிலேயே அன்பில்லாத்தன்மையானது தேவியினாலும் கூறப்பட்ட விஷயமே. இதுதான் (காளிந்தி) இப்பொழுது என்ன செய்யும்? இருதாரமேற்படுவதே மங்கையர் சினங்கொள்வதற்கு முக்கிய முகாந்தரமாகவும், ஆசையைப் போக்குவதற்கு முதற்காரணமாகவும், பரிபவத்திற்குப்பெருத்ததோரிடமாகவும் ஆகின்றது. ஆகிலும் இதுவே (காளிந்தி) வெகு தைரியம் வாய்ந்தது; ஆகையினாற்றான் இப் பெரும் துரதிருஷ்டத்தினால் வைராக்கியம் மேலிட்ட இக்காளிந்தியானது காலகூடவிஷத்தை யுண்ணுமலாவது, தீயில் வீழ்ந்துவிடாமலாவது, உபவாஸமிருத்தலை ஒப்பாமலாவது இருக்கின்றது. பெண்களின் குறைவுக்குக் காரணம் இதைவிட வேறொன்றுமிலது. தனதிடம் இத்தகைய தப்பிதமிருக்கையிலும் இவ்வாறு வேண்டப்பட்டும் இப்பரிஹாஸனுடன் ஒற்றுமைபாராட்டாவிடில், இதை வெறுக்கத்தான் வேண்டும்; இஃது கிடக்கட்டும்; பரிபவப்படுத்தி இதை தூரத்தில் விலக்கிவிடவே வேண்டும். மீளவும் இதனுடன் எவர் பேசப்போகின்றனர்? எவர் கண்ணெடுத்துத் தான் காணப்போகின்றனர்? இதன் பெயராயாகிலும் எடுத்துரைப்பவர்தான் யாவர்?' என்று இவ்வண்ணம் அவன் கூற, விநோத வார்த்தைகளையறிந்து களிப்படைந்தவரான அங்கிருந்த ஸுந்தரிமாரனைவரும் காதம்பரியுடன் நகைத்தனர். பரிஹாஸனும் அவனது சாதுர்யப் பேச்சைச் செவியுற்றுச் செப்பியதாவது:—'கிருத்திமக்காரனான இராஜபுத்திர! இக்காளிந்தியானது வெகு திறமை வாய்ந்தது; நிலையற்றதன்மையதாயினும், இதை நீயாவது அல்லதுவேறெவரேனும் வஞ்சகம் செய்யவல்லவரல்லர். இவ்வளவு பகட்டான பேச்

சுக்களை இதுவும் நன்கறியும். பரிஹாஸவார்த்தைகளைப் பேசுவதற்கும் இதற்குத் தெரியும். அரண்மனையிற் பழகுவதால் இதன் அறிவும் திறமைபொருந்தியதாகவே இருக்கின்றது. இத்துடன் நிறுத்தலாம். விடபுருடருக்கேற்ற விகடவார்த்தைகளுக்கெல்லாம் இஃதேற்றதல்ல. மிகவும் இனிது மொழியுந் தன்மையதான இக் காளிந்தியே, கோபத்திற்கும் அதன் தெளிவுக்கு மேற்ற காலம் காரணம் பிரமாணம் விஷயம் முதலியவைகளை யறியவல்லது.' இந்த ஸந்தர்ப்பத்திற் கஞ்சுகி யொருவன் வந்து மஹாச்வேதையை நோக்கி, 'ஆயுஷ்மதி! மஹாபிரபுவான சித்திரரதனும் மதிராதேவியும் உம்மைக் காண்பதற்கு அழைக்கின்றனர்.' என மொழிந்தனன். இதுகேட்டுப் ்போக விரும்பியவளான மஹாச்வேதை 'ஸகி! சந்திராபீடன் எவ்விடத்தில் இருக்கலாம்?' என்று காதம்பரியைக்கேட்டாள். காதம்பரியும் 'அநேகமாயிரம் மங்கையரின் மனதுகளே இவரிருப்பதற்குப் போதுமானவை.' என்று சித்தத்திற் சிந்தித்து நகைத்துவிட்டு, பின்னர் வெளிப்படையாகக் கூறலானுள் :—'ஸகி! மஹாச்வேதே! நீ என்ன இவ்வாறு சொல்லுகின்றனையே? பார்த்தது முதல் எனது சரீரத்திற்கே இவர் அதிபதியாய் விட்டிருக்க, பின்னர் அகம், ஐச்வரியம், பரிஜனம் இவை யனைத்துக்குமே இவர் அதிபதியாயினரென்பதில் ஐயமேதேனுமுளதோ? இவர் எவ்விடத்திலிருக்க விரும்புகின்றனரோ, அல்லது என் பிரியஸகியின் (உனது) இருதயத்திற்கு எது இன்பமாகத் தோற்றுகின்றதோ அத்தகைய விடத்தில் இவரிருப்பதற்குத் தடையேதுமிலது.' என்கிற அம்மொழி கேட்டு, மஹாச்வேதை 'ஆனுல் இவ்விடத்திலேயே உனது உப்பரிகைக்கு அருகிலிருக்கும் அந்தப்புரத்து உத்தியானவனந்தன்னிற் கிரீடாபர்வதத்தின்கண் கட்டியிருக்கும் மணிமாளிகையில் இவர் இருக்கட்டும்.' என்றுரைத்துவிட்டு, கந்தர்வராஜனைக் காண்பதற்குச் சென்றனள். சந்திராபீடனும் அவளுடன் கூடவே வெளிக்கிளம்பி, விநோதத்தின்பொருட்டு காதம்பரியினுல் கட்டளையிடப்பெற்ற பிரதிஹாரிகளால் அனுப்பப்பட்ட வீணைமீட்டுபவரும், புல்லாங்குழலூதுபவரும், ஸுபாஷிதங்களைப் படிப்பவருமான கன்னிகைகள் பின்தொடர, முன்பு ஏற்கனவே காணப்பெற்ற கேயூரகனும் முன் சென்று

வழிக்காட்ட, கிரீடாபர்வதத்தின் மணிமாளிகைக்கு ஏகினன். அவன் சென்றதும், கந்தர்வாதிபதியின் புதல்வியான காதம்பரியா னவள் எல்லாத் தோழிமாரையும் ஊழியக்காரரையும் விட்டு விட்டு, சில பரிசாரிகைகளால் மட்டும் பின்தொடரப்பட்டவளாய் உப்பரி கையின் மீதேறினள். அங்கு சயனத்தின்மீது தன்னை யறியாமலே வீழ்ந்து, தூரத்திலிருந்தவாறே வெகு வணக்கத்துடன் பரிசாரிகை களால் உல்லாஸமாகக் களிப்பூட்டப் பெற்றவளான காதம்பரீ எங்ங னமோ உணர்ச்சிபெற்று ஒருத்தியாகவே அக்காலை 'ஓ! நிலையில் லாத சுபாவம் வாய்ந்தவளே! இஃதென்ன? இங்ஙனம் முயன்ற னையே!' என்று வெட்கத்தினால் பற்றிக் கொள்ளப்பட்டவள் போ லவும், 'கந்தர்வராஜகுமாரி! இதுவும் உசிதமோ?' என விநயத்தி னால் வெறுக்கப்பெற்றவள் போலவும், 'அடி பயந்தவளே! நற்கு லத்துதித்த நங்கையருக்கு இஃதுற்றதல்ல.' என பெருந்தன்மை யினால் இகழப்பட்டவள் போலவும், 'வணக்கமொழிந்தவளே! விநயத்தை இரக்ஷித்துக்கொள்ளடி.' என்று ஒழுக்கத்தினால் வெரு ட்டப் பெற்றவள்போலவும், 'மதிகெட்டவளே! மதனனால் மிக வும் அற்பமாகச் செய்யப் பெற்றனையே.' என்று உயர்குலத்தி னால் சிக்ஷிக்கப்பட்டவள் போலவும், 'உனது இருதயத்திற்கு இந் நிலையில்லாத்தன்மை யெங்கிருந்து வந்தது?' என்று தைரியத்தி னால் தூஷிக்கப்பட்டவள் போலவும், 'மனம்போனபோக்கெல்லாம் போகின்றவளே! என்னைப் பிரமாணமல்லாததாகப் பண்ணிவிட்ட னையே!' என்று குலாசாரத்தினால் நிந்திக்கப்பட்டவள் போலவும் மிகவும் அதிகமான வெட்கத்தை யடைந்தனள்.

பின்னர் இவ்வண்ணமும் எண்ணலானாள்:—"கேடுகெட்டவினை சைக்காரியான யான் பழிகளனைத்தையும் அலக்ஷியம் செய்து, இரு தயத்தின் நிலையற்ற நிலைமையை விளக்கிக்காட்டி, என்ன உணர் வின்றி மூடத்தனத்தினால் இவ்வாறு செய்யலானேனே? ஆம்; வெகு ஸாஹஸக்காரியான நான் 'இவனை இதற்குமுன் கண்டதில்லையே' யென்பதையும் எண்ணினேனில்லை; இலஜ்ஜையில்லாதவளாய், 'உல கத்தோர் என்னை அற்பமனத்தினளாகக் கருதுவார்களே!' என்ப தையும் யான் யோசிக்கவில்லை; மூடத்தனத்தினால் 'இவனது மன ப்போக்கு எத்தகையது?' என்பதையும் பரீக்ஷித்தேனில்லை; சப

லத்தன்மையினல் 'யான் இவனது தரிசனத்திற்குத் தகுந்தவளா? அல்லது அல்லவா?' என்று நான் ஆய்ந்தோய்ந்தும் பார்க்கவில்லை; புறக்கணித்தலாலுண்டாகும் வெட்கத்திற்கும் அஞ்சினேனில்லை; பெரியோர்களிடமிருந்தும் பயப்படவில்லை; லோகாபவாதம் வந்து சேருமென்று திகிலடையவுமில்லை; தாக்ஷிண்ணியமற்றவளான நான் 'மஹாச்வேதை அவ்வாறு துயரமுற்றிருக்கின்றனளே' என்பதையும் நினைக்கவில்லை; ஊக்கமிழந்தவளாய், 'ஸமீபத்திலிருக்கும் ஸகிகள் கண்ணுறுகின்றனரே' என்பதையும் காணவில்லை, உணர்ச்சியற்றவளாய் 'பக்கத்திலிருக்கும் பரிஜனங்கள் பார்க்கின்றனரே யென்பதையும் யான் கண்ணுற்றவளல்லள். புல்லறிவாளருங்கூட அவ்வாறு எனது ஒழுக்கத்திற்கு நேர்ந்த வழுக்கலை நன்கறிவர்; அப்படியிருக்க, மன்மதவிகாரத்தின் விஷயங்களை யெல்லாம் விசேஷமாய் அனுபவித்தவளான மஹாச்வேதையாவது, ஸகல சலைகளிலும் திறமை வாய்ந்தவரான ஸகிகளாவது, மன்னவரது மாளிகையில் ஸஞ்சரிப்பதால் ஸாமர்த்தியம் பெற்று இடைவிடாது இங்கிதங்களை யறிந்துவரும் பரிஜனமாவது இவ்விநயத் தடுமாற்றத்தைத் தெரிந்துகொண்டிருப்பரென்பதைக் கூறவும் வேண்டுமோ? அந்தப்புரத்திலிருக்கும் ஊழியக்காரிகளது திருஷ்டிகளோ, இத்தகைய விஷயங்களில் மிகவும் கூர்மையாகவே இருக்கின்றன. புண்ணியமிழந்தவளான யான் பலவகையிலும் பாழாய்விட்டேன். இலஜ்ஜைக்கிடமாக உயிர்பிழைத்திருப்பதினும், நான் இப்பொழுது மரித்துவிடுவதே மேலாகும். இச்செய்தியைச் செவியுற்று எனதன்னை என்ன செப்புவளோ? தந்தை அல்லது கந்தர்வஜனங்கள்தான் யாது கூறுவர்? என்செய்வேன்? இதற்கு என்ன பரிஹாரம் இத்தடுமாற்றத்தை யெவ்வுபாயங்கொண்டு மறைப்பேன்? இப்பொல்லாப் புலன்களுடைய சாபல்லியத்தை யெவரிடம் கூறுவேன்? இப்பாழும் இருதயத்தினுற் பற்றிக்கொள்ளப்பட்டவளாய் நான் எங்கேன்று சொல்வேன்? மஹாச்வேதையின் நிமித்தமாக அவ்வாறு சபதம் செய்யப்பெறலாயினது. பிரியமான தோழர்களின் முன்னிலையில் அவ்விதமாகவும் மொழிந்துவிட்டேன். கேயூரகனிடமும் அங்ஙனம் செப்பி யனுப்பினேன். தீயகுணமுள்ள தைவமோ, முன் செய்த தீவினைத்திரளோ, பாழும் நமனோ, அன்றேல் வேறெ

வர்தான் என்னை வஞ்சகம் செய்வதெற்கென்று இச் சந்திராபீடனைக் கொண்டு விட்டனரோ, துரதிருஷ்டசாலியான நான் அதை அறிகிலேன். ஒருக்காலும் காணப்படாதவனும், பழக்கமற்றவனும், செவியுறப் பெறாதவனும், சிந்திக்கப்படாதவனும், எதிர்பார்க்கப் பெறாதவனுமான எவனோ ஒருவன் திடீரென என்னைப் பரிஹஸிப்பதெற்கென்று வந்து சேர்ந்தானே; அவனைக் கண்டமாத்திரத்திலேயே இந்திரியங்களால் இறுகக் கட்டி அவனுக்கு அளிக்கப்பெற்றவள் போலவும், குணங்களையே விலையாகப் பெற்று இருதயத்தினால் விற்கப்பட்டவள் போலவும் அவனது கருவிபோ லாய்விட்டேனே! சபலசித்தனான அச்சந்திராபீடனால் எனக்கு ஆகவேண்டியது எதுமிலது.' என்று இவ்வாறு க்ஷணகாலம் தீர்மானம் செய்துகொண்டனள். பிறகு அவனை பரித்தியாகம் பண்ணிவிடுவதென்று தீர்மானித்த அந்தக்ஷணத்திலேயே மேலோங்கிப் புறப்பட்டுக் கண்டத்தில் வந்து தங்கியப் பிராணனால் கேட்கப்பட்டவள்போலவும், அந்த ஸமயத்திலுண்டான கண்ணீரால் 'அடி! விசேஷமறியாதவளே! மீளவும் கண்களைக் கழுவிக்கொண்டு இவன் பரித்தியாகத்திற்குரியவனா? அல்லவா? என்பதை நன்கு பார்ப்பாயாக.' எனக்கூறப் பெற்றவள்போல, மறுபடியும் அங்ஙனமே சந்திராபீடனிடம் இருதயத்தைத் திருப்பிவிட்டாள். ஆனதுபற்றி இவ்வாறு பரிஹாரமேதும் தேடிக்கொள்வதற்குத் திறமையற்றவளாய்ச் சாளரத்தின் கண்ணறைகளின் வாயிலாக அக் கிரீடாபர்வதத்தையே பார்த்துக்கொண்டிருந்தனள். அவள் அங்கிருந்துகொண்டு, பேரின்பக் கண்ணீர் மறைக்கின்றதேயென்று துன்பமுற்றவள்போல், அவனை மனங்கொண்டு கண்டாளேயல்லாது கண்ணெடுத்துக் காணவில்லை; விரல்களிலிருந்து பொசியும் வியர்வைநீர் விழுந்து வீணாய் விடுமேயென்று பயந்தவள் போல், சிந்தையினாலேயே அவனுருவத்தை வரைந்தனளேயன்றி சித்திரக்கோலெடுத்து எழுதினாளில்லை; அவனுடைய ஸங்கமத்தில் காலதாமதத்தை ஸஹியாதவள்போல், அவனிடம் செல்வதற்கு மனத்தை யேவினாளேயல்லாமல் ஊழியரை யனுப்பவில்லை.

சந்திராபீடனும் மணிமாளிகையினுட் சென்று, இருபுறமும் ஒன்றுமேலொன்றாகப் பலதலையணைகளுடன் கூடிய, சிலாதலத்தின்

மீது விரிக்கப்பட்ட ஓர் மெத்தையில் சாய்ந்தவனாய், கேயூரகனது மடிதனில் தனது பாதங்களை நீட்டிக்கொண்டு, கட்டளைக்கிணங்க அவ்விடங்களிலுட்கார்ந்த அந்தக் கன்னிகைகளால் சூழப்பெற்று, அலைபாயும் சித்தத்துடன் இவ்வாறு சிந்திக்கலானான்:—'கந்தர்வாதிபதியின் மகளான இக் காதம்பரியினது உலகத்தோரனைவருடையவும் இருதயத்தைப் பறிப்பவையான இத்தகைய இவ்விலாஸங்களெல்லாம் இயற்கையானவையேயோ? அன்றேல், ஆராதிக்காமலே அருள்புரிந்தவனான மேன்மைதங்கிய மன்மதனால் எனதிடம் ஏவப்பெற்றவையோ? ஆகையினாற்றான் கண்ணீர்ததும்ப, முக்காற் பங்கு மூடப்பெற்ற சிவந்ததான தனது நேத்திரத்தினால் சாய்ந்து பார்க்கின்றனள். யான் கண்ணுற்றேனாகில், வெட்கப்பட்டு வெண்ணிறமான வெண்பட்டுப் போன்ற புன்னகையின் ஒளியினால் தன்னைமறைத்துக்கொள்கின்றாள்.' மறுபடியும் எண்ணலானான். 'பெரும்பாலும் மானிடருக்குரியதான அற்பத்தன்மையானது பலவாறான பொய்யெண்ணங்களால் என்னை வஞ்சனை செய்கின்றதே! பகுத்தறிவைப் பாழாக்குவதான வாலிபப் பருவத்து மதமோ, அல்லது மதனனோ வேறெதுவோ மனிதனை மதப்படுத்துகின்றன. ஏனெனில், திமிரமென்னும் கண்ணோய்கொண்டவரது திரிஷ்டிபோல், வாலிபரது பார்வையானது அற்பமான மாசுமறுக்களையும் மஹத்தாகக் காண்கின்றதல்லவா? யௌவனமதமானது அணுவளவான அன்பையும், தைலபிந்துவைத் தண்ணீர்போல் நெடுந்தூரம் பரவச்செய்கின்றதே! மனத்தின் இங்கிலையற்ற நிலைமையானது கவிஞரது புத்திபோல், தானாகவே உண்டாக்கிக்கொண்ட பற்பல சிந்தைகளால் குழப்பமுற்று எண்ணாததை யெல்லாம் எண்ணுகின்றது; வாலிபரது மனப்போக்கானது மிக நிபுணனான மன்மதனேந்திய சித்திரக்கோல்போல் எழுதாததையெல்லாம் எழுதுகின்றது; தனது ரூபத்தில் அபிமானங்கொண்டு, தானென்னும் பெருமையினால் வாலிபர் துன்மார்க்கையான பெண்போல் ஸகலவிடங்களிலும் தம்மை அர்ப்பணம் செய்கின்றனர். மனோரதமானது கனவுபோல் காணாததையெல்லாம் காண்பிக்கின்றது; பேராவானது இந்திரஜால மயிற்றோகைபோல் ஸம்பவிக்கக் கூடாததையும் முன்னிலையிற் கொண்டு சேர்க்கின்றது.' மீளவும் ஆலோசிக்கலானான். 'இங்ஙனம் வீணாக மனவருத்தப்படுவதேன்?

உண்மையாக இவ் வெண்கண்ணாள் என்னிடம் இவ்வண்ணம் எண்ணங்கொண்டிருப்பளேல், அப்பொழுது வேண்டப்படாமலே அநுகூலனாயிருக்கும் அவ்வனங்கனே இவ்வெண்ணத்தை சீக்கிரத்திலேயே விளங்கச் செய்வான். அவன்தான் இந்த ஸந்தேஹத்தைத் தீர்த்து வைக்கப்போகின்றனன்.' என்று யோசித்துவிட்டு, எழுந்துட்கார்ந்து, அக் கன்னிகைளுடன் பாச்சிகை, பாட்டுகள், வீணை முதலிய வாத்தியங்கள், ஸ்வரங்களிலுண்டாகும் ஸந்தேஹங்களைத் தீர்க்கும் வாதங்கள், ஸுபாஷித கோஷ்டிகள், மற்றும் வெவ்வேறு வகையான அந்தந்த ஸல்லாபங்கள் என்கிற இத்தகைய ஸுகுமார கலாவிலாஸங்களைச் செய்து விளையாடிக் கொண்டிருந்தான். முகூர்த்தநேரமிருந்து, பின்பு வெளிவந்து உத்தியானவனத்தை யுற்று நோக்குவதில் உண்டான ஆவலால் இழுக்கப்பெற்ற இருதயத்தை யுடையவனாய் கிரீடாபர்வதத்தின் உச்சியில் ஏறினன்.

காதம்பரியும் அவனைக் கண்டு, மஹாச்வேதை வெகு நேரமாக வரவில்லையே யென்று அவள் வரும் வழியைப் பார்க்க விரும்பியவள்போல், அச்சாளரத்தை விட்டு விட்டு, அனங்கனால் வலித்திழுக்கப்பெற்ற சித்தத்தையுடையவளாய், கைலாஸபர்வதத்தின் சிகரத்திற் பார்வதிபோல், உப்பரிகையின் உச்சியின்மீது ஏறினள். சில பரிஜனங்களைமாத்திரமே கூடவழைத்துக்கொண்டு, பூர்ணசந்திரன் போன்ற வெண்மையான தங்கத் தண்டுடன் கூடிய குடையினால் வெயில் தாக்காது மறைக்கப்பட்டு, நுரைபோல் வெளிறிய நான்கு சாமரைகொண்டு வீசப்பெற்றவளாய், அடிக்கொருமுறை சாமரைகளின் முனைகளைப் பரிசித்துக்கொண்டும், பலதடவை குடைக்காம்பைப் பிடித்துக்கொண்டும், அடிக்கடித் தமாலிகையின் தோள்தனிற் கரங்களை வைத்தும், பலமுறை தோழியான மதலேகையைத் தழுவியும், அடிக்கொருமுறை பரிஜனங்களுக்குப் பின்புறமிருந்து தேஹமனைத்தையும் மறைத்துக் கண்களை முக்காற்பங்கு மூடிக்கொண்டு பார்த்தும், அடிக்கடி அசையாது கரந்தனிலேந்திய தாம்பூலத்தைத் தளிர்போன்ற தனது உதடுகளில் வைத்துக்கொண்டும், பலதடவை வாயிலிருந்து எறிந்த நைதல்மலரின் அடிபட்டுப் பயந்தோடும் பரிஜனங்களுக்குப் பின்னாற் சிறிதடிகள்வைத்தோடிப் பரிஹாஸம்

செய்தும், அவனை இவளும், இவளை அவனுமாய் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொண்டே அங்கு வெகுநேரம் சென்றுபோனதையும் அவள் அறிந்தவளல்லள். வாயிற்காப்பவள் அங்கு ஏறிவந்து, மஹாச்வேதை திரும்பிவருவதை யறிவித்ததும், அங்கிருந்து கீழிற ங்கினள்; மஞ்சனமாடுவதுமுதலிய பணிகளில் இச்சையில்லாதவ ளாயிருந்தும், மஹாச்வேதையின் நிமித்தம் மத்தியான்னச் சடங்கு களையெல்லாம் நிறைவேற்றலானள். சந்திராபீடனும் அங்கிருந்து இறங்கி முன் நீக்கி விட்டுப்போன அந்த காதம்பரீபரிஜனத்துடன் நீராட்டத்தை நிறைவேற்றிக்கொண்டு, சேதப்படாத சிலாதலத்தில் தனநிஷ்ட தைவத்தை அர்ச்சித்துவிட்டு, கிரீடாபர்வதத்திலிருந்த வாறே போஜன முதலிய பகற்பொழுதிற் செய்யவேண்டிய ஸகல சடங்குகளையும் செய்யலானன்.

கிரமமாக ஆஹாரமருந்திவிட்டு, கிரீடாபர்வதத்தின் முன்புறத் திலிருக்கும் மனோஹரமான மரகதசிலாதலத்தின்மீது அமர்ந்தவ னாய், திடீரென மிகவும் அதிகமாய் ஒளி வீசுவதான வெண்ணிற ஜோதி யொன்று வானத்திற் பரவுவதைப் பார்த்தான்.

பின்பு ஆவலுடன் அவன் அக்காந்திவரும் வழியினூடாகக் கண்ணோக்குங்கால், அளவற்ற கன்னிகைகளின் கூட்டத்தினல் சூழப் பட்டு, வெண்குடைதரித்து, இருசாமரைகொண்டு வீசப் பெற் றவளாய் மதலேகை வந்துகொண்டிருக்கக் கண்டான்; ஈரமான துண்டுத்துகிலால் மறைக்கப்பெற்ற முகத்தையுடைய சந்தனக் குழம்படங்கிய தேங்காய்க் குடுக்கையைப் பிரம்பேந்திய இடது கையிலெடுத்துக்கொண்டுவரும் காதம்பரியின் பிரதீஹாரியினுடைய வலது கரத்தை அவள் பிடித்துக் கொண்டு வந்தாள்; மூச்சுக் காற்று பட்டுப் பறந்தோடக் கூடியதும், பாம்புப் புறணிபோல் வெண்ணிற மானதும், மிகத் தூய்மையாயிருப்பதுமான கற்பகவிருக்ஷத்திலிரு ந்து வந்த இரண்டு வெண்பட்டுடைகளை யெடுத்துக்கொண்டு கேயூர கன் அவளுக்கு முன்சென்று வழிகாட்டிவந்தான்; தமாலிகையா னவள் மல்லிகைப் பூமாலையைக் கரந்தனில் ஏந்திக்கொண்டு அவளைப் பின்பற்றினள்; அவளுக்கு அருகில் தரளிகையும் கூடவே வந்து கொண்டிருந்தனள். அத்தரளிகையினல் வெண்ணிற விரிதுகிலு

டன் கூடிய அழகிய ஸம்புடமொன்றில் ஏந்திவரப் பெற்றதும், சந்திரனுடன் கூடப் பிறந்தது போலிருப்பதும், ஸ்ரீமஹாலக்ஷ்மியின் சிரிப்புப்போல் தோன்றுவதும், தாரகைத்திரள்களின் பிரதிபிம்பம் போன்றதுமான திரண்டுருண்டுப் பருத்திருக்கும் முத்துமாலை யொன்றைக் கண்ணுற்றனன். சந்திராபீடன் அதைக் கண்டதும், நிலவின் ஒளியையும் ஒழிக்குந்தன்மையதான இவ்வெண்ணிற ஒளிக்கு இதுதான் காரணமாகுமென மனத்தினில் நிச்சயித்து, மதலேகை சற்றுத் தூரத்தில் வந்துகொண்டிருக்கையிலேயே எதிர்கொண்டு எழுந்திருத்தல் முதலிய உசிதமான உபசாரக் கிரமத்துடன் அவளை வரவேற்றனன். அம்மதலேகையோ, அதே மரகதக் கற்பாறையில் ஓர் முகூர்த்தநேரம் உட்கார்ந்திருந்து பின்பு தானே எழுந்து சந்திராபீடனுக்கு அச்சந்தனக்குழம்பைப் பூசி, அவ்விரு வெண்பட்டுகளையும் உடுக்கச் செய்து, அந்த மல்லிகைப் பூச்சரங்களைச் சிரந்தனிற் சூட்டிவைத்து, அம்முத்துமாலையை யேந்திக்கொண்டு, சந்திராபீடனை நோக்கி இங்ஙனம் மொழிந்தனள்:—'இராஜகுமார! அஹங்காரத்தை அகற்றிய அழகான தங்களுடைய இத்திறமையும் ஜனத்தை பிரீதிக்குப் பரவசமாகச் செய்யாமலிருக்குமோ? தங்களுடைய இவ்வணக்கமே இத்தகைய விஷயங்களுக்கெல்லாம் இடந்தருகின்றது. இவ்வடிவத்தினால் தாங்கள் எவருடைய பிராணனுக்குத் தான் பிரபுவாக ஆகிறீர்களில்லை? நிஷ்காரணமாகவே வாத்ஸல்யத்தை விளக்கிக் காட்டுவதான இந்நடத்தையினால் எவரிடந்தான் தாங்கள் பாந்தவ்யத்தைக் கொண்டு புகட்டாமலிருக்கின்றீர்கள்? இயற்கையினாற்றானே இன்பமான தமது இவ்வியவஹரிக்குந் தன்மை எவரிடந்தான் நேசப்பான்மையை யுண்டாக்காமலிருக்கும்? சுபாவமாகவே வெகு அழகாய் அமைந்திருக்கும் இந்த குணாதிசயங்கள் எவரைத்தான் திருப்திசெய்து வைக்கவில்லை? தமது வடிவத்தைத் தான் இவ்விஷயத்தில் தாம் நிந்தித்துக் கொள்ளவேண்டும்; ஏனெனில், அவ்வடிவமல்லவோ இவ்வாறு முதலிற் பார்க்கும் பொழுதே நம்பிக்கையை யுண்டுபண்ணுகின்றது? அப்படிக்கல்லாமற்போகில், புவனமெங்கும் பிரஸித்தமான பிரபாவத்தையுடைய தம்மைப் போன்றவருக்குச் செய்யப்படுகின்றவை யாவுமே அநுசிதமானவை போல் தோற்றும். ஆம்; ஸம்பாஷணைகூட, இழிவையுண்டாக்கு

வதுபோல் ஆய்விடும். ஆதராதிசயமும், பிரபுத்தன்மையினிடம் அபிமானமிருப்பதுபோல் அனுமானிக்கச் செய்யும். புகழ்வதும், தனது கர்வத்தைக் குறிப்பதுபோல் ஆகும். உபசாரம் செய்வதும், சபலத்தன்மையை பிரகாசப் படுத்துவதுபோல் தோற்றும். அன்பு கூறுதலும், தனது நிலைமையைத் தான் அறியாமலிருப்பது போற் புலப்படும். விண்ணப்பம் செய்துகொள்வதும், பெருந்துணிவைத் தெரிவிப்பதுபோலிருக்கும். பணிவிடைசெய்வதும், சாபல்லியம் போற் புலப்படும். கொடையும், பரிபவம்போற் கருதப்படும். மேலும் தானுகவே இருதயத்தைக் கவர்ந்தவருக்குக் கொடுக்கப்படுவதுதான் யாது? ஜீவிதேச்வரனுக்கு அளிக்கக் கூடுவது மேதேனுமுண்டோ? தாம் முதலில் வருவதாகும் பேருபகாரத்தைப் பண்ணிய தமக்குக் கைம்மாறுமுளதோ? தரிசனந்தந்து எமது ஜீவிதத்திற்குப் பயனை யளித்தவரான தங்களுடைய வரவு எதனுல் ஸபலமாகச் செய்யப்படப் போகின்றது? இதன் மூலமாக காதம்பரியானவள் அன்பை அறிவிக்கின்றனளே யன்றி, தனது செல்வப் பெருமையைக் காண்பிப்பதாகக் கருதக் கூடாது. மேன்மக்களது செல்வங்கள் பிறர் பொருளென்பதைப்பற்றிக் கூறவேண்டிய விஷயமேது மில்லையல்லவா? இச்செல்வமென்பதிருக்கட்டும்; தம்மைப் போன்றவரிடம் அடிமைத்தன்மையை அங்கீகரிப்பினும் அடாத செயல்செய்பவளெனக் கூறப்பெறமாட்டாள். தங்களுக்குத் தன்னை ஸமர்பித்துக் கொண்டபோதிலும் மோசம் போனவளாகாள். உயிரையளித்தாலும் பின்பு வருத்தமுறமாட்டாள். மேன்மக்களது பெருந்தன்மையானது அன்பார்ந்த ஜனங்களைப் புறக்கணித்தவிற் பராமுகமானதும், தாக்ஷிண்ணியத்திற்குப் பரவசமுமானது. கொடுப்பவருக்கு எவ்வளவு இலஜ்ஜை யுண்டாகின்றதோ, அவ்வளவு யாசிப்பவருக்கு ஏற்படுவதில்லை. இந்த காரியத்தினுற் காதம்பரியானவள் உண்மையாக உமதிடம் தன்னை அபராதம் செய்தவளைப்போல் எண்ணுகின்றனள். ஆனதுபற்றி, அமுதங்கடைகையில் உற்பவித்த உயர்ந்த வஸ்துக்களனைத்திலும் இஃதொன்றே சேஷமாக (மிகுதியாக) இருக்கின்றதென்னும் இக்காரணத்தினுலேயே சேஷன் என்று பெயரையடைந்த இம்முத்துமாலையானது மேன்மைதங்கிய ஸமுத்திரராஜனுல் தன் அகத்திற்கு வந்த வருணபகவானுக்கு நன்கொடை

யாக அர்ப்பணம் செய்யப்பட்டு, வருணனல் பிறகு கந்தர்வராஜனு க்கு அளிக்கப்பட்டு, கந்தர்வராஜனலும் பின்பு காதம்பரிக்குக் கொடு க்கப்பெற்று, பின்னர் தமது மேனியே இவ்வாபரணத்திற்கு ஏற்ற தெனவும், அமுதமயமான அம்புலிமான் இருப்பதற்கு ஆகாயமே தகுந்தவிடமல்லாது அவனியல்லவெனவும் ஆலோசித்து, காதம்பரி யினல் இஃது தமக்கு அனுப்பப் பட்டது. தமது குணகணங்களா கும் ஆபரணங்களாலேயே அலங்கரிக்கப்பெற்ற அவயவங்களையு டைய தம்மைப்போன்றவர், அன்னிய ஜனங்களால் ஆமோதிக்கப் பட்டதும், ஆயாஸத்திற்கு ஆதாரமானதுமான ஆபரணங்களை அங் கங்களில் அணிவதை அங்கிகரிக்கமாட்டாராகிலும், இதை யணியச் செய்வதில் மாத்திரம் காதம்பரியின் அன்பே காரணமாகின்றது. இலக்ஷ்மியுடன் கூடப் பிறந்ததென்னும் கௌரவத்தினல் கௌஸ் துபமென்னும் ஓர் துண்டுக்கல்லை ஸ்ரீமந்நாராயணனும் தனது மார்பு தனில் அணியவில்லையோ? ஆகிலும் அந்நாராயணனும் இங்கு தம் மை மீறினவராகார்; அந்த கௌஸ்துபமணிகூட இந்த சேஷஹாரத் தின் அணுவளவான குணத்தையும் அதிக்கிரமிக்க வல்லதல்ல; காத ம்பரியின் சாயலைச் சிறிதளவேனும் சார்ந்து நடிப்பதிற் கூட ஸ்ரீதேவி யும் சக்தியற்றவளாவாள்; ஆதலால் தமதிடமிருந்து இந்த நன்மதி ப்பைப் பெறுவதற்கு இவள் ஏற்றவளாகின்றனள். தங்களுடைய அன்பை அடைவதற்கு இவள் பாத்திரமாகாதவளுமல்லள். தம்மால் அவளது பிரீதிக்குப் பங்கமேதேனும் நேரிடுமேயாகில், மஹாச்வே தையைப் பலவாருன தூஷணைகளால் துயரமுறச் செய்து, தன்னை யும் அவள் மாய்த்துக்கொள்வளென்பதும் திண்ணம். ஆனதுபற் றியே மஹாச்வேதையானவள் தரளிகையையும் இந்த ஹாரத்தை யெடுத்துக்கொண்டு, தமதிடம் போகச் சொல்லி யனுப்பினள். அவ ளும் (மஹாச்வேதை) தங்களிடம் சொல்லச் சொல்லி யிருக்கின்ற னள். மஹாபாக்கியசாலியான தாம் காதம்பரியினல்முதன் முதல் செய்யப்படும் இந்த பிரீதிக்கு இடையூறுண்டுபண்ணுவதற்கு மனத் திலும் சிந்திக்கக் கூடாது.' என மொழிந்து விட்டு அம்முத்துமாலை யை அவனது மார்புதனில் அணிந்தனள்.

சந்திராபீடனும் ஆச்சரியமுற்று மறுமொழி கூறினன்:—'மத லேகே! என் சொல்வேன்! நீ வெகு ஸாமர்த்தியக்காரி; விஷயத்

தைத் தெரியச் சொல்வதற்கு நீ நன்கறிவாய். மறுமொழி கூறுவ தற்கும் இடங்கொடாமல் வார்த்தையில் வெகு திறமையைக் காட்டி விட்டனை. அடி பேதாய்! நாம் யார் இந்த தேஹத்திற்கு (எனக்கு)? பெறுவது அல்லது பெறுமலிருப்பதற்குதான் எமக்கேது ஸ்வாதந் த்ரியம்? அக் கதை அஸ்தமித்தல்லவோ போய்விட்டது? உங் களுக்கு உதவிபொருளாக நான் ஆய்விட்டேன்; ஆனதுபற்றி மேன் மக்களுக்குரிய குணங்களமையப் பெற்றவர்களான நீங்கள் இஷ்டப் படி நன்மை அல்லது தீமையான எக்காரியங்களிலும் என்றனை யேவுவீர்களாக. மிகவும் உதாரத் தன்மையளான காதம்பரீதேவி யின் குணங்கள் தாக்ஷிண்ணியமற்றவராயிருப்பினும் எவரையும் ஊழியராகச் செய்யாமலிருக்கமாட்டா.' எனக் கூறியதுடன், காத ம்பரியைப் பற்றிய கதைகளையே வெகு நேரம் மொழிந்துகொண்டி ருந்து, பின்பு மதலேகையை அனுப்பிவிட்டான். அவள் சிறிது தூரம் சென்றதும், உதயகிரியை யடைந்திருக்கும் (சந்தனம், வெண் பட்டு, ஹாரம் இவைகள் போல் வெளுத்த) சந்திரனைப்போல, கிரீ டாபர்வதத்தில் அமர்ந்திருக்கும் சந்தனம் வெண்பட்டு ஹாரம் இவை களால் வெளுத்த மேனியை யுடைய சந்திராபீடனைப் பார்ப்பதற்கு, சித்திரரதனுடைய மகளான காதம்பரியானவள் பிரம்பு குடை சாமரை முதலிய சின்னங்களையெல்லாம் நீக்கி, பரிஜனங்கள் அனை வரையும் வரவேண்டாமெனத் தடுத்துவிட்டு, தமாலிகை யொருத் தியைமட்டும் கூட வழைத்துக்கொண்டு மீளவும் அதே உப்பரிகை யினுடைய உச்சியின்மீது ஏறினள். அங்கிருந்துகொண்டு, மறு படியும் அவ்வண்ணமே மன்மதவிகாரங்கொண்டு விதம் விதமான விலாஸங்களுடன் அலைபாயும் பார்வைகளால் இவனது மனதைக் கவ ர்ந்தனள்.

பின்பு மெல்ல மெல்ல கதிரவக்கடவுள் அஸ்தமனத்தை யடை ந்துவிட, பார்வையைப் பரிஹரிப்பதற்கேற்ற பொழுதும்வந்துசேர, உப்பரிகையின் உச்சியிலிருந்து காதம்பரியும், கிரீடாபர்வதத்தின் அடிவாரத்திலிருந்து சந்திராபீடனும் இறங்கிவிட்டனர். பிறகு மன் மதனது ஆதிபத்தியத்திற்கு வேண்டிய வெண்குடைபோற் சற்று நேரத்திற்கெல்லாம் சந்திரனும் உதித்து உயரக்கிளம்பியதும், சந்தி

ராபீடனும், அகத்தைச் சார்ந்த ஆம்பலோடையின் கரையதனில் இரத்த சந்தனக் குழம்பிட்டுக் கழுவப்பெற்றதும், சந்திரன்போல் சீதளமாயிருப்பதுமான முத்துமயக் கற்பலகையின்கண் சயனித்துக் கொண்டனன். அவன் அதில் அமர்ந்திருக்கையில் கேயூரகன் வந்து 'காதம்பரீதேவியானவள் தேவரைக் காண்பதற்கு வந்திருக்கின்றனள்.' எனமொழியலானன்.

பிறகு சந்திராபீடன் பரபரப்புடன் எழுந்தவனாய், சிறுபான்மையரான தோழிமார்களால் சூழப் பெற்று, மன்னவரது மங்கையர்க்கேற்ற சின்னங்கள் அனைத்தையும் அகற்றி, எவளோ வேற்று மனுஷியை யொப்ப, ஏகாவலீ யென்னும் ஒற்றை வடமாலை யொன்றையே பூணாக வணிந்துகொண்டு மதலேகையின் கரத்தைப் பிடித்துக்கொண்டு வருபவளான காதம்பரியைக் கண்ணுற்றனன். அவள்வந்து, அன்பினால் இன்பமுற்றிருப்பதை யறிவிப்பவளாய், பாமரஜனம்போல் பரிஜனத்திற் கேற்க வெறுந்தரையில் உட்கார்ந்தனள். சந்திராபீடனும், மதலேகையினால் 'இராஜகுமார? கற்பாறையின்மீதே நீர் அமர்ந்திருப்பீராக.' என்று பலதடவை நிர்ப்பந்திக்கப்பட்டும் நிலந்தனிற்றானே வந்துட்கார்ந்தனன். அனைவரும் அங்குட்கார்ந்ததும் முகூர்த்தநேரம்போல் இருந்துவிட்டு, சந்திராபீடன் இங்ஙனம் சொல்லத் தொடங்கினான் :—'தேவி! கண்ணெடுத்துப் பார்த்ததினாலேயே பிரீதியடைந்த தாஸஜனத்தினிடம் ஸம்பாஷணை முதலான அனுக்கிரஹத்திற்கே இடமில்லாமலிருக்க, இவ்வளவு அருள் புரிவதற்கு அவகாசமிலதெனக் கூறவும் வேண்டுமோ? நான் நன்கு ஆலோசித்துப் பார்த்தும், மிகவும் அதிகமான இவ்வனுக்கிரஹத்திற்கு ஏற்றவண்ணம் எனதிடம் குணம் அணுவளவேனும் இருப்பதாகக் காண்கிலேன். மிகப் புதிய இந்த ஸேவகஜனத்தினிடங்கூட (என்னிடத்தில்) இவ்வாறு ஆதரவிருப்பதால், உமது இந்த ஸரளமான சுபாவமும், அன்பார்ந்த தன்மையும் செருக்கற்று மிகவும் அழகாயிருக்கின்றன. பெரும்பாலும் என்னை உபசாரங்களால் மட்டும் வசப்படுத்தத் தகுந்த அவ்வளவு தாக்ஷிண்ணியமற்றவனாகத் தாம் எண்ணுகிறீர்கள். தடையின்றி உமது கட்டளைகளைப் பெறுகிற பரிஜனங்களல்லவோ பெரும் பாக்கியசாலிகள்? தனக்குற்ற

குற்றேவல்களைச் செய்ய வுரித்தான வேலைக்காரரிடம் கூட இவ் வாதரவெதற்கு? சரீரமோ பிறருதவிக்கென்று ஏற்பட்ட ஓர் கருவி; உயிரும் ஒரு சிறு துரும்புபோல மிகவும் அற்பமானது; இவ்வன்னம் வந்திருந்தும் உமது இம்மரியாதைகளைக் கண்டு நான் என்றனை உமக்கு ஸமர்பித்துக் கொள்வதற்கும் வெட்கமுறு கிறேன். இதோ நாம் இருக்கின்றனம்; இதோ எமதுடல்; இதோ எமதுயிர்; இதோ எமது புலன்கள். இவைகளுள் எதையேனும் நீர் உம்முடையதாக வேற்றுச் சிறப்பிக்கவேண்டும்.' என்று இங் ஙனம் மொழிந்துவருகையில் இவனது வார்த்தையை மறுத்து, பிறகு மதலேகை புன்னகை புரிந்து, 'இராஜகுமார! அஃது இருக்க ட்டும். இவ்வாறு தாங்களே தம்மை அதிக தாழ்மைப் படுத்திக்கொள் வதையறிந்தால் நமது தோழியான காதம்பரீ மனவருத்தமுறுளா? இவ்வண்ணமேன் கூறவேண்டும்? இவ்வாறு தாங்கள் அறிவிப்ப தற்கு முன்பே தாங்கள் கீழ்க் கூறிய பொருளனைத்தையும் இவள் அறிந்தவளே; அப்படியிருக்க மீளவும் இப்பயனற்ற உபசார மொழியினால் என் ஸந்தேஹத்தை யுண்டாக்கி அலைபாயச் செய் கின்றீர்கள்?' என்று மொழிந்தனள். பின்பு சற்றுநேரமிருந்து, பிரஸ்தாவிக்க முயன்றவளாய், 'தாராபீட மஹாராஜனுனவர் எப் படிப் பட்டவர்? விலாஸவதிதேவி யெத்தகையவள்? பூஜ்யரான சுகநாஸர் எத்தகையவர்? உஜ்ஜயினீ எப்படிப்பட்டது? அது எவ் வளவுத் தூரத்திலுளது? பாரதவர்ஷம் எத்தகையது? மானிட வுலகம் மனதுக்கின்பமாயிருக்குமோ?' என்று எல்லாவற்றையும் வினவலானுள். இத்தகைய கதைகளைக் கூறிக்கொண்டே வெகு நேரம் இருந்து, பிறகு எழுந்து காதம்பரியானவள், கேயூரகனையும் பரிஜனத்தையும் சந்திராபீடனுக்குப் பக்கத்திற் படுக்கும்படிக் கட் டளையிட்டுவிட்டு, சயனமாடியின்மீது ஏறினள்; ஆங்கு வெண்பட்டு கொண்டு மேற்கட்டு அமைக்கப் பெற்ற ஓரிடத்தில் விரித்திருக்கும் சயனத்தில் அமர்ந்தனள். சந்திராபீடனும் அதே கற்பாறையின் மீதிருந்து, காதம்பரியினது அந்த அஹங்காரமற்ற சுபாவம் வடி வழகு கம்பீரத்தன்மை இவைகளையும், மஹாச்வேதையின் நிஷ் காரணவாத்ஸல்லியத்தையும், மதலேகையின் அன்பார்ந்த குணத் தையும், பரிஜனங்களின் பெருந்தன்மையையும், கந்தர்வராஜலோக த்தின் ஸம்ருத்தியையும், கிம்புருஷதேசத்தின் மனோஹரத்தன்மை யையும் மனத்தினுலாலோசித்துக்கொண்டே, கேயூரகன் கால் பிடித்தவாறிருக்க இரவை ஒரு நொடியைப்போற் போக்கிவிட்டான்.

பிறகு ஆதித்தன் உதித்ததும் சந்திராபீடன் சிலாதலத்தை விட்டெழுந்து, கமலமலர்போன்ற தனது வதனத்தைக் கழுவிக்கொண்டு, ஸந்தியாவந்தனத்தையும் அனுஷ்டித்துவிட்டு, தாம்பூலந்தரித்து, 'கேயூரக! காதம்பரீதேவிகள் விழித்துக்கொண்டார்களா? இல்லையா? என்பதையும், எங்கு இருக்கின்றார்கள்? என்கிறதையும் போய்ப் பார்த்துவா.' எனக் கூறினன். அவன் அப்படியே சென்று, திரும்பிவந்து 'தேவ! மந்தரம் என்கிற மாளிகையின் கீழ் சுண்ணச் சாந்திட்ட முற்றத்து மேடையின்கண் மஹாச்வேதையுடன் இருக்கின்றார்கள்.' என மொழிந்ததும், கந்தர்வராஜபுத்திரியைக் காண்பதற்கு வந்தனன். ஆங்கு, சடைமுடி கிருஷ்ணஜினம் மூஞ்சி மரவுரி பலாசதண்டு இவைகளைத் தரித்துக் கொண்டிருக்கும் பிரம்மசரியக் குறிகளமையப்பெற்ற தாபஸஸ்த்ரீகளால் சூழப்பட்டவளும், அந்தப்புரத்தில் ஆராதிக்கக் கூடிய ஸ்த்ரீகளை ஆதரவுடன் வந்தனங்களாலும் ஸம்பாஷணைகளாலும் எதிர்கொண்டெழுந்திருத்தலாலும் அருகிலிருக்கும் பிரம்புப் பீடங்களை யளிப்பதாலும் பெருமைப்படுத்துபவளுமான மஹாச்வேதையையும், பின்புறத்தில் உட்கார்ந்திருக்கும் கின்னரதம்பதிகள் மதுகரம்போல் மதுரமாகப் புல்லாங்குழலேந்திப் பாட்டுக் கேற்றவண்ணம் ஒத்துகள் ஒதிவர, மிகவும் இனிமையாகப் பாடுபவளான நாரதரது புதல்வியினால் படிக்கப்படும் ஸர்வமங்களங்களாலும் மேன்மைபொருந்திய மஹாபாரதத்தில் மனதைச் செலுத்திக் கொண்டிருப்பவளான காதம்பரியையும் அவன் கண்டான். அருகிற் சென்று நமஸ்காரம் செய்து, அதே சுண்ணச் சாந்து பூசிய திண்ணையின்கண் அமைத்திருந்த ஆஸனத்தில் அமர்ந்தனன். சிறிதுநேரம் இருந்து, மஹாச்வேதையின் முகத்தை நோக்கிவிட்டு, கபோலத்தின் பாரிசங்கள் சிறிது வெளிறித் துலங்குமாறு புன்னகை புரிந்தனன். அவளும் அவ்வளவிலேயே அவனது அபிப்பிராயத்தை அறிந்தவளாய் காதம்பரியை நோக்கி 'ஸகி! மதியின் கதிரொளிகளால் சந்திரகாந்தம்போல் சந்திராபீடனது மனம் உனது குணங்களால் மிகவும் கசிவுண்டு அவர் ஏதும் கூறமுடியாதவராயிருக்கின்றனர். இவர் செல்ல விரும்புகின்றார். இவருக்குப் பின்னால் தங்கிவிட்ட இராஜஸமூஹங்களெல்லாம்

இவரது செய்தியை யறியாது வருத்தமுற்றிருக்கும். மேலும் நெடுந்தூரத்திலிருப்பினும் உங்களிருவருக்கும் அன்பானது கமலங்களுக்கும் கதிரவனுக்கும், ஆம்பலுக்கும் அம்புலிமானுக்கும் இருப்பது போல ஆயுளுள்ளவரையிலும் இப்பொழுது ஏற்பட்டுவிட்டது. ஆதலால் நீ விடைதருவாயாக.' என மொழிந்தனள்.

பிறகு காதம்பரியானவள் 'ஸகி! பரிஜனங்களுடன் நான் இதோ இராஜகுமாரருக்கு (சந்திராபீடனுக்கு) அவரது அந்தராத்மாவைப் போல் ஸ்வாதீனமாயிருக்கையில், பின்பு இதில் எனது அநுமதியென்பதென்ன?' என மொழிந்து, கந்தர்வ குமாரர்களைக் கூப்பிட்டு, 'இராஜகுமாரனை அவருடைய தேசத்திற் கொண்டு போய் விடுங்கள்.' எனக் கட்டளையிட்டனள். சந்திராபீடனும் எழுந்து, முதலில் மஹாச்வேதையையும், அதன் பின்பு காதம்பரியையும் பணிந்துவிட்டு, அக்காதம்பரியினுடைய அன்பார்ந்த திருஷ்டியினாலும் மனத்தினாலும் பற்றிக்கொள்ளப் பட்டவனாய் 'தேவி! என் சொல்வேன்? மிகுதியாய் பேசுகிறவர்களை யுலகத்தோர் நம்பார்கள். தமது பரிஜனங்களைப் பற்றிய பேச்சுக்கள் வருங்கால் என்னையும் அப்பொழுது நினைத்துக் கொள்வீர்களாக.' எனக் கூறி, கன்னிகைகளின் அந்தப்புரத்திலிருந்து வெளிக் கிளம்பினன். காதம்பரியைத் தவிர்த்து கன்னிகைகள் எல்லோரும் அவனது மேன்மையான குணங்களாகும் பாசங்களால் வலித்திழுக்கப்பட்டுப் பரவசமாய் விட்டவர்போல் அவன் செல்லுகையில் வெளியிலிருக்கும் கோபுர வாயில் வரையிலும் பின்தொடர்ந்தனர். கன்னிகைகள் திரும்பிவிட்டதும், கேயூரகனால் கொண்டுவரப் பெற்றக் குதிரையின் மீதேறிக் கொண்டு, அக் கந்தர்வகுமாரர்களால் பின்பற்றப்பட்டவனாய் ஹேமகூடத்தை விட்டுப் புறப்பட்டான். அவன் போய்க் கொண்டிருக்கையில் சித்திரரத புத்திரியானவள் அவன் சித்தத்திலும் வெளியிலும் மாத்திரமே யல்ல, எல்லாத் திசைகளிலும் அவள் தோற்றியதுடன் ஆசையனைத்துக்கும் ஆதாரமாகவும் ஆபினள். கிரமமாக மஹாச்வேதையின் ஆச்ரமத்தை யடைந்து, அங்கு அச்சோதகுளக்கரையில் இந்திராயுதத்தின் குளப்படிக் குறிகளைத் தொடர்ந்து வந்து, தனது ஸேனை யிறங்கியிருக்கக் கண்டான். கந்தர்வ குமாரர்களெவரையும் திரும்பிப் போகச் செய்து, ஆனந்தத்துடனும் ஆவ

ஹூடனும் ஆச்சரியத்துடனும் கூடிய ஸேனையிலிருக்கும் ஜனங்களால் நமஸ்கரிக்கப்பட்டவனாய், தனது அகத்தினுட் சென்றான். அரசு ரனைவரையும் ஸம்மானித்து விட்டு, வைசம்பாயனனோடும் பத்திர லேகையோடும்—இவ்விதம் மஹாச்வேதை, இவ்வாறு காதம்பரீ, இப்படி மதலேகை, இங்ஙனம் தமாலிகை, இவ்வண்ணம் கேயூர கன்—என்கிற இக்கதையைக் கூறிக்கொண்டே பகற்பொழுதைப் போக்கினன். காதம்பரியின் வடிவத்தைக் கண்டதினால் கோபங் கொண்டவள்போல், இராஜலக்ஷ்மி முன்போல் இவனுக்கு இன்பந்தர வில்லை. பெருங் கலவரமுற்ற சித்தத்தினால் அவ்வெண்கண்ணா ளையே (காதம்பரியையே) சிந்தித்துக் கொண்டு கண்விழித்தவாறே அவ்விரவையுங் கழித்தனன். மறுநாள் சூரியோதயமானதும் அவ ளையே நினைத்துக்கொண்டு ஆஸ்தானமண்டபம் சென்று வீற்றிருக் கையில், திடீரென பிரதீஹாரனுடன் பிரவேசிக்கும் கேயூரகனைக் கண்ணுற்றனன். தூரத்திலிருந்தவாறே தரணியைத் தொடும்படித் தலைவணங்கி வந்தனஞ்செய்யும் கேயூரகனை 'வரவேண்டும் வரவேண் டும்.' என மொழிந்து, ஓடிப்போய் முதலில் கடைக்கண் வாயிலா கப் பாயும் தனது கடாக்ஷத்தினாலும், பின்பு இருதயத்தினாலும், அதன் பின்பு புயங்களாலும் அவனை வெளிப்படையாக நன்கு ஆலி ங்கனம் பண்ணிக்கொண்டான். தனது ஸமீபத்திலேயே அவனை யுட்காரவுஞ் செய்து, 'கேயூரக! தோழிமாருடன் காதம்பரீதேவி யும், மேன்மைதங்கிய மஹாச்வேதையும் ஸௌக்கியமா?' என வினவினன். அவனோ இராஜகுமாரனது மிகுதியான பிரீதியினாலு ண்டான அப்புன்சிரிப்பினாலேயே மஞ்சனமாட்டி வைக்கப்பட்டவ ன்போலவும், பூச்சுகளால் பூசப்பெற்றவன்போலவும் உடனே வழி நடந்ததனாலுண்டான களைப்பு தீர்ந்தவனாய், தலைவணங்கி மிகவும் ஆதாரத்துடன் 'தேவர் இவ்வண்ணம் எவளைக் கேட்கின்றீர்களோ, அவள் இப்பொழுது ஸௌக்கியந்தான்.' என்றுரைத்து, ஈரமான துண்டுத்துகிலால் கவரப்பெற்றதும், தாமரைத்தண்டினது நூலால் கட்டப்பட்ட முகத்தையுடையதும், சந்தனக்குழம்பு பூசி அதன் மீது இளம்பங்கயக் கொடி கொண்டு முத்திரை யிடப்பட்டதுமான தாமரையிலைத் தொன்னை யொன்றை வெளியிலெடுத்துக் காண்பித் தனன். அதைத் திறந்து, அதனுள் காதம்பரியினால் அனுப்பப்பெ

ற்ற அபிஞ்ஞானங்களை (அறிகுறிகளை)யும் எடுத்துக் காட்டினன். அவை யெவை யெனில்—மரகதமணிபோல் பசுமையானவையும், புராணிகள் நீங்கி அழகிய அரும்புகளுடன் கூடியவையும், பாலுள்ளவையுமான பச்சைப் பாக்குகள்; கிளிப் பேடுகளின் கபோலம்போல் சிறிது வெளிறிய வெற்றிலைகள்; சிவனது சிரந்தனிலிருக்கும் சந்திரனது பிறைபோல் பருமனுன பச்சைக் கர்ப்பூரம்; மிகவும் நறுமணங்கமழும் கஸ்தூரியின் வாஸனையினுல் மிக மனோஹரமான சிறந்த சந்தனம். இவைகளே. மீளவும் இங்ஙனம் மொழிந்தனன்:—"காதம்பரீதேவியானவள் தனது சூடாமணியைப் பரிசிப்பதான அஞ்ஜலியினுலும், மஹாச்வேதை கழுத்தைத் தழுவிக்கொண்டு கூறுவதான குசலபிரசனத்தினுலும், மதலேகை வந்தனத்தினுலும், தமாலிகை தமது தாள்களின் தூள்களைத் தொடுமாறு பாதங்களிற் பணிவதாலும் தேவரைப் பூஜிக்கின்றனர். மஹாச்வேதை தங்களுக்கு இவ்வாறு சொல்லியனுப்பியும் இருக்கின்றுர்கள்:—'எவர் உம்மைக் காணுமலிருக்கின்றனரோ, அப்படிப்பட்டவரல்லவோ பாக்கியசாலிகள்? நீர் எமது முன்னிலையில் இருக்கையில், அங்ஙனம் பனிபோல் சீதளமாகவும் சந்திரமயமாகவும் இருந்த உமது அக்குணங்கள், உம்மைப் பிரிந்தபின்பு ஆதித்தமயமாகமல்லவோ ஆய்விட்டன? எவ்வகையிலோ தைவாதீனமாய் நேர்ந்ததான கடந்துபோன அவ்வித தினங்களை ஜனங்கள் விரும்புவார்களன்றே? உம்மைப் பிரிந்துவிட்டதினுல் கந்தர்வராஜனது நகரமானது மஹோத்ஸவம் நீங்கி ஊக்கமிழந்ததுபோலிருக்கின்றதே. நான் அடியோடு அனைத்தையும் துறந்தவளென்பதையும் நீர் அறிவீர்; ஆகிலும் நான் விரும்பாமலிருந்தும், நிஷ்காரணமாகவே பக்ஷம் பாராட்டுபவரான உம்மை வலுவில் எனது இருதயம் காண விரும்புகின்றதே. அல்லாமலும் காதம்பரீ அதிகமாய் அஸௌக்கிய முற்றிருக்கின்றனள். புன்னகை புரிந்த முகத்தினரும் புஷ்பபாணனுக்கு நிகரானவருமான உம்மையே நினைத்துக் கொண்டு மிருக்கின்றனள். ஆனதுபற்றி மீண்டும் வருவதாகும் கௌரவத்தினுல் இவளை நற்குணம் வாய்ந்தவரிடம் அபிமானம் பாராட்டியவளாக நீர் செய்வதற்குுற்றவராகிறீர். பெருந்தன்மையோரது ஆதரவானது மேலான மேன்மையை யுண்டாக்குமல்லவா? எம்மைப் போன்றவர்களுடைய பரிசயத்தினுலுண்டான இத்தகைய

பெருந் தொந்தரவை நீர் அவசியம் பொறுத்துக் கொள்வீராக. உமது நன்மையே இவ்வாறு செய்தியனுப்புவதில் ஆகாத துணிவை யுண்டாக்குகின்றது.' என்று அவளுரைத்தனள் எனமொழிந்து, இதோ, தேவர் படுக்கையில் மறந்துபோய் வைத்துவிட்ட சேஷஹாரமும் அனுப்பப் பட்டிருக்கின்றது.'' என்று உத்தரீயவஸ்திரத்தின் முந்தானையிலிருந்த முடிச்சிலிருந்து முத்து மாலையை அவிழ்த்தெடுத்துச் சாமரை யேந்துபவளின் கரத்தில் அளித்தனன்.

பின்பு சந்திராபீடன் 'இவ்வண்ணம் காதம்பரீ தேவியானவள் நினைவு வைத்துக்கொள்வது முதலிய மிகவும் மஹத்தான அனுக்கிரஹபாரத்தை யென்னைப்போன்ற தாஸஜனத்தினிடமும் ஏற்றிவைப்பதென்றால், இது மஹாச்வேதையின் தாள்களைத் தொழுவதாகும் தவத்தின் பயனேயாம்.' என்று சொல்லி, அவையனைத்தையும் சிரந்தனிலேந்தித் தானே கிரஹித்துக்கொண்டான். பரிசத்திற்கு வப்பானதும், மனோஹரமானதும், பரிமளம் பொருந்தியதுமான அந்த சந்தனத்தைப் பூசிக்கொண்டு, அதே ஹாரத்தையும் கண்டத்தில் அணிந்தனன்; தாம்பூலமும் தரித்து, முகூர்த்தநேரங் கழித்தெழுந்து, இடது புயத்தினால் கேயூரகனது தோளைப்பற்றிக்கொண்டு, மெல்ல மெல்ல 'கந்தமாதனன்' என்கிற கஜத்தைக் காண்பதற்கேகினன். அங்கு ஓர் நொடிப் பொழுதிருந்து, அந்த யானைக்குத் தானே சிறிது புற்கவளம் போட்டுவிட்டு, அருமைக் குதிரைகளைக் கட்டுங் கொட்டிலை நோக்கிப் போயினன். சென்றுகொண்டே ஒரு பக்கமாகச் சற்று முகத்தைத் திருப்பி ஒருவாறு பரிஜனத்தைப் பார்க்கலானான். பின்னர் இவனது அபிப்பிராயத்தை யறிந்த பிரதிஹாரிகள் பரிஜனங்களனைவரையும் பின்செல்லக் கூடாதெனத் தகைந்துவிட, கேயூரகனொருவனையே கூடவழைத்துக்கொண்டு, தொழுத்தினுட் சென்றான். குதிரைக் கொட்டிலைக் காப்பவர், தம்மைப் போகச்சொல்லி விலக்கிவிடுவதிலிருந்து பயந்து கண்கள் வெருளப் பணிந்து, அவ்விடம் விட்டு விலகிப் போனதும், இந்திராயுதத்தின் முதுகில் ஒரு பாரிசத்திற் சிறிது நழுவியிருந்த அதன் போர்வையைச் சரிபடுத்தி, கண்களை முக்காற்பங்கு மூடிக்கொண்டிருக்கும் அக்குதிரையின் கண்களை மறைக்குமாறு கலைந்து தொங்கும் குங்குமம்போல் கருஞ்சிவப்பான பிடரிமயிரை ஒழுங்காக ஒதுக்குபவனாய், குள

ம்பு தாங்கியென்னும் மூலையின்மீது காலை வைத்துக்கொண்டு, கொட்டிலிலிருக்கும் ஓர் மரக் கட்டையின்மீது விலாஸத்துடன் மிக மெதுவாகச் சாய்ந்தவண்ணம் குதூஹலத்துடன் கூறலானான்:—'கேயூரக! நான் அவ்விடம்விட்டு வெளிவந்ததுமுதல், கந்தர்வராஜகிருஹத்தில் என்ன விருத்தாந்தங்கள் நடைபெற்றன? கந்தர்வராஜபுத்திரி, எந்தக் காரியங்களைச் செய்துகொண்டு பகற்பொழுதைப் போக்கினள்? மஹாச்வேதை செய்துகொண்டிருந்தது யாது? மதலேகை செப்பியது என்ன? பரிஜனங்களுக்குள் நடைபெற்ற ஸம்பாஷணைகள் எவை? நீயும் யாது செய்துகொண்டிருந்தனை? எம்மைப்பற்றிய வார்த்தை யேதேனும் நடந்ததோ? என்கிற இவைகளைப்பற்றிச் சிறிது மொழிந்திடுவாயாக.' இதுகேட்டு, கேயூரகனும் இங்ஙனம் முழுமையும் மொழியலானான்:—"தேவ! கேளுங்கள்; தாங்கள் வெளிவந்ததும் காதம்பரீதேவியானவள் பரிஜனங்களுடன் உப்பரிகையின் உச்சியிலேறி, குதிரையின் குளம்பு பட்டுக் கிளம்பும் தூள்களின் பங்திகள் படிந்த தேவர் செல்லும் பாதையையே பார்த்துக்கொண்டிருந்தனள். தாங்கள் மறைந்தபின்பும், மதலேகையின் தோள்தனில் முகம் வைத்தவளாய், அன்புடன் அதே திசையைப் பார்த்துக்கொண்டு வெகுநேரம் அவ்விடத்திலேயே இருந்தனள். அங்கிருந்து எங்ஙனமோ வெகு வருத்தத்துடன் கீழிறங்கி, க்ஷணநேரம்போல் ஆஸ்தானமண்டபத்தில் வீற்றிருந்து, மீளவும் எழுந்து தேவரிருந்த அக்கிரீடாபர்வதத்திற்கே வந்தனள். அவ்விடமேகி, 'அவர் இக்கற்பாறையின்மீது அமர்ந்திருந்தனர்; இவ்விடத்தில் நீராடினர்; இங்கு பகவானான பரமசிவனைப் பூஜித்தார்; இங்கு ஆஹாரமருந்தினர்; இவ்விடத்தில் கண்வளர்ந்தனர்.' என்று பரிஜனங்களால் பலமுறை மொழியப்பெற்ற தேவரிருந்த இடங்களின் அறிகுறிகளையே பார்த்துக்கொண்டு மத்தியான்னகாலத்தைக் கழித்தனள். அந்திப்பொழுதில் இஷ்டமில்லாமலிருந்தும் கஷ்டப்பட்டு மஹாச்வேதையின் முயற்சியினால் அப்படிகமலிமாளிகையிற்றானே உண்டியினை முடித்துக்கொண்டனள். ஆதித்தபகவானும் அஸ்தமனத்தை யடைந்து, சந்திரனும் உதித்தபின் சற்றுநேரம் அங்கேயே தங்கியிருந்து, கபோலங்களிற் கரங்களை வைத்துக்கொண்டு ஏதோ சிந்திப்பவளாய், கண்களை மூடிய

வண்ணம் க்ஷணகாலமிருந்து, பின்னர் எழுந்து, வெகு வருத்தத்துடன் மெதுவாக நடந்துத் துயிலறைக்குச் சென்றனள். சயனத்திற் சரீரத்தைச் சாய்த்து, அது முதலாக வெகு பிரபலமான சிரோவேதனையினால் அவள் துடித்துக்கொண்டு, தேஹத்தைத் தஹிக்கக்கூடியதான கொடிய ஜ்வரத்தினால் உபத்திரவிக்கப்பெற்று, ஏதோ மனோவியாதியினால் மங்களகரமான தீபங்களுடனும், ஆம்பல் மலர்களுடனும், சக்கிரவாகப் பறவைகளுடனும் கூட கண்மூடாதவளாகவே வெகு துயரத்துடன் இராப்பொழுதைக் கழித்தனள். விடியற்காலத்தில் என்றனையழைத்து, தேவரது செய்திகளை யறிந்துவரும் பொருட்டு (எமதிடம்) வெகு வெறுப்புடன் கட்டளையிட்டனள்."

சந்திராபீடனும் அதுகேட்டுப் போகவிரும்பியவனாய்க் 'குதிரை குதிரை' யென்று கூறிக்கொண்டு வீட்டைவிட்டு வெளிப் புறப்பட்டனன். சேணமிட்டு வெகு துரிதமாகக் குதிரைக்காரனால் கொண்டு வரப்பட்ட இந்திராயுதத்தின் மீதேறி, பத்திரலேகையைப் பின்புறத்தில் ஏற்றிக்கொண்டு, படைகளைப் பார்த்துக்கொள்ள வைசம்பாயனனை ஸ்தாபித்து, பரிஜனங்களையெல்லாம் திருப்பிவிட்டு, மற்றொரு குதிரையிலேறிய கேயூரகனால் பின்தொடரப் பெற்றவனாய் ஹேமகூடம் போய்ச் சேர்ந்தனன். காதம்பரியினது இல்லத்தின் வாயிலிற்போய்க் கீழிறங்கினன். இறங்கியதும் வாயிற்காப்பவனிடம் குதிரையைக் கொடுத்துவிட்டு, காதம்பரியை முதன்முதற் காண்பதில் ஆவலுடன் கூடிய பத்திரலேகையினால் பின்பற்றப் பட்டவனாக உட்சென்று, 'காதம்பரீதேவிகள் எவ்விடத்திலிருக்கின்றார்கள்?' என எதிரில் வருகிற அந்தப்புரத்திலிருக்கும் பேடியொருவனைக் கேட்டான். அவன் பணிந்து விட்டு, 'தேவ! மத்தமயூரமென்னும் கிரீடாபர்வதத்திற்குக் கீழே தாமரை யோடையான நடபாவியின் கரையில் ஏற்படுத்தப்பெற்ற ஹிமகிருஹத்தில் * இருக்கின்றார்கள்.' எனக் கூறியதும், கேயூரகன் முன்சென்று வழிகாட்ட, சிறிது தூரம் சென்று, தாமரையிலைகொண்டு இடைவிடாது மறைக்கப்பெற்றிருக்கும் ஹிமகிருஹத்தைக் கண்டான். பிறகு ஆங்கு பணிவிடை செய்பவர் சரீரத்திற்குக் குளிர்ச்சியை யுண்டாக்குமாறு பற்

* ஹிமகிருஹம் = விரஹதாபத்தைத் தணிப்பதற்கு ஸகல விதத்திலும் குளிர்ச்சியாயிருக்குமாறு ஏற்படுத்திய வீடு.

பல பண்டங்களைச் செய்தும் செய்துகொண்டுமிருப்பதைக் கண்டு கொண்டே, இமயமலையின் இருதய மெனக் கூடியதும், வருணன் ஜலக்கிரீடை செய்யும் கிருஹமெனக் கூறத் தகுந்ததும், சந்தநவன தேவதைகளுக்குக் குடியிருக்கும் அகமோவெனத் தோற்றுவதும், மாரிகால மனைத்துக்கும் ஸங்கேஸ்தானம்போல் புலப்படுவதுமான ஹிமகிருஹத்தின் மத்தியபாகத்தை யடைந்தனன். அங்கு மிகு தியாகத் திரண்டுருவமெடுத்ததோ வெனத்தகும் சீதளமான பரிசத்தி னால் மெல்ல மெல்ல உள்ளும் புறமும் பூசப்பட்டவன்போல் தனது சித்தத்தைச் சந்திரமயமாகவும், புலன்களை ஆம்பல் மலர்மயமாகவும், அங்கங்களை நிலவுமயமாகவும், புத்தியைப் பங்கயத்தண்டு மயமாக வும் எண்ணலானன்.

இத்தகைய அந்த ஹிமகிருஹத்தின் ஒரு பாரிசத்தில் சுற்றி லும் ஏற்படுத்திய வாய்க்காலிற் சுழன்ருேடும் கர்ப்பூரக் குழம்பின் வெள்ளத்தினுல் வட்டமிடப்பெற்ற தாமரைத்தண்டு மயமான சிறிய மண்டபத்தின் அடித்தடத்தில் புஷ்பசயனத்தின்மீது படுத்துக்கொ ண்டு தோழிமார்களால் சூழப்பெற்றவளான காதம்பரியைக் கண்ணு ற்றனன். அவள், தனது கடைக்கண்களிலிருந்து பெருகும் கண் ணீரினுல் சிரந்தனிலணிந்தச் சிறந்த மலர்களிலிருக்கும் மதுகரங்க ளின் தொனிகளாகும் தழலால் தஹிக்கப் பெற்றது போலிருக்கும் தன் செவிகளை நனைத்தவாறிருந்தனள்; கொடி போன்ற தனது புய ததினுல் அடிக்கடி பனிக்கட்டிச் சிலையினுற் செய்த பாவையை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டும், அடிக்கொருமுறை கபோலங்க ளிற் கர்ப்பூரப் பதுமையைக் கட்டிக்கொண்டும், பங்கயம்போன்ற பாதங்களால் பலமுறை சந்தனச் சேற்றினுலாக்கிய பம்மையைப் பரிசித்துக் கொண்டுமிருந்தனள்.

பின்பு ஆங்காங்குக் கண்டதுமே ஓடிவந்தோடிவந்து சந்திரா பீடனது வரவைப் பகரும் பரிஜனங்கள் ஒவ்வொருவனையும் கருவி ழிகள் சுழலமிடக் கண்கொண்டு நோக்கி 'மொழிந்திடுவாயாக; வந்துவிட்டது உண்மைதானே? நீ பார்த்தையோ? எவ்வளவு தூரத்தில் வருகின்ருர்? அவர் எங்கே?' என வாய்ப்பேச்சில்லா மலே (கண்ணோக்கத்தினுலேயே) அவர்களை வினவினள். வெண் ணீறத்தைப் பெருக்கும் தனது நேத்திரத்தினுல், தனக்கு எதிர்முக

மாகவே அவன் வருவதை நோக்கி, தூரத்திலிருந்தே இம் மாதரசி தனது மேற்சீலையும் நழுவி விழுமாறு வெகு பரபரப்புடன் கைலாகு கொடுக்கத் தன் பிரதி பிம்பத்தை வேண்டுபவள்போல் மணிமேடையில் இடது கரதலத்தை வைத்து, அவிழ்ந்து போன கூந்தலைக் கட்டுவதால் களைப்படைந்து வியர்வை நீரைப் பெருக்கும் வலது கரத்தினால் தன்னை பிரோக்ஷித்து அர்ப்பணம் செய்பவள்போல் தோற்றுபவளாய், கண்களால் குளிர்ந்த பேரின்பக் கண்ணீரைப் பெருக்கிக் கொண்டு, சிறிது தலை குனிந்த வண்ணம், அந்த க்ஷணத்திற் கடைக் கண்களில் வந்தடைந்த கருவிழியுடன் அவன் முகத்திற் பற்றிக்கொண்டு அதனால் நீண்டுபோன திருஷ்டியினால் வலித்திழுக்கப்பட்டவள் போல் புஷ்பசயனத்திலிருந்து எழுந்தனள். சந்திராபீடனோ, அருகிற் சென்று வணக்கத்துடன் முன்போலவே மஹாச்வேதைக்கு முன்னதாய் வந்தனஞ் செய்து, பின்பு காதம்பரியையும் பணியலானான். அவளும் பிரதிநமஸ்காரம் செய்து, மீண்டும் அப்புஷ்பசயனத்திலேயே உட்கார்ந்ததும், பிரதீஹாரியினால் கொண்டுவந்திடப் பெற்றப் பொற்பீடத்தைப் பாதத்தினாற்றானே ஒதுக்கித் தள்ளி விட்டு வெறுந்தரையிலேயே அமர்ந்தனன். பிறகு கேயூரகன் ‘தேவி! இவள் சந்திராபீடதேவனது அநுக்கிரஹத்திற்குப் பாத்திரமான பத்திரலேகை யென்னும் தாம்பூலக் கரண்டக மேந்துபவள்.’ எனப் பகர்ந்து, பத்திரலேகையைக் காட்டினன். பின்னர் அவளைக் காதம்பரியுங் கண்டு, ‘ஓகோ! மானுடமாதர்களினிடமும் பிரம்மதேவனுக்கு இவ்வளவு பக்ஷமோ!’ எனச் சிந்திக்கலானாள். பத்திரலேகையும் பணிந்தபின்பு, காதம்பரீ அவளை ஆதரவுடன் ‘வர வேண்டும், வரவேண்டும்’ என மொழிந்து, பரிஜனங்கள் அவளைப் பார்த்தவண்ணமிருக்க, வெகு குதூஹலத்துடன் தன் பின்னால் அருகிலுட்காரவைத்துக் கொண்டனள். பார்த்தமாத்திரத்திலேயே பத்திரலேகையின்பால் மிகுதியாயுண்டான பிரீதியை யுடையவளாய் அடிக்கடித் தளிர்போன்ற தனது கரத்தினால் பேராவலுடன் இவளைப்பரிசித்தனள்.

சந்திராபீடனும் உடனே தனது வரவுக்கேற்ற உபசாரங்களனைத்தையும் பெற்றுக்கொண்டு, சித்திராதனுடைய புதல்வி அவ்வித நிலைமையிலிருப்பதைப் பார்த்துவிட்டு, ‘பேதைமைத் தன்மைய

தான என் இருதயமானது இன்னுமல்லவோ இவ்வாறு நம்பிக்கை யற்றிருக்கின்றது! ஆகட்டும், ஸாமர்த்தியமான ஸல்லாபத்தினுல் இவளையே வினவுவோம்.' என்று யோசித்து வெளிப்படையாகக் கூறலானுன் :—* 'தேவி! இடைவிடாது ஸந்தாபத்தை யளிப்ப தான இப்பிணியானது எவ்வித மனக்கவலையைக் காரணமாகக் கொண்டு உண்டாயிற்றென்பதை யான் அறிவேன் ‡. ஸௌந்தரமே னியாளே! ஸத்தியமாய் இவ்வியாதி எம்மைப்போல் அவ்வளவு கடு மையாக உம்மைத் துன்பப் படுத்துகின்றதில்லை. எனது தேஹத் தைத் தந்தேனும் தம்மை ஸௌகம்பெறச் செய்வதற்கு நான் விரும் புகின்றேன். ஏதோ துன்பத்தினுல் மேனி நடுநடுங்க மலர்களின்மீது வீழ்ந்திருக்கும் உம்மைக் கண்டு மிகவும் இரக்கமுற்ற எனது இருத யம் அறுபட்டு விழுந்துவிடுவதுபோலிருக்கின்றதே §. தோள் வளைதுறந்த மங்கையரே! தமது கொடிபோன்ற கைகளிரண்டும் மிக மெலிந்துபோயினவே §. மிகவும் தாபத்தையடைந்த திருஷ்டி யினுல் நிலத்தாமரையோடைபோல் செந்தாமரைமலர்களின் சோபை யைப் பெற்றிருக்கின்றீர் †. நீர் துயரமுற்றிருக்கையிற் பணிவிடை செய்பவரும் அணிகளனைத்தையும் அகற்றி அநவரதமும் முத்துமாலை யைப்போல் கண்ணீர்களை பெருக்கியவண்ணமிருக்கின்றனரே. நீர்

---

* [வடமொழியிலிருக்கும் காதம்பரீ ஸங்கிரஹத்தில் இதுமுதல் மத லேகை மறுமொழி கூறும்வரையிலுள்ள ச்லேஷையான வாக்கியங்களுக்குத் தமிழிலும் அம்மாதிரியே ச்லேஷையாக எழுதுவது ஸாத்தியமில்லையான தால், இங்கு ஸாதாரண பொருளை மாத்திரம் எழுதி, அந்தந்த வாக்கியத் தின் மற்றொரு பொருளைக் கீழே குறிப்பிட்டுத் தனிப்படவரைகின்றனம்; ஆகையால் ஸம்ஸ்கிருத காதம்பரியில் இச்சந்தர்ப்பத்திலிருக்கும் பதங்களை இவ்விருபொருள்களுக்கும் தகுந்தவண்ணம் பிரித்து அர்த்தம் பண்ணிக் கொள்ளவும்.]

‡ எவ்வித மனக்கவலையை—என்பதற்குப் பதிலாக—காமனுலுண்டான காதலை—யென்று படிக்கவும்.

§ மன்மத பீடையினுல் நடுக்கமுற்று விழுந்திருக்கும் உம்மைக் கண்டு, அவ்வாறே மன்மதபீடையால் நடுக்கங்கொண்ட என்னுடைய இருதயமும் அறுந்து வீழ்வதுபோலிருக்கின்றது—என மாற்றி வாசிக்க.

§ தோள்வளை துறந்த மங்கையரே—என்பதற்குப் பதிலாக—மன்மத விகாரத்தை யளிப்பவளே—என்று படிக்கவும்.

† நிலத்தாமரையோடைபோல் செந்தாமரை மலர்களின் சோபையை—என்பதற்குப் பதிலாக—வேறென்றிலும் பற்றில்லாது கேவலம் (என்னிடம்) காதலைப் பெற்றிருக்கின்றீர்—என்று மாற்றிப் படிக்கவும்.

சுயமாகவே மங்களகரமான சிறந்த ஆபரணங்களை யெடுத்து அணிந்துக்கொள்வீராக *. புதிதாக ஓங்கி வளர்ந்த கொடியானது மலர்களுடனும் மதுகரங்களுடனும் கூடியிருந்தாலல்லவோ நன்கு விளங்கும்? ‡' என்று கூறியதைக் கேட்டுக் காதம்பரியானவள் பாலியப் பருவத்திற்கேற்கக் கபடத் தன்மையற்றிருப்பவளாயினும், மன்மதனால் உபதேசிக்கப்பெற்றது போன்ற நுண்ணறிவினால் நன்கு விளங்காதவண்ணம் மொழிந்த அவனது மொழிகளனைத்துக்குமுள்ள பொருள்களையு முள்ளத்திலறிந்துகொண்டனள். ஆயினும் தனது மனோரதங்களுக்கு அவ்வளவுதூரம் இடங்கொடுக்குமென்பதை நம்பாமல் இருஜுத்தன்மையையே கைப்பற்றியவளாய்ப் பேசாமலிருந்தனள். வேறுவிஷயத்தில் மனத்தைச் செலுத்துபவளாகப் பாவனை காட்டி அந்தக்ஷணத்தில் ஏதோ ஒருவாறு புன்னகை புரிந்தனள். அதன் பின்னர் மதலேகை மறுமொழி கூறலானாள் :—' இராஜகுமார! என்சொல்வேன்! இந்த ஸந்தர்ப்பமானது சொல்லக்கூடாத விதமாய் அவ்வளவு கடுமையாகவல்லவா இருக்கின்றது? § மேலும் இராஜகுமார! சிந்தையுடன் கூடிய சித்தத்தையுடையவளான இவளுக்கு எதுதான் ஸந்தாபத்தை யுண்டுபண்ணுகின்றதில்லை? ¶ ஆம்; மிகக்குளிர்ச்சி பொருந்திய தாமரைத் தளிரும் தணல்போலாகின்றது. நிலவும் வெயில்போல் தோற்றுகின்றது. தளிர்களாகும் சிற்றாலவட்டக் காற்றுகளால் மனத்தினிலுண்டாகும் துன்பத்தை நீர் காணவில்லையோ? † தைரிய மொன்றே இவளுயிரைப் போக்காமற் காப்பதற்கு முக்கிய முகாந்தரமென்க §.' என்று.

---

* சுயம்வரத்திற் கேற்ற மங்களகரமான ஆபரணங்களை யணிந்துகொள்வீராக—என்று மாற்றிப் படிக்கவும்.

‡ புஷ்ப பாணனான மன்மதனுடன் கூடிய யௌவனப்பருவமல்லவோ நன்கு விளங்கும்?—என்று மாற்றி வாசிக்கவும்.

§ மரத்திற்கொப்பான மூடரிடம் இந்த ஸந்தர்ப்பம் சொல்லத்தகாததே யன்றி, தங்களிடம் சொல்வதில் தடையில்லை—என்று வேறுவிதமாகவும் படிக்கலாம்.

¶ இராஜகுமார-என்பதற்குப் பதிலாக, இராஜகுமாரன் விஷயமான—என்று படிக்கவும்

† மனத்தினிலுண்டாகும்—என்பதற்குப் பதிலாக-மன்மதனாலுண்டாக்கப்படும்—என்று வாசிக்க.

§ தைரியமொன்றே—என்பதற்குப் பதிலாக, தாங்கள் ஒருவரே—எனப்படிக்க.

காதம்பரியோ, மதலேகை யுரைத்த அவ்வார்த்தைகளையே சந்திராபீடனுக்குத் தகுந்த மறுமொழியெனத் தனது மனத்தினில் நினைத்தனள். சந்திராபீடனும் இருவகையாகவும் பொருள் படக்கூடிய அம்மொழிகளைக் கேட்டு ஸந்தேஹத்தினல் அலைபாயும் சித்தத்தையுடையவனாய் மஹாச்வேதையோடுகூட பிரீதியைப் பெருகச் செய்யுமாறு மிகச் சாதுரியமாகப் பேசிக்கொண்டு வெகு நேரமிருந்து, அப்படியே அதிப்பிரயாஸத்துடன் தன்னை விடுவித்துக்கொண்டு ஸேனையிருக்குமிடஞ் செல்வதற்காகக் காதம்பரீமாளிகையை விட்டுப் புறப்பட்டான்.

அவன் வெளிக்கிளம்பி வந்துக் குதிரையிலேறுந்தருணத்திற் கேயூரகன் பின்பற்றிவந்து 'தேவ!—காதம்பரீதேவியானவள் முதன்முதற் பார்த்ததினலேயே பத்திரலேகையினிடம் பிரீதி மேலிட்டு, அவளைத் திருப்பி யழைத்து வந்துத் தன்னிடம் வைத்துக்கொண்டு, பிறகு அனுப்பக்கூடுமென விரும்புகிறள்—என்று மதலேகை விண்ணப்பம் பண்ணிக்கொள்கிறள்; இச்செய்தியைச் செவியுற்று, தமது சித்தப்படி செய்வீர்களாக.' எனச் செப்பியதைக் கேட்டு, சந்திராபீடன் 'கேயூரக! பத்திரலேகை வெகு பாக்கியசாலியாகவும் விரும்பக் கூடியவளாகவும் ஆகின்றனள்; ஏனெனில், இவள் அடைதற்கரிதான காதம்பரீதேவியின் அருளையும் அடைந்துவிட்டாளன்றோ? நல்லது, இவளையுள்ளே அழைத்துப் போகலாம்.' எனக் கூறிவிட்டு மீளவும் ஸேனையிருக்குமிடத்திற்கே வந்தான். ஸேனையிருக்குமிடத்திற்குள் வந்துகொண்டிருக்கையிலேயே தன் தந்தையினிடமிருந்து வந்திருப்பவனும், முன்னமே தனக்கு நன்றாகத் தெரிந்தவனுமான க்டிதங்கொண்டுவரும் வேலைக்காரனொருவனைக் கண்டான். உடனே குதிரையை யிழுத்துப் பிடித்துக்கொண்டு, பிரீதியினல் மலர்ந்த கண்களுடன் தூரத்திலிருந்தவாறே 'அப்பா! ஸகல பரிஜனங்களுடன் நமது தந்தையும், அந்தப்புரத்தோரனைவருடன் அன்னையும் க்ஷேமமாயிருக்கின்றனரோ?' என வினவினன். பின்னர் அவன் அருகில் வந்து பணிந்துவிட்டு, 'தேவ! ஆம், அவர்கள் ஸௌக்கியம்.' என்றுரைத்து, இரண்டு கடிதங்களைக் கொடுத்தான். இளவரசும் அதைச் சிரந்தனிலேந்தி, தானே அக்கடிதத்தைப் பிரித்து, கிரமமாகப் படிக்கலானன்:—

'மஹேச்வரரிடம் மஹாபக்தி வாய்ந்தவரும், மஹாராஜாதிராஜனு மான தாராபீடதேவனுன யான், ஸகல செல்வங்களுக்கும் இருப்பிட மான சந்திராபீடனை உஜ்ஜயினீ நகரத்திலிருந்து உச்சிமுகந்து வாழ்த்துக் கூறி உள்ளம் மகிழச் செய்கின்றேன். பிரஜைகளெல்லாம் க்ஷேமமாயிருக்கின்றனர். ஆனால் உன்னைப் பார்த்து வெகு நாட்களாயின. எமது இருதயம் உன்னைக் காண்பதற்கு மிகப் பேராவலைப் பெற்றிருக்கின்றது. அகில அந்தப்புரத்தொருடன் தேவியும் (விலாஸவதீ) மிக வாடிப்போயினள். ஆனதுபற்றிக் கடிதத்தைப் படித்து முடிக்கும் நேரமே பிரயாணத்திற்குரித்தான காலமாகக் கொள்ளக் கடவாய்.' என்று தன் தந்தை யெழுதியிருந்ததையும், சுகநாஸன் அனுப்பிய இரண்டாவது பத்திரிகையிலும் இவ்வண்ணமே பொருள்படுமாறு வரைந்திருந்ததையும் வாசித்தனன். இதேஸமயத்தில் வைசம்பாயனனும் ஸமீபத்தில் வந்து, இவற்றிற்கு மாறுபடாத பொருளையே யுணர்த்துபவையான தனக்கு வந்திருக்கும் வேறிரண்டு கடிதங்களையும் காட்டினன். பிறகு 'தந்தையினுத்தரவுப்படியே.' என மொழிந்து, அப்படியே அக்குதிரையிலிருந்தவண்ணம் புறப்பாட்டுப் பறையை முழங்கச் செய்தனன். மிகுதியான குதிரைக் கூட்டத்தினுற் கவியப்பெற்று ஸமீபத்திலிருக்கும் வலாஹகன் என்னும் ஸேனைத்தலைவனின் புத்திரனும் பெரும்படைக்கு அதிபதியுமான மேகநாதனென்பவனை நோக்கி இவ்வாறு கட்டளையிட்டனன் :—'நீ பத்திரலேகையுடன் வரவேண்டும்; நிச்சயமாய் கேயூரகனே அவளை யழைத்துக்கொண்டு இவ்வளவுதூரம் வந்துவிடுவான். அவனைக் கொண்டு காதம்பரீதேவியினிடம் நான் இவ்வண்ணம் தலைவணங்கி விண்ணப்பம் பண்ணியதாக மொழிந்திடவேண்டு மெனக் கூறுவாயாக. அதாவது—மானிடரின் சுபாவமானது இயல்பாகவே இவ்வாறு மூவுலகங்களாலும் வெறுக்கத் தகுந்ததும், ஒருவராலும் அனுஸரிக்கத்தகாததும், பரிசயத்தைப் பாராட்டாததும், இன்ன விதமென்று அறியக் கூடாததுமாகவல்லவோ இருக்கின்றது? இந்த மனிதரது பிரீதிகளனைத்தும் திடீரென முரண்பட்டவைகளாய், நிஷ்காரணமாகவே உண்டான உயர்ந்த வாத்ஸல்யத்தையும் ஒரு பொருட்டாகக் கருதுவதில்லை. இவ்வண்ணம் செல்பவனுன எனது க்ஷேமமானது வஞ்சகத்தனத்தினுலுண்டான ஏமாற்றுதலாகவல்ல

வோ ஆயினது? பக்தியும், பொய்யாகக் கிழ்ப்படிதலில் திறமையை யறிவிக்கும் விதமாகவே ஆய்விட்டது. நான் என்னை (உமக்கு) அர்ப்பணம் செய்து கொண்டதும், உபசாரத்தினுல்மட்டும் இன்பமுற்றதாய், வஞ்சகத்தன்மையில் வீழ்ந்துவிட்டது. மொழியில் வேறு மனத்தில் வேருக முரண்பட்ட பொருள்கள் பிரகடனம் பண்ணப்பட்டன. நான் இருக்கட்டும்; தைவலோகத்தவருக்குத் தகுந்தவர்களான காதம்பரீதேவிகளுமல்லவோ தகாதவிடந்தனில் தமது அனுக்கிரஹத்தை வைத்து உலகத்தோரது வார்த்தைகளுக்குத் தாம் பாத்திரமாயினுர்கள். பயனேதுமில்லாது பொருந்தாத விடந்தனிற் பொழிந்த அருளென்னும் அமுதவிருஷ்டிகள் மேன்மக்களுக்கு இலஜ்ஜையைப் பின்னிட்டுத்தான் பிறப்பிக்கின்றன. மஹாச்வேதையை நோக்குங்கால் எனது இருதயம் எப்படி வெகுவலுவான வெட்கத்தின் பாரத்தினுல் அயர்ந்து போகின்றதோ, அப்படிக் காதம்ரீயை நோக்கி அவ்வாருகின்றதில்லே. உண்மையல்லாத பலகுண ஸமூஹங்களை என்னிடம் ஏற்றிவைத்துப் புகழ்ந்து பேசித் தகாத விடத்திற் பக்ஷபாதம் பாராட்டிய இம்மஹாச்வேதையைத் தேவியார் அடிக்கடி வெறுக்கப் போகின்றனரென்பது திண்ணம். ஆகையால் என் செய்வேன்? பெரியோரது இம்மேலான கட்டளையானது எனது தேஹத்தை மாத்திரம் கட்டுப்படுத்தக் கூடியதாகின்றது; ஹேமகூடத்தில் வஸிப்பதில் விருப்பங்கொண்ட என் இருதயத்தினுலோ, பல்லாயிரம் ஜன்மங்களளவும் காதம்பரீதேவிக்கு அடிமைத் தன்மைக்காகப் பத்திரிகை வரையப்படலாயிற்று. எவ்விதத்திலும் தந்தையின் உத்தரவினுல் உஜ்ஜயினிக்குப் போய்ச் சேர்ந்தவனுனேன். ஸமயம் நேர்ந்தபோது பொல்லாத ஜனங்களைப் பற்றிய பேச்சுக்கள் வருங்கால் சந்திராபீட சண்டாளனும் ஒருவன் உளனென நினைத்துக் கொள்ளவேண்டும். சந்திராபீடன் உயிருடனிருக்குமளவிலும் மறுபடியும் தேவிகளது சரணுரவிந்தங்களின் வந்தனத்தை யநுபவியாமலிருப்பானென்று மட்டும் எண்ணலாகாது. மஹாச்வேதையை வலம் வந்து தலைவணங்கித் தாள்களில் தெண்டனிட்டதாகக் கூறவேண்டும். வந்தனஞ் செய்து, வழுவாவண்ணம் கழுத்தைத் தழுவியதாக மதலேகையினிடம் மொழிவாயாக. நன்கு ஆலிங்கனஞ் செய்துகொண்டேனெனத் தமாலிகையினிடம் தெரிவிக்கவும். காதம்பரியின்

ஸகல பரிஜநங்களின் க்ஷேமத்தையும் யான் விசாரித்ததாகவும் சொல்லவேண்டும். எனக்காகக் கைகூப்பி மேன்மைதங்கிய ஹேமகூட கிரியினிடம் விடைபெருவதற்குக் கேட்டுக் கொள்ளவும் வேண்டும்.'

இங்ஙனம் அவனுக்குக் கட்டளையிட்டுவிட்டு, 'தோழர் முதலானவர்களை வருத்தப்படுத்தாது நீ மெதுவாக வரவேண்டும்.' எனச் சொல்லி வைசம்பாயனனைப் படைகளின் பொறுப்பிலமர்த்தினன். தானும் அக்குதிரையின் மீதேறியவாறே, அழகிய இல்லைகளுக் கொப்பான ஈட்டிகளின் கூட்டங்களைக் கொண்டு செல்லும் இளங்குதிரைமயமான அச்வஸைந்நியத்தினற் பின்பற்றப்பட்டவனுய், காதம்பரியின் புதிய விரஹத்தினல் இருதயம் சூன்னியமாகவே இருப்பினும், சேணத்தைப் பற்றிக் கொண்டிருக்கும் அக்கடிதங் கொண்டுவந்தவனையே உஜ்ஜயினீ விருத்தாந்தங்களைப்பற்றி வினவிக்கொண்டே புறப்பட்டான். பெருங்கஜங்களால் வீழ்த்தப்பெற்ற மரங்களிருக்கும் பாதையைப் (வழிப்போக்கர்) பரிஹரிப்பதாற் கோணலாகப் போன வழிகளையுடையதும், ஜனங்கள் குவியல்களாகப் போட்ட புல், தழை, கட்டை இவைகளின் கூட்டங்களாற் குறிக்கப்பெற்ற வீரபுருஷர்களின் ஸம்ஹாரஸ்தலங்களையுடையதும், வேர்களிற் சதுக்கிய கானகக் காளியையுடைய பெரிய மரங்களுடன் கூடியதும், வழிப்போக்கர் வெட்டிய மணலூற்றுகளிற் கலக்கமாகக் கிடைக்கக்கூடிய மிகச் சொற்பமான தண்ணீரையுடைய வற்றிப்போன மலையாறுகளால் மேடுபள்ளமான பூமிகளையுடையதும், கோழிக் கூட்டங்களின் கூக்குரல்களாலும் நாய்களின் குலைப்புத் தொனிகளாலும் அனுமானித்தறிய வேண்டியவையான பெரும்புதர்களில் மறைந்துப் புலப்படாத சிறு கிராமங்களுடன் கூடியதுமான பாழடைந்த ஓர் அடவியிற் பகலெல்லாஞ் சென்று, சூரிய பிம்பம் சாய்ந்தவுடன், செவ்வானத்தின் காந்தியைப் பரவச்செய்யும் வேளையில், ஹரிதாளம்போற் பொன்னிறமான பிளந்த மூங்கிற் கழிகளைக் கொண்டு வேலி கட்டப்பெற்றவையும், மிருகங்கள் வந்து மேய்ந்து விடுமெனப் பயந்துப் புற்களைக் கொண்டு புருடர்போல் ஏற்படுத்திய மருள்களையுடையவையும், நன்கு பக்குவமாகப் பழுத்திருப்பவையுமான கம்பம் பயிர்மயமான காட்டுப் புலங்களால் விரளமாகச் செய்யப்பெற்ற வனபிரதேசத்தில் நெடுநாட்களாய் ஓங்கி வளர்ந்த ஓர் சந்தன

மரத்தினுச்சியிற் கட்டிய பெரியதோர் சிவப்புக் கொடியைத் தூரத்திலிருந்தே பார்க்கலானுன். நாக்குகள்போல் நன்கு சிவந்த பதாகைத்துகில்களாலும், கருங்கூந்தற்காந்தி பொருந்தியக் கறுத்த சாமரைகளாலும், புதிதாகக் கொன்ற பிராணிகளின் அவயவங்களால் அக் கொடியானது அலங்கரிக்கப் பெற்றிருந்ததுபோற் காணப்பட்டது. நன்கு முதிர்ந்த சோழிகளை அதில் குமிழ் குமிழாக அர்த்தசந்திரன்களைப் போல் இழைத்திருந்தது; அக் கொடியின் முனையிற்கட்டி யூசலாடும் இரும்புச் சங்கிலியிற் கணகணவென்று கோரமாகச் சப்தித்தவாறு ஆடிக்கொண்டிருக்கும் மணியுடனும், சிங்கத்தின் பிடரிமயிராலாக்கிய அழகிய சாமரையுடனும் கூடிய தங்கத் திரிசூலத்தினல் அது ஆகாயத்தைக் கீறிக்கொண்டிருந்தது; பலிக்காக வேண்டி வழிப் போக்கரது பாதையை நிமிர்ந்து பார்ப்பது போல் அது மிகவும் உயர்ந்திருந்தது.

அக்கொடிக்கு எதிர்முகமாகச் சிறிது தூரம் சென்று, தாழம்பூ முனைபோல் மிக வெண்ணிறமான காட்டானையின் தந்தங்களாலாக்கிய கதவினல் மூடப்பெற்றதும், இரத்த சாமரங்களின் வரிசைகளையும் பளபளத்த உருக்கிரும்புகளாற் செய்த மாலைபோன்ற கண்ணடிகளின் பந்திகளையும் பெற்றிருக்கும் இரும்புமயமான தோரணவாயிலுடன் கூடிய வாயிற்படியையுடையதுமான ஓர் காளிகோயிலைக் காணலானுன். சிவந்த சந்தனக்குழம்பில் நனைந்த கரதலங் கொண்டு முத்திரையிடப் பெற்றிருக்கின்றதாதலால் உதிரத்தினுற் சிவந்த இயமனது கையினல் அடிக்கப்பட்ட அடையாளத்துடன் கூடியது போல் தோற்றுவதும், சிவந்த கண்களையுடையதாயிருந்ததால் அவற்றை உதிரபிந்துக்களென நினைத்து அதிற் பேராசைகொண்ட நரிகளால் நக்கப்பெற்றதுமான இரும்பினுலாக்கிய எருமைக் கிடாவானது அக் கோயிலுக்கு எதிரில் மழமழப்புள்ள ஓர் கருங்கல் மயமான மேடையின்மீது அமைக்கப்பெற்றிருந்தது. ஆங்கு ஒரு புறத்தில் மான்களின் கோடிக்கணக்கான கோணக்கொம்புகளின் முனைகளால் முளைமுளைத்திருப்பதுபோலவும், அறுத்தெறியப் பெற்றிருக்கும் ஈரமுள்ள நூற்றுக்கணக்கான நாக்குகளாற் செந்தளிர் தளிர்த்திருப்பது போலவும், பல்லாயிரம் செங்கண்களால் பூப் பூத்திருப்ப

துபோலவும், அரிந்தெறியப் பெற்ற சவங்களின் மண்டைகளாற் கனிகளுடன் கூடியதுபோலவும் பலியிடுவதிற் செய்த கொலைகளின் கோலங்கள் காணப்பெற்றன. கிளைகளின் இடைகளில் இடைவிடாமற் செங்கோழிகள் பதுங்கியிருந்தமையால், மிகப் பயந்து அகாலத்திற் பூத்தப் பூங்கொத்துகளுடன் கூடியவைபோல் தோற்றும் இரத்தாசோகமரங்களால் அக்கோயிலின் ஓர் அங்கணம் அலங்கரிக்கப் பெற்றிருருந்தது. தீபத்தின் தூமம்பட்டுக் காவிபடிந்து தொங்கிக்கொண்டிருக்கும் திரைச் சீலையுடன் கூடியதும், மயில்களின் தொண்டைமுருந்துகளின் வலயங்களால் தொடுக்கப்பெற்றத் தோரணத்தையுடையதும், மாக்குழம்பினால் வெண்மையாக்கப்பட்ட கனமான மணிகளின் மாலைகளுடன் கூடியதுமான கர்ப்பகிருஹத்தின் * வாயிற்படியிற் பித்தளையினாலாக்கிய சிங்கமுகத்தினுருவங்கொண்ட துளையின் மத்தியத்தில் இரும்புமயமான பெருந் தாழ்ப்பாளிடப் பெற்றதும், தந்தத்தினாற் செய்த உழல் மரத் தடியையுடையதும், பொன்னிறம் நீலநிறம் சென்னிறம் என்கிற பல வர்ணங்கள் பொருந்திய வரிசை வரிசையான கண்ணாடிக்குமிழ்களால் விளங்குபவையுமான இரு கதவுகள் அமைக்கப்பெற்றிருந்தன. கருஞ்சாமரைகளின் சாயைகள் விழுந்திருப்பதாற் (பிராணிகளின்) சிரங்களை அறுக்கையிற் பற்றிய மயிர்களுடன்கூடியவைபோல் தோற்றுபவையான கோடரி அரிவாள் முதலியபிராணிகளைக் கொலைசெய்யும் ஆயுதங்களின் ஒளிகளாற் பேரிருள் பரவியிருப்பதுபற்றி, பாதாளவாஸியான காளிபோல் அது புலப்பட்டது. சிறு குழந்தைகளின் மண்டைகளாற் செய்த தண்டாகாரமான மாலைகள் போலிருப்பவையான, செஞ்சந்தனக் குழம்பு பூசிய பில்வப் பழங்களாலும் அதன் தளிர்களாலும் தொடுக்கப்பெற்ற மாலைகளால் அக்காளியானது அலங்கரிக்கப்பட்டிருந்தது. விரதானுஷ்டானஞ் செய்பவைபோல் வெகு நீண்ட தாடிகளைத் தரிப்பவையான ஆடுகளும், வரன்பெறுவதற்குப் பட்டினியாகப் படுத்திருக்கின்றவைபோற் கிருஷ்ணாஜினத்தினாற் சுவரப் பெற்ற அங்கங்களையுடைய மான்களும், சிரந்தனில் தாங்கிய மணிதீபங்களால் ஆராதிப்பவைபோற் சிவந்த

* கர்ப்பகிருஹம் = கோயிலின் உட்புறத்து அறை; மூலஸ்தானம் என்றும் பெயர்.

சிரோமணிகளால் விளங்குபவையான கிருஷ்ணஸர்ப்பங்களும், துதி செய்ய முயன்றவைபோற் காதுபிளக்கக் கத்தும் காகங்களும் அக் காளியைத் தொழுகின்றனவோவெனத் தோற்றின. எரிந்துபோன மரக்கட்டையெனக் கருதி யேறிய பல்லி, ஓணன், அரணை முதலிய ஜீவகுலங்களோவெனத் தோற்றுபவையான பருத்த இரத்த நாளங் களாற் கவியப்பெற்ற தேஹத்தையுடையவனும், தரித்திரத் தன்மை யைப் பெயர்த்தெடுத்த அடையாளங்களையுடைய இடங்களைப் போலி ருக்கும் மசூரியென்னும் *விரணங்களால் உண்டான சிறு சிறு குழிக ளையுடைய அங்கங்களுடன் கூடியவனும், உலர்ந்த காட்டுக் கொடிகளா லாக்கிய பெரும் பூக்குடலையையுடையவனும், நீண்ட மூங்கிற்றடியி னாற் செய்த பூப்பறிக்குந் துறட்டை யேந்திக்கொண்டிருப்பவனும், நொடிப் பொழுதும் விடாதபடி கருங்கம்பளக்கோணியைப் போர் த்திருப்பவனுமான தமிழ்த் தேசத்துக் கிழட்டுப் பூசாரி யொருவனை (திராவிடதார்மிகன்) அக்கோயிலில் இருக்கக் கண்டான்; அம்பி கையின் அடிகளில் அடிக்கடி வீழ்வதால் வீங்கிப்போன அவனது நெற்றியிற் கருநிறமான புரைகுழல் புறப்பட்டிருந்தது. கற்பில்லா இரஸவாதியினாற் கொடுக்கப்பெற்ற ஸித்தாஞ்ஜனத்தைப் போட்டுக் கொண்டு ஒருகண் அவிந்துப்போய்விட்டதுபற்றி, மூன்றுவேளையி லும் மற்றொரு நேத்திரத்திற்கு (அபாயம் நேரிடாவண்ணம்) மைதீ ட்டிக்கொள்வதில் ஆவலுடன் மெல்லிய மரச்சலாகையை வழுமூட் டிக்கொண்டிருந்தான். கோரமாகப் பருத்து வளர்ந்த பற்களுக்குப் பரிஹாரம் பண்ணுவதற்காகப் பேய்ச்சுரைக்காயிட்டுக் காய்ச்சிய வெந்நீரால் நாள்தோறும் வேது பிடித்து வந்தான். வெகு பிரயா ஸத்துடன் தகாத விடங்களிற் செங்கல்களைக் கொண்டு அடித்துக் கொள்வதால் அவன் புயமொன்று ஒய்வடைந்து உலர்ந்து உணர்ச் சியற்றிருந்தது. ஊசியை நுழைத்து இடதுகைவிரலகளின் நாடி நரம்புகள் தைக்கப்பெற்றிருந்தமையால், அவ்வங்குலிகள் மிகவும் சுருங்கிக் கிடந்தன. நன்கு பக்குவம் செய்யப்படாத கெட்ட இரஸா யனத்தை உபயோகித்ததால், அவன் அகாலத்திலுதித்த ஜ்வரத்தி னாற் பிடிக்கப் படுபவனாயிருந்தான். கிழட்டுத் தனத்தை யடைந்தி ருந்தும், தென்தேயத்தை அரசாளும் பொருட்டு அவன் வரன்க

* மசூரி=உலகில் அம்மை யென்று வழங்கப்படும் விரணம்.

லைக் கேட்டு, துர்க்காதேவியினிடம் தொல்லை செய்து வந்தான். முறைகேடாகப் பயின்றவனான ஜைனஸந்நியாஸியினது கட்டளைக்கிணங்க இட்டுக்கொண்ட திலகத்தினால் தனக்குச் செல்வங்கள் செழித்தோங்கப் போகின்றனவென்று அவன் பேராசைகொண்டிருந்தான். பச்சிலைச் சாற்றையுங் கரியையும் சேர்த்துச் செய்தமைபிட்டு மலினமான நத்தையோடுகளையும், துர்க்காஸ்தோத்திரமெழுதிய ஓர் துண்டுச் சீட்டையும், புகையேறிக் காவிபடிந்த பனையோலைகளிற் செம்பஞ்சுக் குழம்பினால் தப்பாக வரையப்பெற்ற மந்திர தந்திரங்களையுடைய குட்டைச் சுவடிகளையும் அவன் வைத்திருந்தான். மிகவும் முதிர்வடைந்த ஓர் மஹாபாசுபதனது உபதேசத்தினால் அவன் மஹாகாலமதத்தை யெழுதிவைத்திருந்தான். அல்லாமலும் அவன் நிதிவாதமாகிற * பிணியினாற் பீடிக்கப்பட்டும், இரஸவாதமாகும் வாதரோகத்தினால் ஆக்கிரமிக்கப்பெற்றும், பாதாளகுகையிற் பிரவேசிக்கும் ஸித்தியைப் பெறுவதிலுண்டான வீணாசையாகும் வேதாளத்தினாற் பற்றிக்கொள்ளப்பட்டும், தன்னிடம் யக்ஷகன்னிகை $ காதல் கொள்ளவேண்டு மென்கிற விருப்பமாகும் மோஹத்தையடைந்து மிருந்தான். மேலும் அவன் மறைந்துவிடத் தகுந்த மந்திரங்களின் ஸாதனங்களை ஸம்பாதிக்க முயன்றவனாகவும், பற்பல ஸித்திகளைத் தருவதான ஸ்ரீபர்வதமென்னும் ஓர் மலையைப் பற்றிய ஆயிரக்கணக்கான ஆச்சரிய விருத்தாந்தங்களை அறிந்தவனாகவும் இருந்தான். பலமுறை மந்திரித்த வெள்ளைக் கடுகுகளை யெறிந்ததனால் ஓடிவந்த பேய்ப்பிடித்தவரின் கரதலங்களால் ஓங்கி அறையப்பட்டு அவனது கன்னங்கள் குன்றிக் கிடந்தன. அவனுக்குச் சைவமதத்திற் பிடிமானம் குடிகொண்டிருந்தது. அவன் சுரைக்குடுக்கையாலாக்கிய வீணையை வகையறியாமற் பிடித்துத் தாறுமாறாக மீட்டுவதால் மனவெறுப்படைந்த வழிப்போக்கர் அவனிடம் அணுகாமல் தூரவிலகிப் போவர். பகற்பொழுதெல்லாம் தலையை யசைத்தவண்ணம் கொசுக்கள் கீச்சிடுவதற்கேற்க எதையோ பாடிக்கொண்டும், சுதேசபாஷையில் இயற்றிய கங்காஸ்தோ

* நிதிவாதம் = புதையல்களிருக்கும் இடங்களைக்கண்டுபிடிக்கும் முறை.

$ யக்ஷகன்னிகை = மோஹினீ யென்று சொல்லப்படுகிற ஓர் வகையான பெண் பிசாசு.

த்திரத்தைச் செப்பியவாறு நர்த்தனம் பண்ணிக்கொண்டுமிருப்பான். துரகபிரம்மசரிய விரதத்தைக் * கைப்பற்றினவனுதலால், தேசாந்தரங்களிலிருந்து வந்து வஸிக்கும் ஸந்நியாஸவிரதம் பூண்ட கிழவிகளின்மீது வீணில் ஸ்த்ரீவசிகரண சூர்ணத்தை வாரி யிறைப்பான். வெகு கோபிஷ்டனுதலால், சிலவேளை (அர்ச்சிக்கும்போது) தகுந்தவாறு வைக்கப்படாமையால் தவறி விழுந்த அஷ்டபுஷ்பிகைகளின் மீது‡ அதிகமாய்ச் சினங்கொள்வான். முகநொடிப்பு முதலிய விநோத விகாரங்களைக்காட்டிக் காளியையும் கேலி செய்வான். ஒருகால் ஆங்கு தங்கக் கூடாதெனத் தகைந்ததாற் கோபங்கொண்ட வழிப்போக்கருடன் பெருங் கைச்சண்டை செய்கையில், அவர்களால் கீழே வீழ்த்தப்பட்டு முறிவடைந்த முதுகையுடையவனுயிருந்தான். ஒருஸமயம் பிழைசெய்துவிட்டு விரைந்தோடும் சிறுவரிடம் சினங்கொண்டு அவர்களைப் பின்பற்றியோடுகையில் அவன் கால்தவறித் தலைகீழாக விழுந்ததால், சிலைதாக்கிச் சிரஸ்ஸினெலும்பு சிதறுண்டு, கழுத்தும் ஒருவாறு முடங்கிக் கிடந்தது. சிலவேளை புதிதாக வந்த வேறு பூசாரியினிடம் தேசத்தார் கௌரவம் கொண்டாடுவதைக் கண்டு பொறாமை கொண்டு தவிப்பான். படிப்பு முதலிய பயிற்சியேதும் பெறாதவனுதலால், தனக்குத் தோன்றியவாறு எதை யெதையோ செய்வான். முடவனுனதுபற்றி மெள்ளமெள்ள நடப்பான். செவிடனுயிருப்பதால் ஸம்ஞ்ஞைசெய்து ஸம்பாஷணை செய்வான். இரவிற் கண்தெரியாதாகையாற் பகற்பொழுதிற்றுனே எங்கும் நடமாடுவான். தொந்திவயிற்றேனுதலாற் பெருந்தீனி தின்பான். பலமுறை பழங்களைப் பிடுங்கிப்போடுவதாற் கோபித்த வாநரங்களின் நகங்களால் பீறப்பட்டு அவனது மூக்கில் ஓட்டைகள் உண்டாக்கப் பட்டிருந்தன. சீர்திருத்தாமற் பாழடைந்த கோயில்களிற் படுத்துறங்குகையிற் பல்லாயிரமுறை அவனைக் கரும்பாம்புகள் கடித்திருந்

* துரகபிரம்மசரியம் = உள்ளத்தில் உலகஸுகங்களை யனுபவிக்க விருப்பமிருந்தும், அவ்வாறு கிடைக்காமையால் பிரம்மசாரிபோலிருத்தல்.

‡ அஷ்ட புஷ்பிகை = எட்டு புஷ்பங்களைக்கொண்டு செய்யப்படும் ஓர் வகையான அர்ச்சனை.

தன. எப்பொழுதும் வஸந்தோத்ஸவம் *செய்து விளையாடும் ஜனங்கள் ஓர் சிறு கோணைக் கட்டிலிற் கிழட்டுத் தாஸியுடன் இவனை யேற்றிவைத்து வேடிக்கையாக விவாஹம்பண்ணி பரிஹஸிப்பார்கள். அநேக தேவாலயங்களிற் சென்று பிராயோபவேசம்‡ செய்து இறுதியிற் பயன் பெறுமலே எழுந்து வந்துவிடுவான். மூடத் தன்மையினிடமிருந்து பிறந்த அனேக மகவுகளோவெனத் தரும் அளவற்ற துன்பங்களை அவன் விளக்கிக் காட்டுவான். அவன் அவயவங்களனைத்திலும் தீவர்த்திதாக்கியெரிந்தனுலுண்டான இரணங்களால், தனது சரீரத்திற் பலமுகங்களுடன் வெளிவந்திருப்பதுபோல் தோற்றும் வருத்தத்தைப் பிரகடனம் பண்ணுவான். இத்தகைய பூசாரியால் வஸிக்கப்பெற்ற அக்காளிகோயிலிலேயே சந்திராபீடனும் தங்கியிருக்க ஏற்பாடு செய்துகொண்டான்.

பிறகு குதிரையை விட்டிறங்கி, அக்கோயிலுக்குட் பிரவேசித்து, பக்திபொருந்திய மனத்துடன் அக்காளியைப் பணிந்தனன். வலம்வந்து மீளவும் வணங்கிவிட்டு, மிகவும் சாந்தமான பிரதேசத்தைப் பார்ப்பதில் ஆவலுடன் அங்குமிங்குமாய் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையிற் கோபத்துடன் உரத்துக் கதறிக் கொண்டும் கூக்குரலிட்டுக் கொண்டும் ஆங்கு ஒருபக்கத்தில் அத்தமிழ்த் தேயத்துப் பூசாரியிருப்பதைக் கண்டான். காதம்பரியின் பிறிவாற்ருமையினுலுண்டான மனவருத்தத்துடன் துயரமுற்றிருப்பினும், அவனைப் பார்த்து வெகுநேரம் நகைத்தனன். அவனுடன் சண்டைசெய்து பரிஹாஸம் பண்ணும் தனது பரிவாரத்தையும் அவ்வாறு செய்யவிடாது விலக்கினுன். இன்பமான பல ஸல்லாபங்களைச் செய்து, அநுஸரித்து, நல்வார்த்தை கூறி, வெகு பிரயாஸத்துடன் அவனுக்குத் தெளிவையுண்டாக்கி, மெல்லமெல்ல அவனது ஜன்மபூமியையும், ஜாதியையும், வித்தையையும், பெண்டு பிள்ளைகளையும், செல்வத்தையும், வயதின் அளவையும், ஸந்நியாஸத்திற்குத் தகுந்த முகாந்தரத்

---

* வஸந்தோத்ஸவம்=காமன் பண்டிகை யென்று இப்பொழுது வழங்கப்படும் ஓர் உத்ஸவம்.

‡ பிராயோபவேசம்=தாம் கோரிய வரனைத் தமது இஷ்ட தேவதை அளித்தாலன்றி எழுந்திருப்பதுமில்லை, உண்பதுமில்லையென்று தரையிற் படுத்துச் செய்யும் ஓர் விரதம்.

தையும் சந்திராபீடன் தானகவே வினவினன். அவ்வாறு வினவப்பட்டவனய் அப்பூசாரியும் தன்னைத்தானே பலவாறு வர்ணிக்கலானன். அவன் கடந்துபோன தனது ஆண்மை, அழகு, ஐச்வரியம் இவைகளை அதிகமாய் வர்ணித்துக் கூறுவதைக் கேட்டு இராஜகுமாரன் அதில் மிகவும் இன்பமுற்றனன்; விரஹவேதனையினல் வருத்தமுற்றஇருதயத்தையுடைய அவனுக்கு அது பொழுதுபோக்குப்போலாயிற்று. பரிசயத்தைப் பெற்று, பின்னர் அவனுக்குத் தாம்பூலம் கொடுப்பித்தனன். கதிரவக் கடவுள் அஸ்தமனத்தை அடைந்ததும் புவிதனிற் புரண்டமையாற் புழுதிபடிந்தப் பிடரிமயிர்களை யுதறுவதால் உத்ஸாஹமடைந்தனவென ஊஹிக்கப்பெற்றவையும், தண்ணீர் காட்டிக் குளிப்பாட்டப்பெற்று ஆயாஸந்தீர்ந்தவையுமான அச்வங்களை அவைகளுக்குமுன்புறத்திற் புதைத்துநாட்டிய ஈட்டித்தடிகளிற் கட்டினர்கள்; சந்திராபீடனும் ஆங்கோர் பாரிசத்தில் ஊழியர் கட்டிய இந்திராயுதத்திற்கு எதிரில் ஏற்படுத்தப்பட்டதும், பிரதீஹாரியினல் பணிவுடன் காட்டப்பெற்றதுமான படுக்கையை யடைந்தனன். அதிலுட்கார்ந்ததும் அந்தக்ஷணத்திலேயே அவனது இருதயத்தைத் துயரம் தொடத் தொடங்கியது. மனக்கவலையுற்றவனய் மன்னவர் கூட்டத்தையும் விட்டுவிட்டான். அருகில் அமர்ந்திருக்கும் அதிக ஆப்தர்களோடும் அவன் பேசவிரும்பினனில்லை. கண்களை மூடிக்கொண்டு அடிக்கடி மனத்தினற் கிம்புருஷ தேசத்திற்குச் செல்வதாகச் சிந்திக்கலானன். மற்றென்றிலும் மனதைச் செலுத்தாமல் ஹேமகூடத்தை ஸ்மரித்தவா றிருந்தான். மஹாச்வேதை காரணமேதுமில்லாது அருள்புரிந்து உறவாடுந்தன்மையையும் யோசிக்கலானன். உயிர் பிழைத்திருப்பதற்கு உயர்ந்த பயனெனத் தகும் காதம்பரீதரிசனத்தை அடிக்கொருமுறை விரும்பினன். செருக்கற்று மிகவும் மனேஹரமான மதலேகையின் பரிசயத்தில் ஆசையுள்ளவனனன். தமாலிகையைக் காண்பதில் விருப்பங் கொண்டான். கேயூரகனது வரவை யெதிர்பார்க்க முயன்றன். (மனத்தினல்) ஹிமகிருஹத்தைக் கண்டான். அடிக்கடி சுடச் சுடப் பெருமூச்செறிந்தான். சேஷஹாரத்தினிடம் அதிகம் பிரீதி பண்ணலானன். பின் தங்கியிருப்பவளான பத்திரலேகையைப் புண்ணியம் பண்ணவளெனக் கருதினன். இவ்வண்ணம் நித்திரை பெருதவனகவே அவ்வி

ரவனைத்தையுங் கழித்தனன். விடியற்காலத்தில் எழுந்து அத்த மிழ்த் தேயத்துப் பூசாரிக்குத் தனங்களை வேண்டியவளவு வாரிக்கொடுத்து, இஷ்டப்படி அவனெண்ணங்களையெல்லாம் பூர்த்திசெய்து, மிகவும் இரமணீயமான இடங்களிலெல்லாம் தங்கி வஸித்துக்கொண்டு, சிறிது நாட்களிற்றானே உஜ்ஜயினீநகரம் போய்ச் சேர்ந்தனன்.

இவனது எதிர்பாராத வரவினால் மிக்க மனக்களிப்படைந்தப் பட்டணத்து ஜனங்கள் பரபரப்புடன் பணிந்து பல்லாயிரக் கணக்காகப் பண்ணும் அஞ்ஜலிகளை ஆதரவுடன் ஏற்றுக்கொண்டு திடீரென நகரத்தினுட் சென்றான். பரிஜனங்கள், நான் முன்னே நான் முன்னே என்று விரைந்தோடி மனந்தனிற் பொங்கி யெழும்பும் மகிழ்ச்சியினால் தழுதழுத்து 'ஆண்டவனே! வாயிற்படியிற் சந்திராபீடன் வந்திருக்கின்றார்.' எனச் சொல்லக் கேட்டு, இவனது பிதா பேரின்பக் கண்ணீரைச் சொரிந்து கொண்டு, வாள், பிரம்பு, குடை, கொடி, சாமரை இவைகளை யேந்தியவாறு அருகிலிருக்கும் ஆயிரக் கணக்கான அரசரால் பின்பற்றப்பட்டவனாய்க் கால் நடையாகவே எதிர்கொண்டு போனான். தந்தையைக் கண்டதும் தூரத்திற்றானே குதிரையின் மீதிருந்து இறங்கி, சூடாமணியின் கதிரொளிகளால் விளங்குவதான சிரத்தைப் பார்தனிற் படும்படி வணங்கி வந்தனஞ் செய்தனன். பிறகு 'வரவேண்டும் வரவேண்டும்.' என்று அழைத்து, புயங்களை நீட்டிப் பிதாவினால் வெகு நேரம் நன்கு ஆலிங்கனம் பண்ணிக் கொள்ளப் பட்டவனாய், அக்காலை அருகில் வந்திருக்கும் கௌரவிக்கத் தகுந்த பெரியோரை வணங்கிய பின், கரத்தைப் பற்றிக்கொண்டு வேந்தனால் விலாஸவதியின் மாளிகைக்கு அழைத்தேகப்பட்டான். அகில அந்தப்புரத்துப் பரிவாரங்களுடன் கூடியவளான அவளும் அவ்வாறே எதிர்கொண்டு போய் அவனது வரவை ஆனந்தத்துடன் ஏற்று, அந்த வரவுக்கேற்ற மங்களாசாரங்களையும் செய்த பின்பு, திக்விஜயத்தைப்பற்றிய செய்திகளைச் செப்பிக்கொண்டே சிறிதுநேரம் அங்குத் தங்கி விட்டுச் சுகநாஸனைப் பார்க்கப் போயினன். அவ்விடத்திலும் அங்ஙனமே வெகு நேரம் இருந்து, வைசம்பாயனன் க்ஷேமமாக ஸேனையிலிருப்பதாகவும் சொல்லிவிட்டு, மனோரமையைப் போய்க் கண்டு கொண்டு, விலாஸவதியின் வீட்டிற்குவந்து, மெய்மறந்தவனாய் அவ்விடத்திலேயே

மஞ்சனமாடுவது முதலிய காரியங்களனைத்தையும் முடித்துக் கொண்டான். பிறகு அந்திப்பொழுதில் தனது மாளிகைக்கே சென்றனன். அங்கு மனக்கவலையினால் மிகவும் துயரமுற்றவனாய், காதம்பரீயில்லாமல் தான் மாத்திரமேயல்ல—தனது அகமும், அவந்தீநகரமும், அகில அவநிமண்டலமுங்கூடப் பாழடைந்திருப்பதாகவே கருதலானான். பிறகு கந்தர்வராஜனது புதல்வியின் செய்திகளைச் செவியுறுவதிற் பேரவாகொண்டவனாய், பத்திரலேகையின் வரவை மஹோத்ஸவத்தைப் போலவும், தான் கோரிய வரன் வந்து சேரும் வேளையைப் போலவும் எதிர்பார்க்கலானான்.

பின்பு சில நாட்கள் சென்றதும் மேகநாதனானவன் பத்திரலேகையை அழைத்து வந்து இவனருகிற் கொண்டுவிட்டான். அவள் தூரத்திலிருந்தே வந்தனஞ் செய்ததும், சந்திராபீடன் புன்னகை புரிந்து தனதன்பை விளக்குபவனாய் எழுந்து, இயல்பாகவே பிரீதிக்குப் பாத்திரமாகவிருப்பினும் காதம்பரியின் பக்கத்திலிருந்து அவளருளால் அடைந்த வேறு மனதைக் கவறுங்குணங்களையுடையவளைப்போல் இன்னும் இன்பமுறுந்தன்மையைப் பெற்றவளான பத்திரலேகையை மிகவும் அதிசயிக்கத் தக்க ஆதரவுடன் ஆலிங்கனஞ் செய்து கொண்டான்; அடிபணிந்தவனான அம்மேகநாதனையும் தனது தளிர் போன்ற கரங்கொண்டு முதுகிற் பரிசித்தனன். பிறகு சந்திராபீடன் உட்கார்ந்து கொண்டு, 'பத்திரலேகே! மேன்மை தங்கிய மஹாச்வேதையினுடையவும், மதலேகையோடு கூடிய காதம்பரீதேவியினுடையவும் க்ஷேமவிருத்தாந்தங்களைச் செப்புவாயாக; மேலும் தமாலிகை, கேயூரகன் முதலான பரிஜனங்களும் க்ஷேமமா?' என வினவலானான். பின்னர் அவளுரைத்ததாவது:— 'தேவ! தாம் கேட்கும் வண்ணம் அனைவரும் க்ஷேமம்; தோழிமாருடனும், பரிஜனங்களுடனும் காதம்பரீதேவிகள் சிரந்தனிற் கைகூப்பித் தங்களைத் தொழுவதாகக் கூறச் சொன்னார்கள்.' என்று இங்ஙனம் பகர்ந்த பத்திரலேகையை அழைத்துக் கொண்டு, அரசரனைவரையும் விட்டுவிட்டு, குதிரை கட்டுந் தோழத்தினுட் சென்றான். கவலையுற்றுத் தவிக்கும் மனத்துடன் தனது குதூஹலத்தைத் தாங்கவியலாதவனாய், வேலைக்காரரை வெகு தூரத்தில் விலக்கி

விட்டு, அங்குச்சென்று, ஓர் தோமத்தின் அடித்தடத்தில் ஸுகமாகத் தூங்கும் ஆண் பெண்களான இரண்டு அன்னப்பறவைகளைச் சரணாரவிந்தத்தினால் ஒதுக்கிவிட்டு, உட்கார்ந்து இவ்வாறு கூறலானான்:—'பத்திரலேகே! சற்றுப் பகர்ந்திடுவாயாக; ஆங்கு நீ எத்தனை நாட்கள் எங்ஙனம் இருந்தனை? காதம்பரீதேவிக்கு எமதிடமிருக்கும் அருள் எத்தகையது? என்னென்ன ஸதஸ்ஸுகள் நடைபெற்றன? எவ்வெவ்வகையான பேச்சுகள் பேசப் பெறலாயின? நம்மை மிகுதியாய் நினைக்கின்றவர் யாவர்? எவர் அதிகமாய் பிரீதி பண்ணுபவர்?' என்று இவ்வண்ணம் வினவப்பட்டவளாய் விண்ணப்பம் செய்யலானாள்:—"தேவ! சற்று கவனத்துடன் கேட்கவேண்டும்:—

தேவரீர் அங்கிருந்து வந்துவிட்டதும், கேயூரகனுடன் நான் திரும்பிப் போய் அங்ஙனமே பூப்படுக்கையின் பக்கலில் உட்கார்ந்தேன். காதம்பரீதேவியின் புதிது புதிதான பிரீதிவிசேஷங்களை அநுபவித்துக் கொண்டு ஸுகமாகவிருந்தேன். பலவாறு கூறுவதிற் பயனென்ன? பெரும்பாலும் காதம்பரீதேவிகளுக்கு எனது கண்களிற் கண்களும், மேனியில் மேனியும், கரத்தில் தளிர்போன்ற கரமும், பெயர்ச்சொற்களில் வாக்கும், பிரீதியில் இருதயமுமாக அப்பகலெல்லாமிருந்தது. ஸாயங்காலவேளையில் என்னையே பற்றிக்கொண்டு ஹிமகிருஹம் விட்டு வெளிவந்து, ஏதோ தற்செயலாய்ப் பரிஜனங்களைத் தடுத்துவிட்டு, தனது அருமையான இளந்தோப்பிற்குச் சென்றனள். ஆங்கு சுண்ணச் சாந்திட்டு வெளுத்த அந்தப்புரச் சோலையிலிருக்கும் பெரியதோர் திண்ணையின் மீது மரகதக் கற்படிகளால் ஏறிப்போயினள். அதில் மணித்தூணொன்றிற் சாய்ந்து நின்றுகொண்டு, முகூர்த்த நேரம் போல் அங்ஙனமிருந்து, இருதயத்தில் வெகுநேரம் ஆலோசித்து, ஏதோ கூறுவதற்கு விரும்பியவளாய், சலனமின்றி நிலைநின்ற கருவிழியுடன் கூடிய கண்ணால் இமைகளசையாது வெகு நேரம் எனது முகத்தைப் பார்க்கலானாள்.

பிறகு அவளுள்ளத்தை யுள்ளபடி யறிந்து கொண்ட நான் 'ஆஞ்ஞாபிக்கவேண்டும்' என வேண்டிக் கொண்டதும், நடுக்கமுற்றத் தனது உடல்களாற்றுமன தடுக்கப் பட்டவள் போல், இரஹஸ்யச் செய்திகளைத் தன் பிரதிபிம்பமும் செவியுறுமோவென

வெட்கப்பட்டவளாய் அதையும் பாதத்தின் பெருவிரலால் விலக்கி விட விரும்பியவள் போல் மணி மேடையைக் கீறியவாறு, வனதேவதைகள் கேழ்க்கப்போகின்றனரே யென்று சங்கையுண் டானவளைப்போல் அடிக்கொரு முறை இங்குமங்குமாய்ப் பார்த்துக் கொண்டு, பேச விருப்பமிருப்பினும் வெட்கத்தினல் வாய் தழு தழுத்து அவள் எதுங்கூறவுங் கூடவில்லை. ஆனல் கேவலம் எண் ணிறந்த மனத்துயரங்களை எண்ணுவதற்கென்று முத்துமயமான ஜப மாலையைத் தொடுப்பவள் போல், சிறங்குனிந்தவண்ணம் நிர்மல மான கண்ணீர்த்துளிகளைக் கபோலங்களிற்படாதபடி சொரிந்து கொண்டிருந்தனள். அப்பொழுது அவளிடமிருந்து வெட்கங்கூட வெட்கத்தின் லீலையையும், விநயங்கூட மிகுதியான விநயத்தையும், அழகிய கபடில்லா ஸ்வபாவமுங்கூட கபடமற்றத் தன்மையையும், சாதுரியங்கூட வெகு சாதுரியத்தையும், அச்சங்கூட அஞ்சுதலையும், விலாஸங்கூட விலாஸத்தையும் கற்கமுயன்றவைபோல் தோற்றின. அத்தகைய நிலைமையிலிருக்குமவளை நான் 'தேவி! இஃதென்ன?' என்று வினவ, மிகவுஞ் சிவந்திருக்கும் கண்களைத் துடைத்து விட்டு, பூந்தோட்டங்காப்பவளால் திண்ணையிற் கட்டப்பெற்றப் பூமாலையை ப்பற்றிக்கொண்டு, ஒரு புருவத்தையுயர நெரித்தவளாய் இயமனது வழியைப் பார்ப்பவள் போல் சுடச் சுடப் பெருமூச்செறிந்தனள். நான் அத்துயரத்திற்குக் காரணத்தை யாலோசித்தவாறு அதைக் கூறுவதற்காக அவளை யடிக்கடி நிர்ப்பந்தித்துக் கேழ்க்க, இலஜ்ஜை யினல் மொழியவேண்டியவற்றை யெழுதிக் கொடுக்க விரும்பியவள் போல் நகமுனையினல் தாழம்பூ யிதழில் ஏதோ கீறிக்கொண்டு, சொல்லவேண்டுமென உதடுகளும் துடிதுடிக்க, சற்றுமசையாதபடி கண்களாற் பூமியைப் பார்த்துக் கொண்டு வெகு நேரம் நின்றனள்.

கிரமமாக மீளவும் என் முகத்தை நோக்கி, வெகு பிரயாஸப் பட்டுத் தான் பேசமுயன்று, பின்னர் என்னைப்பார்த்து இங்ஙனம் உரைக்கலானள் :—'பத்திரலேகே! என் தந்தை, எனதன்னை, மஹா ச்வேதை, மதலேகை இவர்களாகிலும் என் உயிராயினும் மற்றும் எவராகிலும் எனக்கு இப்பொழுது உன்னைப்போலாகார். பார்த்தது முதல் நீ எனக்கு பிரியமுள்ளவளாயினை. யான் அறியேன்; எக்கா ரணத்தினுலேயோ தோழிமாரனைவரையும் விட்டு விட்டு எனது

இருதயம் உன்னை விச்வஸிக்கின்றது. வேறெவரை நிந்திப்பேன்? இப்பரிபவத்தை வேறெவரிடந்தான் மொழிந்திடுவேன்? வேறெவரிடமுரைத்து இத்துயரத்தைப் பங்கிட்டுக் கொடுத்துப் பொறுக்கக் கூடியதாகச் செய்வேன்? ஸஹிக்கக்கூடாத இப்பெருந் துயரத்தை யுன்னிடம் செப்பிவிட்டு, எனதுயிரை விட்டுவிடப் போகின்றேன். உனதுயிரின்பால் நான் சபதம் செய்து சொல்லுகிறேன்; இச்செய்தியை என் இருதயம் அறிந்துகொண்டதே என்பதை யோசித்தே யான் வெட்கமுறுகையில், பிறர் இருதயத்திற்குத் தெரிந்தால் கேட்கவும் வேண்டுமோ? மதியின் கதிரொளிகள்போல் துய்மையான குலத்திற்கு என்னைப்போன்றவள் அடாத செயலால் தோஷத்தையுண்டுபண்ணுவதும் தகுமோ? குலத்திற்குத் தொன்று தொட்டுவந்த இலஜ்ஜையையும் இழந்துவிடுவதியலுமோ? கன்னிகைகளுக்குற்றதல்லாத சாபல்யத்திற் சித்தத்தைச் செலுத்தவுங்கூடுமோ? நான் இவ்வாறு செய்ய தந்தையுங் கோரவில்லை; அன்னையும் என்னை இவருக்கு அர்ப்பணம் செய்தாளில்லை; மற்றும் குருமார்களும் எனக்கு அநுமதி கொடுக்கவில்லை; நான் எச்செய்தியையும் செப்பியனுப்பப்போவதுமில்லை. எப்பொருளையும் அனுப்புவதாயுமில்லை. சுபாவத்தையும் தெரிவிக்கப் போகின்றதில்லை. பயந்தவளைப் போலவும், அனாதையைப்போலவும் நான் மிக்க செருக்குண்ட இராஜகுமாரனான சந்திராபீடனால் மிகவும் நிந்திக்கத் தகுந்தவளாய் ஆக்கப்பெற்றேனே. நீ சொல்; இஃது மேன்மக்களுக்குரிய ஒழுக்கமோ? அன்றேல் இது பழக்கத்திற்கேற்ற பயனோ? மிகப் புதிதான இளந்தாமரைத் தண்டினது நூலைப்போல் வெகு ஸுகுமாரமான எனது மனதுமல்லவா இங்ஙனம் பரிபவப் படுத்தப்படுகின்றது! சிறு குமாரீஜனங்கள் வாலிபரால் பரிபவப்படுத்தத் தகாதவரல்லவோ? பெரும்பாலும் மன்மதாக்கினியானது முதலில் இலஜ்ஜையையெரித்துப் பின்பு தான் இருதயத்தை யெரிக்கின்றது; காமபாணங்கள் முதலில் வணக்கமுதலியவற்றை யறுத்துப் பிறகு தான் மர்மங்களையறுக்கின்றன. ஆனதுபற்றி மீளவும் எனது மறுபிறப்பிற் சேரும்பொருட்டு உன்றனை யான் வேண்டிக்கொள்கின்றேன். எனக்கு உன்னைவிட மேலான பிரியமுள்ளவர் வேறெவருமிலர். பிராண பரித்தியாகமாகும் பிராயச்சித்தத்தை அநுஷ்டித்து எனக்குண்டான

இத்தோஷமாகும் அழுக்கை யான் அலம்பிக்கொள்கின்றேன்.' என மொழிந்து மௌனமாயிருந்தனள்.

நானோ உண்மையாகவே செய்திகளை யறியாதவளாதலால் வெட்கமுற்றவள்போலவும், பயந்தவள்போலவும், மெய்மறந்தவள் போலவும் வெகு துயரத்துடன் இவ்வண்ணம் விண்ணப்பம் பண்ணலானேன் :—'தேவி! யான் கேட்கவிரும்புகின்றேன்; ஆகையால் நீர் எனக்கு அறிவிக்கவேண்டும்; சந்திராபீடதேவனால் செய்யப்பட்டது யாது? எத்தகைய பிழை நேரிட்டது? வருத்தப்படுத்தத் தகாத வெண்குவளைமலர்போல் வெகு கோமளமான தேவிகளது மனது எத்தகைய ஒழுக்கத் தவறுதலால் துன்பப் படுத்தப்படலாயிற்று? இதைக் கேட்டு முதலில் யான் உயிர் துறந்துவிட்டால், அதன்பிறகு நீங்களும் பிராணபரித்தியாகம் பண்ணக் கூடும்.' என்று இவ்வாறு கூறியபின் மீளவும் செப்பினள் :—'நான் உனக்குக் கூறுகிறேன்; கவனித்துக் கேட்பாயாக. இரஹஸ்யமான செய்திகளைச் செப்பி யனுப்புவதில் திறமை வாய்ந்த விடபுருடரான அவர், கனவுகளில் தினந்தோறும் எனதிடம் வந்து வந்து பஞ்ஜரத்திலிருக்கும் பெண்கிளிகளைத் தூது அனுப்புகிறார். பயனற்ற எண்ணங்களால் மோஹங்கொண்ட மனத்தையுடையவராய், எனது தூக்கவேளையில் செவியிலிருக்கும் தந்தமயமான ஓலைகளின் உட்புறங்களில் ஸங்கேதஸ்தானங்களை யெழுதுகிறார். பொய்யான ஆண்மையையுடையவராய், உத்தியானவனங்களில் ஒருத்தியாகத் தனித்திருந்து, பற்றிக்கொள்ளப்போகிறாரே யென்று பயந்து விரைந்தோடும்வேளையில் சீலையின் தலைப்புத் தளிர்களிற் சிக்கியதுபற்றிப் போக்குத் தடைப்பட்டுப் பராமுகமாயிருப்பவளான என்னை ஆலிங்கனம் செய்கிறார். பகட்டுச்செயல்களை பிரீதியுடன் செய்யமுயன்றவராய், வியர்வைநீர்த் திவலைகளடர்ந்த எனது கபோலங்களிற் சீதளமான காற்றுப் படும்படி முகத்தினால் ஊதுகிறார். மதிகேட்டை விளக்குபவராய், அகத்தைச் சார்ந்த அசோகமரத்தை உதைப்பதற்கு உயர்த்திய பாதத்தைப் பணிவுடன் தனது தலையாலே தாங்க முயலுகிறார். அடி பத்திரலேகே! நீ சொல்; மன்மதனால் மனது மூடத்தன்மையை யடைந்து மெய்மறந்தவரை மறுப்பதெங்ஙனம்? அவர் புறக்கணித்தலையும் பொறுமையெனப் பாவிக்கின்றார். பொல்லாங்கு செய்தலைப்

பரிஹாஸமெனக் கருதுகின்றனர். பேசாமலிருத்தலையும் ஸம்மானமென்று மதிக்கின்றனர். தோஷங் கூறுதலையும் ஸ்மரிப்பதற்கேற்ற உபாயமென உணருகின்றார். அவமதித்தலையும் நிர்ப்பந்தமற்ற நேசப்பான்மையென நினைக்கின்றார். பார்தனிலுண்டாகும் பழியையும் புகழெனப் பாவிக்கின்றார்.' என்று.

அவள் இங்ஙன முரைக்கக் கேட்டு யான் மிக்க மனமகிழ்ச்சியடைந்து இவ்வண்ணம் மொழியலானேன் :—'தேவி! இப்படியானால் சினத்தைப் பரிஹரித்துவிடும்; சற்று அருள்புரியவேண்டும்; மன்மதாபராதங்களைக் கொண்டு சந்திராபீடதேவனை நீர் தூஷிப்பது தகாது. இத்தகைய சபலமான செய்கைகளெல்லாம் துன்மார்க்கனான அம்மன்மதனுடையதேயல்லாது நமது தேவனுடையதல்ல.' என்று இவ்வாறு கூறுபவளான என்னை நோக்கி வெகு குதூஹலத்துடன் அவள் 'இம் மன்மதனென்பவன் யாவன்? இவனது ரூபங்கள் எத்தகையன? என்பதை நீ எனக்குக் கூறுவாயாக.' என்று மீளவும் வினவலானாள். அவளுக்கு நான் விண்ணப்பம் இவ்வண்ணம் பண்ணினேன் :—'தேவி! இவனுக்கு வடிவமேது? இவன் உருவமிழந்த நெருப்பு. ஆம்; ஜ்வாலைகளின் வரிசையை விளக்கிக் காட்டாமலே இவன் தாபத்தைத் தருகின்றனன். தூமத்திரளை வெளிப்படுத்தாமலே கண்ணீரை வீழ்த்துகின்றான். இவனது பாணங்களின் குறிப்புக்கு இதுகாறும் அகப்படாமற்போனது, அல்லது அகப்பட்டுக் கொண்டிராதது, அல்லது இனி அகப்படாமலிருக்கப்போகின்றது என்கிற அத்தகையதேதுமே இவ்வளவு பெரிதான மூவுலகிலுமிலது. இவனிடம் தப்பிக்கொள்பவர் யாவர்? புஷ்பமயமான தனுஸ்ஸைக் கரந்தனிலேந்தியவனாய் பாணங்களைக் கொண்டு பலசாலிகளையும் பதறவடிக்கின்றான். மேலும் இவனால் பற்றிக்கொள்ளப்பட்டு, தமது காதலனது சந்திரபிம்பங்கள் போன்ற ஆயிரக்கணக்கான ஆநநங்களைக் காணும் நங்கையருக்கு ஆகாயமும் நெருக்கமானது. கணவனது வடிவங்களை வரைபவருக்கு வையகமும் விசாலமானதல்ல. பிரியம் வாய்ந்த பர்த்தாவின் குணங்களை எண்ணுபவருக்கு எண்களும் சொற்பமே. அன்பார்ந்த நாயகனின் கதைகளைக் கேட்பவருக்குக் கலைமகளும் மிகுதியாக மொழியுங்

தன்மையளாகாள். பிராணநாதனை தியானம் செய்பவரின் இருதயத்திற்குக் காலமும் குறுகியதாகின்றது.'

என்று இங்ஙனம் இதைச் செவியுற்று, க்ஷணநேரம் ஆலோசித்து இவ்வாறு மறுமொழி கூறலானுள் :—'பத்திரலேகே! நீ சொல்லும் விதமாக, மன்மதன் இராஜகுமாரனிடம் எனக்கு பிரீதியை யுண்டாக்கிவிட்டான். இவனுல் பற்றிக்கொள்ளப்பட்டதற்கேற்ற இலக்ஷணங்கள் எவ்வெவையுண்டோ, அவையும் அவற்றிற்கு அதிகமானவையும் என்னிடம் இருக்கின்றன. நீ எனது இருதயத்தினும் வேறுபடாதவள்; இப்பொழுது உன்னையே வினவுகின்றேன்; இவ்விஷயத்தில் எனக்கு உசிதமானதை நீயே உபதேசிப்பாயாக. இத்தகைய செய்திகளை நான் அறியாதவள். அன்றியும், குருமார்களால் நிந்திக்கத் தகுந்தவளாய் வெகு வெட்கங்கொண்டிருப்பவளான என்னுடைய நெஞ்சம், உயிர்பிழைத்திருப்பதினும் சாவதே சாலவும் நன்று என நினைக்கின்றது.' என்று இவ்வண்ணம் உரைக்குமவளை நோக்கி யான் மீளவும் இங்ஙனம் மொழியலானேன் :—'தேவி! போதும் போதும்; இப்பொழுது முகாந்தரமேதுமின்றி இம்மரணத்திற்காக என் முயலவேண்டும்? ஆராதிக்கப்படாமலே அருள்புரிந்த அனங்கபகவானுலேயே உமக்கு வரன் அளிக்கப்பட்டது. இதில் குருமார்கள் நிந்திப்பதேன்? மன்மதனே குருவைப்போல் கன்னிகையை (விவாஹத்திற்கு) ஸங்கல்பிக்கின்றுன்; அன்னையைப்போல் அநுமோதியளிக்கின்றுன்; தந்தையைப்போல் தத்தம் செய்கின்றுன்; தோழியைப்போல் காதலை யுண்டாக்குகின்றுன்; தாதியைப்போல் வாலிபப்பருவத்தில் காமோபசாரத்தைக் கற்பிக்கின்றுன். சுயமாகவே கணவரை வரித்துக் கொண்டவர்களில் எத்தனைப்பெயரை உமக்கு யான் கூறவேண்டும்? இங்ஙனமில்லையேல், தர்மசாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ள சுயம்வரவிதியானது பொருளற்றதாகவே ஆகும். ஆகையினுல் நீர் அருள்புரிவீராக. தேவி! மரிக்கவேண்டுமென முயர்சித்தது போதும். உமது பாதபங்கஜங்களைப் பரிசித்துச் சபதங் கூறுகிறேன். கட்டளையிட்டு என்னை யனுப்பும். தேவி! நான் சென்று, உமது மனதுக்கிசைந்த மணுளனை யழைத்து வருகின்றேன்.' என்று நான் இவ்வாறு கூறியதும், அன்பார்ந்த திருஷ்டியினுல் என்னை அருந்துபவள்போல

மகிழ்ச்சியினுல் தழுதழுத்த மனத்தையுடையவளாயிருந்தும், கன்னிகைகளுக்கு ஸஹஜமாயிருக்கும் இலஜ்ஜையைக் கைப்பற்றியவளாய் மெதுவாக மொழிந்தனள் :—"உனது மிகமேலான பிரீதியை யான் அறிவேன். கேவலம் கடினத் தன்மையதல்லாத காட்டுவாகைமலர்களுக்கேற்க மிக்க மெலிந்தத் தன்மையரான மங்கையருக்கு, விசேஷமாய் அதிலும் சிறுபிராயம்வாய்ந்த குமரிமார்களுக்கு இவ்வளவுத் தைரியமேது? எந்த மாதர்கள் தாமாகவே செய்திகளைச் செப்பியனுப்புகின்றனரோ, அல்லது அருகிற் செல்லுகின்றனரோ அவர்களை ஸாஹஸக் காரிகளென நான் எண்ணுகிறேன். பாலியப்பருவத்திலிருப்பவளான யான் சுயமாக ஸாஹஸகாரியத்தைச் சொல்லியனுப்பவும் வெட்கப்படுகிறேன். நான் என்னென்றுதான் சொல்லியனுப்பக்கூடும்? நீர் எனக்கு மிகவும் அன்பார்ந்தவரென்றுல், அஃது மொழிந்ததையே மீளவும் பயனின்றி மொழியும் விஷயமாகும்; நான் உமது உருவமெடுத்த பிரீதியல்லவா என்பது விவேகமற்றவரின் வினவுதலேயாம்; உமதிடம் எனக்கு மிகவும் காதல் என்றுல், அதுவேசிகளின் வார்த்தையாகும்; உம்மைவிட்டு யான் பிழைத்திரேன் என்பது அநுபவவிரோதம்; அவசியம் வரவேண்டுமென்றுல், வசீகரணம் செய்யும் செருக்கை விளக்குவதாகும்; சுயமாக நானே வருகின்றேன் என்பது ஸ்த்ரீகளது சாபல்லியமேயாம்; வேறெவரிடமுமல்லாது உமதிடமே நான் ஆசைகொண்ட ஊழியக்காரியென்பது, தனது பக்தியைத் தானே கூறிக்கொள்வதாகிற இழிவை யறிவிப்பதாகும்; மறுத்துவிடுவரோ வென்கிற ஸந்தேஹத்தினுல் செய்திகளைச் செப்பியனுப்பவில்லை யென்பது, அவர் அறியாதவிஷயத்தை யெடுத்தறிவிப்பதாகும்; யான் உயிரிழந்தேனுகில் எனது அன்பை நீர் அப்பொழுது அறிவீர் என்பது, நேரிடக்கூடாததேயாம்.



# பிழை திருத்தம்.

—:[o]:—

இஃது முதற்பதிப்பாதலால் இப்புத்தகத்தில் எமக்கும் தெரியாது சில எழுத்துப் பிழைகளும், இலக்கணப் பிழைகளும் ஏற்பட்டுவிட்டன. அவற்றுள் 'என்றனை, உன்றனை, என்றனிடம், உன்றனிடம், என்றனக்கு, உன்றனக்கு' என்று எழுதவேண்டியிருக்க, 'எந்தனை, உந்தனை, எந்தனிடம், உந்தனிடம், எந்தனுக்கு, உந்தனுக்கு' என்று முறையே பலவிடங்களிற் பிழைபட்டும், அவசியமான விடங்களில் ஒற்றுகள் பல விழாமலும், அநாவசியமானவிடங்களில் சில அதிகமாக விழுந்தும் விட்டன. அவையனைத்தையும் மற்றோர் பதிப்பில் விலக்கி நன்கு சீர்திருத்திவிடுவதாய் நிச்சயித்திருக்கின்றோம்; ஆதலால் இப்புத்தகத்தைப் படிப்பவரனைவரையும் இம்முறை இவ்விஷயம் மன்னிக்கவேண்டுமென வேண்டிக்கொள்கின்றனம். இதன்கீழ் இப்பொழுது சில எழுத்துப் பிழை முதலியவைகளைமாத்திரம் திருத்துகின்றோம் :—

| பக்கம். | வரி. | சுத்தபாடம். |
|---|---|---|
| 3 | 6 | வாயிற்காப்பவள். |
| ,, | 29 | த்த சிறிய |
| 5 | 2 | சிறுவனொரு |
| 9 | 9 | அறையினுட் |
| 13 | 2 | சொற்களை |
| 15 | 18 | பெறுவதாலேயே |
| 21 | 9 | எறவிறங்க |
| 22 | 29 | வேரடியிற் |
| 25 | 8 | மூவிபூதி |
| 26 | 24 | முனிவர்களை |
| 29 | 21 | வினவினர். |
| 30 | 17 | யறிந்தவரான |
| 31 | 10 | நினைத்துக்கொள்ளப் |
| 33 | 4 | புன்சிரிப்புடன் |
| 36 | 18 | துளிகளைத் |
| 37 | 26 | ளில்லன; |
| 38 | 9 | ஸுகத்திற்கு |
| 41 | 12 | யோதுவித்தனள். |
| 49 | 27 | திறமையை |
| 51 | 16 | பயின்று |
| 60 | 26 | கசடற |
| 66 | 27 | இலச்சருகுகளை |

| பக்கம். | வரி | சுத்தபாடம். |
|---|---|---|
| 73 | 24 | செந்நாய்கள் |
| 78 | 2 | மறுபடி |
| 79 | 26 | அவ்விரவை |
| 80 | 32 | இளைப்பாறும் |
| 81 | 3 | கொண்டிருக்கை |
| 82 | 19 | இலச்சருகு [யில் |
| 84 | 9 | டன் கூடிய |
| ,, | 18 | கிழங்குகள் |
| 86 | 17 | கேட்கப்பெற்ற |
| 87 | 30 | புண்ட்ரங்க |
| 91 | 21 | அஸாத்தியமென்ப |
| 94 | 2 | கேட்பீராக [தேது |
| 101 | 29 | என் கன் |
| 108 | 10 | பரிஹாஸத்திற்கு |
| 110 | 18 | இருக்கின்றது? |
| 135 | 4 | தீரத்தன்மை |
| 142 | 2 | வர்? அவரது |
| 150 | 28 | செல்வேன்? |
| 167 | 11 | சந்திராபீடனும் |
| 181 | 8 | யெரிந்ததனை |
| 190 | 21 | அநுமதி |

"ஸ்ரீ:"

# காதம்பரீ

---

## (இரண்டாம் பாகம்)

மேலும், இப்பொழுது இராஜகுமாரரை அழைத்துவரினும், வெட்கமே, எனது மனதின் நிலையற்ற நிலைமையினால் வெட்கமுற்று, அவரது தரிசனத்தைத் தருவதாயில்லை. மோஹத்தினாலுண்டான பயத்தினால் மூடமான ஜடத்தன்மையே, என்றனை அவரிடம் அணுகச் செய்வதுமில்லை. அவரை வலிய அழைத்துவரும் அபராதத்தில் எனது அச்சமே அச்சமுற்றதாய், என்னை அவரெதிரில் நிற்கச் செய்கின்றதில்லை. பின்னர், பெரியோரிடம் வெட்கத்தினாலோ, இராஜகாரியங்களிற் பற்றுதலாலோ, மீண்டும் வருகையிலுள்ள வருத்தத்தைப் பரிஹரிக்கவேண்டுமென்னும் எண்ணத்தினாலோ, பிறந்தவிடந்தனிற் பிரீதியினாலோ, எனதிடம் விருப்பமின்மையினாலோ, வேறெவ்வகையினாற்றானோ—அன்பார்ந்த தோழியான நீ அவரிடம் சென்று, என்மீது உனக்குள்ள ஆசையினால் அவரை அழைத்து வருவதற்குப் பெருமுயற்சி செய்து, அவர் பாதங்களில் வீழ்ந்தும்—இயலாமற்போகில், அப்பொழுது இன்னும் ஒன்றுமே இல்லாமற்போய்விடுமே. அன்றியும் இப்பொழுது முன்னினும் விசேஷமென்னை? முன்னால் இந்த இராஜகுமாரரால் ஹிமகிருஹத்தின்கண் புஷ்பசயனத்தின்மீது படுத்திருக்கையிற் பார்க்கப்பெற்ற அக்காதம்பரியே யான்; தன்னுட்புகுந்திருக்கும் இவரைத் தான் தாங்குவதற்குத் திறமையொழிந்ததும், தைரிய மிழந்ததுமான இப்பாழும் இருதயமும் அதுவே; இதுவும், பொய்யாகவே பெரியோரது அபிப்பிராயத்தை அபேக்ஷித்துத் தன்னைக் கைப்பற்றுமாறு செய்யமுயலாதிருந்த அந்தக் கரமே; பிறரைப் பிடிக்க விரும்பாத அச்சந்திராபீடனும், இங்கு இருமுறை வந்து போனவரே; நீ முன் கூறியவனும், என்னிடமே சரங்களெல்லாவற்றையும் செலவழித்து விட்டதால் வேறிடத்தில் ஏதும் செய்ய வகையற்றவனுமான இம்மன்மதனும் அவனே.

யான், முன்பு மஹாச்வேதையின் முன்னிலையில் 'நீ துயரமுற்றிருக்கையில் நான் மணம் புரியேன்.' என உறுதிமொழியும் உரைத்திட்டேன். அவள், அதற்கு 'ஸகி! நீ இவ்வண்ணம் எண்ணங்கொள்ளத் தகாது; இஃது கெடுமதியேயாம். தீச்செயல் செய்பவனுன இக்காமன் மிகக் கொடியவன். ஒருகால் தம்மிடத்துப் பிரியமுள்ளவர் கண்ணிற் புலப்படாமற்போகில், இம்மன்மதன் மனந்தனிற் காதலையூட்டி, உயிரையும் உரிந்திடுவான்.' என்றுரைத்தனளே. இதுவும் என்றனக்கு நேரிட்டதில்லை. மன்மதனுலோ, தைவத்தினுலோ, இருதயத்தினுலோ, வேறெவராலோ அளிக்கப்பெற்ற ஸங்கற்பமயமான இராஜகுமாரானவர் * ஜனங்கள் அருகில் இருக்கையிலும், ஒருவருமறியாதவாறு ஸித்தபுருஷன்போல் † எப்பொழுதும் எனக்குத் தரிசனம் தந்தருளுகின்றார். அன்றியும், அவரைப்போல் இவர் ‡ திடீரெனத் துறந்துபோகக் கூடிய அவ்வளவு கன்னெஞ்சரல்லர். இவரே என்னைப் பிரிவதிற் பயப்படுந்தன்மை யுள்ளவர். யான் உட்கார்ந்திருக்கையிலும், நிற்கையிலும், நடமாடுகையிலும், நித்திரைசெய்கையிலும், விழித்திருக்கையிலும், மஞ்சத்திலும், மண்டபத்திலும், உத்தியானவனங்களிலும், கிரீடாபர்வதத்திலும் அல்லும் பகலும் அந்த மாயஞ்செய்யும் இராஜகுமாரரை எவ்வெவ்வகையிற் காண்கின்றேனே, அவையனைத்தும் உனக்குக் கூறப்பட்ட விஷயமே. ஆதலால் அவரை அழைத்து வருவதென்னும் இப்பேச்சு இத்துடன் போதும்." என்று கூறி, இமைகளின் ஓரங்களில் தேங்கியவாறிருக்கும் கண்ணீரைச் சொரிந்துகொண்டு, அப்படியே மேடையின் மேற்கட்டினது மையத்துக் கயிற்றிற் கட்டிய சிலையைக் கரத்தினுற் பற்றிக்கொண்டு, தனது வதனத்தை அக்கரத்தின்மீது அமர்த்தியவாறே, செதுக்கிய பதுமையைப் போற் பேசாது நின்றனள்.

---

* ஸங்கற்பமய இராஜகுமாரன்=தனது எண்ணத்திற்கேற்கக் கனவிற் காணுவதுபோல், மனத்தோற்றத்தினுற் காணப்படும் இராஜகுமாரன் போன்ற உருவம்.

† ஸித்தபுருஷன்=யோகாப்பியாஸத்தினுல் ஸித்திபெற்று, ஒருவரும் காணுவண்ணம் ஸஞ்சரிக்கவல்ல யோகி.

‡ அவர்=உண்மையான சந்திராபீடன்; இவர்=ஸங்கற்பமயமான சந்திராபீடன்.

நானும் அதுகேட்டு இவ்வண்ணம் எண்ணலானேன்:—'ஸங்கற்பமயமான குமாரனைக் காண்பதென்பது—மணாளனை விட்டுப் பிரிந்த பெண்மக்களுக்கு, மேலும் நற்குலத்துதித்த நங்கையருக்கு, அதிலும் விசேஷமாய் வாலிபப்பருவத்திலிருக்கும் வநிதைகளுக்கு வெகு சிறந்த விநோதமாகவும், உயிர்பிழைத் திருப்பதற்கு உயர்ந்ததோர் ஆதாரமாகவும் ஆகின்றதல்லவோ ? ஸங்கற்பமயமான இக்குமாரனைக் காரிருளும் கவர்வதில்லை; கார்முகில் பொழியும் மழைநீர்த்தாரையும் மறைப்பதில்லை.' என்று, யான் இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டிருக்கையிலேயே, பகற்பொழுதும் சாய்ந்து, வானமும் சிவந்தது. இதற்குள்ளாக, தம்தமது கடமையைக் கருத்துடன் செலுத்துபவரான தீபமேந்தும் சிறு மங்கையர் ஆங்கு வந்து, சற்றுத் தூரத்தில் இருந்தவாறே, சுற்றிலும் சூழ்ந்து கொண்டனர். பின்னர், கொளுத்தப்பெற்றுக் கொழுந்துவிட்டெரிந்துகொண்டு, அங்கமெங்கும் பற்றியிருக்கும் அனங்கனது அம்புகள் போன்று தீபங்கள் பிரதிபலிக்கத் தக்க மாசற்ற மேனியின் இலாவண்ணியமமையப்பெற்ற அவளை நோக்கி, மீளவும் இங்ஙனம் வேண்டிக்கொண்டேன்:—'தேவி! அருள்புரிவீராக ; துயர முறுவதற்குத் தகாதவரான நீர், இருதயத்திற்கு இவ்வாறு துன்பந்தருவதான ஸந்தாபத்தை அங்கீகரிப்பது தகாது. துயரத்தின் வேகத்தை யடக்கிக்கொள்ளும். யான் சென்று, சந்திராபீடனை அழைத்துக்கொண்டு இதோ வந்துவிட்டேன்.' என்கிற தேவரது திருநாம மடங்கிய எனது மொழியைக் கேள்வியுற்ற பின்பு,நஞ்சுகளை நசிப்பிக்கவல்ல நல்ல மந்திரத்தைக் கேட்ட விஷமுண்டவளைப் போல், இவளும் அப்பொழுதே நேத்திரங்களை நன்கு விழித்து, நேசத்துடன் என்னை நோக்கி 'யார் இங்கே !' எனப் பரிஜனத்தைக் கூப்பிடலானாள்.

பிறகு, தவளமான துகில்களால் துலங்கும் தேஹத்தையுடையவரான கன்னிகைகள், கும்பல் கும்பலாய் வாயிற்படியில் அவயவங்களை ஒடுக்கிக்கொண்டு நுழைந்து ஓடி வந்தனர். கட்டளைக்குக் காத்திருக்கும் அக்கன்னிகைகளைக் கிரமமாகக் கண்ணோக்கியவளாய், மாகதமயமான கற்பாறையின்மீது அமர்ந்தனள். உடனே 'பத்திரலேகே! எனக்குப் பிரியமானவள் எனக் கருதிக் கூறுகிறேனில்லை; யான் உன்றனைப் பார்த்துக்கொண்டே உயிர் தரித்திருக்கின்றேன். ஆகிலும் இங்ங

னம் உனக்குப் பிடிவாதம் இருக்கின், உனது எண்ணத்தை நீ நிறைவேற்றிக் கொள்வாயாக.' என மொழிந்து, விடையளித்து என்றனை விடுத்தனள்."

பத்திரலேகை,இங்ஙனம் உரைத்துச் சிறிது முகஞ்சாய்ந்தவளாய், மீண்டும் 'தேவ! தேவியின் புதிதான அருளால் தைரியத்தை அதிகமாய் அடைந்து, விஸனமுற்று, விண்ணப்பம் பண்ணுகிறேன். தேவரும், இந்நிலைமையிலிருக்கும் தேவியரை விலக்கி இவ்வாறு செய்வது, தமது வாத்ஸல்லியம் வாய்ந்த சுபாவத்திற்கு ஏற்குமோ?' என விஞ்ஞாபனம் செய்துகொண்டனள். சந்திராபீடனும் பத்திரலேகை வெறுப்புடன் உரைத்த வார்த்தையைக் கேட்டு, வேண்டுகோளுடனும், வெறுப்புடனும், காதலுடனும், நிந்தையுடனும் கூடியதும், மிகவும் எளிதாகவிருக்கினும் கம்பீரக் கொள்கை யமைந்ததுமான காதம்பரியின் வார்த்தையைச் செவியுற்று, தான் இயற்கையாகவே தீரத்தன்மையனுயிருந்தும், தாங்கமுடியாத துயரத்தினுல் உண்டாகும் கண்ணீர் ததும்பப்பெற்ற அகன்ற கண்களையுடைய அவளது வதனத்தை நினைத்து நினைத்து மிகவும் கவலையுறலானுன்.

பின்னர், மனத்துயரம், உயிர் மேலோங்கி வெளிக் கிளம்பும் நிலைமை,கண்ணீர் இவை—காதம்பரியனுப்பிய அவளது சொற்களுடன் கூடவே வந்து இவனிடம் பற்றினபோல், இவன் காதம்பரிக்கேற்ற நிலைமையை யடைந்து, கண்ணீர் சொரிவதால் எழுத்துக்கள் தடைபட்டுத் தழுதழுக்க, உரத்தகுரலுடன் இங்ஙனம் மறுமொழி யுரைத்தனன்:—'பத்திரலேகே! என் செய்வேன்! அதற்குமுன் யான் தேவகன்னிகைகளைக் கண்டிராமையாலும், இவளது செஷ்டைகளை வடிவழகுக்கேற்ற லீலைகளென்று எண்ணியதாலும்,அவ்வளவு மனோரதத்தைத் தன்னிடம் ஏற்றுக்கொள்ள நம்பிக்கையில்லாமையாலும், சிருங்கார நடனங்களுக்கு நல்லாசிரியனுன மேன்மைதங்கிய மன்மதனுல் தூண்டப்பட்டு, தன் மனோபாவங்களை நன்கு விளக்குவதற்கு அப்பாலையானவள், என்றனைக் குறித்துப் பலவாறு வலிய எவ்வெவற்றைச் செய்தனளோ, அவ்வவையனைத்தும் இவளுக்கு இயற்கையாய் அமைந்தவைபோலென ஸம்சயமெனும் ஊசலில் என்றனை ஏற்றி ஆட்டிவைத்ததும், துராத்மாவானதும், பொல்லாப்பயிற்சி பெற்றதும், வீணிற் பண்டிதனெனப் பாவித்ததும், போலித்தைரியமமைந்ததும், தனக்குத்

தானே உண்டுபண்ணிக்கொண்ட இலக்ஷக்கணக்கான பொய் விகற்பங்கள் நிரம்பியதும், நம்பிக்கையற்றதுமான எனது இம்மூட இருதயம், காதம்பரீதேவியின் இத்தகைய மனத்துயரத்திற்கும், உனது நிந்தைக்கும் என்னை ஆதாரமாக்கியது. யான் இதை, எனது மனதையும் மயங்கச் செய்வதான ஓர்வகைச் சாபமென்றே கருதுகின்றேன். அன்றேல், எனது மதி, அறிவிலரும் எவற்றில் ஐயமுறுரோ, அத்தகைய தெளிவான மன்மதக்குறிகளையும் அறியமாட்டாது மயங்கிப் போனதேன்? வெகு ஸூக்ஷ்மமானவைபற்றி, எளிதில் அறியக்கூடாதவைகளான புன்னகை புரிதல், காதலுடன் கண்ணோக்குதல், மொழிதல், நடித்தல், லீலைசெய்தல், வெட்கமுறுதல் என்னும் அவ்வித சேஷ்டைகள் இருக்கட்டும்; அவை வேறு வகையிலும் ஸம்பவிக்கக் கூடியவையே; வெகு நாட்களாய்த் தனது கண்டத்தின் ஸம்பந்தத்தைப் பெற்று, அதனால் சிறப்படைந்த இந்த முத்துமாலையைப் புண்ணியப் பேறு பெறாத எனது கழுத்தில் இடச்செய்த அவளால், அந்த க்ஷணத்திலேயே அறிவிக்கப்படாததுதான் யாது? அன்றியும், ஹிமகிருஹத்தின் செய்தி உன்றனக்கும் பிரத்தியக்ஷமானதே. ஆகையால், பிரணயகோபங்கொண்ட காதம்பரீதேவி, இவ்விஷயத்தில் தகாதவிதமாய் வேறென்ன கூறிவிட்டனள்? இஃதனைத்தும் மதியின்மாறுபாட்டால் ஏற்பட்ட எனதுகுற்றமே. இப்பொழுது யான், எனதுயிரைத் தந்தேனும் தேவியினால் இங்ஙனம் கேவலம் கன்னெஞ்சனாகக் கருதப்படாமலிருக்குமாறு செய்கின்றேன்.’ என்று, இவ்வண்ணம் சந்திராபீடன் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, வாயிற்காப்பவள் வாளேந்திய கரத்துடன் கட்டளையின்றியே திடீரென வந்து, வந்தனம் செய்து, ‘இளவரசே! இவ்விதம் விலாஸவதிதேவிகள் ஆஞ்ஞாபிக்கின்றனர்.—பின் தங்கியிருந்த பத்திரலேகை இப்பொழுது திரும்பிவந்ததாகப் பரிஜனம் பேசிக்கொண்டிருக்கக் கேள்வியுற்றேன். உங்களிருவரிடமும் எனது அன்பிற்கு வேற்றுமை கிடையாதல்லவோ? அவளை வளர்த்தவள் நானே; மேலும் உன்னையும் பார்த்து வெகுநாட்களாயின. ஆகையால், இவளுடன் கூடவே நீயும் வருக. எண்ணிறந்த எண்ணங்களை எண்ணி யெண்ணிப் பெற்ற உனது கமலமலர்போன்ற வதனத்தைக் காண்பது அரிதல்லவோ?—என்று’ என விண்ணப்பம் செய்தனன்.

அது கேட்டு, சந்திராபீடனும் சித்தத்தில் இவ்வாறு சிந்திக்கலானான்:—'ஓகோ! எனதுயிருக்கே ஐயமுண்டாய், அது அலைபாயும்நிலைமையிலிருக்கின்றதே! அன்னையோ, இங்ஙனம் என்னை நொடிப்பொழுது காணாமலிருக்கினும் மிகவும் துயரமுறுகின்றனள்; காரணமின்றியே வாத்ஸல்யம்வாய்ந்த காதம்பரீதேவியின் அருளால், பத்திரலேகையின் மூலமாய், இவ்வாறு வரவேண்டுமென என்றனக்குக் கட்டளையோ இடப்பட்டிருக்கின்றது. அன்னையின் அன்போ, பிறந்ததுமுதல் பற்றுண்டாய் வெகு வலிவுபெற்றுளது; என் இருதயமோ, வாஞ்சையினால் வியாகுலமுற்றிருக்கின்றது. போற்றக்கூடிய பிதாவுக்குப் பணிவுடன் பணிசெய்வதாகும் பேரின்பமோ, பரிஹரிக்கத் தகாதது; பாழும் மன்மதனோ, பாதை செய்கின்றான். தாய் தந்தையர் செய்யும் சீராட்டலோ, சித்தத்தைப் பறிக்கின்றது; ஆவல்களோ, தாங்கக் கூடாதவைகளாயிருக்கின்றன. மனதோ, காலதாமதத்தை ஸஹிக்கவியலாதது; ஹேமகூட விந்தியமலைகளுக்கு இடையிலுள்ள வழியோ, மிகவும் தூரமானது.' என்று எண்ணிக்கொண்டே, வாயிற் காப்பவள் வழி காட்டிக்கொண்டு செல்ல, பத்திரலேகையின் காத்தைப் பற்றியவனாய், அன்னையின் அருகிற் சென்றனன். அவ்விடத்திற்றானே, தனது அன்னை செய்த அனேகவித சீராட்டலின் இன்பத்தினால், தன் மனதிலுண்டான தாங்கக்கூடாத கவலையை ஒருவாறு சிந்திக்காமலே அப்பகற்பொழுதைப் போக்கினான்.

தனது மனக்கவலையைப்போல், பத்துத்திசைகளிலும் பேரிருளைப் பரப்பிக்கொண்டு இரவும் வந்து சேர, சயனத்திலமர்ந்து, கண்களை மூடியிருந்தும் கவலையைச் சற்று மறைக்கவல்ல நித்திரையைப் பெறாதவனாய், காமதேவனுக்குக் குடியிருக்கும் அகம்போன்ற காதம்பரியின் மேனியழகை மனந்தனில் ஆலோசிக்கலானான்.

சந்திராபீடன், தன்னைச் சார்ந்தவளென எண்ணங்கொண்டு, பேரன்பினால் மிகவும் உள்ளங்கசிந்தவனாய், அன்றுமுதலாக அவளைக் காப்பதற்கென்று கச்சு கட்டியவன்போல்—மன்மதன் எப்பொழுது வில்லை வளைத்துக்கொண்டு அவளை அடிப்பதாக இவன் காண்பனோ, அப்பொழுது தானே இடையில் நிற்பான். இவன் மனம், அவளுடைய இருதயம் வேதனையை ஸஹிக்கின்றதோ, இல்லையோ எனக் கேட்பதற்கு அவளிடம் சென்றதுபோல், சூனியமாய்க் கிடந்தது.

இவன், அவளிடமிருந்துவரும் மறுமொழியைச் செவியுறுபவன்போல், எப்பொழுதும் மௌனத்தைக் கைப்பற்றலானான். அவளது வதனத்தையே எங்கும் காண்பதனால், எல்லாம் மறைக்கப்பட்டதுபோல், மற்றெதுவும் அவன் கண்களுக்குப் புலப்படவில்லை. எவரேனும் தனதுள்ளத்தை அறிந்து விடுவரோவென அஞ்சினவன்போல், ஒருவனுக்கும் தனது தரிசனத்தைத் தந்தானில்லை. அனவரதமும் அனங்கனுகும் அக்கினியானது கொழுந்துவிட்டெரிந்து உள்ளத்தைக் கொளுத்திக் கொண்டிருந்தும், பெரியோரிடம் வெட்கத்தினால், அப்பொழுதே ஈரத்துடன் பெயர்த்துவந்த பங்கயதளப் படுக்கையிலும் படுக்கவில்லை. அவன் ஈரமான செஞ்சந்தனப்பூச்சையும் உள்ளங்கால் முதல் உடலெங்கும் உபயோகிக்கவுமில்லை.

இவ்வாறாகவே அல்லும் பகலும் அமைதி பெறாதவனாய், எதிர்முறை யேதும் செய்யவியலாமல் இருப்பதுபற்றி, மிகவும் குரூரமான அனங்கனால் ஆயாஸப்படுத்தப்பட்டிருந்தும், உலகத்தோரது பார்வை படாதபடி தன்னைக் காத்துக்கொண்டானன்றி, மன்மதபாணங்கள் தாக்காவண்ணம் பிராணனைக் காக்க முயலவில்லை. மேனிக்கு மெலிவை அங்கீகரித்தான் ; இலஜ்ஜைக்கு இளைப்பு நேரிடுவதைமட்டும் இச்சிக்கவில்லை. உயிர் பிழைத்திருப்பதிற்றான் உபேக்ஷை செய்தான் ; குலத்திற்குத் தொன்றுதொட்டு வந்த நல்லொழுக்கத்தை அவன் உபேக்ஷித்தானில்லை. அவன் இன்பத்தையே அவமதித்தனன் ; ஆண்மையை மட்டும் அலக்ஷியம் செய்யவில்லை. வெண்கதிரோனால் வெகுதூரம் மேலோங்கித் தத்தளிக்கச் செய்யப்படினும், மிகவும் அகாதமான ஆழிபோல், வெகு கம்பீர சுபாவமமைந்த இவன், கரைபுரளாவண்ணம் தன்னைத்தானே எப்படியோ ஒருவாறு நிலைநிறுத்திக்கொண்டு சில நாட்களைக்கழித்துவந்து,ஒருகால் பட்டணத்திற்குப்புறம்பாகச் சிப்பிரா நதிக் கரையினூடே சிறிதுதூரம் கால்நடையாகவே உலாவினன். இவன் உலாவிக்கொண்டே — காலிடறினும், வீழ்ந்தாலும் தமது சக்திக்கியன்றவளவு குதிரைப்பாகரால் நிர்ப்பந்திக்கப்பெற்று, நெடுந்தூரம் கடந்து செல்லவேண்டிய கடுமை ஸஹிக்கக் கூடாததாயினும் வெகு வேகத்துடன் வருவதால், தாம் வரும் காரிய கௌரவத்தை அறிவிப்பவையும், அதிக ஆரவாரத்துடன்ஆறுமுகக்கடவுளின் ஆலயத்தை நோக்கி அதிதுரிதமாய் சிறிது தூரத்தில் ஓடி வருபவையுமான

எண்ணிறந்த குதிரைகளைக் கண்ணுற்றனன். கண்டதும் குதூஹல மேலிட்டு, அவற்றை அறிந்து வருமாறு, அருகிலிருந்த ஆட்களில் ஒருவனை அனுப்பினன். தானும் துடையளவு நீரில் இறங்கி, சிப்பிரையாற்றைக் கடந்து, சுப்பிரமணியப்பெருமானின் அவ்வாலயத்திற்றுனே அவ்வேலைக்காரன் கொண்டுவரப்போகும் செய்தியின்பொருட்டுக் காத்திருந்தான்.

அங்கிருந்தவாறு, அவனுடன் அதே அச்வக்கூட்டத்தின்பால் திருஷ்டி வைத்தவனாய், பக்கத்திலிருந்த பத்திரலேகையைக் கரத்தினால் இழுத்து இவ்வாறுரைத்தனன்:— 'பத்திரலேகே! இதோ முன்புறத்திலேயே மயிற்றோகைமயமான சிறு குடையொன்றால் மறைக்கப்பெற்றுக் காணவியலாத முகத்தை யுடையவனாய், குதிரைப்பாகன் ஒருவன் வருகின்றான் பார்; இவன் கேயூரகன் எனத் தெரியவருகின்றது.' எனக் கூறி, அவளுடன் உற்றுநோக்கிக் கொண்டிருக்குமளவிலேயே, தான் அனுப்பிய தூதனிடமிருந்து தனது நிலைமையை யறிந்தவனும், சோகத்தினால் சூனியமான முகத்தினாலும், உள்ளத்திலடங்கிய அபரிமிதமான துயரத்தை அறிவிக்கும் திருஷ்டியினாலும் தூரத்திலிருந்தவாறே வினவாமலிருக்கையிலேயே காதம்பரியின் கடுமையான நிலைமையை வாய்ப்பேச்சில்லாமலே வெளிப்படுத்துபவனுமான கேயூரகனைக் கண்டான். பார்த்ததும், பிரீதியைப் பிரகடனம் பண்ணுபவனாய் 'வருக வருக' என்று அழைத்து, ஆலிங்கனம் செய்து, அன்புடன் அவனை நோக்கி, 'கேயூரக! உன்னைக் காண்பதினாலேயே காதம்பரீ தேவியும் தனது பரிவாரத்துடன் க்ஷேமமாயிருக்கின்றாளென அறியப்படுகின்றது. நீ சிறிது இளைப்பாறி, ஸுகம்பெற்ற பின்பு, வந்ததற்குக் காரணத்தையும் கூறுவாயாக.' என மொழிந்து, பெண் யானையின் மீது ஏறிக்கொண்டு, 'எனக்கு ஸுகமென்பதேது?' என்று கூறும் கேயூரகனையும், பத்திரலேகையையும் தன் பின்புறத்திலேற்றித் தனது மாளிகைக்கேகினன். ஆங்கு அரசனைவரையும் வரத்தகாததெனத் தகைந்து, தனதருமையான உத்தியான வனத்தினுட்சென்று, பரிவாரங்களுடன் கூடிய கேயூரகனுடன்—மனந்தவித்துக்கொண்டிருக்க, நினைவு தடுமாற்றமுண்டானவனைப்போப்ப, பகலிற்செய்யவேண்டிய சடங்குகளை நிறைவேற்றலானான். பிறகு, பத்திரலேகையையும் பக்கத்திலிருக்கச் செய்து, கேயூரகனை அழைத்து, 'கேயூரக! காதம்பரீதேவி, மதலேகை,

மஹாச்வேதை இவர்களுடைய செய்தியை இனி செப்புவாயாக?' என்றனன்.

சந்திராபீடன் இப்படிப் பகர்ந்ததும், கேயூரகனும் அவனது முன் புறத்தில் மிக வணக்கத்துடன் உட்கார்ந்து, இங்ஙனம் சொல்லத்தொடங்கினன்:--"ஆண்டவ! என்னென்று விண்ணப்பம் பண்ணிக்கொள்வேன்! காதம்பரீ தேவியினிடமிருந்தேனும், மதலேகையினிடமிருந்தாயினும், மஹாச்வேதையினிடமிருந்தாகிலும் செய்தியேதும் சிறிதேனும் யான் கொண்டுவந்தேனில்லை. எப்பொழுது யான் பத்திரலேகையை மேகநாதனிடம் ஒப்புவித்துத் திரும்பிப் போய், தேவர் உஜ்ஜயினீ சென்ற வரலாற்றை விஞ்ஞாபனம் செய்துகொண்டேனோ, அப்பொழுதே மஹாச்வேதை தலைநிமிர்ந்து, சுடச் சுடப் பெருமூச்செறிந்து, மனவருத்தத்துடன் 'சரி இஃதிப்படி!' என மொழிந்து, மீண்டும் தவம் புரிவதற்குத் தனதாச்ரமம் சென்றனள். காதம்பரீதேவியும், உடனே இருதயத்திற் சமட்டியால் தாக்குண்டவளைப்போலவும், தன்னைவிட்டு மனது விலகிப் போயினவளையொப்பவும், மஹாச்வேதை சென்றுவிட்ட செய்தியையும் அறியாதவளாய், வெகு நேரமிருந்து 'மஹாச்வேதைக்குச் சொல்' என்று அஸூயையோடு கூடியவள்போல் என்னை நோக்கிக் கூறிவிட்டு, மதலேகையினிடம் மீளவும் முகத்தை யொருவாறு திருப்பிக்கொண்டு, ஆச்சரியத்துடன் ஒருவகையாய்ப் புன்னகை புரிந்து, 'மதலேகே! இராஜகுமாரான சந்திராபீடன் செய்தவாறு வேறெவரேனும் செய்ததுண்டோ? இனி செய்பவரேனும் உளரோ?' என்றுரைத்துக்கொண்டே எழுந்து, சயனத்திற்சென்று வீழ்ந்து, உத்தரீயத்தலைப்பினால் தலையைக் கவர்ந்துகொண்டு, தன்னைப்போலவே வேற்றுமையின்றி மனத்துயரமுறும் மதலேகையோடும் பேசாதவளாய், அத்தினமெல்லாம் அப்படியே இருந்தனள். மறுநாள் விடியற்காலத்திலேயே நான் அருகிற்செல்ல, 'இங்ஙனம் திடகாத்திரர்களாய் நீங்கள் இருக்கையிலேயே, யான் இத்தகைய அவஸ்தையை அனுபவிக்கின்றேனே.' என்று என்னை வெறுப்பவள்போல வெகுநேரம் கண்ணோக்கினள். அவ்வாறு நோக்கியதும், துயரமுற்றவளான தேவியானவள் யான் போவதற்கு விடையளித்தாளென்றே நினைத்து, தேவியினிடம் சொல்லிக் கொள்ளாமலே, தேவரது திருவடியை யடுத்துவந்தேன். ஆனதுபற்றி, தேவரீரொருவரையே கதியாகவுடைய காதம்பரியின் உயிரைக்

காப்பதிலேயே கவலைப்படும் உள்ளத்தையுடைய இக்கேயூரகனது விண்ணப்பத்தைக் கேட்பதிற் கருத்து வைக்கத் தேவரீர் அருள்புரியத் தகுந்தவராகிறீர். ஆகையால் கேளும் ஐயா! ஆமோதத்தை * அளிக்க வல்ல உமது முதல் வரவானது, மலயமலையிலிருந்துவரும் மந்தமாருதம்போல், அக்கன்னிகைகளாகும் கொடிகளின் கூட்டமனைத்தையும் அலைக்கச்செய்த அந்த ஸமயத்திற்றானே, அகில ஜகத்தினரது மனத்தையும் மகிழச்செய்யவல்ல தேவரைத் தரிசித்ததும், அனங்கனும் அவளிடம்வந்தடைந்தனன். இப்பொழுது, காதம்பரீ உமதுநிமித்தம்மிகவும் அதிகமான ஆயாஸத்தை அனுபவிக்கின்றாள். இதுவும் ஆச்சரியமே! அனங்கனுக்கும் அனலால் எரிக்கப்படினும், வெள்ளாவியில் வெளுத்த வஸ்திரம்போல் அவளது இலாவண்ணியம் இன்னும் அதிகமாய்த் துலக்கம் கொள்கின்றதே! நான் எண்ணுகிறேன், மங்கையரின் மனம் மிக்க மிருதுத்தன்மை பொருந்தியதாயினும், நல்முத்தாக மாறிய நீர்போல், ஆவல் அதிகரிப்பதால் வன்மை யுறுகின்றது. ஏனெனில், அத்தகைய மிதமிஞ்சிய ஸந்தாபத்தாலும் அம்மனம் உருகவில்லையல்லவோ! மனதுக்கிசைந்த மனிதருடன் கூடவேண்டுமென்னும் வாஞ்சையானது வெகு வலிவுள்ளதன்றோ! ஏனென்றால், வேதனைகளையனுபவித்துப் பிராணன் பரிதவிக்கப் பிழைத்திருக்கப் படுகின்றதே! என் செய்வேன்! நீங்களே கூறுங்கள், மிகவும் பலமான அவளது மனவேதனையை எங்ஙனம் மொழிந்திடுவேன்? எவ்வித யுக்தியினால் விளங்கச் செய்வேன்? எந்தவேதனையுடன் ஒப்பிடுவேன்? நித்திரை செய்கையிலேனும், பிராணிகள் நன்கு வேதனை யொழிந்திருக்கும். நீர் தினந்தோறும் பார்க்கப்படுபவராயிருந்தும் அத்தகைய இவ்வவஸ்தையைக் காணவில்லையே. ஆயிரக்கணக்கான ஆதித்ரது வெயிலின் தாபத்தையும் தாங்கவல்லத் தாமரையிதழ்களைச் சயனமிட, அவற்றையும் வாடச்செய்பவளான அவள், தனது உடலின் சூட்டினால் சூரியனது மூர்த்தியையும் வென்றவளாகிறாள்; அடிக்கொருமுறைக் கொடிமண்டபத்தில் அவள் வாஸம் செய்கின்றனள்; அடிக்கடி நிலைத்தாமரைகளின்மீது சயனிக்கின்றாள்; பலமுறை உத்தியானவனத்திலிருக்கும் குளத்தினது குளிர்ந்தநீரில் குளிக்கின்றனள்; அங்கிருந்து எழுந்து,

* ஆமோதம்=(சந்திராபீடன் வரவால்) ஸந்தோஷம்; மணம் என்று மற்றொரு பொருள். (இது தென்றற்காற்றின் குணமாம்.)

பச்சிலைமரச் சாலைகளுக்குட் செல்கின்றாள். இத்தகைய மன்மதனது தீச்செயல்களா லுண்டாகும் ஆயாஸங்களுடன் பகற்பொழுதும் சாய்ந்துவிடுகின்றது.

சந்திர னுதித்ததும் அந்தகாரம்போலவே, அவளது தைரியமும் அழிந்து விடுகின்றது. அம்புயம் போலவே, இருதயமும் துன்ப முறுகின்றது. ஆம்பல்மலர்போலவே, அனங்கனும் அவளிடம் ஓங்கி வளர்கின்றான். சந்திரகாந்தச்சிலைபோலவே, நேத்திரங் களும் நீரைச் சொரிகின்றன. யாம் அறிகிலோம், பேதைமைத் தன்மை யினாலோ, அல்லது பித்துப் பிடித்ததாலோ, ஸங்கீதத்தில் முழங்கப் படும் மிருதங்கத்தின் ஒலியை மயிலின் கண்டத்தொனியெனக் கருதி, நீர் சொரியும் அறையில் அமைத்திருக்கும் மரகதமணிமயமான மயில் களின் முகங்களை மறைக்கின்றனள். மாலைப்பொழுதுகளில், சித்திரச் சுவர்களின்கண் வரைந்துள்ள ஆண்பெண்களான சக்கிரவாகப் பறவை கள் பிரிந்து விடுங்களெனப் பயந்து, பங்கயத்தண்டுகளிலிருந்தெடுத்த நூல்களைக்கொண்டு அவற்றை ஒருமிக்கச் சேர்க்க முயலுகின்றாள்.

மேலும் அவளுக்குத் தென்றற்காற்றுடன் கூடவே சந்தன பரி மளம் போல, மூர்ச்சையும் வருகின்றது. * மாளிகையின் கொடுங் கைகளிலுள்ள மாடப்புறாக்களின் கண்டத்தொனிகளுடன் கூடவே அவற்றின் எதிரொலிகளைப் போல், துயரங்களும் வந்துதிக்கின்றன. தாமரைத் தளிர்களின் மேல் இருந்தவாறு, அவற்றின் மீது வீழ்ந்த தண்ணீர்த்துளிகளைப்போல் தத்தளிக்கின்றாள். அம்புலியின் கதி ரொளி தாக்குவதால் அம்புயம் போல், வாட்ட முறுகின்றனள். சந்திர னது மூர்த்தியைப்போல், தாமரை மலர்களின் திரள்பட்டுத் தளிர் போன்ற தனது பாதங்கள் † தடுக்கப்படுமாறு நடமாடிக்கொண்டு நிசியைக் கழிக்கின்றாள். இரவில் ஆம்பலைப்போல, மதியின் கதிரொளி களால் கண் விழித்தவளாய், போலிநித்திரை செய்து பகலைப்போக்கு

* தென்றற்காற்று வீசினால் உடனே மூர்ச்சையும் உண்டாவது விரஹி களின் காமவிகாரங்களில் ஒன்று; மலய பர்வதத்தின் மூலமாய்த் தென்றற் காற்று வருகிறதென்றும், அப்பர்வதத்திற் சந்தனமரங்களிருப்பதால் அவ் வாஸனையும் அக்காற்றுடன் வருகிறதென்றும் கவிகள் வர்ணிப்பது வழக்கம். பிறகு வருபவைகளையும் இதைப்போல் பார்க்க.

† பாதங்கள் = (காதம்பரியின்) கால்கள்; (சந்திரனுடைய) கிரணங்கள் என்று மற்றொரு பொருள்.

கின்றாள் ‡. பலவாறு பேசுவதிற் பயனென்ன? இப்பொழுது அவளது தோழிமாரனைவர் உரைப்பதும் உமது நாமதேயமே; பரிஜனம் செப்புவது அனைத்தும் உமது செய்தியே; விநோதங்கள் யாவும் உமது வார்த்தைமயமாகவே வழங்கப்படுகின்றன; சித்திரவேலைகளை அப்பியஸிக்கும் முறைகளிலெல்லாம் உமது உருவமே; புகழ்கூறும் மங்கையரின் மங்களகிதங்கள் முழுமையும், உம்மைப்பற்றிய வெறுப்பையேயுள்ளடக்கிக்கொண்டிருக்கின்றன; கனவில்உம்மைக் காண்பதற்கென்றே பலமுறை அவள் கண்வளர்கின்றாள்; வெகு வேகமாக அவளுக்குண்டாகும் மூர்ச்சைகளின் எழுச்சிகள் யாவும் உமது திருநாமத்தை ஓதுவதொன்றாலேயே தெளிவை யடைகின்றன.” என்று கேயூரகன் கூறியவாறிருக்க, ‘இருக்கட்டும்; இதற்குமேல் என்னால் இப்பொழுது செவியுறக்கூட வில்லை.’ என்கிற விஷயத்தைக் கண்மூடும் பாவனையால் அறிவிப்பதுபோல், சந்திராபீடனை மூர்ச்சை வந்து கவர்ந்துகொண்டது. கேயூரகன் தான் கூறிக் கொண்டிருப்பதிலிருந்து ஓய்வடைந்ததற்கு அம்மூர்ச்சையே முகாந்தரமாயிற்றல்லாது, அவளது அவஸ்தை அனைத்தும் மொழியப்பெற்று முடிவடைந்த தென்பதல்ல.

சந்திராபீடன் அங்ஙனம் அவளையே தியானம் செய்பவன்போல் மூர்ச்சையினால் கண்களை மூடியவண்ணமிருக்க, வெகு பரபரப்புடன் தேஹத்தைத் தாங்குபவனான கேயூரகனாலும், சிற்றாலவட்ட மெடுத்து வீசுபவளான பத்திரலேகையினாலும், அனுபவிக்க வேண்டுபவையான அவ்வவ்விஷயங்களில் ஆயத்தமாயிருக்கும் விதியினாலும் நினைவுவரும்படிச் செய்யப்பெற்றவனாய்,தான் துன்புறச் செய்ததாகும் குற்றத்தினால் பயந்தவனைப் போலவும், வெட்கங்கொண்டவனைப்போலவும் அசைவின்றி நிற்கும் அக்கேயூரகனை நோக்கி, கண்ணீர் ததும்ப, குரலும் தடைபட, மொழியும் தழுதழுக்க வெகு பிரயாஸத்துடன் இங்ஙனம் உரைத்தனன்:—“கேயூரக! காதம்பரீதேவி, தனதிடம் காதலற்றக் கன்னெஞ்சனாக என்றனைக் கருதி, மீளவும் எனது வரவு நேரிடாதென நினைத்தவளாய், உன்றனை எனதிடம் அனுப்ப அனுமதி அளிக்காமலிருந்த வகையும், பற்றற்றவளான மஹாச்வேதையும் எதும் ஆஞ்ஞாபிக்காத விதமும், மதலேகையும் வெறுப்புடனாகிலும் உன்னுடன்

‡ சந்திரகிரணங்கள் பட்டு ஆம்பல் இரவில் மலரும்; காதம்பரிக்கும் சந்திரகிரணங்களால் மன்மதவிகாரம் அதிகமாய், இரவில் நித்திரை வரவில்லை.

செப்தியொன்றையும் செப்பியனுப்பாத மாதிரியும், மற்றும் அனைத்தும் பத்திரலேகையினுல் என்னிடம் முன்னமே மொழியப்படலாயினது. ஆனதுபற்றி, நற்குலத்துதித்தமையாலும், ஸரளமான சுபாவத்தினுலும் காதம்பரீதேவி, தன்னைத்தான் அறியமாட்டாதவளாகிருள். அசேதனமான சந்திரகாந்தச் சிலைக்கு, சந்திரமூர்த்தியின் ஒளியினுல் கசியுந்தன்மையே ஆயத்தமாகுமல்லாது, மதியின் கதிரொளியை வலித்திழுப்பதல்ல. அதில் காதம்பரீதேவியின் கட்டளையே குற்றமுள்ளதாகும். உதடு அசைந்தாலும் போதுமென எதிர்பார்த்தவாறு முன்னின்று தாஸஜனம் காத்துக்கொண்டிருக்க, காதம்பரீதேவி, இரக்கமின்மையினுல்தான் ஏதும்செய்யாமலே,பிறரது நெஞ்சம் நோயுறுதலைக் கவனிக்காது வெட்கத்தையே விரும்பலானுள்; தனது பிராணனுக்கே ஸந்தேஹமளிக்கவல்ல அவஸ்தையையோ, அவள் கவனித்தவளல்லள். அல்லாமலும் பரிஜனத்திற்கும் இஃதென்ன இத்தகைய மதியின்மை! அவர்கள், இவள் விரும்பாமலிருக்கினும் வலிய இவளுக்கு ஹிதமான காரியத்தில்இவளைப் பிரவிருத்திக்கும்வண்ணம் தூண்டாமலிருந்தனரே! கால்களைப் பற்றிக்கொண்டுக் காத்திருக்கும் குற்றேவல்புரிபவரிடம் வெட்கமென்பது எத்தகையது? கௌரவந்தான் எவ்வகைத்தானது? ஆனல் மங்கையருக்கு, அதிலும் விசேஷமாய்க் கன்னிகைகளுக்கு நாணமென்பது தொன்றுதொட்டு வந்ததே. எனதிடம் வெட்கத்தைத் தானே ஒழித்து விடுவதற்குத் தேவியினுல் ஆகவில்லையல்லவோ? மதலேகையோ, இவளுக்கு இரண்டாவது இருதயம். அபஹரிக்கக் கூடாத அருந்தவமென்னும் செல்வத்தைப் பெற்றவரான முனிவராலும் இரக்ஷிக்க வியலாது இருதயத்தைப் பறிப்பவனும், கட்டுக்கு உட்படாத கள்ளனும், கொடியவனுமான காமனுல் துன்பப்படுத்தப்படும் காதம்பரீதேவியின் மேனியை அம்மதலேகை இங்ஙனம் என் உபேக்ஷிக்க வேண்டும்? ஆங்கிருக்கையிலேயே எனதிடம் ஏன் காதோடு கூறியிருக்கக்கூடாது? வழியும் பலநாட்களிற் செல்லவேண்டியதாயிருக்க, யான் இப்பொழுது கேள்வியுற்றும் என் செய்யலாகும்? இப்பாழும் தைவத்தின் எங்கும் முரண்பட்ட முயற்சியை நோக்குங்கால், இத்துடன் இத்தைவம் நிற்காதென நினைக்கின்றேன்; அன்றேல், பயனின்றிக் குதிரைமுகத்தோரைப் பின்பற்றுவதால் மனிதஸஞ்சாரமொழிந்த தேசத்திற்கு ஏகுவதெங்கே! அங்கு நீர் வெட்கையுண்டாய், அச்சோத

ஸரஸ்ஸைக் காண்பதெங்கே! அதன் கரையின்கண் விடாய் தீருங்கால், தைவலோகத்து மாதராது கீதத்தொனியைக் கேள்வியுறுவதுதானெங்கே! அதை அறியவிரும்பிச் சென்றவனுக்கு மஹாச்வேதையின் தரிசனம் கிடைத்ததெங்கே! மஹாச்வேதையோடு ஹேமகூடத்திற்குப் போனதெங்கே! ஆங்கு காதம்பரீதேவியின் வதனத்தைக் காண்பதெங்கே! கோரிக்கை நிறைவேறாமலிருக்கையிலேயே தன்னிடம் வரவேண்டுமென, தந்தை என்றனக்குக் கடக்கமுடியாத கட்டளையை அனுப்புவதுதானெங்கே! ஆனதுபற்றி அகாரியங்களை அனுஷ்டிக்கும் குணமுள்ள இப்பாழும் தைவம் எம்மை வெகுதூரம் ஏற்றி வைத்தல்லவோ வீழ்த்திவிட்டது! ஆகிலும் தேவிகளுக்கு ஆறுதல் செய்ய முயலுவோமாக.”

சந்திராபீடன் இவ்வாறு கூறிக்கொண்டிருக்கையிலேயே, கதிரவக்கடவுளும் தனது ஆயிரம் கிரணங்களையும் ஒடுக்கிக்கொண்டான். பின்பு, மேன்மைதங்கிய மதியும் உதயகிரியின் உச்சியில் உதித்ததும், சந்திராபீடன் அதே அருமைத்தோட்டத்தில் சந்திரகாந்தமயமான கற்பாறையின்மீது தனது சரீரத்தைச் சாய்த்து, கால்பிடிக்கக் கிட்டத்தில் வந்திருக்கும் கேயூரகனை நோக்கி, ‘கேயூரக! நீ என்ன நினைக்கின்றனை? யாம் போகும்வரையில் காதம்பரீதேவி உயிர் தரித்திருப்பளோ? அவளுக்கு ஆறுதல் சொல்ல மீளவும் மஹாச்வேதையும் வருவளோ? மிரண்ட மான்குட்டியின் கண்களைப்போல மிகவும் நீண்டவையான நேத்திரங்களையுடைய அவளது முகத்தை நான் மீண்டும் காண்பேனோ?’ எனக் கூறலானான்.

இங்ஙனம் மொழிந்து, இளைப்பாறும் பொருட்டு அக்கேயூரகனுக்குக் கட்டளையிட்டனன். தானும் செல்வதில் இவ்வாறுச் சிந்தை செலுத்தலானான்:— “தந்தையினிடமும் அன்னையினிடமும் சொல்லிக் கொள்ளாமல், அவரது பாதங்களையும் பணியாமல், அவரது ஆசிர்வாதத்தையும் அடையாமல், அவர்களது அனுமதியையும் பெறாமல் திடீரென வெளிக்கிளம்பிப் போவேனாகில், பிறகு சென்றுதான் என்றனக்குப் பயன்கிடைப்பதெங்ஙனம்? இருதயத்திற்கு இன்பந்தான் எத்தகையது? ஆகிலும் பிற்காலத்தில் வரப்போகிற இவ்வாலோசனை இருக்கட்டும்: வெளிக்கிளம்பிச் சென்றுதான் எனது நிலைமை எவ்வாறாகும்? தந்தையானவர் தனது புயத்திலிருந்து இராஜ்ய பாரத்தை யிறக்கி,

எனதிடமே ஏற்றிவைத்திருக்கின்றனர். ஆகையால், யான்சொல்லாமலே ஓடியெடுத்து வைக்கினும், ஸேவையில் மனம்வைத்தமன்னவரும், பரிவுடன் பரிபாலிக்கப் பட்டுவரும் பிரஜைகளும் அவசியம் பின்பற்றுவரென்றே எனதெண்ணம். அன்றியும் தந்தைக்குத்தான் வேறெவன் இருக்கின்றான்? அவரிடம் இவ்வாறு எனது பிரீதியைப் பற்றவைத்து யான் சென்றுவிடுவேனாகில், எனது அவிநயத்தைக் கண்டு சினங் கொண்டவராய் 'போகட்டும், இவன் போனாலென்ன இருந்தாலென்ன ?' என்று மனவுறுதி செய்துகொண்டு இருந்துவிடுவர். ஒருகால் பிதாவும் பின்தொடர்வராகில், பதினெட்டு த்வீபங்களுடன் கூடிய மேதினியே தொடர்ந்துவரும். அப்பொழுது யான் எவ்விடம் சென்றேன் ? எங்கு இருந்தேன் ? எங்குச் சிரமம் நீங்கினவனானேன்? யான் என்னை எங்கு மறைத்துவைத்துக் கொள்ளக்கூடும்? கண்டுபிடித்தபின்னர் இங்கு யான் முகத்தைத்தான் எங்ஙனம் காட்டுவேன்? கேட்குங்கால் மறுமொழியும் என்னென்று கூறுவேன்? அன்றியும், வெகுநாட்களாய் வெளிநாடு சென்று அலைந்து வருத்தமுற்ற எனது அச்சேனை இப்பொழுதும் மறுபடிபோய்ச் சேரமாட்டாது. ஆதலால் பிறிதோர் படையைப் பெறுவதன்பொருட்டுப் பாதிவழியிலிருந்து மீளவும் ஓடிவரவேண்டி நேரிடுமே. அல்லது, தந்தைதாய்மாரிடம் விண்ணப்பம் செய்துகொண்டு, அவ்விருவரிடமும் விடைபெற்றுப் பரிவாரத்துடன் போவோமென்றால், அவரிடமும் யான் என் மொழியலாகும் ? 'எனதிடம் அன்பினால் கந்தர்வ மன்னவனது மகளான காதம்பரீ துன்பமுற்றிருக்கின்றனள்.' என்று கூறுவேனா ? அன்றேல், 'அவளிடம் எனக்குக் காதல் கடுமையாயேற்பட்டுளது ; அவளின்றி யான் உயிர்தரிப்பதியலாது.' என்றுரைப்பேனா? மீண்டும் ஏகுவதற்கு மற்றொரு முகாந்தரமேதும் ஏற்படுத்தமுடியவில்லையே. போகவேண்டுவதற்குப் பொருந்திய காரணம் கூறாமல் எங்ஙனம் என்னை விடுவித்துக்கொள்வேன் ? தந்தையும் அன்னையுந்தான் என்னை விடுவது எவ்வாறு? ஆனதுபற்றி, நண்பரால் நிறைவேற்றக்கூடிய இத்தகைய விஷயத்தில், யான் ஒருவனாகவே துன்பத்தில் அகப்பட்டுக்கொண்டவனாய் என் செய்யலாகும் ? வைசம்பாயனனும் எனதருகில் இல்லையே ; எவரை வினவுவேன்? எவருடன் மொழிந்திடுவேன்? என்றனக்கு உபதேசிப்பவர் யாவர்? யான் துன்புறுகையில் துன்பமனுபவிப்பவரும், இன்புறுகையில் இன்பங்

கொள்பவரும் வேறொருவர் உளரோ? என்னிடம் சினங்கொண்ட தாய் தந்தையருக்கு நல்வார்த்தை கூறி, வேறெவர் என்னை மீண்டும் அவரிடம் கொண்டு சேர்க்கவல்லவர்?''

இங்ஙனம் அவன் எண்ணமிட்டுக் கொண்டிருக்க, துயரத்தினால் அவ்விரவு மிக நீண்டிருந்தும் கழிந்துபோயினது. விடியற்காலத்திலேயே 'தசபுரம்வரையில் ஸேனையும் வந்துவிட்டது.' என ஜனங்கள் கூறுவதையும் கேள்வியுறலானான். அதுகேட்டு மனமகிழ்ச்சியடைந்து, 'ஓ! பாக்கியசாலியானேன்; ஓ! மேன்மைதங்கிய நான்முகக் கடவுளின் அருளையும் அடையக்கூடியவனானேன். ஏனெனில், எனது இரண்டாவது இருதயமெனத்தகும் வைசம்பாயனன் நான் நினைத்தவுடனே வந்து சேர்ந்தானன்றோ?' என்று சிந்திக்கலானான். அக்காலை உள்ளே வந்து, தூரத்திலிருந்தே வந்தனம் செய்யும் கேயூரகனைக் கண்டு, பெருமகிழ்ச்சியினால் பரவசமானவனாய், 'கேயூரக! இப்பொழுது காரியஸித்தி கையிலிருப்பதாகவே கருதுவாயாக; வைசம்பாயனன் வந்து சேர்ந்தனன்.' என்றான்.

அவன் அதைச் செவியுற்று, செல்வதற்குத் தாமதம் ஏற்பட்டதினாலுண்டான சிந்தையினால் சூனியமான சித்தத்தையுடையவனாகவே 'சுபமான விஷயமே வந்தது; தேவரது இருதயத்திற்குப் பேரின்பம் உண்டாயிற்று.' என்று கூறிக்கொண்டே, அருகிற்சென்று உட்கார்ந்து, சந்திராபீடனை நோக்கி இவ்வண்ணம் விண்ணப்பம் செய்தனன்:—''தேவ! வெளிறிய கிழ்த்திசையானது வெண்கதிரோனது உதயத்தை உணர்த்துவதுபோல், வெண்ணிறங்கொண்ட உமது இத்தேஹ நிலைமையே, தமதுவரவில் ஐயமேதும்இலதென அறிவிக்கின்றது. தேவர் காதம்பரீதேவியரை அவசியம் அடையவேண்டும். சந்திரன் தனது நிலவை விட்டு நீங்கியிருக்க எவரேனும் கண்டதுண்டோ? ஆனால் வைசம்பாயனன் வந்து, அதன்பினனர் அவருடன் பிரயாணத்திற்கு வேண்டியஸன்னாஹங்களைத் தேவர் எற்படுத்துவதற்குஇடையில் அவசியம் காலதாமதம் செய்யவேண்டியிருக்கின்றது. தேவியின் தேஹநிலைமை காலவிளம்பத்தை ஸஹிக்கக் கூடாதவிதமாயிருக்கும் விஷயமும் தேவரிடம் என்னால் கூறப்படலாயிற்று. ஏதோ பிரத்தியாசையினால்தான் அனைத்தும் நிலைத்திருக்கின்றது. தேவியின் மனது தேவரது தர்சனத்தில் இப்பொழுது நிராசையாகவே போய்விடுமாகில், பிறகு

எதனால் தேறுதலடையும்? எனதிடமிருந்து செய்தியை யறிந்து, 'பிழைத்திருப்பதால் எனக்குப் பிரயோஜனம் இருக்கின்றது; துயரங் களை அடக்கிக்கொண்டு உயிர்தரித்திருப்போம்.' என்று மனதில் தோற்றக்கூடும். ஆகையால் அறிவித்துக் கொள்கின்றேன்; தேவர் மனத்தினால் முன்னமே ஆங்குசெல்லவே சென்றீர்; சரீரமும் உடனே செல்லப்போகின்றது. யான் இங்கு இருந்து இனி ஸாதிக்கவேண்டிய பணி வேறேதேனும் உண்டோ? ஆனதுபற்றி, தமது அன்பைக் கொண்டு அடைந்த அருளால் தடையொழிந்த என் மனமானது, தேவ ரது வரவாகும் உத்ஸவத்தை அறிவிப்பதன்பொருட்டு, போவ தற்கு எனக்கு விடையளிக்குமாறு அருள்புரிய வேண்டுமென விரும்பு கின்றது."

கேயூரகன் இவ்வாறு கேட்டுக்கொண்டதும், சந்திராபீடன் உள் ளம் மகிழ்ந்து கண்மலர்ந்து, அதனால் தனது அருளை அறிவிப்பவனாய் இங்ஙனம் மறுமொழி கூறினன்:—'என் சொல்வேன்! தேசகாலங் களுக்கு எற்றவாறு இத்தகைய அறிவு வேறு எவருக்கு எற்பட் டுளது? வேறெவர் இவ்வாறு நிஷ்காரணமாய் பக்தி பாராட்டுபவர்? ஆகையால் நல்ல யோசனை செய்தனை. தேவி பிழைத்திருப்பதைக் கருதி நீ செல்வாயாக. யான் வருகிறேன் என்று நம்பிக்கையின் பொருட்டு, பத்திரலேகையும் உன்னுடன் கூடவே முன்னதாய் தேவி யின் பாதமூலத்தினிடம் செல்லக்கடவள். பத்திரலேகையும் தேவி யின் அருளுக்குப் பாத்திரமானவளே' என்று சொல்லி, தன் பின்புறத் தில் உட்கார்ந்திருக்கும் பத்திரலேகையை நோக்கி 'இப்படியல்ல?' என்று வினவினன். அவளும் புறப்படுவதற்குத் தீர்மானித்துக்கொண்டதும், மேகநாதனை அழைத்து, 'மேகநாத! முன்பு பத்திரலேகையை அழை த்து வருவதற்காக எவ்விடத்தில் உன்னை இருக்கச்செய்தேனோ, அது வரையிற் பத்திரலேகையை அழைத்துக்கொண்டு முன்னதாய்க் கேயூ கனுடன் போவாயாக. நானும் வைசம்பாயனனைப்பார்த்து விட்டு, குதிரை களுடன் உன்னைப் பின்தொடர்ந்தே வருகிறேன்.' என மிகவும் ஆதர வுடன் ஆஞ்ஞாபித்து, கேயூரகன் தான் செல்லுங்கால் சென்னிவணங்கி யெழுந்திருக்க, அவனை அன்புடன் அழைத்து அணைத்துக் கொண்டு, தனது செவியிலிருந்து கர்ணாபரணத்தை யெடுத்து அவனது காதி லிட்டு, நா தழுதழுக்க இங்ஙனம் உரைத்தனன்:—'கேயூரக! நீ தேவியி

னிடமிருந்து செய்தியொன்றுமே என்றனக்குக் கொண்டுவந்தனையில்லை. ஆகையால் அவளுக் கேற்றவண்ணம் அபூர்வமாய் என்னென்று உன்ற னிடம் மறுசெய்தி செப்பி யனுப்புவேன்? அதிலும் அதிகமாய்ப் போலி வெட்கமாகும் பெருஞ்சுமையைச் சுமக்கச் செய்து, யான் உன்னை ஏன் வருந்தச் செய்யவேண்டும்? பத்திரலேகையே தேவியினிடம் எப்படி யும் செல்லுகின்றனள். இவளே விண்ணப்பம் பண்ணிக்கொள்வள்.' எனப் பகர்ந்து கொண்டே, பிரீதியுடன் பத்திரலேகைக்கு எதிர்முகமா யிருந்து, கைகூப்பியவாறு இவ்விதம் கூறலானான்:—

"பத்திரலேகே! யான் கரங்கூப்பிச் சென்னிவணங்கி இங்ஙனம் விண்ணப்பம் செய்வதாகக் காதம்பரீதேவியினிடம் செப்புவாயாக— மூர்க்கரனைவருக்குள் முதன்மையில் வரையத் தகுந்தவனான யான் அங்ஙனம் முதற் பார்வையிற்றானே, எனதிடம் அன்பார்ந்திருந்தமை யால் தனது அளவற்ற அருளை அறிவித்த காதம்பரீதேவியைப் பணிந் தேனும் பெருமைப் படுத்தாது வந்தவனாய், பேரறிவைப் பேதைமை யாகவும், கௌரவத்தை இலாகவமாகவும், இன்பமுரைக்குந் தன்மையை வன்மையாகவும், நன்றியறிதலை நன்றிகேடாகவும் இவ்வண்ணம் என் குணங்களனைத்தையுமே குற்றங்களாக மாற்றிக்கொண்டேன். அத்தகை யவன் மீளவும் தன்னை எற்றுக்கொள்வதற்காக மற்றெந்தக் குணத்தைக் கைப்பற்றி எங்ஙனம் விண்ணப்பம் பண்ணக்கடவன்? தேவியும் அதை எவ்வகையைக் கொண்டு அங்கீகரிக்கக் கூடும்? ஆதலால் இப்படிக் குணங்களனைத்தையும் இழந்தவனாயினும், என்றனக்குத் தேவியின் அருங்குணங்களே இவ்வாறுரைப்பதற்கு ஆதாரமாகின்றன. இயற்கை யாகவே இனிதான அவளது இந்த ஸரளசுபாவமே, அவள் நெடுந்தூரத் திலிருக்கினும்,காமனாகும் கனலால் எரிக்கப்படும் என்றனைக்காப்பாற்று கின்றது; அவளது உறுதிமொழியின் நிலையான நிலைமையே என்றனை வரவழைக்கின்றது; மாமஹிமைதங்கியதன்மையே, பெருமைப் படுத்துகின்றது; பிரிய முரைக்கும் குணமும் என்னைக் கூறச்செய் கின்றது. அங்ஙனமிருந்தும், யான் இலஜ்ஜையிழந்த இருதயத்துடன் மறுபடியும் சென்று, துணிவுடன் அவளுக்கு முகத்தைக் காட்டுவதை அங்கீகரிப்பேனாகில், அதிலும் நற்குணமமையப் பெற்றதேவியின் அருளே முக்கிய முகாந்தரமாகும். உதாரகுணமுடைமையால், ஓர் வெடிகோப் பரிசயத்தையே பெற்றிருந்தும், பிராணனுடன் இருத்த

வில் பிரத்தியாசையைப் பிறப்பித்ததான அவளது இவ்வருளால் உரைக்கப் பெறுவதொன்றில்லை; இது தொழுவதற்கேற்ற திறமை யைக் கற்பிக்கின்றது. வெட்கத்தினால் விலகியவனை வலிய இழுத்து நெருங்கச் செய்கின்றது. கட்டுதிட்டமேதும் கிடையாததுபற்றி, கட்டளையைக் கோராமலே, யான் சென்றுவிட்டேன் என்றுரைத்த அவ்வாக்குத்தானே இப்பொழுதும் இவ்வாறு கூறுகின்றது. என் வரவு எங்ஙனம் பயனற்றதாகாதோ, பாருலகும் பாழடையாமலிருக் குமோ, அவ்வாறு தேவியே தான் உயிர் தரித்திருப்பதற்காக முயற்சி பெறவேண்டும்.

இவ்வாறு கூறிவிட்டு, மீண்டும் சிலவார்த்தை மொழியலானான்.— 'பத்திரலேகே! பாதையிற் போகும்போது, நீயும் எனது பிரிவாற்றாமை யின் வருமையை புணரவேண்டாம்; சரீரத்திற்குச் செய்துகொள்ள வேண்டிய சீர்ப்பாட்டில் அனுதரவு செய்வது கூடாது; ஆஹாரம் அருந் தும் வேளையை அதிக்கிரமிக்காதே; தெரியாத வழிகளில் ஏதேனும் ஒன்றிற் சென்றுவிடவேண்டாம். என் செய்வேன்! தேவியின் உயிரா னது உன்னைவிட என்றனக்கு மிகவும் அருமையாயிருக்கின்றதே! ஆகையினாலல்லவோ இங்ஙனம் அவளுயிரைக் காக்கவேண்டுமென்று உன்னைத் தனித்து விட்டேன்? அன்றியும் என் உயிரும் உன் காத்தி லேயே இருக்கின்றது. ஆதலால் அவசியம் உன்னை நீயே பெருமுயற்சி யுடன் பரிபாலித்துக்கொள்வாயாக' என்றுரைத்து, கேயூரகனை அன் புடன் அணைத்துக்கொண்டு, மறுபடியும் பத்திரலேகையைக் கவனித் துக் கொள்ளச் செய்து, 'மஹாச்வேதையின் ஆச்ரமமட்டும் மீண்டும் என்னை அழைத்துப் போவதற்காக உன்னுடன்கூடவே இவளும் வர வேண்டும்' எனக் கட்டளையிட்டு அனுப்பினன்.

கேயூரகனுடன் பத்திரலேகையும் போனபின்பு,'இவர் விரைவாய்ப் போவரோ, போகாரோ? எத்தனைநாட்களிற் செல்வரோ?' என்று இதே சிந்தையினால் சூனியமான மனத்துடன் சற்றுநேரம் இருந்து ஸேனையின் செய்தியைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளும்பொருட்டு, வேலைக்காரனை விடுத்து, வெகு நாட்களாய்க் காணாத வைசம்பா யனனை யெதிர்கொண்டழைப்பதற்காகத் தன்னை விடுவித்துக்கொள் வதற்குப் பிதாவின் பாதமூலத்தை யடைந்தனன்.

பின்பு தாராபீடன், தூரத்திலிருந்தே வந்தனஞ் செய்யும் சந்

திராபீடனைக் காண்பதிற் கங்குகரையில்லாத காதலையுடையதான கண்களால் நெடுநேரம் நோக்கி, வாலிபப் பருவம் வந்திருப்பதால் வெகு ஸௌந்தர்யம் வாய்ந்த அவனது அவயவங்கள் ஒவ்வொன்றையும் கரத்தினுற் பரிசித்துப் பார்த்து, சுகநாஸனை நோக்கி இவ்வாறு செப்பலானுன்:—'சுகநாஸரே! பாருங்கள்! இதோ சிரஞ்ஜீவியான சந்திராபீடனுக்குக் கொடிபோன்ற மீசையானது மதியினது மத்தியில் மறுவின் சாயைபோல் பெரியதோர் சோபையைப் பிறப்பித்ததாய், முகத்தில் நாற்புறமும் முளைத்து வருகின்றது. மணம் புரிவதற்கேற்ற பருவத்தை இவன் பெற்றுவிட்டான். ஆகையால் விலாஸவதிதேவியுடன் ஆலோசித்து, உலகத்திற் சிறந்த வடிவழகு வாய்ந்த ஓர் இராஜகன்னிகையைக் கூறுவீராக. பார்ப்பதற்கரிதான புதல்வனது வதனமும் காணப்பெறலாயினதே. இப்பொழுது மருமகளின் முகத்தையும் பார்த்து, மனமகிழ்ச்சி பெறுவோமாக.' இவ்விதம் தாராபீடன் உரைக்க, சுகநாஸனும் 'தேவர் நன்கு ஆலோசித்தீர்; இரஸிகனுன இவன், இருதயத்தில் வித்தைகள் எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டான்; குடிகளனைத்தையும் தான் கவர்ந்து விட்டான்; நாற்கடல்களைமேகலையாயுடைய மேதினியையும் வஹிக்கலானுன்; இவனுக்கு விவாஹம்செய்வதற்கு விரோதமான விஷயம் வேறேதேனும் உளதோ?' என மறுமொழி கூறினன். சந்திராபீடன் வெட்கத்தினுல் சிரங்குனிந்தவனாய் "ஓ! எனது எண்ணத்திற்கு ஏற்றவண்ணம் ஏற்பட்டதே! யான் காதம்பரியை அடையக்கூடிய உபாயத்தைச் சிந்தித்துக்கொண்டிருக்கும் இதே ஸமயத்தில் எனது தந்தைக்கும் எண்ணம் இத்தகையதாய் உண்டாயிற்றே! ஆகையால் 'காரிருளிற் புகுந்தவனுக்குக் கதிரொளி' என்றும், 'மரிக்கப்போகிறவன்மீது அமுதமாரி' எனவும் மொழியப்படும் முதுமொழி என்னிடம் தகுந்தவாறு அமைந்தது. எவ்வகையிலும் காதம்பரியை யடைதல், வைசம்பாயனனைக் காண்பதோன்றுல் மட்டும் எனக்குத் தடைபட்டிருக்கின்றது." என்று உள்ளத்தில் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையிலேயே, வேந்தன் எழுந்தனன். எழுந்ததும், அவனது தோளையே பிடித்துக்கொண்டு விலாஸவதியின் மாளிகை யேகினன். சென்றதும், பரபரப்புடன் எதிர்கொண்டு எழுந்திருக்கும் விலாஸவதியை நோக்கி, உயர நின்றவாறே இங்ஙனம் சொல்லலானுன்:—'தேவி! இதோ பார்! நமது மைந்தனுக்கு வளர்ந்து

வரும் கொடிபோன்ற மீசையின் அழகானது அவனுக்கு மணம் செய்விக்கவேண்டுமென்று அறிவிக்கின்றது. நீ கூறப்போவது வேறேதேனுமுண்டோவென வினவவேண்டி யிருக்கின்றது. ஆகையால் நீ மொழிந்திடுவாயாக. சொல்லியும் நீ முகத்தை வேறு வகையாக வெட்கத்தினால் அப்புறம் இழுத்துக் கொள்கின்றனையென்னே! மருமகனின் மாதாவாகவல்லவோ ஆய்விட்டனை! யான் அறிவேன்; சந்திராபீடன்மீது உனக்கு இவ்வளவு அப்ரீதி! ஆகையினாற்றான் இக்காரியங்களில் உனக்கு இவ்வளவு அவமதிப்பும் புறக்கணித்தலும்' என்று இவ்வாறான கபடஸல்லாபங்களால் இன்புற்ற இருதயத்தை யுடையவனாய் வெகுநேரம் தங்கிவிட்டு, உண்டிவினை நிறைவேற்ற வெளிக் கிளம்பினன்.

சந்திராபீடனும், சுகநாஸன் மூலமாகவே வைசம்பாயனனை யெதிர்கொண்டு அழைப்பதற்காகத் தன்னைவிடுவித்துக்கொண்டு, மாதாவின் மாளிகையிலேயே ஆஹாரமுதலியதை முடித்துக் கொண்டவனாய், வைசம்பாயனனை யெதிர்கொண்டழைப்பதற்கேற்ற வேலைகளிலிருக்கும் விநோதத்துடன் அப்பகலைப் போக்கினன்.

அன்றைய இரவு வந்ததும்,நண்பனைக் காண்பதிற் பேரவாகொண்டவனாய், சயனத்திற்படுத்தும் கண்வளராமலே இரண்டு யாமத்திற்கு அதிகமாய் அப்படியே இருந்து, நிலவை வெள்ளம்போற் சொரிந்து எங்கும் பகற்பொழுதென்னும் எண்ணத்தையுண்டுபண்ணும் மதியின் கதிரொளிகளாற் செல்லுவதில் இருமடங்கு உத்ஸாஹமூட்டப்பெற்றவனாய், பிரயாணத்தைக் குறிப்பதற்குச் சங்கு முழங்கும்படிக் கட்டளை யிட்டனன்.

பின்னர் எழுப்பப்படுபவையும், எழுந்தவையும், சேணம் பூட்டப்படுபவையும், சேணமணிந்தவையும், அரண்மனைவாயிலின் அங்கணத்தின்கண் அடங்காதவையுமான ஆயிரக்கணக்கான அச்வங்கள் கிளம்பியதால் ஆகாயம் ஈட்டிகளின் கூட்டமயமாகவும், மேதினியானது அவற்றின் குளம்புகளிலிருந்தெழும் கோஷமயமாகவும், காதுகளின் துவாரங்களெல்லாம் குதிரைகளது கனைப்புத்தொனிமயமாகவும் ஆயின. சிறிது நேரத்திற்றனே கஞ்சுகம் தரித்து, முற்றத்திலிருக்கும் இந்திராயுதமேறி, அச்வப்படை அளவற்றதாயிருந்தமையால், பிரயாஸத்துடன் புறப்பட்டு நகரம்விட்டு வெளிவந்தான். பின்பு, சிறிது தூரத்திலேயே—நிலவு வெள்ளம்போல் நிரம்பவும் பொழிவதாலும், நீர் நிர்மல

மாயிருப்பதாலும் காணவியலாத தண்ணீருடன்கூடிய சிப்பிராநதியைக் கடந்து, மிகவும் தேய்ந்திருப்பதாலும், வெகு விசாலமாயிருக்கின்றமையாலும் செல்லுவதில் உத்ஸாஹத்தை வளரச்செய்வதான தசபுரத்திற் கேகும் பாதையினூடே போகவாரம்பித்தான்.

பின்பு, திசைகளெங்கும் பரவி விரைவாகப் பாயும் நிலவாகும் நீரின் வெள்ளத்தினால் இழுத்தேகப்படுபவைபோல் தோற்றும் குதிரைகளால், அப்பின்னிரவுவேளையிற்றானே மூன்றுயோஜனையளவான வழியைக் கடந்துவிட்டனன். பிறகு இரவின் இறுதியை யறிவிப்பதும், ஆனந்த மளிக்கவல்லதுமான வாயுவானது வழிநடந்ததாலுண்டான வருத்தத்தை விலக்க விரும்பியதுபோல் வீச முயன்றது; சந்திரன், வானமாகும் வநிதையின் புதிய பிரிவாற்றாமையின்நிமித்தம் உண்டான ஸந்தாபத்தினால் மேலணிந்த வெண்துகிலை நீக்குபவன்போல், தனது நிலவின் ஒளியைச் சிறுகச் சிறுகச் சிதறவிடுத்தனன். நிலவாகும் நீரின் வெள்ளமானது மேற்கடலில் விழுவதால் தாரகைத் திரள்களாகும் நுரையின் குமிழிகள் திடீரென நாசத்தை யடையத் தொடங்கினபோலும்; இயல்பாகவே பசுமைநிறங்கொண்ட செடி கொடி மரங்கள் யாவும் தண்ணீரிலிருந்து வெளிக்கிளம்புவன போல் மீளவும் தோன்றின. எவுலகங்களுக்கும் கண்ணுனகதிரவப் பெருமான்மற்ற அனைத்தையுமறைக்க வல்ல திரளானஇருளாகும் கருதிரைச் சீலையைக் கரங்களால் * விலக்கி, விரஹத்தினால் சோர்ந்திருக்கும் பத்மினியைப் ‡ பார்ப்பதற்கு விரும்பியவன்போல், உதயகிரியின் உச்சியில் ஏறினன். நேத்திரங்கொண்டு நன்கு காணக்கூடிய நேரத்தில், கண்களை மலரவிழித்துக் கருத்துடன் நிமிர்ந்து பார்த்தும் கரைகாணக் கூடாத, ஸஞ்சரிக்குந் தன்மையுள்ள மற்றொரு மேதினிபோல் தோற்றும் வேறு படைத்திரள், திடீரென முன்புறத்திற் சற்றேறக்குறையக் கூப்பிடுதூரத்தில் இராப்பிரயாணமாய் வந்து கொண்டிருக்கப் பார்க்கலானான்.

---

* கரங்கள் = கிரணங்கள், கைகள்.

‡ பத்மினீ = தாமரையோடை, பத்மினீஜாதியென்னும் ஓர்மாது. [தாமரையோடையைச் சூரியனுக்குப் பத்தினியாகச் சொல்வது கவிகளின் முறை. தூரத்திலிருக்கும் தாமரையோடையாகும் பத்மினீஜாதிஸ்த்ரீயைச் சூரியனென்னும் புருஷன் பார்க்க உன்னதமான மலையின் உச்சியில் ஏறியதுபோல் தோற்றுகின்றது, எனக் கருத்து.]

பார்த்ததும் 'எனது வரவு சிந்திக்கப்படாமலிருக்கையிலேயே, படையினுட் புகுந்து, வைசம்பாயனனைக் காண்பேனாகில், ஆ! அது மிகவும் நன்றாயிருக்கும்!' என்று இவ்வண்ணம் எண்ணங்கொண்டவனாய், உத்தரீயத் தலைப்பினால் தலையை மறைத்துக்கொண்டு, வெகு வேகத்துடன் ஓடும் இந்திராயுதத்தின்மீது ஏறிச் சென்றுகொண்டே ஸேனையை அடைந்தனன். உட்புகுந்து,ஒவ்வோரிடத்திலும் அச்வத்தை யோட்டியவனாய், 'வைசம்பாயனன் இருப்பிடம் எங்கே ?' என வினவினன்.பிறகு அவனுக்குஅருகிலிருந்த அங்கனைகளுக்குஅவன் அன்னியனெனத் தோற்றியதால், அடையாளம் அறியாது, தம்தமது காரியங்களிற் கருத்தாயிருந்தவராய், அவர்கள், மேலெழும் கண்ணீர்ப் பெருக்குடன் பாழடைந்த வதனத்தைப்பெற்று, 'அப்ப! என்ன வினவுகின்றனை! இங்கேது வைசம்பாயனன்?' எனக் கூறினர். 'ஆ பாவிகாள்! என்ன இவ்வாறு பிழைபடப் பிதற்றுகிறீர்கள் ?' என்று சூனியசித்தனாகவே அவர்களை வெறுத்தவனாய், மனம் விரிந்ததுபோலிருந்ததால் மற்றவரைக் கேட்காமல், எதையும் பாராமல், ஒன்றும் பேசாமல் 'எங்கு வந்தேன் ? எதற்காக வந்தேன் ? என் செய்கிறேன் ?' என்று அனைத்தையுமே அறியாதவனாய், குருடனையொப்பவும், மூங்கையனைப் போலவும் படையின் மத்தியபிரதேசம்வரையிலும் அதே வேகத்துடன் ஏகினன்.

அப்பால், இந்திராயுதத்தின் அடையாளத்தினால் 'பிரபுவான சந்திராபீடன்' என்று எங்கும் பரபரத்தோடுபவரும், கண்ணீர்ப் பெருக்குடன் சூனியமான நேத்திரங்களையுடையவருமான ஆயிரக்கணக்குள்ள மன்னவரது முகங்களை நோக்கி 'வைசம்பாயனன் எங்கே ?' என வினவலானான். பின்னர் அவரனைவருமே ஒருங்கே ஆலோசித்து, 'இம்மரத்தின் அடியில் தேவரீர் இறங்கவேண்டும் ; பின்பு உள்ளபடி தெரிவித்துக்கொள்கின்றனம்.' என்றனர். சந்திராபீடனுக்கோ, வெளிப்படையாகக் கூறுவதைப்பார்க்கினும் மிகத் துன்பமுறச்செய்வதான அவரது அம்மொழியினால் துயரமென்னும் சல்லியம் உட்புகுந்து இருதயம் பிளவுபட்டதுபோலும்.அப்பொழுது பிரியத்துடன் வந்ததோழியெனத் தரும் அம்மூர்ச்சை யொன்றே இவனை உயிர்தரிக்கச் செய்தது. அக்காலைக் குதிரையின்மீதிருந்து இறக்கி, மன்னவர் தன்னைத் தாங்கிக் கொண்டிருந்ததையும் அவன் உணர்ந்தவனல்லன். நினைவு வந்த பின்

பும், வைசம்பாயனனைப் பாராததால் 'யான் கதறுவேனா? இருதயத்தைப் பொறுமையுடன் தாங்கிக்கொண்டு சும்மாவிருப்பேனா? என்னை யான் புடைத்துக்கொண்டு இருதயம் விரிந்து உயிர்துறந்துவிடுவேனா? யான் ஒருவனாகவே ஏதேனுமோர்த் திசை நோக்கிப் போய்விடுவேனா?' என்று செய்யும்வகை இன்னதென்று அவன் அறியாது, இங்ஙனம் உள்ளத்தில் எண்ணலானான்:—' ஓகோ! இஜ்ஜீவலோகம் என்றனக்கு இன்பமுற்றிருந்தும் இன்பமற்றதாயினதே! பிராணிகளால் வாழப் பெற்றிருந்தும் இப்பாருலகு பாழ்த்துப்போயிற்றே! பிழைத்திருத்தலின் பயனானது நன்கு பரிபாலிக்கப் பெற்றிருந்தும் பறிக்கப்படலாயினதே! எவரைக் காண்பேன்? எவருடன் இன்பமுற்று வீற்றிருப்பேன்? எனதுயிருடன் இன்னமும் காதம்பரியோடு ஸுகித்திருப்பேனோ? வைசம்பாயனனுக்காக எவ்விடம் செல்வேன்? எவர் எனக்கு மீண்டும் அத்தகைய மித்திரத்தினத்தை யளிப்பவர்? வைசம்பாயனனின்றி, தந்தைக்கும், சுகநாஸருக்கும் எங்ஙனம் என்னை யான் காட்டிக்கொள்ளக்கூடும்? மைந்தனது சோகத்தால் மனங்கலங்கித் தவிக்கும் அன்னையான மனோரமைக்கும் எதைக் கூறித் தேறுதல் சொல்லலாம்? வெற்றிபெறாத வேறோரிடம் ஏதேனும் உளதோ? அத்தகைய பூமியைக் கைப்பற்றுவதற்காக ஒருகால் பின் தங்கிவிட்டானோ?' என்று இவற்றையும், மற்றும் இவைபோன்ற வேறு சிலவற்றையும் முகம் கவிழ்ந்தவண்ணம் மனத்தினில் ஆலோசித்து, வெகு பிரயாஸத்துடன் பின்வருமாறு அவர்களை வினவலானான்:—

'நான் வந்துவிட்டதும், நடுவிற் போர் ஏதேனும் இத்தகையதுண்டாயிற்றோ? அன்றேல், விரைவில் உயிரைபுரியவல்லதும், தீர்க்கக்கூடாத குறிகளுள்ளதுமான பிணி ஏதாகிலும் பிறந்ததோ? எதனால் எதிர்பாராத இப்பேரிடிவீழ்ச்சி நேரிட்டது?' எனவினவ, அவரனைவருமே ஒருமிக்கஇருகரங்கொண்டு காதுகளை மூடிக்கொண்டு, 'பிரபுவே! பீடைப் பரிஹரிக்கப்பட்டது; தேவரது தேஹம்போல வைசம்பாயனனும் குறைவின்றி நூறாண்டு வாழட்டும்' என்றனர். இதுகேட்டு மீண்டும் உயிர்மீண்டவன்போல், பேரின்பக்கண்ணீர் பெருக அவ்வனைவரது கழுத்தையும் கட்டிக்கொண்டு கூறினன்.—"வைசம்பாயனன் ஜீவித்திருப்பனேல், வேறிடத்தில் நொடிப்பொழுதும் இருப்பன் என்று நம் மாதவனாய்,யான் இங்ஙனம்வினவினேன்; 'அவன்பிழைத்திருக்கின்றான்'

என்கிற இவ்வெழுத்துக்கள் எனது காதிலிடப் பெற்றனவே! ஆனல் இப்பொழுது இவன் செய்தியென்ன? எதனுல் இவன் வரவில்லே? நீங்கள் என் இவனே வலியவேனும் அழைத்துவராமல் விட்டீர்கள்? என்கிறவைகளைத் தெரிந்துகொள்ள எனதுள்ளம் தவிக்கின்றது." என இவ்விதம் வினவப்பெற்றவராய், அவர் இவ்வாறு விஞ்ஞாபனம் செய்யலாயினர்.—"வேந்தே! நிகழ்ந்த வரலாற்றை உள்ளபடி யுரைக்கக் கேளும்.—

தேவர் சென்றதும், அன்றையதினம் நமது படை, பிரயாணம் புறப்படவில்லே. பின்பு, மறுநாட் காலேயிலேயே புறப்பட்டுப் பறை சாற்ற, அப்பொழுது வைசம்பாயனன், 'அச்சோதம் என்னும் பொய்கையானது வெகு புனிதமானதெனப் புராணம் புகழ் கூறுகின்றது; ஆதலால் இதில் நீராடி, மஹிமைதங்கிய மஹேச்வரனேயும் பணிந்துவிட்டுப் போவோமாக; விண்ணுலகத்தவரால் வஸிக்கப்பெற்ற இப்பூமியை மீண்டும் எவர் எப்பொழுது கனவிலாயினும் காணப்போகின்றனர்?' எனக்கூறி, கால்நடையாகவே நடந்து, அச்சோதக் குளக்கரையை யடைந்தனர். அவ்விடம் வெகு மனேஹரமா யிருந்ததுபற்றி, எல்லாவற்றையும் கண்ணேக்கியவாறே நடந்துகொண்டு, அக்கரையிலுள்ளவற்றுள் இரமணீயமான காட்சிகளனைத்துக்கும் இருப்பிடம்போன்ற ஓர் இலதா மண்டபத்தைக் கண்டார்.

அக்காலே, மற்றெதையும் நோக்காது, இமை கொட்டலேயும் மறந்த தனது நேத்திரத்தினுல் அக்கொடிவீட்டையே மிகவும் நெடுநாட்களாய்க் காணப்பெருது மறைந்திருந்த நண்பனேப்போல் பார்த்துக்கொண்டு, நிலே நிறுத்தப்பட்டவர்போல், எதையோ உள்ளத்தில் நினேவுக்குக் கொண்டுவருபவரை யொப்ப, கண்ணீர் தாரைதாரையாகப் பெருக, முகம் கவிழ்ந்தவாறு மௌனமாய் நின்றனர். அவர் அவ்வண்ணம் இருப்பதைக் கண்டு, 'இரஸிகமான இருதயத்தை யுடையவர் இறுதியில் திடம் பெறத்தகும் மதிநிலேமை வாய்ந்தவராயினும், ஏதேனும் ஒன்ருல் இழுக்கப்படுகின்றவரே; அப்படியிருக்க, குதூஹலம் குடிகொண்டிருக்கக் கூடிய வாலிபப் பருவத்திலிருப்பவருக்குக் கூறவும் வேண்டுமோ? அதிமனேஹரமான இப்பிரதேசத்தைப் பார்த்துச் சிந்தனே செய்வதாலேயே, நிச்சயமாய் இவருக்கு இச்சித்தவிகாரம் உண்டாயினது.' என்று எமது சித்தத்திற் சிந்தையும் உதித்தது. நெடுநேரம்

வரையில் அவரை நோக்கி 'இதோ காணவேண்டியவற்றுக் கெல்லாம் கரையானது காணப்பெற்றது ; ஆதலால் எழுந்திரும் ; இனி நீராட் டச் சடங்கை நிறைவேற்றுவோமாக ; வெகு நேரம் ஆயிற்று ; ஸாதன மெல்லாம் ஸன்னத்தமாயிருக்கின்றது ; அகிலஸேனையும் பிரயாணத் திற்கு ஆயத்தமாயிருந்துகொண்டு, தம்மை யெதிர்பார்த்தவாறு நிற் கின்றது ; இன்னமும் தாமதிப்பானேன் ?' என்றனம். அவரோ, யாம் இங்ஙனம் உரைத்தும், எமது சொற்களைச் செவியுறாதவரைப்போல், இமைகளசையாது அக்கொடிவீடொன்றையே கண்ணோக்கலாயினர்.

மீண்டும் அடிக்கடி வரவேண்டுமென எங்களால் வேண்டப்பட்டும், அவ்விடத்திற் பார்வையைப் பற்றவைத்தவராகவே இவ்வாறு கண் டித்துக் கடுமையாகக் கூறினர் :—'இவ்விடம் விட்டுப் போவதற்கு என்னால் ஆகாது. ஸேனையைச் செலுத்திக்கொண்டு நீங்கள் செல்வீர்க ளாக. சந்திராபீடனது புயபலத்தாற் பரிபாலிக்கப் பெற்றப் பெரிய தோர் ஸேனையை, அவர் சென்ற பின்னர் இவ்விடத்தில் நிறுத்திக்கொ ண்டு நொடிப்பொழுது இருப்பதும் உங்களுக்கு உசிதமல்ல.' எனப் பகர்ந்த அவரது பொருந்தாத செய்கையால் யாம் துன்பமுற்றவராய் வன்மையாகவே இங்ஙனம் உரைத்தனம்:—'இப்படி இங்கு இருப்பது எங்களுக்குத் தகாதுதான் ; தாராபீட தேவனைவிட வேற்றுமை யேது மற்றவரும் பூஜிக்கக் கூடியவருமான சுகநாஸரிடமிருந்து பிறந்து, சந்திராபீடதேவனுடன் ஓரிடத்தில் வளர்ந்த உமக்கோ—மேம்பா டுடையவரும், உடன் பிறந்தவரும், நண்பரும், அன்பார்ந்தவரும், அதிபதியுமான அவர் உமதிடம் அனைத்தையும் வைத்துவிட்டுப் போயிருக்கும்போது — அவரைத் துறந்து இங்கு தங்குவதென்பது மிகவும் உசிதமே ! வேறெவருக்கு இத்தகைய யுக்தாயுக்த விவே கம் ! உமதிடம் எமக்குப் பிரீதி அல்லது பக்தி யென்பதிருக்கட் டும் ; மானிடஸஞ்சாரமற்ற இவ்வடவியில் உம்மைத் தனித்து விட்டுப் போனேமாகிலும், சந்திரன்போல் குளிர்ந்த குண மமைந்த சந்திராபீடதேவனும் எம்மை என் சொல்வர் ! தேவனுன சந்திராபீடன் வேறு, நீங்கள் வேறு ? ஆனதுபற்றி இம்மோஹத்தை விட்டுவிடும் ; செல்வதில் மனத்தைச் செலுத்தும்' என்று யாம் மொழிந்ததும், சற்று வெட்கத்துடன் நகைத்து, எம்மை நோக்கிப் பின்வருமாறு கூறினர்:—'போவதற்கு நீங்கள் எனக்கு இவ்வளவு

போதிக்கின்றீர்களே ; யான் இவ்வளவுகூடவா அறியமாட்டேன்? அன்றியும் சந்திராபீடனின்றி நொடிப்பொழுதும் வேறிடத்தில் என்னால் இருக்கவும் முடியாதுதான் ; இஃதே எனது பெரியதோர் எண்ணம். ஆகிலும் என் செய்வேன் ? இந்த நொடிப்பொழுதில் எனது வல்லமையெல்லாம் நழுவிவிட்டதே ! ஆம் ; என் மனம் எதையோ நினைவுக்குக் கொண்டுவருவதுபோல், வேறிடத்திற் பிரவிருத்தி பெற வில்லை. கண் எதையோ காண்பதுபோல் மற்றோரிடத்தை நோக்கவுமியலுகின்றதில்லை. காலிரண்டும் விலங்கிடப் பெற்றவைபோல் ஓடியெடுத்து வைப்பதற்கும் இசையாதவைகளாயிருக்கின்றன. இவ்விடத்திற்றானே உடலானது ஆணியறைந்து நிலைநிறுத்தப்பெற்றதுபோல் ஆயினது. ஆதலால், யான், என்னைக்கொண்டு செலுத்திக்கொள்ள வல்லவனல்லன். அப்பால் நீங்கள் என்னை வலிய அழைத்துப்போக முயலுவீராகில் இங்கிருந்து நகர்ந்தால், பிறகு போகுமிடத்தில் எனதுயிர் நிலைத்திருக்குமென நான் நம்புவதற்கில்லை. இங்கிருப்பேனாயின், இதோ எனது இருதயத்தினுள் யாதோர் விஷயம் உணரக்கூடாதவகையில் உழலலமிடுகின்றதோ, எதனாலேயே யான் இப்பொழுது தாங்கப்பெற்றிருக்கின்றேனோ அதே விஷயத்தினால் யான் உயிர்தரித்திருப்பேன் என எனதெண்ணம். ஆகையால் நிர்ப்பந்திக்க வேண்டாம். நீங்கள் ஏகுங்கள். உயிருடன் இருக்கும்வரையில், ஆவலுள்ளவளவும் சந்திராபீடனது தரிசனத்தினாலுண்டான பேரின்பம் உங்களுக்கு உண்டாகட்டும். அற்ப புண்ணியசாலியான என்றனக்கு அப்பேரின்பம் கிடைத்திருந்தும், கையிலிருந்து கடவுள் அதைக் கவர்ந்திழுத்துக்கொண்டனர்போலும்.' என்று மொழிபவரான அவரை நோக்கி வியப்புற்று, 'இஃதென்ன! இவ்வாறு கூறுவதேன் ? சந்திராபீடதேவனிடம் நீர் வரமாட்டீரோ ?' என அடிக்கடி யாம் வினவ, 'யான் இவ்வாறு மொழிவதற்கு வெட்கமுறுகிறேன். ஆகிலும் எனது நண்பனான சந்திராபீடனது பிராணன்மீதே ஆணையிட்டுக் கூறுகிறேன். எக்காரணத்தினால் இவ்விடம்விட்டுப் போகமுடியாதவனா யிருக்கின்றேனோ, அதைச் சிறிதளவும் யான் அறியமாட்டாதவனா யிருக்கின்றேன். மேலும் இச்செய்தியை நீங்களும் கண்முன்னிலையில் பார்த்திருக்கின்றீர்கள். ஆதலால் நீங்கள் போகலாம்.' என்றுரைத்துச் சும்மாவிருந்தனர்.

முகூர்த்தநேரம் போல் சென்றதும், எழுந்து, ஏதோ துலைந்து

போனதைத் தேடுபவர்போல் அலைந்தனர். திரிந்துவிட்டு, நெடுநேரம் கழித்து, உள்ளம் வருந்தி மனக்கவலையுடன் பெருமூச்செறிந்து, அவ் விலதாமண்டபத்தில் மீண்டும் வந்துட்கார்ந்தனர். நாங்களும் அவருக் குத் தெளிவை யுண்டுபண்ணுவதிற் பிரயாசையுடன் அங்கு தங்கியே யிருந்தனம். இரண்டுயாமங்களுக்கு அதிகமாகவே நேரமும் சென்றிருக்க, உண்டிவினை முதலியதை நிறைவேற்றுவதன் பொருட்டு யாம் வேண்ட, மறுமொழி இவ்வாறு மொழிந்தனர்:— 'தனதுயிரைவிட மிகவும் அருமையாகப் பார்க்கும் எனது நண்பனுன சந்திராபீடனுடைய தல்லவோ இப்பிராணன்? ஆகையால் இவ்வுயிர் வலிய என்னைவிட்டுப் போகுமாலுைம், அப்பொழுதும் இதைத் தாங்கிப்பிடிப்பதில் யான் முயற்சி செய்யவே வேண்டும்; அப்படியிருக்க, இவ்வுயிர் போகாம லிருக்கக்கூடிய நிலைமையில் இதைத் தரிப்பதில் ஊக்கமுள்ளவனு யிருக்கின்றேன் என்பதில் யாது தடை? சந்திராபீடனது தரிசனத்தி லைேயே யான் பயன் பெற்றவனல்லாது, மரணத்தினலல்ல. ஆதலால் இதற்கு வேண்டுதலே பயனற்றதாகும்.' என்றுரைத்து, நீராட்டம் செய்து, காடுதனில் வஸிப்பதற்கேற்பக் காய் கிழங்குகளால் உடலின் கடனை ஒழித்துக்கொண்டனர்; அதன் பிறகு நாங்களும் உணவை யருந்தினேம். இவ்வாருகவே அல்லும் பகலும் ஆச்சரியமுற்ற மனத் தினராய், இஃதென்னென்று, அவரது செய்தியையே சிந்தித்தவண்ணம், மூன்று நாட்கள் ஆங்கு தங்கியிருந்து நிராசையாகவே நாங்கள் வந்து சேர்ந்தோம். முன்னதாய் செய்தி யேன் அனுப்பவில்லை யென்பீராயின், அச்செய்தி கொண்டு வருபவன், நகரம் நோக்கிச் சென்று கொண்டிருக் கும் தேவரை நடுவழியில் ஸந்திப்பது ஸாத்தியமல்ல வென்பதோர் காரணம்; வெகுநாட்சென்று ஊரையடைந்த உங்களுக்கு மறுபடியும் வரும்படியான வருத்தம் வேண்டாமென்பது மற்றொரு முகாந்தரமாம்."

கனவிலும் எதிர்பார்க்கத் தகாத வைசம்பாயனனது அச்செய்தி யைச் செவியுற்று, ஒருமிக்க திகிலாலும், ஆச்சரியத்தாலும் ஆக்கிர மிக்கப் பெற்ற இருதயத்தை யுடையவனுன சந்திராபீடன், இவ்வண் ணம் உள்ளத்தில் எண்ணலானன்.—'இப்படிப்பட்ட வைராக்கியத்திற் குக் காரணம் என்னதாகும்? என்னிடமும் சிறிதும் தவறுதல் எதை யும் காணேன். தந்தையின் அருளால், என்னைப்போல் அவனையுந் தான் அரசரெல்லாம் ஆராதிக்கின்றனர். எனக்கு இருப்பதுபோலவே

இச்சைக்கும் மேலான ஸகல ஸுகானுபவங்களிலும் அவனுக்கும் சிறிதேனும் ஏதும் குறைவுபடவில்லையே. வந்ததும் எனது தாய் தந்தையரும், ஆர்யசுகநாஸரும், மனோரமையும் மைந்தனுக்கேற்ற மன முவந்த பிரீதியுடன் அவனைப் பெருமை படுத்தாரோ? பின்னும் விசேஷ மான வினயமமையப்பெற விரும்பியவராய் தந்தையான சுகநாஸர், ஏதே னும் மனவருத்தமுண்டாகக் கூடியதை மொழிந்தனரோ? அன்றேல், அடிக்கப்பட்டானோ? அப்படியும் இவன் பிறந்ததுமுதல் எல்லாவகை யிலும் உபகாரிகளான பெரியோருக்குத் துயரம் விளைவிக்கவாவது, அவ ரது பற்றுதலிலிருந்து விலகிவிடவாவது எண்ணங்கொள்ளக்கூடிய இத் தகைய ஈரமிலா நெஞ்சனுமல்லன்; எவனோ ஒரு அற்பனைப்போல் பெரும் செல்வவானது புதல்வனென்னும் இறுமாப்புடையவனுமா கான்; தன் தந்தைக்குத் தான் ஒரே தநயனென்று, துரெண்ணங்கொண்ட துஷ்டனுமல்ல. இத்தகைய சாந்திக்கும் இப்பிராயம் உற்றதன்று. வித்வஜ்ஜனங்களுக்கேற்க கிருஹஸ்ததர்மத்திலும் இன்னும் இவ னைச் சேர்க்கவில்லையே. தேவர்கள், பித்ருக்கள், மானிடர் இவரது கடன்களையும் தீர்க்கவில்லையே * கடன்களைத் தீர்க்காமல், முக்கடன் களாலும் கட்டப்பெற்றவனாய் அவன் எவ்விடம் சென்றவனாவான்? புத்திர பௌத்திர ஸந்ததியைக்கொண்டு தனது வம்சத்தையும் அவன் நிலைநிறுத்தினனில்லை. அளவற்ற தக்ஷிணைகளைத் தந்து, மஹா யாகங்களை அனுஷ்டித்தவனுமன்று. தாய் தந்தையர்முதலிய பெரியோர் களை அனுஸரித்து, அவரை இன்பத்துடன் இருத்தவுமில்லை. அன் பார்ந்த உறவினருக்கும் உதவிபுரிந்தானில்லை. பிறந்ததற்குப் பயனாகப் பிரபஞ்சஸுகங்களையும் அனுபவிக்கவில்லை. புருஷார்த்தஸாதகங் களான அறம், பொருள், இன்பம் என்பவற்றுள் ஏதேனும் ஒன்றும் அவனால் அடையப்படவுமில்லை. இஃதென்ன அவன் இவ்வாறு செய்தானே!"

என்று இவ்விதக் கவலையினால் கவரப்பெற்ற மனத்தையுடைய வனாய், அதே மரத்தடியில் நெடுநேரம் இருந்து சிந்தித்து, பிறகு, முகத்திற்கு வெளியிற் புலப்படுமாறு தளிர்களிட்டப் பூர்ண பொற்

* புத்திரனைப் பெறுதவன் என்று கருத்து [புத்திரன் பிறந்தால் தேவர், பித்ருக்கள், மனுஷ்யர் இவர்களுக்குத் தர்ப்பணம் முதலிய சடங்குகளைச் செய்து, கடமையைச் செலுத்தி, மானிடர் கடனைத் தீர்க்கின்றனர் என்று சாஸ் திரம் கூறுகிறது.]

குடங்கள் இருபுறமும் அமைக்கப்பெற்றதான, அந்தக்ஷணம் ஏற்படுத்திய ஓர் பந்தலினுட் பிரவேசித்தனன்.

ஆங்குட்சென்று, அலங்காரம் பண்ணிக்கொள்ளாததால் அழுக்கடைந்த வேஷங்களையுடைய வேலைக்காரரால் வணங்கப்பெற்றவனாய், மௌனமாகவே மெல்ல மெல்ல வாஸகிருஹமடைந்தனன். அவ்விடத்திற் கஞ்சுகம் முதலியவற்றைக் கழற்றியவனாய், சயனத்தின்மீது சரீரத்தைச் சாய்த்து, மறுபடியும் சிந்திக்கத் தொடங்கினான்—'தாய் தந்தையரிடம் அனுமதி பெறாதவனாய், மனத்துயரமாகும் மாகடலில் அவ்விருவரையும் அமர்த்திவிட்டு, புத்திரனது பிரிவினாலேற்பட்ட சோகத்தினாற் சோர்வடைந்த தந்தை சுகநாஸனுக்கும், அன்னையான மனோரமைக்கும் ஆறுதல் கூறாது, இவ்விடத்திலிருந்தே யான் போவேனாகில், அப்பொழுது நானும் வைசம்பாயனனை அனுஸரித்தவனாகிறேன். மீளவும் மாளிகைக்குத் திரும்பிப்போனேனாயின், அங்கிருந்து விடுதலை பெறமுடியாதென என் மனம் ஐயமுறுகின்றது. ஆதலால் என் செய்வேன்? ஆனால் மீண்டும் வீட்டிலிருந்து விடுதலை பெறுவதில் யான் ஐயமுறுவதே வீண்; தன்னையும், என்னையும் விட்டுவிட்டவனாயினும் என் அன்பார்ந்த நண்பன், செல்வதற்கு வழியுண்டுபண்ணினனாதலால், காதம்பரியினிடம் போவதற்கேற்ற உபாயத்தைச் சிந்திப்பதிற் கவலையுற்ற மனத்தையுடைய என்றனக்கு உதவிபுரிந்தவனேயாவான். ஆகையால் இப்பொழுது வைசம்பாயனனை அழைத்து வருவதற்காகச் செல்லும் என்றனை, தந்தையாகினும், அன்னையாயினும், ஆர்யசுகநாஸரேனும் தகையவல்லவரல்லர். சென்றதும், வைசம்பாயனனை அழைத்து அருகிற்றானே அமர்த்திக்கொண்டு, யான் முன்புறத்திலிருந்து மிகப் பெருமையுடன் வருவேன்.' எனத்தீர்மானித்து, அக்காலத்திலேற்பட்ட வைசம்பாயனனது விரஹசோகத்தை, பரிபாகதசையிற் பெரும் ஸுகமளிக்கவல்ல ஔஷதத்தைப்போல் வெகுமானித்து, முகூர்த்தநேரம்போல் இருந்து, விடாய் தீர்ந்து, சரீரம் ஸுகமடைந்து, ஒன்றரையாமத்தில் ஊதப்படும் சங்கு முழங்கப் பெற்றதும், உண்டிவினை முதலியதை நிறைவேற்றுவதற்காக எழுந்தனன்.

'காதம்பரி இருக்கும் இடத்திலேயே வைசம்பாயனனும் இருக்கின்றான்' எனத் தனது தைரியத்தின் பிடிமானத்தினாலேயே இருதயத்

தைத் திடப்படுத்திக் கொண்டு, சூனியமான உள்ளத்துடன் உணவுகளை யுண்டனன். பின்னர் ஆதித்தனும் ஆகாயத்தின் உச்சியை யடைந்திருக்க, வெயிலின் அணுக்கள் அங்கங்களைப் பிளந்துகொண்டு உட்புகுந்தனபோல், எழுந்து, குளக்கரையில் நிர்மித்திருக்கும் நீராழி மண்டப மடைந்தனன்.

சிவந்த நிறமான வெயிலை அந்திப்பொழுதும் அடைந்திருக்க, வெளிவந்து, வாஸகிருஹத்தின் முற்றத்தில் நொடிநேரம் போலிருந்து, 'இரண்டாவது யாமத்திலேயே செல்லவேண்டிய ஸேனையை ஸன்னத்தம் செய்யுங்கள்' என்று ஸேனைத்தலைவனை நோக்கி ஆஞ்ஞாபித்து, பள்ளியறையிற்போய் இருந்தனன். அப்பால், வெகுநாட்களுக்கு முன் விட்டுவந்த உஜ்ஜயினீ நகரத்தைக் காண்பதில் ஆவலுள்ள ஸேனையிலிருக்கும் ஸகலஜனமும், பிரயாண வாத்தியம் முழங்கப்படாம லிருக்கையிலேயே, மீண்டும் போகத் தலைப்பட்டது. தானும் நித்திரை பெறுதவனுகவே, மூன்றுவது யாமம் ஆரம்பிக்கையிலேயே, மன்னவர் கூட்டத்துடன் குதிரையின்மீது ஏகினன். பிறகு, பாதையுடன் இரவும் கழிந்துபோக, பார்தனிலுள்ளப் பொருளனைத்தும் பாதாளத்திலிருந்து மேல்நோக்கிக் கிளம்புவனபோல் தோற்ற, கிழ்த்திசையாகும் கொடியின் தளிரைப்போல் சூரியபிம்பமும் வெளிவர, ஸேனையிலிருக்கும் ஜனத்துடன் கூடவே உஜ்ஜயினிக்குப் போய்ச் சேர்ந்தான்.

பிறகு, தூரத்திலேயே சில காலடிகள் சூனியமாகவே வைத்து நின்றவரும், 'மஹாகஷ்டம் மஹாகஷ்டம்' என்னும் சொற்களைச் சொல்லிச் சப்திப்பவரும், மிகுந்த துயரத்தினுல் மௌனமா யிருப்பவரும்—விருப்பற்றவராயினும், பற்றுதலைப் பரிஹரித்தவரா யிருப்பினும், கொடியவராகிலும்—பிரீதிக்குப் பரவசமாயிருக்கின்றவருமான ஜனங்கள், நகரத்திற்கு வெளிப்புறம் வந்து, தந்தைகளைப் போலவும், தோழரைப் போலவும் வைசம்பாயனனது விருத்தாந்தத்தையே எங்கும் கேட்டுக்கொண்டும், கூறிக்கொண்டும் இருப்பதைச் செவியுறலானுன்.

கேள்வியுற்று, 'வெளியிலிருக்கும் ஜனங்களுக்கே இதோ இத்தகைய நிலைமை யேற்பட்டிருக்கின்றதே! மடிதனிலேந்தித் தாலாட்டி வளர்த்தவருக்குக் கேட்கவும் வேண்டுமோ? ஆதலால் வைசம்பாயனனின்றி, தந்தையான சுகநாஸரையாகிலும், அன்னையான மனோரமை

யையாவது காண்பதென்பது மிகவும் என்றனக்கு வருத்தமானது.' என்று சிந்தித்தவனாய், கண்ணீர் ததும்பத் தனது நேத்திரத்தால் தன் நாசியையே நோக்கியவாறு,செய்திகளனைத்தையும் கண்ணெடுத்துப்பாராமலே உஜ்ஜயினிக்குட்புகுந்தனன். அவன் கீழிறங்கி அரண்மனையின் வாயிலிற் பிரவேசிக்கும்பொழுதே, மன்னவர் 'விலாஸவதீதேவியுடன் ஆர்யசுகநாஸனது மாளிகைக்குச் சென்றார்.' என்பதைச் செவியுற்றனன். அது கேட்டுத் திரும்பி, அவ்விடத்திற்கே போகலானான். அவ்விடம் ஏகி, அருகிலிருந்தவனாய், மனோரமை வீட்டினுள்ளிருந்து விலாஸவதியினால் ஆறுதல் சொல்லப்பட்டிருந்தும், இவ்வாறு புலம்பிக்கொண்டிருக்கக் கேட்டனன்:—'ஆ குழந்தாய்! வைசம்பாயன! இன்னும் எனது மடிதனில் வைத்துத் தாலாட்டத்தகுந்த பாலகனாகவே இருக்கின்றனையே! நீ தனித்தவனாய் மனிதஸஞ்சாரமற்று, பல்லாயிரக்கணக்கான பாம்புகளால் பயங்கரமாயிருக்கும் அப்பாழும் அடவியின்கண் எங்ஙனம் தங்கினையோ! அவ்விடத்திலும் உன் சரீரத்தைக்காப்பவர் எவர்? உடலைப் போஷிக்கவல்ல உணவுகளைத் தேடியளிப்பவரும் யாவர்? துயிலுறும் ஸுகத்தைத் தருவதற்கேற்ற சயனத்தை யாவரிடுவர்? நீ பசித்திருக்கையிலும், நீர்வெட்கைக் கொள்கையிலும், நித்திரை போகவிரும்புகையிலும் கவலையுறுபவர் எவரோ? என் அருமைப் புதல்வா! எனது மடியை விட்டபின், இன்னும் உன்னுடன் இன்ப துன்பங்களை இசைந்தனுபவிக்கக்கூடிய இல்லாளையும் நீ மணம் புரியவில்லையே! வந்து சேர்ந்ததும் உன்றனக்குத் தந்தையின் அனுமதிபெற்று,மணம் புரிவித்து,மருமகளின் முகத்தைக்காணப்போகின்றேன் என்று யான் மிக மேலாக யாதொன்றை மனதிற் சிந்தித்திருந்தேனே: அவ்வெண்ணம், பாக்கியமிழந்தவளான என்றனக்குக் கைகூடாமற் போயிற்றென்பது மாத்திரமல்ல மேலும் உனது முகத்தைக் காண்பதும் அரிதாயினதே! வத்ஸா! உனக்கு வஸிக்க விருப்பமுள்ளவிடத்திற்கு, பிதாவினிடம் விடைபெற்று, என்னையும் அழைத்துப் போவாயாக. உன்னைக் காணாமல் உயிர் பிழைத்திரேன். அப்பா! குழந்தைப் பருவத்திலும் நீ என்னை அவமதித்ததில்லையே! ஒரு க்ஷணத்தில் இவ்வளவு கடோரத்தன்மை உன்றனக்கு எவ்வாறு பிறந்ததோ! பிறந்தநாள் முதல் உனதிடம் சினங்கொண்ட முகத்தையே யான் கண்டதில்லையே! அத்தகைய உன்றனக்கு—இங்ஙனம் என்னைத் துற

ந்து நிற்குமாறு—காரணமின்றியே என்மீது கோபம் இவ்வண்ணம் உண்டாவதேன்? சென்றுயாயினும், திரும்பவும் வந்து விடுவாயாக; என் சென்னிகொண்டு உன்றனை மன்றாடுகிறேன். எனக்கு வேறெவர் இருக்கின்றார்? பிற தேசங்களிற் பரிசயம் பெற்றதால் எமதிடம் இருந்த அன்பும் அற்றுப் போயிற்றே! நொடிப்பொழுதும் சந்திராபீடனைக் காணுமலிருக்க வியலாதவனான உன்றனக்கு இப்பொழுது அவன் மீது இத்தகைய பிரீதியின்மை ஏன் உண்டாகவேண்டும்? அப்பா! உனக்கு நேர்ந்தது நன்மை யல்லடா! இன்பத்துடன் இருக்கச் செய்ய வேண்டிய பெரியோரைத் துன்பத்தில் அமர்த்தினையே! யான் அறிகிலேன், இங்ஙனம் செய்து நீ பெறப்போகும் பயனென்னையோ?' இவ் வண்ணம் இன்னும் பலவாறுகப் புலம்பிக் கொண்டிருந்தனள்.

அவன் மிகவும் கருணை புரியத்தகுந்த அவளது அப்புலம்பலாகும் நஞ்சால் நினைவு தடுமாறிப் போயினன். எவ்வகையிலோ வெகு வருத்தத்துடன் இயற்கையான தைரியத்தை ஆதாரமாகப் பெற்று, தன்னை நிலைநிறுத்திக்கொண்டு, உட்சென்று, தந்தைக்கும் தனது வதனத்தைக் காட்ட வெட்கமுற்றவனாய், சிரங்குனிந்தவண்ணம் சுகநாஸனையும், பிதாவையும் பணிந்து, தூரத்திற்றானே உட்கார்ந்தனன். அரசனும் ஆங்குட்கார்ந்த அவனை நொடிநேரம்போல் நோக்கி விட்டு, கடுந்துயரத்தினுற் கண்ணீர் ததும்ப, குரல் தழுதழுக்கக் கூறலானுன்:—'வத்ஸ! சந்திராபீட! உனது உயிரைப் பார்க்கினும் உனக்கு உடன்பிறந்தோன்மீதுள்ள மிகுதியான அன்பை யான் அறிவேன். இன்பத்திற்கு இன்றியமையாத அன்பார்ந்த ஜனத்தினிடமிருந்தே நம்பக்கூடாதவாறு நேரிடும் துன்பத்தினுல் செய்ய முடியாதது ஏதுமிலது. ஆதலால் பிறப்புக்கும், பிரீதிக்கும், ஒழுக்கத்துக்கும், வினயத்திற்கும், மற்றும் அனைத்துக்குமே அநுசிதமான—உன் உடன்பிறந்தோனும், நண்பனுமான— வைசம்பாயனனது விருத்தாந்தத்தைக் கேள்வியுற்று, உன்னிடம் குற்றமிருக்குமென என் மனம் சங்கையுறுகின்றது.' என்றவாறு பார்த்திவன் பகர்ந்திட, அவனது பேச்சைச் சுகநாஸன் மறுத்து, துயரம் பொறுமை யென்னும் இவற்றுல் முகம் கறுக்க, இங்ஙனம் உரைக்கலாயினன்:—

"மன்னவ! மதியின்பால் வெப்பமும், மாகடலில் வற்றுதலும் உண்டாகுமாகில், இளவரசினிடமும் குற்றம் ஏற்படக்

கூடும். ஆதலால் தன்னைத் தான் அறியாதவனும், மித்திரத்திரோஹி யும், நன்றிகெட்டவனுமான அவன்பொருட்டு, கிருதயுகத்தின்கண் அவதரிக்க வேண்டுபவனுன, அருங்குணங்களமையப்பெற்ற தமது சந்திராபீடனையும் ஆலோசனையின்றித் தேவரீர் இவ்வாறு தவறுத தலாகக் கருதலாமோ? நற்குணங்களை நாடியிருப்பவர்மீது நாட்டு ஜனங்கள் குற்றம் சுமத்துவதைப் பார்க்கினும் துன்பத்திற்குக் கடுமை யான காரணம் பிறிதொன்றிலது; பிதாமுதலிய பெரியோர் பழிப்ப தென்றால், அது பின்னும் கடுமையெனக் கூறவும் வேண்டுமோ? மேலும் பிறந்த நாள்முதல் தேவராலும், தேவியான விலாஸவதியினு லும் மடியிலேந்தி, தாலாட்டப் பெருதவனுன, காற்றைப்போற் கையிற் பிடிகொடாத்தன்மை பொருந்தியவனுக்காக *சந்திராபீடனுந்தான் என் செய்வான்? உடலில் உண்டாகக்கூடிய இத்தகைய பெரும் கிருமிகள், அல்லது அகில தோஷங்களையும் ஆதாரமாகக் கொண்ட பெரும் பிணி கள் † இயற்கையாகவே உற்பத்தியாகின்றன. இவர்கள், வாள்களைப் போல் மாசுபடர்ந்தவராய், ஸ்நேஹத்தினுற்றுனே குரூரமாய் விடுகின்ற னர் ‡. இவர்கள் அன்பார்ந்தவரிடமும் ஆசையற்றவர்; நேர்மையானவரி டமும் வக்கிரமாயிருப்பவர்; பெண்டிரிடமும் பராக்கிரமசாலிகள்; ஊழிய ரிடமும் கடோரத்தன்மையர்; கருணைபுரியக் கூடியவரிடமும் கடு மையாயிருப்பவர். முரண்பட்டப் போக்கையுடைய இவர்களுக்குப் பெரியோரே சிறியோர்; கீழ்மக்களே மேன்மக்கள்; வக்கிரதிருஷ்டியே நேர்மையான பார்வை; தீயொழுக்கமே நல்லொழுக்கம்; பொய்யே மெய். இவ்வற்பருக்குப் பேரறிவானது பிறரை வஞ்சகம் செய்வதற் கல்லாது அறிவின்பொருட்டல்ல; பராக்கிரமம் பிராணிகளை உபத்திர விப்பதற்கன்றி, உலகவுபகாரத்திற்கல்ல; உத்ஸாஹம் பொருள் தேடு

* காற்று பிடிக்கு அடங்காதது; கொடியவரும் பெரியோரது கட்டளைக்கு அடங்கார் என்று கருத்து.

† பிணிகள் வாதம், பித்தம், கபம் என்கிற மூன்று தோஷங்களில் சில வற்றையோ, அனைத்தையுமோ ஆதாரமாகக்கொண்டு உண்டாகின்றன; தீய வரும் அகிலதோஷங்களுக்கும்=எல்லாக் குற்றங்களுக்கும் ஆதாரமாகின்றனர் எனப் பொருள்.

‡ மாசு=தோஷம், துரு. ஸ்நேஹம்=அன்பு, எண்ணெய். குரூரம்= கொடியதன்மை, கூர்மை. [துருபிடித்த கத்திக்கு எண்ணெய் போடுவதால் கூர்மையே அதிகமாவது போல், குற்றமுள்ளவரிடம் அன்பு பாராட்டுவதால் அத்தீயவருக்குக் கொடியசுபாவமே அதிகமாகும் என்று கருத்து.]

வதற்கல்லாமற் புகழ் பெறுவதற்கன்று; செல்வத்தைச் செலவு செய்வது காமத்திற்கன்றி, தர்மத்தின் பொருட்டல்ல. சுருங்கச் சொல்லில், இவர்களுக்கு அனைத்துமே குற்றத்திற்கேயல்லாது, குணத்திற்கல்ல. ஆகையால் இத்தகைய தீயகுணங்களமைந்தவனாகவே இப்பாவியும் ஒருவன் எனக்கு வந்து பிறந்தனன். இவ்வாறு செய்பவனான இவன் 'சந்திராபீடனுக்கு யான் நண்பன்; அவனுக்கும் தீங்கு செய்யலாமோ?' என்று மனத்தினில் எண்ணவில்லையே. 'யான் ஒருவனே தாயின் உயிரைத் தாங்குபவன்; என்னைவிட்டு அவள் எவ்வாறு இருப்பள்?' என்று இத்தீயவனது இருதயத்தில் தோன்றவில்லையே. 'வம்சம் தொன்று தொட்டு விளங்குவதன்பொருட்டு, பிண்டமிடக்கூடியவனாய் என்னைப் பிதா பெற்றெடுத்திருக்க, அவரிடமிருந்து அனுமதி பெறாமல் அனைத்தையும் துறந்துவிடுவது எங்ஙனம் பொருந்தும்?' எனவும் அஃபேதையனது புத்திக்குப் புலப்படாமற் போயிற்றே. ஆனதுபற்றி, இவ்வாறு தீயவழியிற் பிரவிருத்தித்தவனான, கேடுண்ட நோக்கமுள்ள இவன் எவராலும் பார்க்கவியலாத பரலோகவிஷயத்தைப் பார்த்தவனல்லன் என்பது இருக்கட்டும்; கண்முன்னிலையிற் காணக்கூடிய இவ்வுலகவிஷயத்தையும் அறியாதவனான - அறிவின்மையாகும் அந்தகாரத்தினால் அந்தகனாயிருக்கும் - அவன்பொருட்டு என் செய்யலாகும்? மேலும் தேவரீரால் இவ்வறிவிலா பிராணியானது கிளியைப்போல் கற்பிக்கவும் பட்டு, போஷிக்கவும் பட்டதே. ஆகிலும், அப்பிராணிகள் மனக்களிப்பூட்டுவனவாதலின் அவற்றிற்குக் கற்பித்ததற்குற்ற பிரயாஸமானது பயன்பெற்றதாகவே ஆகின்றது; அவையும், வளர்க்கப் படுமாகில், போஷகனிடம் பிரீதி பாராட்டுகின்றனவே! தாய் தந்தையரிடம் அவற்றிற்கும் இயற்கையாகவே பிரீதி இருப்பதையும் காண்கின்றோம். அன்றியும்,இத்தகையநடத்தையால் அவனும் ஓர் அறிவிலா பிராணியின் உதரத்தில் உதிக்கவேண்டும். எளிதில் இழுபடா இருதயத்தையுடையவன் எவனும் தனது நன்மையின் பொருட்டும், பிறரது நன்மைக்காகவும் முயற்சி பெறுகின்றான். இங்ஙனம் அவன் எம்மைத் துயரத்தில் அமர்த்தியது தனக்கும் நன்மையல்ல, பிறருக்கும் நன்மையன்று. தனக்குத் தானே தீங்கு விளைவித்துக் கொள்ளுமாறு, இவன் என் இவ்வண்ணம் செய்தனன் என்று யோசித்துப் பார்த்தும், புத்திக்கு ஏதும் புலப்படுவதைக் காணோம். எவ்வகையிலும் எமது

சோகத்திற்கென்றே அத்தீச்செயல்புரிபவன் வந்து பிறந்தனன்.'' எனப் பகர்ந்து, பெருமூச்செறிந்தவண்ணம் இருந்தனன்.

அவ்வகையான நிலைமையிலிருக்கும் சுகநாஸனை நோக்கி, தாராபீடன் மறுமொழி கூறியதாவது:— "போற்றத்தகுந்த பெரியோரான தமக்கு எம்மைப் போன்றவர், போதிப்பதென்னும் இவ்விஷயமானது, நிபத்தினுல் அக்கினியைப் பிரகாசிக்கச் செய்வதற்கு, அல்லது சிற்றுல வட்டக்காற்றுல் பெருங்காற்றைப் பெருகச் செய்வதற்கு முயலுவது போலாகும். ஆகிலும், நல்லறிஞராயினும், ஸாத்விககுணமமையப் பெற்றவராளுலும் துயரம் வந்துதிப்பதால் அவசியம் அனைவரது மனதும், களங்கமற்றிருப்பினும், மாரிநீரால் கயம்போல் கலங்கி விடுகின்றது. ஆதலால் யான் கூறுகிறேன்; எம்மைப்பார்க்கினும் உலக நடத்தையை ஆர்யரான தாமே நன்கு அறிவீர்கள்.

வாலிபப்பருவத்தை விகாரமேதுமின்றிக் கழித்த அத்தகையவன் இவ்வளவு விசாலமான புவியின்கண் எவனுயினும் ஒருவன் உளனோ ? யௌவனம் வருகையில் பாலியப்பருவத்துடன் கூடவே, பெரியோரிடமிருக்கும் பிரீதியும் நழுவிப் போகின்றது. இருபுயங்களோடு புத்தியும் பருத்து விடுகின்றது. * உருவத்துடன் கூடவே உள்ளத்திலிருந்து விகாரங்களும் வெளிப்படையாய் ஓங்கிவளர்கின்றன. விகாரத்தைப் பெற்றும், அஞ்ஞானத்தினுல் இருளடைந்துமிருக்கும் இருதயமானது, பிரமங்கொண்டு நிச்சயமாகவே தவறிவிடுகின்றது. சித்தம் தவறியதும், அதைப்பற்றியுள்ள இலஜ்ஜையும் விழுந்தே விடுகின்றது. இலஜ்ஜையாகும் மறைவு நீங்கிய சூனியமான மனத்தினில் மன்மதன் புகுந்து அடிவைத்த பின்னர், மறுக்க முடியாதவனும், அவினயம் அனைத்துக்கும்ஆதாரமானவனுமான அவனைத் தடுப்பவர் யாவர்? ஆதலால் மோஹத்தினுல் ஏற்பட்ட இந்திரிய விருப்பங்களாகும் விஷத்திற்குப் பெரும் பாம்பெனத்தகும் வாலிபப் பருவம் உதிக்கையில், அனைவருக்குமே தவறுதல் ஏற்படுகின்றது. சீராட்டக்கூடியவனும், பரிபாலிக்கத்தகுந்தவனுமான குழந்தையின்மீது, தாம் இவ்வாறு பெருங்கோபங்கொள்வதேன்? புதல்வனிடமுண்டான பிரீதிக்குப் பொருந்தாதவிதமாய் இங்ஙனம் சினங்கொண்டு திட்டினீர்களல்லவா?

---

* ஸூக்ஷ்ம புத்திபோய், மதி தூலித்து (மந்த புத்தியாகப்) போகின்றது என்று கருத்து.

நித்திரை போகும் ஸமயத்திலும் மூத்தோரது முகத்திலிருந்து யாதொன்று வெளிவருகின்றதோ, அது சுபம் அல்லது அசுபமாக விருப்பினும், அவசியம் பாலரிடம் பலித்து விடுகின்றது. பெரியோரல்லவோ பாலர்களுக்குப் பெரும் தைவம் ? மூத்தோர் அளித்த வாழ்த்துக்கள் வாஞக ஆவதுபோலவே, சினங்கொண்டு சொன்ன கடுஞ்சொற்களும் சாபமாய் முடிகின்றன. ஆனதுபற்றி, வைசம்பாயனனைக்குறித்துக் கோபாவேசத்தினால் பெரியோரான தாம் இவ்வாறு மிகக் கடுமையாகக் கூறுங்கால், என் மனத்தினில் வருத்தம் மிகுதியாயுண்டாயிற்று. தான் வளர்த்த மரங்களின்மீதும் பிரீதியுண்டாகின்றதே! அப்படியிருக்க உடலிலிருந்து உதித்த பிள்ளைகளின்பால் கேட்கவும் வேண்டுமோ? ஆகையால், வைசம்பாயனன்மீது உண்டான இச்சினத்தின் எழுச்சியை ஒழித்து விடுவீர்களாக. அவன் தகாத காரியம் எதையும் செய்தவனல்லன். அவன் அனைத்தையும் துறந்து இருக்கின்றான் என்னும் இவ்விஷயத்தைக் காரணமறியாது குற்றமென யாம் இங்ஙனம் ஏன் குறைகூறவேண்டும்? அவினயத்தினால் ஏற்பட்ட இத்தகைய குற்றமே ஒருகால் குணமாகவும் ஆய்விடுகின்றது. ஆதலால் இவனை அழைத்து வரலாம். இவ்வாறு இவனது பிராயத்திற்குப் பொருந்தாதாயினும், இவ்வாத்திரம் இவனுக்கு ஏன் ஏற்படவேண்டுமென அறிந்துகொள்வோம். பிறகு தகுந்தவாறு செய்துகொள்வோமாக.

தாராபீடன் இப்படிக் கூறியதும்,மறுபடியும் சுகநாஸன், 'வெகு கம்பீரமான தன்மையினாலும்,வாத்ஸல்லியத்தினாலும் தேவர் இவ்வாறு மொழிகின்றீர்கள் ; இளவரசை விட்டுவிட்டு, தன்மனம் போனபடி நடந்துகொண்டு, நொடிநேரமேனும் மற்றோரிடத்தில் தங்குவதென்னும் இதைவிட இவனுக்குத் தகாதகாரியம் வேறொன்றும் வேண்டுமோ ?' என மொழிந்ததும், சந்திராபீடன், சுகநாஸனை நோக்கி மெல்ல மெல்ல இங்ஙனம் செப்பலானான்:—'ஐயன்மீர்! வைசம்பாயனன் வாராமலிருப்பது எனது குற்றத்தினாலல்லவென்பதை, வாய்மொழியின்றியே அறிந்திருந்தும், தந்தை என்னமோ இவ்வாறு கருதுகின்றனர். வேறு எவருக்குத்தான் இவ்வகையான எண்ணம் ஏற்பட்டதில்லை? உலகத்தோரால், முக்கியமாய்த் தகப்பனாரால் கருதப்படுமாறு உண்மையேதும் இல்லையாகிலும், அது அப்படிப்பட்டதே. ஆகையால்,இக்குற்றமுண்டென்று கருதப்படுவதற்காக, வைசம்பாயனனை அழைத்துவரும்

பொருட்டுப் போவதற்கு உத்தரவு பிறப்பிப்பதாகும் பிராயச்சித்தத்தைத் தாம் தந்தையைக் கொண்டு ஏற்படுத்தவேண்டும். எனது குற்றத்திற்கு மற்றொரு வகையிற் பரிஹாரமேயில்லை. குதிரைகளுடன் ஏகும் என்றனக்கு, முன்பார்த்திருக்கும் பாதையிற் போவதில் ஆயாஸம் சிறிது மிராது. ஸேனையைச் செலுத்திக்கொண்டு, என்னைப் பின்பற்றியே வருகிறான் என்னும் காரணத்தினாற்றானே, அவனின்றி யான் வாலானேன். பிறந்தது முதலாக நடப்பது, நிற்பது, நகைப்பது, விளையாடுவது, குடிப்பது, புஜிப்பது, தூங்குவது, முழிப்பது, மூச்சுவிடுவது என்னும் செய்கை யெதையாயினும், வேறெப்பொழுதாகிலும் வைசம்பாயனனின்றி யான் செய்ததுண்டோ? அவன் போலவே நானும் ஆகக்கூடாதென்று கருதியே, செய்தியைச் செவியுற்றவுடன் அங்கிருந்தே யான் சென்று விடாமலிருந்தேன். ஆகையால் உடனே திரும்பிப்போகாத தப்பிதத்திலிருந்து என்னைத் தாம் காற்றருள்வீர்களாக.'

இவ்வாறு சந்திராபீடன் சொல்ல, 'தான் செல்லுவதற்காக இளவரசு வேண்டிக்கொள்கின்றானே; ஆண்டவன் ஆஞ்ஞாபிப்பது என்னை?' என மெள்ள மெள்ள சுகநாஸன் வினவ, தாராபீடன் மறுமொழி புகன்றனன்.—'ஐய! நமது மகனுக்கு இந்நாட்களிற்றானே மனைவி வரக் காண்போம் எனக் கருதினோம்; அதற்குள்ளாகவே இதோ விருப்பத்தை விலக்கக்கூடிய வைசம்பாயனனுடைய வேறோர் விருத்தாந்தத்தை, விபரீதத் தன்மையுள்ள விதியானது நடுவில் கொண்டு நிகழச்செய்ததே! குமாரன் கூறுவது உண்மையே. அவனை அழைத்து வருவதில் வேறொருவனும் திறமையுள்ளவனாகான்; அவனின்றி இவனும் இங்கு இருக்கமாட்டான். ஆகையால் அவசியம் இத்துயரக்கடலை இவ்வோடத்தைக் கொண்டே கடக்கவேண்டும். வைசம்பாயனனைத் திரும்ப அழைத்து வருவதன்பொருட்டு, விலாஸவதிதேவியும் இவனை அவசியம் அனுப்புவள் என்றே நான் நிச்சயமாய் நினைக்கிறேன். ஆதலால் இவன் செல்லக்கடவன். ஆனால் வத்ஸன் வெகுதூரம் போக வேண்டியிருக்கின்றமையால், ஜோதிடகலை ஞருடன் ஆதரவோடு ஆலோசித்து, இவன் ஏகுவதற்கு ஏற்ற நாளையும், இலக்கினத்தையும் நீங்களே நிச்சயித்து, புறப்படுவதற்கேற்ற ஏற்பாட்டையும் செய்து விடுங்கள்' என்றவாறு மொழிந்து, 'வத்ஸ! நீயே உட்சென்று மனை

ரமைக்கும், மாதாவுக்கும் செல்லும் செய்தியைச் செப்புவாயாக' எனக் கட்டளையிட்டு, தனது மாளிகைக்குப் போனன். சந்திராபீடனும் சென்று, சென்னி வணங்கி, அன்னையின் அருகில் அமர்ந்து, மனோரமையை மனந் தெளியச் செய்து, மொழியலானன்.—

'அம்ம! பொறுத்துக்கொள். வைசம்பாயனனை அழைத்துவரப்போவதற்காக, தந்தை என்றனக்கு உத்தரவு அளித்தனர். ஆதலால் சில நாட்களாய்மறைந்திருக்கும் வைசம்பாயனனது வதனத்தைக் காண்பதிற் காதலுள்ள என்றனைத் தடையின்றி நீ செல்லவிடுவாயாக' எனக் கூறியதும், மனோரமை 'அப்ப! நீயே செல்லுவதாகச் சொல்லி, என்னைத் தேற்றுகிருயா என்னே? என்றனக்கு உனதிடமேனும் அவனிடமாயினும் யாது வேற்றுமை? கன்னெஞ்சுக்காரனன அவனொருவனைக் காணுமலிருப்பதொன்று; நீயும் சென்றுவிட்டாயாகில், அவனைக் காணுமலிருக்கையில், உயிர்நீங்குவதை நிறுத்துவதற்குக் காரணமான உனது தரிசனமும் தூரத்தில் விலகிவிடுகின்றதே! ஆகையால், வத்ஸ! நீ விலகிப்போவது தகாது. உங்கள் இருவரில் ஒருவனலேயே, நாங்கள் இருவரும் புத்திரப்பேறு பெற்றவராவோம். கொடிய சுபாவமுள்ள இவன் வராமலிருப்பினும் இருக்கட்டும்.' என மறுமொழி மொழிய, விலாஸவதியானவள் வெகுதீரத்தன்மையுடன் இங்ஙனம் உரைக்கலாயினள்:—'எனதன்பார்ந்த தோழி! நீ மொழிந்தவண்ணம் உனக்கும் எனக்கும் இஃதுஇவ்விதமேதான். ஆனல் இவன், வைசம்பாயனனைவிட்டு வேறெவனைக் காணக்கடவன்? அஃதிருக்கட்டும். இவனை நீ மறுக்கக்கூடுமோ? மறுக்கப்படினும், இவன் நிற்கவே கூடாது. தந்தையும் இதை யெண்ணியே, இவன் போவதை அனுமோதித்தனர் என்று நான் கருதுகினேறன். ஆதலால் இவன் செல்லட்டும். சில நாட்களளவும் இவ்விருவரையும் காணுததால் ஏற்படும் கிலேசங்களை யாம் இருவரும் அனுபவிப்பதும் நன்று; வைசம்பாயனனது வதனத்தைக் காணுததாற் கடுந்துயருற்று ஏங்கித் தவிக்கும் இவனது முகத்தைத் தினந்தோறும் காண்பதென்பதோ, மிகவும் கடுமையானது. ஆகையால் எழுந்திரு; வத்ஸனுன சந்திராபீடனை அனுப்புவதற்கேற்ற ஏற்பாடுகளைச் செய்வதற்குச் செல்லுவோமாக.'

இவ்விதம் சொல்லிக்கொண்டே, மனோரமையைக் கரந்தனிற்பற்றிக் கொண்டு, சந்திராபீடனல் பின்தொடரப்பட்டவளாய், தனது வாஸ

கிருஹம் சென்றனள். சந்திராபீடனும், அன்னையின் அருகில், செல்ல வேண்டியதைப்பற்றி ஸல்லாபம்செய்தவாறு க்ஷணநேரம்போல்இருந்து, தன்மாளிகையேகினன். ஆங்கு உடைகளைக்களைந்தவனாய் பிரயாணத்திற்காக இருதயம் படபடக்க, இரஹஸ்யத்திற் சோதிடரை அழைத்து, 'ஆர்ய சுகநாஸராவது, பிதாவாவது உங்களை வினவுவராயின், தாமதமின்றி எனக்குப் பிரயாணம் ஏற்படுமாறு நீங்கள் ஓர் தினத்தை அவர்களிடம் மொழிந்திடுவீர்களாக.' என ஆஞ்ஞாபித்ததும், அவர்கள் 'தேவ! கிரஹங்கள் எல்லாம் இருக்கும் வகையை நோக்குங்கால், இந்நிகழ்ச்சியில் தேவரீர் பிரயாணம் போவதே பிரசஸ்தமன்றென்பது எமது கருத்து; அப்பால், அரசாது இச்சையே காரியகௌரவத்தை அனுஸரித்து, பொருந்தியகாலமாம்; அப்பொழுது தினத்தை நிரூபிக்க வேண்டிய விஷயமே அவசியமில்லை. காலத்திற்கு அரசரே காரணமாகின்றனர். எந்த வேளையில் மனம் தெளிந்து களிப்புற்றிருக்கின்றதோ, அதுவே பணிகள் அனைத்துக்கும் பொருந்திய வேளையாகும்.' என விண்ணப்பம் செய்பலாயினர். பிறகு, சந்திராபீடன் மறுபடியும் 'தந்தை இங்ஙனம் ஆஞ்ஞாபித்தனரே என்று சொல்லுகிறேன்; இல்லையேல், காரியத்திற் கருத்துள்ளபேருக்கு, அடிக்கடி வெகு துரிதமாகச் செய்ய வேண்டி. நேரிடும் வேலைகளில் நாள் நிரூபிப்பதென்பது எத்தகையது? ஆதலால், நாளையதினமே பிரயாணம் ஸித்தமாகுமாறு மொழிந்திடுங்கள்.' எனக் கூறி, அப்பகலும் ஓர் இரவும் வெகு பிரயாஸத்துடன் அங்கு இருந்தனன்.

பிறகு கதிரவனும் அஸ்தமனத்தை அடைய, அந்திப்பொழுதாகும் அக்கினியின் பொறிகளது திரள்போல் தாரகைக் கூட்டமும் தோன்றியொளிக்க, இந்துவும் உதயகிரியை வந்தடைய,புறப்பாட்டு மங்களச் சடங்கில் வந்தனம் செய்வதற்கு வந்திருக்கும் சந்திராபீடனை நோக்கி விலாஸவதியானவள், துயரம் ஆசை ஆவல்களால் நா தழுதழுத்து எழுத்துக்கள் தடைபட இங்ஙனம் மொழிந்தனள்.

'அப்ப! மடிதனிலிட்டுத்தாலாட்டின, பாலகத் தன்மைபொருந்திய புதல்வன், புதிதாகப் பிரயாணம் போகையில் இருதயம் பெருந்துயரமுறுவதென்பது உசிதமே; இப்பொழுது உனது பிராயணத்தினால் ஏற்படும் மனத்துயரம்போல், உன் முதற்பிரயாணத்திலும் இவ்வண்ணம் உண்டாயினதில்லை. என் இருதயம் விரிந்து போவதுபோல் இருக்கின்

றதே! உயிர் வெளிக்கிளம்புவதுபோல் தோற்றுகின்றதே! புத்தியோ சற்றும் ஸமாதானம் பெறுவதாயில்லை! எல்லாவற்றையுமே பாழடைந்த தாகப் பார்க்கின்றேனே! கண்ணீரை அடக்கிய போதிலும், அதுவே வலிய வந்துவிடுகின்றதே! உனக்கு மங்களச் சடங்குகளை நிறை வேற்றுவதற்காக, அடிக்கடித் தேற்றிக் கொண்டபோதிலும், சித்தம் சலிக்கின்றதே! இத்தகைய மனத்துயரம் எனக்கு நிகழ்வதற்கு நிமித்தம் என்ன வென்பதையும் யான் அறியேன்! வெகுநாட்களாய் வெளியிற் சென்றிருந்து வந்தவனான என் வத்ஸன், மீண்டும் திடீரெனச் செல்லு கின்றானே என்னும் காரணத்தினாற்றானே? அல்லது, வைசம்பாயனனது விருத்தாந்தத்தினால் அந்தராத்மாவுக்கே அடங்காத்துயரம் ஏற்பட்டத னாலோ? இத்தகைய வருத்தம் உண்டாயிருந்தும், வைசம்பாயனனை அழைத்துவரப் போகும் உன்னைப் பிரயாணம் செய்யாது தடுப்பதற்கு எனது நா வெழும்பவில்லை! இருதயமோ, உனது பிரயாணத்திற் பிரியப் படவேயில்லை! ஆதலால் இவ்வகையாய் யான் துன்புறுவதை அறிந்தும் முன் இருந்தவாறு, இப்பொழுதும் எவ்விடத்திலாயினும் ஏதேனும் பற்றுதலுக்கு உட்பட்டு, நீடித்தகாலம் நீ நின்றுவிடப் போகின்றனை! இவ்விஷயத்தின் பொருட்டுச் சிரந்தனிற் காங்கூப்பி வத்ஸனான உன் றனை வேண்டிக்கொள்கின்றேன்.' எனக் கட்டளையளித்தவளான தனது அன்னையை நோக்கி 'அம்ம! அப்பொழுது திக்ஜயத்தின் நிகழ்ச்சியால் தாமதிக்கவேண்டியிருந்தது; இப்பொழுதோ, அவ்விடம் போவதற்கு வேண்டுவதெவ்வளவோ, அவ்வளவுதான் காலதாமதம். ஆகையால் யான் வருவதற்கு வெகுநாட்கள் ஆகுமென்னும் எண்ணங்கொண்டு சிறிதும் நீ சித்தத்தில் வருத்தமுற வேண்டாம்.' என்றவாறு விஞ்ஞாபனம் செய்த சந்திராபீடனை அவனது அன்னை வெகு நேரம் ஆலிங்கனம் செய்து, உயிரை விடுபவள்போல் அவனை விடுத்தனள்.

மாதாவினால் விடப்பட்டதும், பிதாவின் வாஸகிருஹத்தினுட் புகுந்து, தூரத்திலிருந்தே தந்தையின் தாள்களைப் பணிந்தனன். அப்பால், அவ்விதம் அடிபணியும் அவனைப் பிதாவும் பார்த்து, மனக்கலக்கத்தின் ஆத்திரத்தினால் அக்ஷரங்களும் தடைபட மொழிந்ததாவது.— 'குழந்தாய்! தந்தை என்மீது குற்றம் எண்ணினரென்று நினைத்து நீ மனத்தினில் வருத்தங்கொள்ளவேண்டாம். ஒழுக்கப்பயிற்சி செய்வித்தது முதல், நன்கு எம்மால் பரீக்ஷிக்கப்பட்டு வருகின்றனை. பரீ

கூறித்தபின்பு, நற்குண ஸமூஹங்களைக் கண்டு, தகுந்தவனென நினைத்தே இராஜ்யபாரத்தை உனதிடம் ஏற்றிவைத்தே னல்லாது, புதல்வனென்னும் பிரீதியினால் அன்று. இவ்விராஜ்யமானது பெரும்பலம் பெறுதவனிடமும், ஆண்மையற்றவனிடமும், மஹோத்ஸாஹமொழிந்தவனிடமும், அடைக்கலம் புகுந்தோரை ஆதரிக்காதவனிடமும், அமங்கலனிடத்திலும், கருணையற்றவனிடத்திலும் அடிவைப்பதேயில்லை. எவனொருவன் ஸமஸ்தமான குணங்களாகும் கயிறுகளால் வலிவுடன் இழுத்து, நிலையில்லாத் தன்மையதான இவ்விராஜ்யத்தைக் கட்டுப்படுத்துவதில் திறமை சாலியோ, அவனிடந்தான் இஃது நிலைபெறும். ஆதலால், இதனாலேயே 'உன்றனிடம் குற்றமில்லை' யென நீ அறியவேண்டும். அன்றியும், இப்பொழுது எவரிடம் பாரத்தை இறக்கிவிட்டு, நீ அணுவளவான குற்றத்தையேனும் செய்யக்கடவாய்? உலகத்தோரனைவரையும் திருப்தி செய்துவைக்க நீயேதான் முயலவேண்டும்; எமக்குக் காலம் கடந்து போயிற்றன்றோ? நாம் தவறுதலின்றி, வெகுகாலம் தகுந்த பதவியில் இருந்தனம்; பேராசையால் பிரஜைகளைப் பீடிக்கவில்லை; கர்வத்தினால் குருமார்களுக்கு வெகுட்டலை யுண்டாக்கினோமில்லை; சிற்றின்பப் பற்றினால் பரலோகவாழ்க்கையையும் பாழாக்கவில்லை. இராஜதர்மத்தை அனுஸரித்தோமல்லாது, எமது விருப்பத்தையல்ல; முதியோரையே ஆச்ரயித்தோ மன்றி, (வேட்டை முதலிய ஆட்டங்களிலுள்ள) ஆசைகளை யல்ல; மேன்மக்களது ஆசாரங்கள் பின்பற்றப்பட்டனவே யன்றி, இந்திரியங்களல்ல; ஒழுக்கத்தைக் காப்பாற்றினோமே யல்லாது, உடலை யன்று. தகாத காரியங்களைத் தூரவிலக்கியும், செய்ய வேண்டுவனவற்றைச் செய்தும் நல்லுலகமும் நம்மால் ஸம்பாதிக்கப்பட்டதென்பது எமதெண்ணம். நீ பிறந்ததாலும் கிருதார்த்தனாய் விட்டேன். ஆகையால் இனி இதுதான் எனது கோரிக்கை—உனக்கு மணம்புரிவித்து மனைவியுடன் சேர்த்து நிலைநிறுத்தி, பிறகு என் இராஜ்யபாரமனைத்தையுமே உனதிடம் ஏற்றி வைத்து, ஆயுளைக் கழிக்க வேண்டிய நிலைமை வந்ததாதலின், இருதயம் பாரமொழிந்திருக்க, முன்னிருந்த இராஜரிஷிகள் சென்ற வழியைப் பின்பற்றுவேனாக—என்பதே. இங்ஙனம் எண்ணியிருக்க, வைசம்பாயனனது இவ்விருத்தாந்தம் எதிரில் எனக்குத் தடையாக வந்து நிற்கின்றதே! இது இங்ஙனம் நிகழ்ந்திருக்கவேண்டிய நிமித்தமே இல்லை யென்பது எனதெண்

ணம் ; அன்றேல், வைசம்பாயனன் எங்கே! கனவிலும் இவனுக்கு எண்ணத் தகாத இத்தகைய நடத்தை யெங்கே! ஆகையால், நீ செல்லு கின்றனை யாயினும், இக்கோரிக்கை என் இருதயத்தினுள்ளேயே வெகு நாள் எங்ஙனம் தங்கியிராமலிருக்குமோ, அவ்வாறு செய்யவேண்டும்.' என மொழிந்து, தாம்பூலம் அளித்து, விடுத்தனன்.

சந்திராபீடனும் வெளி வந்து, சுகநாஸனது மாளிகைக்குச் சென் றான். ஆங்குப் புத்திரனைப்பற்றிய சிந்தையால் இந்திரியங்களை இழந்த வன்போலிருக்கும் சுகநாஸனையும், இடைவிடாது சொரியும் கண்ணீரால் கலங்கிய முகத்தை யுடையவளான மனோரமையையும் வணங்கிவிட்டு, முன்புறத்திற்கொண்டுவிடப்பட்டும், அப்புறம் விலகிப்போய் பிரயா ணத்தில் உத்ஸாஹத்தை பிரகடனம் பண்ணாமல் ஏங்கி நிற்கும் இந்திரா யுதத்தின்மீது ஏறிக்கொண்டு, வெகு வேகமாகவே நகரத்தை விட்டு வெளிக்கிளம்பினன்.

அப்பால், சிப்பிராநதிக்கரையில், அவன் சுபமாகத் தங்கிவிட் டுப் பிரயாணம் செய்வதற்காக அமைத்திருந்தப் பந்தலினுட் புகாமலே, ஆறு கிரோச தூரம்போற் சென்று, நீரும் புல்லும் நிரம்பவும் எளிதில் அகப்படக்கூடிய விடத்தில் இறங்கி தங்கினன். இருதயம் துடி துடிக்க இரவு கழிந்து விடியற்காலம் தோன்றும விருக்கையிலேயே எழுந்து, எவ்வெவற்றையோ எண்ணமிட்ட வண்ணம், பசியின் பாதையையும், தாஹத்தினாலுண்டான துன்பத்தையும், வெயிலின் வெட்கையையும், விடாயின் கொடுமையையும், கண் விழித்தலின் கஷ்டத்தையும் சிறி தும் கருதாமலே, அல்லும் பகலும் அவன் பிரயாணம் செய்யலானான்.

இங்ஙனம் இவன் சவாரி செய்தவாறிருக்க, கடக்க வேண்டிய வழி வெகு நீண்டதாயிருந்ததால், நடுவழியிற்றானே—மார்க்கத்திற் குக் குறுக்கே கிருஷ்ணஸர்ப்பம்போலவும், மன்மதனுகும் மத்தகஜத் திற்குண்டான மதம்போலவும், துரிதமாய்ச் செல்லுவதற்குத் தடை யுண்டுபண்ணுவதாய்—மாரிகாலம் வந்து நேர்ந்தது.

அக்காலை, இவனுக்கு மதிமயக்கம் உண்டுபண்ணி, வேகத்துடன் எழும் மூர்ச்சைகளே முதலிற் பத்துத் திசைகளையும் இருளடையச் செய்ய, பின்னர் நீர்கொண்ட மேகங்கள் திசைகள்தோறும் காரிரு ளைப் பரப்பின ; மனதானது எவ்விடத்திற்கோ இவனைவிட்டுக் கிளம்பி முன்னதாய் விரைந்தேக, அன்னப்பறவைகள் அதன் பிறகே பறந்தோ

டின ; கருங்குவளைமலருக்கொப்பான காந்திபொருந்திய இவனது கண்களிரண்டும் முதலில் நீரைச் சொரிய, பிறகு திரளான கார்முகில்கள் தண்ணீரைப் பொழிந்தன. மேலும், கடக்கக் கூடாத ஆற்றுநீர்ப் பெருக்குகளுடன்கூடவே, காமனது கடுஞ்செயல்களும் கரைபுரண்டெழும்பின ; மாரிநீர்ப்பெருக்குகளால் அலைக்கப்பெற்ற அம்புயங்களுடன்கூடவே காதம்பரியைக் கூடுவதிலிருக்கும் பிரத்தியாசையும் மூழ்கிப்போயினது ; மழைநீர்த்தாரைகளின் வேகத்தைத் தாங்காதவையான புதிய அரும்புகளுடன்கூடவே, இவனது இருதயமும் விரிந்தது. அப்பால், நிலங்களிற் பாம்புவதாயும், நீர்களிற் கலகலவெனத் ததும்புவதாயும், பர்வதபிரதேசங்களிற் படபடவெனப் பொழிவதாயும், பனங்காடுகளிற் பேரொலியுடன் சொரிவதாயும்—மழையின் தாரைகள் வீழ்வதற்கேற்றவண்ணம்—செவியுறப்படுவதான மாரிநீர்ப்பெருக்குகளின் ஒலியினால் ஆவல் அதிகரித்தவனாய், இரவில் அல்லது பகலிலாவது, வழியில் அல்லது வாஸஸ்தலத்திலாவது, நடக்கையில் அல்லது நிற்கையிலாவது, வைசம்பாயனனை நினைப்பதிலாவது, காதம்பரியின் ஸங்கமத்தைத் தியானம் செய்வதிலாவது, மற்றும் எவ்வகையிலாவது, எவ்விடத்திலாவது அவன் சற்றேனும் இன்பம் பெறவில்லை.

அவன் வெகு தீரனாயிருந்தும் அமைதி பெறாதவனாய், தனது இயற்கைத் தன்மையையே இழந்துவிட்டான் ; பூதலமெங்கும் புரண்டோடும் மழைநீர்த்தாரைகளும் இவனைச் சோஷிக்கச் செய்தன; பத்துத் திசைகளையும் பிரகாசப்படுத்தும் மின்னொளியும், இவனை மூர்ச்சையாகும் இருளில் அமர்த்தியது; ஸகல ஜகத்துக்கும் ஜீவனஹேதுவான மாரிகாலத்தினாலும் உயிர்பிழைத்திருப்பதற்கு ஐயமுண்டாய் அலைபாயும் நிலைமையில் இருந்தும், வர்ஷாகாலத்தினாலேயே துரிதமாகச் செல்லுவதற்குத் தடை யுண்டாக்குமாறு திசைகளெல்லாம் தகையப் பெற்றிருக்கையிலும், இவனுக்குக் காதம்பரியைக் கூடுவதில் ஆசைமட்டும் தடை பெறவேயில்லை; இவ்வாசையினாற்றானே, அத்தகைய மாரிகாலத்திலும் நொடிநேரமும் தாமதம் செய்யாது, அப்பாதையைக் கடந்துகொண்டிருந்தனன். தண்ணீர்த்தாரைகள் தாக்குவதாற் கண்களைக் குறுக்கி, அடிக்கடித் தலையை ஒருவாறு சாய்த்துத் திருப்பியும் கவிழ்த்துக்கொண்டும் வருகின்ற, விரைவுடன் ஓடுவதில் உத்ஸாஹம் குன்றிய

தான குதிரைப்படையினுற் பின் தொடரப்பட்டவனுய், கேவலம் உயிர் தரிப்பதற்காக ஏதோ ஒருவாறு உண்டிவினைமாத்திரம் நிறைவேற்றிக் கொண்டு, பகற்பொழுதில்மட்டும் பிரயாணம் பண்ணினன்.

இங்ஙனம் படையுடன் போய்க்கொண்டிருக்கையில், மார்க்கமும் மூன்றிலொருபங்கே மிகுந்திருக்க, ஆங்கு மேகநாதனைத் திரும்பிவரக் கண்டான். பார்த்ததும், தூரத்திலிருந்தே வந்தனம் செய்யும் அவனை இவ்வாறு வினவினன் :—'முதலிற் பத்திரலேகை சென்ற செய்தியை வினவுதல் நிற்க, வைசம்பாயனனது விருத்தாந்தத்தையே வினவுகின் றேன். அச்சோத குளக்கரையில் நீ வைசம்பாயனனைக் கண்டனையோ ? ஆங்குத் தங்கியதற்குத் தகுந்த முகாந்தரத்தைக் கேட்டையோ? நம்மை நினைக்கின்ருனு? அவன் என்றனைப்பற்றி ஏதேனும் வினவியதுண்டோ? அவனது கொள்கை அறியப்பட்டதோ ? உங்கள் இருவருக்கும் ஸல்லா பம் ஏதாகிலும் நடந்ததோ? தாய்தந்தையருக்கு ஏதாயினும் செய்தி யனுப்பினுனு ? வருவதற்காக நீ அவனுக்குப் போதனை செய்தனையோ ? எமது வரவு அறிவிக்கப்பட்டதோ ? அவ்விடம் விட்டு விலகாமலிருப் பானு? எமது வேண்டுகோளை ஏற்றுக்கொள்வனு ? மீண்டும் என்னு டன் வருவனு ? பகலில் என் செய்துகொண்டு இருக்கின்ருன் ? அப் படியிருக்கையிற் பொழுதுபோக்குதல் எவ்வாறு ?'

என்றவாறு வினவ, அவன் மறுமொழி கூர்ந்ததாவது:—"ஆண் டவ! அச்சோதஸரஸ்ஸிற்கு எதிராக வைசம்பாயனன் போனுன் என் கிற இவ்வார்த்தையே வழியில் இதுவரையிற் செவியுறப்படவில்லையே! தேவர் வருவதற்குத் தாமதித்ததால், மாரிகாலம் துவக்குவதை நோக்கி 'ஒருகால் இத்தகைய நாட்களிற் சந்திராபீடன் வருவதற்கு முயற்சி செய்தும், பிரபுவான தாராபீடனுல் அவர் விடப்படவே மாட்டார். நீயும் தனித்து இப்பிரதேசத்தில் இருக்கவேண்டாம். நாங்களும் இதோ போய்ச் சேர்ந்திடுவோம். ஆகையால் இவ்விடத்திலிருந்தே திரும்புவா யாக.' எனக் கூறி, பத்திரலேகையாலும், கேயூரகனுலும், இன்னும் மூன்று நான்கு பிரயாணிகளாலும்—அச்சோதத்தை அடைவதற்கு முன்னமே---திருப்பி யனுப்பப்பட்டேன்." என்றவாறுரைத்து, அவன் ஓய்ந்துவிட, மறுபடியும் 'நீ என்ன நினைக்கின்றனை ? இத்தனை நாட்க ளிற் பத்திரலேகைப் போய்ச் சேர்ந்திருப்பளல்ல ?' என வினவலா னுன். 'வேந்தே ! இவ்விதந்தான் எனது மனதும் கருதுகின்றது; வழி

நடுவில் தாமதத்தை யுண்டாக்கக் கூடியதாய்த் தடையொன்றும் ஏற்படாமலிருக்கின், ஐயமின்றி அவள் சென்றிருப்பள்.' என்று மேகநாதன் மொழிந்தனன். மாரிகாலத்தினல் மேலோங்கி வளர்ந்த மன்மதனுகும் மாகடலின் மத்தியத்தில் தன்னைப்போற் காதம்பரியும் வீழ்ந்திருப்பளென அனுமானத்தினல் எண்ணி யெண்ணி ஏங்கித் தவிக்கும் இவனுக்குக் கார்முகில்கள் காலபுருடர்களாகவும், தாழம்பூ மணமானது விஷ வாஸனையாகவும், நன்கு புஷ்பித்திருக்கும் குடமல்லிமரங்கள் நமனது நகைப்புகளாகவும் மாறிவிட்டன போலும்! அன்றியும், உடலின் வலிவானது இளைப்பாகவும், தைரியம் துயரமாகவும், அங்கங்கள் தாங்கக்கூடாதவையாயும், இந்திரியங்கள் வலிமையிழந்தவைகளாகவும், ஸகலமுமே ஸுகமற்றனவாகவும் மாறுபாடடைந்தவைபோல் ஆயின. பகற்பொழுதுகளாற் பதிப்பிக்கப்பெற்றது போலிருப்பதும், இடைவிடாது பெருகும் கண்ணீரின் வெள்ளத்தினுற் சிறிது மிகுந்ததும், ஸங்கற்பத்தால் வரையப்பெற்றுத் தன்னில் மாறுபடா நடத்தையை யுடையதான காதம்பரியின் உருவத்துடன் கூடவே கண்டத்தில் தங்கியிருப்பதுமான தனதுயிரை வெகு கஷ்டத்துடன் தாங்கியவனுய், மாரிகாலத்தினுற் சீர்குலைந்திருப்பதும், முன் பார்க்கப் பெற்றதாயினும் இதுகாறும் காணப்படாததுபோல் கண்களுக்குக் களிப்பூட்டாததும், இருமடங்கு சோகத்தை அளிப்பதுமான அவ் வச்சோத ஸரஸ்ஸை யடைந்தனன்.

ஆங்கு அருகிற்செல்லுகையில்,குதிரைப்பாகரனைவரையும் நோக்கி 'ஒருகால் இவன் வெட்கத்தினல் நம்மைக் காணுமல் வேறிடம் போய் விடுவான்; ஆகையால் நீங்கள் நாற்புறமும் வெகு ஜாக்கிரதையாய் இருங்கள்.' என ஆஞ்ஞாபித்து, தானும் அச்வத்தின்மீது இருந்த வாறே, ஆயாஸமுற்றிருந்தும் சிரமமற்றவனைப்போல் தேடிக்கொண்டு நாற்புறமும் திரியலாயினன். அலைந்துகொண்டு, ஓரிடத்திலும் அவன் இருந்த குறி எதுவுமே காணப்படாமலிருந்ததால், இருதயத்தில் இவ்வண்ணம் எண்ணமிடலாயினன்.—'நிச்சயமாகவே, பத்திரலேகையினிடமிருந்து எனது வரவை அறிந்து, முன்னமே இவன் இவ்விடம் விட்டுச் சென்றிருக்கவேண்டும்; ஆகையினுற்றுன், இருந்த குறியுங் கூட எவ்வகையிலும் காணப்படவில்லை. வைசம்பாயனனைப் பாராமல் இவ்விடம் விட்டு ஓரடி வைப்பதற்கும் எனது கால்களும் துணிவு

பெறவில்லையே! பலவகையிலும் பாழாய் விட்டேன்! காதம்பரீதேவி யையும் காணவில்லை! வைசம்பாயனனையும் பார்க்கவில்லை!' என்ற வாறு நினைத்தும், பிரத்தியாசையின் தன்மை இத்தகையதென அறியமுடியாததாதலின், 'ஒருகால் மஹாச்வேதையும் இச்செய்தியை அறிந்தவளாகவே இருக்கக்கூடுமாதலால், அவளைப் போய்ப் பார்க்கின் றேன்; அப்பால் ஏற்றவாறு செய்துகொள்வேனாக.' என மனதி லெண்ணி, மஹாச்வேதையின் ஆச்ரமம் ஏகினன். ஆங்குட்சென்று, குஹையின் வாயிற்படியிலேயே வெண்மையான கற்பாறையின்மீது வெகு பிரயாஸத்துடன் தாளிகையினால் தாங்கப்பெற்ற தேஹத்தை யுடையவளாய், தலை கவிழ்ந்தவண்ணம் உட்கார்ந்திருக்கும் மஹாச்வே தையைப் பார்த்தான். அவளை அங்ஙனம் இருக்கக் கண்டு, இருதயத் தில் 'காதம்பரீதேவிக்கே ஏதேனும் அநிஷ்டம் ஏற்படாமலிருக்குமா? எனது வரவைக் கண்டு மஹாச்வேதை மனங்களிக்க வேண்டியிருந்தும் இத்தகைய அவஸ்தையை இவள் அனுபவிக்கின்றாளன்றோ?' எனச் சங்கித்து, மனம் விரிய, இவனது பிராணன் பறந்துபோகும்போலி ருக்க, அடிக்கொருமுறை அடிவைக்கும்போதெல்லாம் தடுக்குண்டவன் போலவும், விழுபவன்போலவும் கண்ணீர் மிகவும் ததும்பத் துயரங் கொண்ட முகத்தை யுடையவனாய், 'இஃதென்ன?' எனத் தாளி கையைக் கேட்டான்.

பிறகு, மஹாச்வேதையே துயர வெழுச்சியை அடக்கக் கூடாத வளாயிருந்தும், தொண்டை தழுதழுக்க, மறுமொழி யுரைத்தனள்:— "மஹாபாக்கியசாலியான மன்னவ! இவ்வறிவிலா மங்கை, என் னென்று அறிவித்துக் கொள்ளட்டும்? ஆகிலும் கேட்பீராக. நீர் சென்ற செய்தியைக் கேயூரகன் கூறக் கேட்டு, மனம் விரிந்தவளாய், 'சித்திர ரதனது கோரிக்கையை நான் நிறைவேற்றினேனில்லை; நமது கிருஹத் திற்கு வந்த சந்திராபீடனுக்கும் மனமுவந்த உதவியேதும் புரிந்தே னில்லை; பிரியஸகியான காதம்பரியின் இருதயத்திற்கு இன்பனான மண ளனைக் கூட்டி அவள் களித்திருப்பதையும் யான் கண்டவளல்லள்.' என நினைத்துப் பன்மடங்கு அதிகமாய் வைராக்யம் ஏற்பட்டு, மீண்டும் மிகக் கடினமாகத் தவம் புரிவதன்பொருட்டு இவ்விடத்திற்கே வந்தேன். அப் பொழுது இங்கு, தமக்கு அநுரூபமான வடிவம் வாய்ந்து,மனதைப்பறி கொடுத்தவன்போல் தோற்றிய ஓர் அந்தணவாலிபனைக் கண்டேன். அவ

னும் எனதருகில் வந்து, வேறெங்கும் திருஷ்டி வைக்காதவனுய், அத ற்கு முன் கண்டதில்லை யாயினும் ஏதோ அறிகுறியை நினைவுக்குக் கொண்டு வருபவன்போல வெகுநேரம் பார்த்துவிட்டுப் பகர்ந்தனன்:— 'வடிவழகி ! பிறப்புக்கும் பிராயத்திற்கும் வடிவத்திற்கும் ஏற்றவாறு நடந்துகொண்டால் எவரும் உலகத்திற் பழிக்குப் பாத்திரமாகார். கேவலம் வக்கிரத்தன்மையதான விதியைப் போலவே, தகாத செயலில் உனக்கும் இஃதென்ன வீண்முயற்சி ? ஏனெனில், வாடாத மல்லிகை மலர்களுக்கேற்ப, மிக ஸுகுமாரமான இம்மேனியானது மாலையைப் போற் கண்டந்தனில் அமர்த்தி இன்புறுவதொன்றுக்கே தகுதியா யிருக்க, அநுசிதமாய் வெகு வருத்தத்துடன் அனுட்டிக்கப்படும் இக் கடுந்தவத்தினல் துன்பப் படுத்தப் படுகின்றதே ! புவியிற் பிறந்த தற்கு—ரூபம் முதலிய குணங்களமையப் பெறுதவராயினும்—ஜன் மத்திற் கேற்றவண்ணம் நேர்ந்த உலகத்து இன்பங்களை அனுபவித்து, பிறகு பரலோக வாழ்க்கைக்கு ஸம்பந்தமான தவங்களை அனுட்டிப்பதே அழகு. அங்ஙனமிருக்க, மேனியழகுவாய்ந்த மானிடருக்குக் கூறவும் வேண்டுமோ ? ஆகையினல் இயல்பாகவே ஸரஸமான உனது இம்மேனி, தவம் புரிந்து துன்புறுவதை நோக்க யான் வருந்துகின்றேன்! உன்னைப் போன்றவர் உலகத்து இன்பங்களிற் பராமுகமாய், தவம் புரிந்து, தேஹத்தைத் துன்பப்படுத்துவராயின், அப்பொழுது அப்புஷ்ப பாணன் நாணேற்றிய வில்லை வீணிற் சுமக்கின்றவனுவானே!'

நானே அவன் அவ்வாறுரைத்தும், 'நீ யார்? எங்கிருந்து வந்தனை? எதற்காக என்றனை நோக்கி இங்ஙனம் கூறுகின்றனை?' என்று ஏதும் வினவாமலே, வேறிடம் சென்றேன். போனதும், தேவதார்ச்சனையின் பொருட்டுப் பூப் பறித்துக்கொண்டு, தரளிகையை அழைத்து, 'தர ளிகே! இதோ எவனே ஒரு வாலிபன்! பார்வையிலும் பேச்சிலும் இவனது கொள்கை வேறு மாதிரியாய் இருப்பதாக எனக்கு விளங்குகின் றது. ஆதலால் மறுபடியும் இவன் இங்கு வாராவண்ணம் மறுத்து விடுவாயாக. மறுக்கப்பட்டும், மறுமுறை வருவானுகில், அப்பொழுது இவனுக்குத் தீங்கு நேரிடுமென்பது திண்ணம்.' என மொழிந்தேன். அவன் இவ்வாறு தடுக்கப்பட்டும், பற்றுதலைப் பரிஹரித்தவனல்லன். சென்ற சில தினங்களுக்கு முன், ஒருகால் நள்ளிரவிற் சந்திரனிடம் திருஷ்டியை வைத்தவளாய், 'இந்த இந்துவானவன் அகில ஜகத்துக்

கும் ஆனந்தமளிக்கவல்லவையும், அமுதத்தைப் பொழிபவையு மான இக்கதிரொளிகளினூடே என் மனதுக்கின்பமான அம்மணாளனை யும் பொழிவனோ ?' எனக் கோரியவாறு, போற்றக்கூடிய பெயரைப் பெற்ற எனது நாதனான புண்டரீகனைத் தியானித்துக்கொண்டு, கண் விழித்த வண்ணம் இருந்தேன்.

பிறகு, அநவாதமும் அனங்கனது திரளான அம்புகளாகும் அலகு கள் பாய்ந்து கவிந்திருப்பதுபோல், பாதமுதல் எங்கும் உரோமச் சிலிர்க்கை யுண்டான உடலை யுடையவனும், பரலோக பயத்தைத் தூர விலக்கியவனும், பகலைப் பார்க்கினும் பேதமின்றிச் சந்த்ரிகைப் பிரகா சித்ததால் தூரத்திலேயே நன்கு தோற்றுபவனும், சப்திக்காவண்ணம் அமைதியுடன் அடிவைத்து உன்மாதமென்னும் மன்மதவிகாரங் கொண்டு வருபவனுமான அதே வாலிபனைப் பார்க்கலானேன்.

அவன் அவ்விதம் வருவதைக் கண்டு,—எனது சரீரத்தில் ஆசை யற்றவளாயினும்—மிகவும் பயந்து, ' ஒகோ! கஷ்டம் வந்து நேரிட் டதே! இவன் உன்மாதத்துடன் வந்து, கரத்தினால் என்னைப் பரிசிப்பா னாகில், அப்பொழுது பாவத்தினாற் பாழ்த்துப்போன இவ்வுடலை யான் விட்டுவிடத்தான் வேண்டும்! அப்படியானால், நெடுநாட்களாய்ப் புண்ட ரீக தேவனை மீண்டும் பார்க்கவேண்டுமென்னும் ஆசையினால் இவ்வுயிர் தரித்தலை—இஃது துயரந்தருவதாயினும்—அங்கிகரித்தது எனக்கு உபயோகமற்றதாகின்றதே!' என மனதில் எண்ணமிடலாயினேன். அவ னும் இங்ஙனம் சிந்தித்தவண்ணமிருக்கும் என்றனிடம் நெருங்கி, 'சந் திரமுகி! மன்மதனைத் துணையாகக்கொண்டு இம்மதியானவன் என்னை மாய்க்க முயலுகின்றான் ! ஆதலால் இதோ அடைக்கலம் புகுந்தேன்! நான் நாதனற்றவன்! வேறு கதியில்லாதவன்! வெகு தீனன்! பரிஹா ரந்தேடத் திறமை யொழிந்தவன்! எனதுயிர் உன் வசத்திலிருக்கின் றது! உன்னைக்கொண்டு என்னை நீ காப்பாற்றுவாயாக! அடைக்கலம் புகுந்தோரைக் காக்கவேண்டுவது தபஸ்விகளுக்கும் தர்மமே! ஆதலால் தன்னைத் தந்து என்றனை நீ இரக்ஷிக்காவிடில், இந்த அனங்கனாலும் அம்புலியாலும் அழிக்கப்பட்டுப்போவேன்!' என்றவாறுரைக்கலாயினன். நானும் அதுகேட்டு, ஆவேசம் கொண்டவளைப்போல், தன்னைத்தான் மறந்தவளாய், மிகவும் சினங்கொண்டுக் குரூரமான சொற்களால் அவனை இவ்வாறுச் சொல்லலுற்றேன்:—'ஆ! அடாபாவி!, என்னை நோக்கி இங்

னம் உரைக்கும் உனது தலையிற் பேரிடி விழாதோ? நாவும் பல்லா யிரமாய்ப் பிளவுறாதோ? ஸகல லோகத்தின் நன்மை தீமைகளுக்கும் ஸாக்ஷிபூதங்களான பஞ்சமஹாபூதங்களும் உனது இவ்வுடலில் இல்லவே யில்லையென யான் எண்ணுகின்றேன்; ஆகையினாற்றான், இவ்விதம் கூறும் உன்றனை அக்கினியும் பஸ்மமாக்கவில்லை; வாயுவும் வலிய இழுத்துப் போகாம லிருக்கின்றது; தண்ணீரும் அலசி நீராக்க வில்லை; பூமியும் பாதாளதலத்தினுட் புகச்செய்ததில்லை; ஆகாய மாகிலும் இந்தக்ஷணமே தன் ஸ்வரூபத்திற்குத் தகுந்த வண்ணம் உன்னையும் ஆக்காமலிருக்கின்றது. முகத்தில் இராகத்தைக் * காட்டி, தனது பக்ஷபாதத்தில் மாத்திரம் பிரவ்ருத்தி யுடன்கூடியவாறு ‡, இடங்களின் தன்மையை யுணராமற் கிளியைப்போல் இங்ஙனம் பேசுவதற்கு எப்பாழுந்தைவம் உனக்குக் கற்பித்ததோ, அத்தைவம் உன்றனை அப்பிறப்பிற்றனே ஏன் தள்ளவில்லையோ? இதனால், நீ இவ் விதம் பிதற்றியும், 'இவன் பரிஹாஸத்திற்குப் பாத்திரமானவன்' எனக் கருதி, கோபம் எனக்குண்டாகவில்லை. உனது சொல்லைக் கேட்டு, யான் சோகங்கொண்டு, எப்படியானால் தன் பேச்சுக்கு ஏற்ற பிறப்பைப் பெற்றவனாய், இனி எம்மைப்போன்றவரை இச்சிக்காம லிருப்பாயோ, அவ்விதமாய் உனக்கு இவ்விதமுறையை ஏற்படுத்துகின்றேன்.' என மொழிந்து, சந்திரனுக்கு எதிர்முகமாயிருந்து, கைகூப்பியவளாய், "பகவன்! பரமேச்வர! லோகங்களைக் காத்தருளுபவரே! என் நாதனான புண்டரீகனைத் தரிசித்தது முதல் நான் மனத்தினாலும் மற்றொரு மனி தனை ஸ்மரித்ததில்லை யென்பது உண்மையாகில், தவறுதலாகக் காம வெறிகொண்ட இவன், எனது ஸத்தியமான இவ்வசனத்தினால் நான் கூறிய பிறப்பிற்றனே போய் விழக்கடவன்" என்றேன். யான் இவ் வாறு சொல்லிமுடித்ததும், அவனும், உடனே வேரறுபட்ட விருக்ஷம் போல் நினைவற்று நிலத்தின்மீது வீழ்ந்தனன். இவன் உயிர் துறந்த தும், கூக்குரலிட்டுக் கதறிய அவனது பரிஜனத்தினிட மிருந்தே

---

* இராகம்=ஆசை, சிவப்பு நிறம். [தனது முகத்திற் காதலை யுண்டு பண்ணி—அல்லது வாயைவிட்டுக் காதலைக்கூறுமாறு செய்து; கிளிக்கு, முகத் தில்=மூக்கில் சிவப்புநிறத்தை யுண்டுபண்ணி எனப்பொருள்.]

‡ பக்ஷபாதம்=பிரீதி, சிறகுகளை அசைத்தல். [தனது நன்மையில் மட்டும் அன்புவைத்துப்பிரவ்ருத்தித்தல்; தன்சிறகுகளை அசைத்தே பறந்து செல்லுதல்.]

'இவன், மேன்மைதங்கிய நமது மித்திரன்'எனக் கேள்வியுறலானேன்." என்று கூறி வெட்கத்தினல் தலைகுனிந்தவண்ணம், பேசாமலே கண்ணீரை அபரிமிதமாய்ச் சொரிந்து நிலத்தை நனைத்தனள்.

சந்திராபீடனே, அதுகேட்டு "அம்மணி! நீங்கள் பெருமுயற்சி கொண்டும், புண்ணியம் பண்ணுதவனுன யான் இஜ்ஜன்மத்திற் காதம்பரீதேவியின் பாதங்களை உபசரிக்கும் இன்பத்தைப் பெறக்கூடவில்லை; ஆதலால் மறுமையிலேனும் தாம் அதை ஸம்பாதித்தளிக்க வேண்டுகிறேன்."என்று கூறியவாறிருக்க, இயல்பாகவே வெகு கோமளமான அவனது இருதயம் பிளவுற்றது. பின்னர், தரளிகையானவள், மஹாச்வேதையின் சரீரத்தை விட்டுவிட்டு, வெகுபரபரப்புடன் சந்திராபீடனது சரீரத்தைத் தாங்கியவளாய், 'இராஜகுமாரி! வெட்கமுறுகிறுயென்னை? தேவன் சந்திராபீடன் ஏதோ வேறு மாதிரியாய் இருக்கின்ருர் பார்! இவரது கழுத்தானது, சாய்ந்து ஒடிந்ததுபோல் தலையைத் தாங்கக் கூடாததாய்விட்டதே! அசைத்தாலும் சிறிதும் நினைவுபெறவில்லையே! இருதயம் அசைந்து மூச்சுவிடுவதையும் காணேன்! ஆ! தேவ! சந்திரவடிவம் வாய்ந்த சந்திராபீட! காதம்பரீப்ரிய! உமது சரீரத்தைத் துறந்து நீர் எவ்விடம் செல்லுகின்றீர்?' எனக் கதற, மஹாச்வேதையும் குறுக்காகச் சாய்ந்திருக்கும் சந்திராபீடனது முகத்தைக் கண்கொட்டாமல் நோக்கியவாறு, அசைவற்றவளாய், 'ஆ! அடிபாவி! துஷ்ட தாபஸி! நீ என்ன செய்தாயடி! உலகத்துப் பீடைகளைப் போக்கும் தாராபீடனது குலம் அழிந்துவிட்டதே! எங்களுடன் கூட பிரஜைகளும் நாதனற்றவராய் விட்டனரே! இனி இலக்ஷ்மியும் எவரது முகத்தைக் கண்ணுேக்குவள்! அவனிக்கும் அவலம்பநம் யாவர்? ஒ! கதையாகக் கூறுவதற்கு மாத்திரமா பாத்திரமானீர்! நீர் வெகு தீரராயிருந்தும் பயந்தவரைப்போல் துயரத்தினல் இருதயம் பிளவுபட்டவராய்ப் போனீரே! தேவ! திருவருள்புரியும்! பிராணனைத் தரித்துக்கொள்ளும்! அனைவரையும் துறந்து நீர் தனியாக எவ்விடம் செல்லுகிறீர்?' எனப் புலம்ப, இந்திராயுதமும் சந்திராபீடனது முகந்தனில் திருஷ்டி வைத்து, குதிரைத் தன்மையை விட்டுவிடப் போவதுபோல் ஏங்கியும் ஓங்கியும் கனைத்தொலிக்க, காதம்பரியும் சந்திராபீடன் வருவதாகப் பத்திரலேகைக் கூறக்கேட்டு, தாய் தந்தையரது முன்னிலையில் மஹாச்வேதையைக் காணப்போவதாய்ச் சாக்கிட்டு,

சிருங்காரவேஷம் பூண்டு, கேயூரகன் முன் சென்று வழிகாட்ட, பத்திரலேகையின் கரத்தைப் பற்றிக்கொண்டு, மதலேகையுடன் ஸல்லாபம் செய்தவாறு, வழிநடக்கும் வருத்தத்தையும் அறியாதவளாய், சந்திராபீடனது தரிசனத்தின்பொருட்டுத் தவித்துக்கொண்டு வந்து சேர்ந்தனள்.

வந்ததும், அமுதத்தைக் கடைந்தெடுத்த கடலைப்போலவும், பூந்தாது களைந்து நின்ற பங்கயம் போலவும் உயிர் துறந்திருக்கும் சந்திராபீடனைக் கண்ணுற்றனள். அவனைப் பார்த்து, திடீரென 'ஆ! ஆ! இஃதென்ன!' எனத் தலைகவிழ்ந்த வண்ணம் தரையில் விழ, மதலேகையும் மிகக் கதறியழுது, வெகு பிரயாஸத்துடன் அவளைத் தாங்கிக் கொண்டனள். பத்திரலேகையும் காதம்பரியின் கரத்தை விட்டு, நினைவு தடுமாறி நிலந்தனில் வீழ்ந்தனள். வெகு நேரம் சென்றபின் காதம்பரியானவள், நினைவுவந்தும், அங்ஙனமே நிலைநின்ற திருஷ்டியுடன் நிச்சலமாயிருந்து, முயற்சியற்று, மூச்சுவிடுதலையும் மறந்து, சந்திராபீடனது வதனத்திற் கண்வைத்தவாறு, மாதாது தன்மைக்கு மாறான மனத்துடன் இருந்தனள். அவள் அவ்வாறிருப்பதை நோக்கி, மதலேகைக் கதறியழுது, கால்களில் வீழ்ந்து கூறியதாவது:—'என் அருமைத் தோழி! அருள்புரிந்து அளவற்ற இத்துயரத்தைக் கூவியழுது வெளிப்படுத்துவாயாக! கண்ணீர் சொரிந்து இத்துயரத்தை வெளிவிடாமலிருக்கின், இனிதும் கோமளமுமான உனது இருதயம் (துயரத்தின்) பாரத்தினாற் பீடிக்கப்பட்டு, தடாகத்தைப்போல் தானே பல்லாயிரமாகப் பிளந்துவிடுமே! மதிராதேவியையும், சித்திரரததேவனையும் அபேக்ஷித்து நீ உயிருடன் இருக்க வேண்டும். இருகுலமும் உன்னைவிட்டு இருக்கமாட்டாது.' இங்ஙனம் மொழியும் மதலேகையை நோக்கி நகைத்து, காதம்பரியும் கூறலாயினள்.—'அடி பேதாய்! வஜ்ரம்போல் வெகு வன்மையான எனது இப்பாழும் இருதயம் பிளவு படுவதென்பதேது! இவ்விதம் பார்த்தும், இஃது ஆயிரக்கணக்காகப் பிளவுறவில்லையே! மேலும் தாய்தந்தையர், தான், உறவினர், ஊழியர், தோழிகள் என்னும் இவ்வனைத்தும் உயிருடன் இருப்பவளுக்கல்லவோ? மரிக்கப்போகிறவளான யான் பிராணனுக் கொப்பான பிரியதமனது இச்சரீரத்தை எவ்வகையிலோ அடைந்தேன்! இத்தேஹம் பிழைத்திருந்தாற் கூடிக்

களித்தும், உயிர்துறந்திருக்கின் உடன்கட்டை யேறியும் இருவகை யிலும் எல்லாத் துயரங்களையும் துறந்து நிற்பேன்! ஆதலால் இப் பிரபுவந்து என்பொருட்டுப் பிராணனையும் பறிகொடுத்து, என்றனை மேன்மைப்படுத்தியிருக்க, அத்தகைய என்றனைக் கேவலம் கண்ணீர் சொரிந்து இழிவாகச்செய்துகொண்டு பாழாக்கிக் கொள்வதெதற்கு? எனது நாதன் விண்ணுலகம் ஏகுவதற்கிருக்க, யான் அழுது அமங் கலத்தை யுண்டாக்குவது எங்ஙனம்? அவருடைய அடிப்பொடிகளைப் போல் அவரை அனுஸரித்துப்போக முயன்றவளாயிருப்பதால், ஆனந் தம் அனுபவிக்கவேண்டியிருக்க, யான் அழுவானேன்? என் துயரம் இத்தகையதா? இப்பொழுது எனக்குத் துயரமனைத்தும் தூரவில கிப்போயினது. இத்தருணத்தில் எனக்கு மரணந்தான் உயிர்வாழ்க்கை; உயிர்வாழ்தலே மரணம். ஆகையால் எனதிடம் அன்பிருக்குமானல், என் விருப்பம் அல்லது நன்மையைச் செய்ய விரும்புவாயாயின், எனதிடம் ஸ்நேஹப்பற்றுள்ள பிரியஸகியான நீ—என் தாய் தந்தையர் சோகத்தி னுல் எங்ஙனம் உயிர் துறவாமலிருப்பரோ, எப்படியானுல் அவர் எனதி டம் கோரிய கோரிக்கையை உனதிடம் நிறைவேற்றுவரோ, எவ்வகை யிற் பரலோகம் சென்ற என்றனக்குத் தர்ப்பணஜலம் அளிக்க உனதி டம் ஓர் குமாரன் உற்பத்தியாவனோ,—அவ்வாறு செய்ய முயற்சிப்பா யாக. மேலும் தோழிமார் அல்லது பரிஜனமாகிலும் என்னை நினைக் காமலிருக்கும் வண்ணமும், (யான் இல்லாது) பாழடைந்திருக்கும் அக த்தைப் பார்த்துத் திசைகளை நோக்கி அவர் செல்லாமலிருக்கும் விதமா கவும் நீ செய்யவேண்டும். எனது மாளிகையின் முற்றத்தின்கண் என் மைந்தனெனத் தகும் மாங்கன்றுக்குக் குருக்கத்திக் கொடியுடன் மண மங்களத்தை நான் செய்வதாக நினைத்து நீயே நிறைவேற்றுவாயாக. என் வாஸகிருஹத்தினுள் தலைமாட்டில் வைத்திருக்கும் காமதேவன் படத்தைக் கிழித்துப்போடவேண்டும். காளிந்தி யென்னும் அவ்வே ழைப்பெண் கிளிக்கும் பரிஹாஸனென்னும் அவ்வாண் கிளிக்கும் கூட் டிலடைபட்டிருக்கும் வருத்தத்தை விலக்கிவிடவும். துறவறம்பூண்ட எவரேனும் ஓர் முனிவருக்குக் கிரீடாபர்வதத்தைக் கொடுத்துவிடு. எனது சரீரத்திற்குபயோகமான மற்றப்பொருட்களையும் அந்தணருக்கு அர்ப்பணம் செய். மற்றும் உன்றனக்குப் பிரியமானது எதுவோ, அதையும் நீ எடுத்துக்கொள்ளலாம். நானே, என் நாதனது கண்டத்

தைக் கட்டிக்கொண்டு, மதியின் கதிரொளிகள் எரித்து மிகுந்த எனது இவ்வுடலைச் சிதையிற்பற்றிய, ஜ்வாலைகளால் ஓங்கி ஜ்வலிக்கும் மாக னலில் மாய்த்துக்கொள்வேன்!' என மொழிந்தவாறு மஹாச்வேதை யின் கழுத்தைத் தழுவிக்கொண்டு விகாரமடையா வதனத்துடன் 'என் அருமைத்தோழி ! உனக்காகிலும் ஓர்வகையான பிரத்தியாசையுண்டு; அதனுல், மீண்டும் சேர்க்கையுண்டாகுமென எதிர்பார்த்தவண்ணம்,ஒவ் வொரு க்ஷணமும் மரணத்துக்கும் மேலான துன்பங்களை அனுபவித்த வளாய் வெட்கமுறுதவகையிற் பிராணனை வைத்திருக்கின்றனை. அகில விதத்திலும் ஆசை யொழிந்தவளான எனக்கோ அதுவுமில்லை. ஆதலால் மறுபடியும் மறுமையிற் கூடும்பொருட்டு அன்பார்ந்ததோழியான உன்ற னைக் கேட்டுக்கொள்கின்றேன்.' எனப் பகர்ந்து, சந்திராபீடனது சர ணங்களை வியர்வையாகும் அமுதத்தை வடிக்கும் கரங்களால் எடுத்து, மடிதனில் அமர்த்திக்கொண்டனள். பின்னர், அவள் கரங்கொண்டு பரிசித்ததால் மூச்சுவிடுவதுபோல் தோற்றிய சந்திராபீடனது சரீரத்திலிருந்து திடீரென அவ்விடமனைத்தையும் பனிமயமாய் ஆக்குவதுபோல் நன்கு விளங்காத வகையில் இந்துவுக்கேற்ப வெண் மையான ஜோதியைப்போல் ஓர் உருவம் கிளம்பியது. அப் பால், ஆகாயத்தில் அமுதத்தைப் பெருக்குவது போல் அசரீரியான வாக்கொன்று இங்ஙனம் கேள்வியுறப் படலாயினது:— 'வத்ஸே! மஹாச்வேதே ! மீண்டும் உனக்கு நானே ஆறுதல் கூறவேண்டி யிருக்கின்றதே! உனது புண்டரீகனுடைய அச்சரீரம், எனது லோகத்தி லேயே என் தேஜஸ்ஸினுல் குளிரச்செய்து ஸுகமான நிலைமையில் வைத்துக் காக்கப்பட்டதாய், மறுபடியும் உன்னைக் கூடுவதற்கு ஆயத்தமாயிருக்கின்றது. எனது வேறோர் தேஜோமயமானதும், இயற் கையிலேயே அழிவற்றதும், விசேஷமாய்க் காதம்பரியின் இக்கரத்தின் பரிசத்தினுல் குளிரச்செய்து திருப்தி பண்ணப்பட்டதுமான சந்திரா பீட சரீரமானது சாபதோஷத்திலிருந்து விடுபட்டிருக்கினும், தனது ஆத்மாவைக்கொண்டு கூடுபாய்ந்த யோகியின் உடல்போல், சாபம் நீங்குமளவும் உங்கள் இருவரது நம்பிக்கையின் பொருட்டு இவ்விடத் திற்றுனே இருக்கட்டும்; உயிர் வரும்வரையில் பெருமுயற்சியுடன் இதைப் பரிபாலிக்க வேண்டும்.' என்று.

பத்திரலேகையும் அத்தகைய ஜோதியின் அப்பரிசத்தினுல்

நினைவுபெற்று, எழுந்து, ஏதோ ஆவேசமுண்டவளைப்போல் விரைவுடன் ஓடி, பரிவர்த்தகனது கையிலிருந்து இந்திராயுதத்தை வலித்திழுத்துக்கொண்டு, அத்துடன் கூடவே தன்னை அச்சோத ஸரஸ்ஸில் வீழ்த்திக்கொண்டனள்.

பின்னர், அவ்விருவரும் மூழ்கியவுடனே, அப்பொய்கையின் தண்ணீரிலிருந்து—ஆங்குள்ள பாசிக் கொத்துகளைப் போன்ற சடைமுடிகளைச் சிரந்தனில் தாங்கிக்கொண்டு, திலைடைந்த உருவத்தையுடையவனான தாபஸகுமாரன் ஒருவன் திடீரெனக் கிளம்பினன். மேலெழுந்தவனாய், தூரத்திலிருந்தவாறே பார்த்துக்கொண்டிருப்பவளான மஹாச்வேதைக்கு அருகில் வந்து, துயரத்தினால் நா தழுதழுக்க, ‘கந்தர்வராஜபுத்திரி! மறு ஜன்மமெடுத்துத் திரும்பிவந்தவன் போன்ற நான் உனது நினைவுக்கு வருகின்றேனோ இல்லையோ?’ எனக் கூறினன். அவள் இவ்வாறு வினவப்பட்டதும், இன்ப துன்பங்களுக்கு இடையில் இருந்தவளாய், பரபரப்புடன் எழுந்து, பாதங்களிற் பணிந்து, இவ்விதம் மறுமொழி கூர்ந்தனள்:— ‘மேன்மை தங்கிய கபிஞ்ஜலரே! யான் உம்மையும் அறிய முடியாதவாறு அவ்வளவு புண்ணியமும் பண்ணாதவளல்லள்! ஆகிலும், தன்னைத் தான் அறிய வல்லமையற்ற இப்பேதையின் விஷயத்தில் இத்தகையக் கொள்கை உண்டாவதும் உசிதமே! ஏனெனில், யான் அஞ்ஞானத்தினால் ஏதும் அறியாதவளாய், புண்டரீகதேவன் விண்ணுலகமேகியும், தனித்துப் பிழைத்திருக்கின்றேனல்லவா? ஆகையினாற் கூறுங்கள்:— இவரை எடுத்தேகியவர் யாவர்? இவ்வளவு காலமாய் செய்தியையும் வந்து செப்பாமலிருக்குமாறு, உமக்கு நேர்ந்ததுதான் யாது? நாதனான புண்டரீகனை விட்டு, நீர் தனித்து வந்ததற்குக் காரணம் என்னோ?’ என்றதற்கு, அவனுரைத்த மறுமொழியாவது:—‘கந்தர்வராஜபுத்திரி! கேட்பாயாக; யான், நீ கதறிப் புலம்பிக்கொண்டிருக்கையிலும், உன்னைத் தனித்துவிட்டு, அத்தேவபுருடனைப் பின்பற்றியே விரைவுடன் எழும்பிச் சென்றேன். அவன் எனக்கு மறுமொழி கூறாமலே, தாரகைத் திரளையுந் தாண்டி, சந்திரலோக மடைந்தனன். ஆங்கு, மஹோதயம் என்கிற ஸபையின்கண் சந்திரகாந்தசிலாமயமான பெரியதோர் மஞ்சத்தின்மீது புண்டரீகனது அச்சரீரத்தை அமர்த்தி, பிறகு என்றனை நோக்கி இங்ஙனம் பகர்ந்தனன்:—“கபிஞ்ஜல! என்றனைச் சந்திர

னென அறிவாயாக! உனது அருமைத்தோழனை இவன், காமனது குற்றத்தினல் உயிர் துறக்க, குற்றமற்றவனை என்றனை நோக்கி—ஓ! துராத்மாவான பாழும் இந்துவே! என்னை உனது கதிரொளிகளைக் கொண்டு தவிக்கச்செய்து, காதலையும் ஏற்படுத்தி, கடைசியில் என் மனதுக் கிசைந்தவளைக் கூடுவதி லுண்டாகும் இன்பத்தைப் பெறவிடாமலே எங்ஙனம் எனது பிராணனைப் போக்கினையோ, அங்ஙனமே நீயும் கர்ம பூமியான இப் பாரதவருஷந்தனில் ஜன்மஜன்மத்திலும் மனதுக் கின்பமான மனைட்டியுடன் கூடிக் களிக்காமலே, மிகவும் உக்கிரமான மனவேதனையால் உள்ளம் தவிக்க, உயிரைவிடப்போகின்றனை!—எனச்சபித்தனன். நானே, இவனது அச்சாபமாகும் அனலால் உடனே எரிக்கப்பெற்றவன்போல்—இஃதென்ன! தன்னிடம் தோஷமிருக்க, இவன் பகுத்தறிவில்லாதவனுய், குற்றமற்றவனை என்றனைச்சபித்தானே!—எனச் சினங்கொண்டவனுய், 'நீயும் எனக்கேற்றவண்ணம் இன்ப துன்பங்களை யனுபவிக்கப் போகின்றனை!' என்று அவனுக்குப் பிரதிசாபம் தந்தேன். பொறுமை யடங்கியதும், பகுத்தறிவுபெற்ற மதியினல் ஆலோசித்து, மஹாச்வேதைக்கும் இவனுக்கும் ஏற்பட்டிருக்கும் பற்றுதலை அறிந்துகொண்டேன். வத்ஸையான மஹாச்வேதையோ, என் கிரணங்களிலிருந்து ஆவிர்ப்பவித்த அப்ஸரஸுக்களின் குலத்தில் தோன்றிய கௌரியினிடம் உண்டானவள். அவளும் இவனைக் கணவனகச் சுயமாகவே வரித்துக்கொண்டனள். இவனும் தனக்குத் தானே செய்துகொண்ட குற்றத்தினல் என்னுடன் மானிடலோகத்தில் அவசியம் இருமுறை ஜனிக்கவேண்டும். இல்லையேல், 'ஜன்ம ஜன்மத்திலும்' என்று இருமுறை மொழிந்ததே பயனுள்ளதாகமாட்டாது. ஆனதுபற்றி, சாபதோஷம் நீங்கும்வரையிலும், ஆத்மா விலகிப்போனதால், இச்சரீரத்திற்கு அழிவுநேரிடாமல் இருக்கவேண்டுமென நினைத்து, இதையெடுத்து வந்தேன். வத்ஸையான மஹாச்வேதைக்கும் தேறுதல் கூறினேன். ஆதலால் சாபநிவிருத்தி யுண்டாகுமளவும் இத்தேஹமானது எனது தேஜஸ்ஸினல் நன்கு குளிர்ச்சியாகச் சீர்கெடாவண்ணம் சுகமாய் வைக்கப்பட்டிருக்கும். இப்பொழுது நீ சென்று, இச்செய்தியை ச்வேதகேது மாமுனிவரிடம் விண்ணப்பம் செய்வாயாக. அவர் மஹாமஹிமை வாய்ந்தவராதலால், ஒருகால் இதற்கு ஏதேனும் பரிஹாரம் பண்ணக்கூடும்." என்றுரைத்து, என்றனை விடுத்தனன்.

நானும் நண்பனை விட்டுப் பிரிந்து, உக்கிரமான துயரவெழுச்சியினால் ஒன்றும் தோன்றாதவனாய், விண்ணவரேகும் வழியில் விரைவுடன் ஓடுகையில், கடுங்கோபக்காரனான ஓர் தேவபுருடனைத் தாண்டிச் சென்றேன். அவன் என்னை எரித்திடுபவன்போல் நோக்கி, 'துராத்மாவே! இவ்வளவு மிக விசாலமான விண்ணவரது வழியிலும் நீ குதிரையைப்போல முரட்டுத் தனமாய் ஓடி, என்றனைத் தடையின்றித் தாண்டினையாதலால், நீ குதிரையாகவே மானிடலோகத்திற் போய் பிறக்கக் கடவாயாக.' என்று சபித்தனன். நானோ, இமைகளிற் கண்ணீர்வந்து ததும்பக் கரங்குவித்து, 'ஸ்வாமி! யான் தோழனது துயரத்தினால் உம்மைத் தாண்டிவிட்டேனன்றி, அலக்ஷியத்தினால் அல்ல. ஆதலால் அருள்புரிந்து, இச்சாபத்தை உடனே உபஸம்ஹாரம் பண்ண வேண்டுகிறேன்.' என்றேன். அவனோ, என்றனை நோக்கி மீளவும், 'யான் கூறியது மாறக் கூடியதன்று. ஆகையால் இதை உனக்குச் செய்கின்றேன். எவனுக்கு நீ வாஹனமாகப் போகின்றனையோ, அவன் இறக்கும்போதே, நீயும் நீரில் மூழ்கி, சாபம் ஒழிந்தவனாய் விடுவாய்.' என மொழிய, யான் மறுபடியும் அவனைப் பார்த்து, 'ஐயன்மீர்! இப்படியாகில், பின்னர் ஒரு விண்ணப்பம் பண்ணிக்கொள்கின்றேன். எனது பிரியஸகாவான அப்புண்டரீகனும், சந்திரனும் சாபதோஷத்தினால் மானிடலோகத்திலேயே பிறக்கவேண்டியிருக்கின்றது; குதிரைப் பிறப்பினும் எனதன்பார்ந்த நண்பனைவிட்டுப் பிரியாமல் அவனுடன் கூடவே காலங்கழிக்குமாறு, மேன்மைதங்கிய தாங்கள், திவ்யதிருஷ்டியினால் நோக்கி அவ்வளவாவது அருள்புரியவேண்டும்.' என வேண்டிக் கொண்டேன். பிறகு அவன், முகூர்த்தநேரம்போல் தியானம் செய்து, மீண்டும், 'உஜ்ஜயினியின்கண் மக்கட்பேறு வேண்டித் தவம்புரியும் தாராபீடன் என்னும் மன்னவனுக்கு மதியானவன் முக்கியமான முகாந்தரங்களை முன்னிட்டு மகனாகப் பிறப்பான்; உன் தோழனான புண்டரீகனும், அவனது அமைச்சனாகிய சுகநாஸனிடம் ஜனிக்கப்போகின்றான். நீயும் அப்பேருபகாரம் புரிந்த சந்திரரூபியான இராஜபுத்திரனுக்கே வாஹனமாகப் போகின்றனை.' என்றனன். நானும், அங்ஙனம் மொழிந்து முடிந்தவுடனே, கீழிருந்த ஆழிதனில் விழுந்தேன். அதிலிருந்து குதிரையாக மாறியே வெளிக்கிளம்பலானேன். குதிரையாகவிருந்தும், என்றனக்கு முந்திய நினைவுமட்டும் நீங்கியதில்லை."

இது கேட்டு மஹாச்வேதை, 'ஹா நாத! புண்டரீக! மறு பிறப்பினும் எனது நேசத்தை மறக்காதவரே! நீர் பரலோகம் போயிருந்தும் உமக்கு நானே இராக்ஷஸியைப்போல் விநாசத்தின்பொருட்டு ஏற்பட்டேனே! இப்பாழும் நான்முகன் என்னைப் படைத்ததற்கும், என்றனக்கு நீண்டகாலம் ஆயுளை யளித்ததற்கும் உம்மை அடிக்கடிக் கொல்லுதலே பயனுய் முடிந்ததே!' என்றவாறு ஏங்கிப் புலம்பலானாள். மறுபடியும் கபிஞ்ஜலன் அவளை நோக்கி மனவிரக்கங்கொண்டு, 'கந்தர்வராஜ புத்திரி! நிந்திக்கத் தகாத உன்றனை நீ நிந்தைச் சொற்களால் இவ்விதம் குறைகூறக் கூடிய குற்றம் இதில் உன்றனிடம் இருப்பது யாது? சாபதோஷத்தினல் உங்களிருவருக்கும் இத்துயரம் நேர்ந்த வகையையும் யான் உரைத்திட்டேன். நீங்கள் இருவரும் சந்திரனது வாக்கையும் செவியுற்றிருக்கின்றீர்கள். இருவருடைய நன்மையின்பொருட்டே, நீ அங்கிகரித்தபடியே, நோன்பைக் கைப்பற்றுவதற்குத் தகுந்த விதமாய் அத்தவத்தையே, தொடர்ந்து செய்வாயாக. முறைதவருது அனுஷ்டித்த தவத்திற்கு அஸாத்தியமென்பது ஏதுமிலது.' என்று போதனை செய்தனன்.

மஹாச்வேதைக்கு மனத்துயரமடங்கியதும், காதம்பரீ, கபிஞ்ஜலனை நோக்கி 'ஸ்வாமி! பத்திரலேகையும் தாமுமாக இக்கயத்தின் தண்ணீரிற் பிரவேசித்தீர்களே; ஆதலால், அப்பத்திரலேகைக்கு என்ன நேர்ந்ததென்பதை மேன்மைதங்கிய தாமே கருணைபுரிந்து கூறுவீராக.' என வினவினள். அவன் அதற்கு இங்ஙனம் மறுமொழி கூர்ந்தனன்:—'இராஜபுத்திரி! யான் தண்ணீரில் வீழ்ந்தபின் அச்செய்தி யேதையுமே அறியேன். ஆகையால், இப்பொழுது சந்திராபீடனுக்கு ஜன்மம் எவ்விடத்தில்? பத்திரலேகையின் செய்தியென்னை?—என்கிற இவ்விருத்தாந்தத்தை எவ்விதத்திலும் அறிவதற்காக மூவுலகங்களையும் முன்புறத்தில் இருப்பதுபோற் காணவல்லவரும் எமது பிதாவுமான ச்வேதகேதுமாமுனிவரின் பாதமூலத்தை நோக்கி 'யான் இதோ போகின்றேன்.' என மொழிந்தவண்ணமாகவே, வானந்தனில் எழும்பிச் சென்றான்.

அவன் போன பின்பு, காதம்பரீ, மஹாச்வேதையைப் பார்த்து, 'பிரியஸகி! பெரும் பிரபாவசாலியான பிரம்மதேவன், என்னை உன்றனுடன் துல்லியமான துக்கத்தை யுடையவளாகச் செய்தது எனக்குத்

துன்பமல்ல. இப்பொழுதுதான் யான் தலைநிமிர்ந்து பார்க்கக்கூடியவளாயினேன். இப்பொழுது உயிர் துறப்பது, அல்லது பிழைத்திருப்பதென்னும் எதுவுமே எனக்கு வருத்தத்தின்பொருட்டல்ல. ஆதலால், வேறெவரை யான் வினவப் போகின்றேன்? உபதேசிப்பதற்கேனும் வேறெவர் இருக்கின்றனர்? இவ்வாறு நிகழ்ந்திருக்கையில் செய்யவேண்டுவது யாதென, எனதருமைத் தோழியான நீ உபதேசிப்பாயாக! யான் சுயமாக எதையுமே அறியேன். எதைச் செய்தால் நன்மையாகும்?' எனக் கூற, மஹாச்வேதை அவளை நோக்கி மறுமொழி கூர்ந்ததாவது:—'அன்பார்ந்த தோழி! இதிற் கேள்வியென்ன? உபதேசிப்பதுதான் யாது? மனதுக்கின்பமான மணாளனைக் கூடுவதில் மறுக்க முடியாமலிருக்கும் இப்பிரத்தியாசையானது எதைச் செய்யத் தூண்டுகிறதோ, அதையேதான் நிறைவேற்ற வேண்டும். உனது நம்பிக்கைக்கு நல்லிடமான இச்சந்திராபீடனது சரீரம் உனது மடியிலேயே இருக்க, நீ வேறென்ன செய்யப் போகின்றனை? அஃதில்லையேல், அப்பொழுதுச் சிந்தையுற வேண்டியிருக்கும். இச்சரீரம் சீர்கெடாமலிருக்குமளவினும், அதற்குப் பணிவிடை செய்வதை விடுத்து, பண்ணவேண்டிய பணிதான் வேறு யாது? நன்மை பெறுவதன் நிமித்தம் பிரத்தியக்ஷமில்லாத தைவங்களின் மண், மரம், சிலை இவற்றாலாகிய பதுமைகளையுமல்லவா பூஜை முதலியவற்றாற் கொண்டாடி யுபசரிக்கின்றனர்! அவ்வாறிருக்க, ஆராதிக்கப்படாமலே அருள் புரியும் பிரத்தியக்ஷ தைவமான சந்திராபீடனென்னும் நாமதேயங்கொண்டு மறைந்திருக்கும் சந்திரனது மூர்த்திக்குப் பணிவிடை செய்வதிற் கேட்கவும் வேண்டுமோ?'

மஹாச்வேதை இங்ஙனம் மொழிய, காதம்பரீ, துன்பத்தை அனுபவிக்கத் தகாத அச்சந்திராபீடனது சரீரத்தைச் சற்றும் வருத்தப்படுத்தாது, மற்றொரு கற்பாறையின்கண் மெல்லென எடுத்துப்போய் அமர்த்தி, தான் மங்கலத்திற்காக மட்டும் காந்தனிற் கங்கணமொன்றணிந்து, நீராடி தூய்மையாயிருந்து, தைவத்தைத் தகுந்தவாறு தொழுது, அங்ஙனமே சந்திராபீடனது சரணங்களைத் தனது மடிதனில் ஏந்திக்கொண்டு, இராஜகுமாருடனும் தனது பரிஜனத்தோடும் பட்டினியாகவே அப்பகற்பொழுதைக் கழித்தனள்.

அவள் பகலைப் போக்கியவாறே, கனத்த கார்முகில்களாற் கவரப்

பெற்றுப்பயங்கரமான அவ்விரவையும் கண்விழித்தவண்ணம்உட்கார்ந்து கொண்டே நொடிப்பொழுதைபோற் போக்கினள். விடியற்காலத்திற் கண்மலர்ந்து, சித்திரத்தில் இருப்பதுபோல் தோற்றும் அச்சந்திரா பீடனது சரீரத்தைக் கண்டு, மெள்ள மெள்ள காத்தினுற் பரிசித்து, பக் கத்திலிருந்த மதலேகையை நோக்கி 'பிரியஸகி! மதலேகே! இத்தேஹம் முன்னிருந்ததுபோலவே இருப்பதாய் எனக்குத் தோற்றுகிறது; இது இச்சையின் இயல்பினுலோ, அல்லது விகாரமற்றிருப்பதினுற்ருே யான் அறிகிலேன்! ஆதலால் நீயும் ஆதரவுடன் கண்ணுேக்குவா யாக.' என மொழிய, மதலேகையும் அவளை நோக்கி மறுமொழி கூர்ந்த தாவது:—'எனதன்பார்ந்த தோழி! இதிற் பார்க்கவேண்டுவதென்னே? அந்தராத்மா பிரிந்திருப்பதால், இச்சரீரம் அசைவற்றுமட்டும் இருக் கின்றது. மற்றவகையில் இம்முகவொளி மழுங்காது அவ்விதமேயுளது. இயற்கையான இலாவண்ணியத்தினுலயைந்த ஸௌகுமாரத் தன்மை யிழக்காதவையான இவ்வவயவங்களுடைய அழகும் அத்தகையதே. ஆனதுபற்றி அவ்வாகாயவாணியும்,கபிஞ்ஜலன்கூறிய சாப விருத்தாந்த மும் உண்மையானவையெனவே யான் ஊஹிக்கின்றேன்.' என்று மத லேகை மொழிய, மகிழ்ச்சியினுல் மனம் பூரித்தவளான காதம்பரியான வள் மஹாச்வேதைக்கும் மன்னவகுமாரனேவருக்கும் அத்தேஹத்தைக் காட்டி, அதன் பிறகு அரசரனேவரையும் ஆஹாரமருந்துவதற்குச் செல்லுமாறு ஆஞ்ஞாபித்தனள். தானும் மஹாச்வேதையினுற் கொண்டு வரப்பெற்ற கனிகளைத் தனது பரிஜனங்களுடன் புஜிக்கலா னுள். மறுநாள் மிகத்திடமான நம்பிக்கை பிறந்து, மதலேகையினிடம் "பிரியஸகி! நாதனுக்குச் சாபம் நீங்குமளவும், நாம் அவரது சரீரத்தை யுபசரித்துக்கொண்டு இவ்விடத்தில் இருக்கவேண்டுவது மிகவும் அவசி யம். ஆதலால், இவ்வற்புதச் செய்தியை எனது தாய் தந்தையருக்கும அறிவிப்பாயாக. அவர்கள் இவ்விதத் துன்பத்திற்கு ஆளாயிருக்கும் என்றனே இப்பொழுது வந்து பாராமலிருக்கும் விதமாகவும் நீ செய்ய வேண்டும். யான் அன்னையையும் தந்தையையும் பார்த்து, இத்துயர வெழுச்சியை அடக்கக்கூடியவளல்ல. நான், நாதன் உயிர்துறந்திருப் பதைக் கண்டும் புலம்பவில்லையே! அங்ஙனமிருந்தும், இவர் ஐய மின்றி மீண்டும் பிராணனைப் பெறுவதற்கிருக்க, விரதம்பூண்ட யான் வேறெதற்காகப் புலம்ப வேண்டும்?' என்றுரைத்து அவளை விடுத்தனள்.

மதலேகையும் சென்றுத் திரும்ப வந்து, 'எனதருமைத் தோழி! உனது கோரிக்கை நிறைவேறியது. உன் தாய் தந்தையர், சாபம் ஒழிந்ததும், தமது மருமகனையும், பேரின்பக்கண்ணீர் ததும்பும் பங்கய மலருக்கொப்பான உனது முகத்தையும் வந்து பார்ப்பதாகப் பகர்ந்தருளினர்.' எனக் கூறிய பின், உள்ளம் அமைதிபெற்று இருந்தனள்.

அப்பால் மாரிகாலம் கழிந்துபோக, இஜ்ஜீவலோகமும் கார்மேகங்களின் கவர்ச்சியாகும் கனத்த கட்டிலிருந்து விடுதலையுற்றதுபோலிருக்க, திசைகளெல்லாம் விசாலிப்பதுபோல் தோற்ற, நீரோடைகளது கரைகளின் ஓரத்து மிக மிருதுவான மணற் குன்றுகளின் பந்திகள், தண்ணீர் கிரமமாய் வடிந்து ஒதுங்குவதற்கேற்பப் படிப்படியாய் அலைகளைப் போல் அமைந்திருக்க, ஒருகால் மேகநாதன் காதம்பரியின் அருகில் வந்து, இங்ஙனம் விஞ்ஞாபனம் செய்தான்:—"தாராபீடதேவன், இளவரசு இன்னும் தாமதிக்கின்றனே என்று இருதயம் வாடித் தவித்தவராய், வேலைக்காரரைச்செய்தி தெரிந்துவர அனுப்பியிருக்கின்றனர். யாம், இன்னும் உமக்குத் துயரமளிக்க விரும்பாதவராய், நடந்த வரலாறனைத்தையும் உரைத்து, 'பிரபுவான சந்திராபீடனுயினும் காதம்பரீதேவியாகிலும் உங்களிடம் சொல்லியனுப்பப்போகும் செய்தி யேது மிலது. ஆதலால் நீங்கள் தாமதமின்றியே சென்று, விருத்தாந்தமெல்லாவற்றையும் தாராபீடனிடம் தெருவித்துக்கொள்வீராக.' எனக் கூறியதும், அவர்கள் மிகத் துயரமுற்று இவ்விதம் செப்பினர்:—'நீர் சொல்லுவதுண்மையே; ஆனல் எமக்குத் தொன்றுதொட்டு வந்த அவ்வன்பு, பக்தி, அனுஸரணை என்பவை இருக்கட்டும்; காரியகௌரவத்தினல் ஏற்பட்ட ஆவலே, தேவனைக் காணவேண்டி எம்மை வலிய ஏவுகின்றது. ஆகையால் நீங்கள் தேவிகளிடம் விண்ணப்பம் பண்ணி, இளவரசின் பாதவந்தனம் எமக்குக் கிடைக்குமாறு செய்து, இவ்வளவு தூரம் வந்ததினுலுண்டான எமது பரிச்ரமத்தைப் பயன்படுத்த வேண்டும். இல்லையேல், இவ்வாறு நெடுந்தூரம் வந்து, ஸமயம் நேர்ந்தும், யுவராஜனது திருமேனியைக் கண்ணுற் காணுமற் சென்றேமாயின், தாராபீடதேவன் எம்மைநோக்கி என் சொல்வர்? அவரிடம் நாங்களும் என்ன மொழிந்திடுவோம்?' என்று! இனித் தேவிகளது சித்தம்." என மேகநாதன் மொழிந்து, மௌனமாயிருக்கையில், காதம்பரீ, கண்டம் தழுதழுக்க, வெகு பிரயாஸத்துடன் நெடுநேரம் சென்று, மறுமொழி

யுரைத்தனள்:—'அவர் செல்லாமையை அங்கீகரித்தது யுக்தமே. தேவனைக் காணுது இவ்வாறே சென்று என்னென்று செப்புவர் ? அன்றியும் செய்தியோ உலகத்திலில்லாதவிதமாய் இத்தகையதாயுளதே ! இதைப் பார்த்தாலுங்கூட நன்கு நம்பிக்கையுண்டாகாதே ! இங்ஙனமிருக்கக் கண்களாற் காணுமற்போகிற் கேட்கவும் வேண்டுமோ ? ஆதலால் தாமதமின்றி அவர்களை வரச் சொல்லலாம். தேவனைப் பார்த்து, அதன்பின்னர் ஏகுவாராக.' எனக் கட்டளை யிட்டதும், மேகநாதனுல் பிரவேசிப்பிக்கப்பெற்ற அவ்வாட்கள் தூரத்திலிருந்தே, ஐந்து அங்கங்களும் அவனியைத் தொடுமாறு, கண்ணீருடன் பணிந்து நிற்க, காதம்பரீ அவர்களையே சற்றுநேரம் கண்ணுேக்கி, தானே இங்ஙனம் மொழியலாயினள்:—'இனிய முகத்தோர்காள் ! தொன்றுதொட்டுத் தோன்றிய அன்பிற்கு இயல்பான இத்துயரவெழுச்சியை விட்டுவிடுங்கள். எத்துயரமானது எல்லையறிய முடியாததாய், துன்பமாகவே முடிவுபெறக் கூடியதோ, அதுதான், இறந்துவிடுவரோவெனப் பயந்தவருக்குத் துயரவெழுச்சிக்கு முகாந்தரமாகும். இன்பமாக முடிவுபெறப் போகும் துயரமோ, ஸுகம் வரப்போகிறதென்னும் பிரத்தியாசையினுல் மறைக்கப்பட்டு, இருதயத்தில் இடங்கொள்வதில்லை. நீங்களும், முன்போலவே சற்றும் சிதைவுருச் சரீரமுடைய தேவனது வதனத்தைக் காண்கிறீர்களே! ஆகையால், இனி நீங்கள் செய்தியறியப் பேரவாகொண்டமனத்தையுடையவரான தாராபீடதேவனது பாதமூலத்தை நோக்கிப் போகலாம். மாண்டுபோனவரின் மேனி பாழடையவில்லை யென்றும் இச்செய்தியை நீங்கள் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்திருக்கினும், ஆங்கு வெளிப்படுத்தவேண்டாம்.—யாம் அவரைக் கண்டோம் ; அச்சோதஸரஸ்ஸின் கரையில் இருக்கின்றுர்— என்று இவ்வளவு மட்டுமே அவரிடம் சொல்லவேண்டும். ஏனெனில், மரணமென்பது பிராணிகளுக்கு அவசியம் உண்டாவதாதலால், அஃது எவ்வகையிலாயினும் ஒருவாறு நம்பக் கூடியதாகும்; பிராணன் துறந்தவருக்குச் சரீரம் பாழடையாவண்ணம் இருக்கின்றதென்பது பார்க்கப்படினும் நம்பக் கூடாததே. ஆகையால், நெடுந்தூரத்திலிருக்கும் பெரியோரிடம் இதைக் கூறி, மரண ஸம்சயத்தை அவர்களுக்கு உண்டாக்குவதில் இப்பொழுது பிரயோஜனமே கிடையாது. என் பிராணநாதன் மீண்டும் பிராணனுடன் எழுந்தால் இவ்வற்புதமான விஷயம், தானே அவர்களுக்கும் பிரகாசமாய்த்

தெரியப்போகின்றது.' என ஆஞ்ஞாபித்து, அப்பால் சற்று ஆலோசித்து, மேகநாதனை நோக்கி "மேகநாத! ஒருவருக்கொருவர் பழகியவருக்கு இஃது உசிதமல்லவென்றறிவேன்; ஆகிலும் பெரியோரது மனதுக்குத் துன்பம் நேரிடுமென்று அறிந்து,யான் இங்ஙனம் மொழியலானேன். நடந்த செய்தியை உள்ளபடி யுரைத்திடுங்கள். ஆனால் நம்பிக்கையாகப் பேசக்கூடிய வேறொருவன் இவர்களுடன் அவரது விச்வாஸத்தின்பொருட்டுப் போகக்கடவன்' எனக் கட்டளை செய்தனள்.

இங்ஙனம் ஆஞ்ஞாபிக்க, மேகநாதன், 'த்வரிதகன்' என்னும் இள்வரசின் ஸேவகனை யழைத்து, அவர்களுடன் அனுப்பினன்.

அப்பால் வெகுநாட்சென்றபின், விலாஸவதியானவள் செய்தியறியாது துன்பமுற்றவளாய், சந்திராபீடன் வந்து சேரவேண்டுமென வேண்டிக்கொள்வதன்பொருட்டு, அவந்திதனிலிருக்கும் அம்மனது ஆலயத்திற்கு ஏகினள். ஆங்கு, 'தேவி! நீர் அதிருஷ்டசாலி; அவந்தி நகரத்து அம்மன்கள் உமது விஷயத்தில் அருள்புரிந்துவிட்டனர். இளவரசின் செய்தியறிந்த ஆட்கள் இதோ வந்து சேர்ந்தனர்.' எனத் திடீரெனப் பரபரத்தோடிவரும் பரிஜனத்தினிடமிருந்து அவ்விஷயத்தைக் கேள்வியுற்று, 'எவர் அவரைக் கண்டது? எவ்வளவு தூரத்தில் இருக்கின்றனர்? அவர் கூறியதென்னே? என் வத்ஸன் க்ஷேமமா?' என வினவிக்கொண்டிருக்கையிலே, பார்த்தவிடத்தில் அங்ஙனமே திரள் திரளாய் ஓடிவரும், அரசனைச் சேர்ந்தவரும் சேராதவருமான உஜ்ஜயினீநகரத்தின் ஜனங்களால் 'இளவரசு வந்தனரோ? நீங்கள் அவரை எவ்வளவுதூரத்தில் விட்டு வந்தீர்கள்? இப்பொழுது அவர் எங்கு இருக்கின்றனர்? நீங்கள் எவ்விடத்தில் அவரைப் போய்க் கண்டீர்கள்? வைசம்பாயனன் பொருட்டல்லவோ யுவராஜனுக்கு இவ்வளவுக் கிலேசம்? ஆகையால் அவ்வைசம்பாயனனைக் கண்டு, திரும்ப அழைத்து வந்தனரோ?' என்று இவையும் இன்னும் பல விஷயங்களும் அடிக்கொருமுறை வினவப்பட்டும், மறுமொழி கூறாது துயர மௌனத்துக்கும் துறைபோன்றவராய், த்வரிதகனுடன் சேர்ந்துவரும் செய்திசொல்லும் ஆட்களைத் தூரத்திலிருந்தே பார்க்கலானாள். அவள் கண்டதும், அவ்வம்மன்கோயிலின் அங்கணத்திலேயே இருந்து, குனிபமான சரீரத்துடன் உயிரிழந்தவரைப்போல் அருகில் வந்து கொண்டிருப்பவரான அவ்வாட்கள் வணங்காமலிருக்கையிலேயே, அவர்

களை நோக்கி, நா தழுதழுக்க 'அப்பன்மார்களே! என் வத்ஸனது விருத்தாந்தத்தைமட்டும் துரிதமாய் மொழிந்திடுங்கள்! எனது இம் மனம், ஏதோ வேறுவிதமாகவே பகர்ந்திடுகின்றதே!" என்று உரத்துக் கூறினள். இங்ஙனம் வினவ, அவ்வூழியர் 'தேவி! நாங்கள் அச்சோத ஸரஸ்ஸின் கரையில் இளவரசைக் கண்டோம்; மிகுதியை இந்த த்வரிதகன் தெரிவித்துக்கொள்வான்.' என்று சொல்லுகையிலேயே, கண்க ளில் நீர் ததும்ப, ஏங்கிய வதனத்துடன் மீண்டும் இவ்வண்ணம் மொழியலானுள்:—"இவ்வேழைத் த்வரிதகன் வேறென்ன கூறப்போகின்ற னன்? மனக்களிப்பின்றி வருபவரான நீங்களே, சொல்லவேண்டு வதைத் தூரத்திலிருந்தே செப்பிவிட்டீர்களே! ஹா! வத்ஸ! உலகத் திற்கு ஒப்பற்ற சந்திரனுயிருக்கும் எனது சந்திராபீட! நீ வராமலி ருக்கும்படி உன்றனக்கு என்ன நேரிட்டதடா? அப்பா! சந்திராபீட! மனம் பீடீக்கப்பெற்றுப் பகர்ந்திடுகின்றேனல்லாது சினங்கொண்டு நிந்திக்கவில்லை. 'அம்ம! யான் சற்றும் தாமதிக்கமாட்டேன்.' என்று என் முன்னிலையில் உறுதிமொழி மொழிந்திட்டு,இப்பொழுது வேறெவ் விடத்திலேயோ நீ இங்ஙனம் தங்கியிருத்தல் உன்றனக்குத் தகுதியல்ல. குழந்தாய்! நீ செல்லுகையிற்றுனே, எனது இப்பாழும் இருதயம் சங்கையுற்றிருந்ததினுலேயே—என் வத்ஸனது வதனத்தை மீளவும் காண்பதரிது—என யான் ஒருவாறு அறிந்தேன்.வலியச் சென்றனையே! என்செய்வேன்!இதிற்குழந்தையின்மீது குற்றமென்னை?இவை, துரதிஷ் டசாலியான எனது தீவினைகளின் சேஷ்டைகளே! உலகத்திற் புண்ணி யம் பண்ணுதவர்களும் இருக்கின்றனர்; எனக்கொப்பான பாவியோ, ஒருத்தியுமில்லை. எனக்கு நீ ஒருவன் இருந்தால், தைவம் உன்னையும் திடீரென எங்கேயோ அபஹரித்துக்கொண்டு போய்விட்டதே! பாழும் விதி என்றனை வஞ்சனை செய்ததே! வத்ஸ! நெடுந்தூரத்திலிருக் கினும், யான் உனது பாதங்களில் வீழ்கின்றேன்! ஒரு முறை திரும்பி வருக! 'அம்ம!' என்று மொழியும் உனது முகத்தைக் காண் பதற்கு என் இருதயம் ஆவலுள்ளதாய் இருக்கின்றதே! உனதிடம் அன்பினுலோ, உருவத்திலுள்ள நம்புதலாலோ, பெண்மக்களுக்கு இயல்பான பேதைமையினுலோ, அல்லது வேறெதனுலோ—யான் அறி கிலேன்—இன்னும் என் இருதயம், உன்றனக்குத் தீங்குண்டா யிருக்குமென நம்பவில்லை; ஆகையினுலல்லவோ, இஃது ஆயிரமாயிர

மாய்ப் பிளவுபடவில்லை! அப்ப! நீ 'புதல்வனிடமிருக்கும் பிரீதிக்கேற் காத உலகத்தோரது பரிஹாஸத்திற்குக் காரணமான இவ்வித தீனத் தன்மை உனக்கெதற்கு?' என்பாயாயின், வத்ஸ! உனது மொழி யினால் இதோ மௌனமாய் விட்டேன்! புலம்பவில்லை!" என்றுரைத் தவண்ணம், மூர்ச்சையடைய, அருகிலிருந்த தோழிமார் அவளது தேஹத்தைத் தாங்கிக்கொண்டனர்.

பிறகு, விலாஸவதியின் ஊழியர் அரசனிடம் அச்செய்தியைப் போய்த் தெரிவிக்க, மந்தரமலையின் வீழ்ச்சியினாற் கரைபுரண்ட மாக டலைப்போல், மன்னவனும் மனங்கலங்கி, வெளிவந்து, அவ்வம்மன் கோயிலுக்குச் சென்று, வெகுப் பிரயாஸத்துடன் பரிஜனங்களால் நினை வுமூட்டப்பெற்றுக் கண்களிரண்டையும் சிறுகவிழித்திருக்கும் விலாஸ வதியைக் கண்டு, அவளருகிலுட்கார்ந்து, பரிசஸுகமாகும் அமுதத் தைச் சொரியும் தனது கரத்தினால் தொட்டுக்கொண்டு, மெல்ல மெல்லக் கண்ணீர் ததும்பிக் கண்டம் தழுதழுக்கக் கூறலாயினன்:—'தேவி! உண்மையாகவே வத்ஸனான சந்திராபீடனுக்கு வேறுவிதமாய் ஏதே னும் நேரிட்டிருக்கின், அப்பொழுது பிழைத்திருக்கப்போவதில்லை தான். வத்ஸனுக்காக இவ்வாத்மா, ஸாதாரணமாய் உலகத்தில் அனை வருக்கும் எளிதான இவ்வித தீனத்தன்மையைப் பெற்று அற்பமாகப் போவதெதற்கு? இவ்வளவு நல்வினைகளைத் தேடினோமே! வேறுசெய் யக்கூடியதென்னை? நாம் அதிகமான ஸுகத்திற்குப் பாத்திரால் லோம். இருதயத்தில் அடித்துக்கொண்டு அழுதபோதிலும், கொடுத்து வைக்காததை நமதுஇச்சையினால் அடையவே முடியாது. இதில் விதிய ன்றோ வேறென்று இருக்கின்றது? அதற்கு விருப்பம் எதுவோ, அதை யே தான் செய்யும். இஃது எவருக்கும் ஸ்வாதீனமானதன்று. இங்ங னம் உலகில் அனைவரும் பராதீனமானப் பிரவிருத்தியுடையவராயிருந் தும், யாம் அடையப் பெறாதது யாது? மிகவும் அடைதற்கு அரிதான வத்ஸனது ஜன்மோத்ஸவமும் நேர்ந்தது; அவன் கல்விகளைக் கற்று, நற்குணங்களையும் பெற்றிருக்க, நமது இருதயமும் இன்பமுற்றது; திக்விஜயம் செய்து, திரும்பிவந்து வந்தனம் செய்ய, அவனது அங்கங் களையும் ஆலிங்கனம் செய்தோம். யான், எண்ணிறந்த மனோரதங்களைக் கொண்டு கோரப்பெற்ற வஸ்துவை, மனையாட்டியுடன் கூட்டி, எனது ஸ்தானத்தில் ஏற்றி நிலை நிறுத்தி, தபோவனம் போகவில்லை யெனினும்

இவ்வளவே நமக்கு ஸம்பவித்ததில்லே. கோரிக்கையனைத்தும் கைகூடுவ தென்றால்,அஃது மஹத்தான புண்ணிய ராசியின் பயனன்றோ? மேலும், வத்ஸனது செய்தி எத்தகையதென இதுகாறும் இங்கு ஒருவரும் விளங்கக் கூறவில்லே. நாம் அனுப்பிய கடிதமெடுத்தேகுபவருடன் என் வத்ஸனது பாலஸேவகனான த்வரிதக னென்பவன் ஒருவன் வந்திருப்பதாகவும், அவன் விருத்தாந்தமனைத்தையும் அறிந்தவன் என்றும், நீ அவனை இன்னும் வினவவில்லே யெனவும்—இவ்வளவு மட்டும் ஏதோ நன்கு விளங்காதவகையில்—பரிஜனம் பேசிக்கொண்டிருக்கக் காதில் விழுந்தது. ஆதலால் அவனைக் கேட்போம். பின்பு பிழைத் திருத்தல் அல்லது மரித்தலென்னும் இரண்டில் ஒன்றை யேற்றுக் கொள்வோம்.' என மன்னவன் மொழிந்துக்கொண்டிருக்கையிலேயே, வாயிற்காப்பவனெருவன மற்ற பரிஜனங்களிடையில் மறைந்திருப்பவனான த்வரிதகனை அழைத்து மன்னவனுக்குக் காட்டினான்.

இராஜன் 'அப்ப! வத்ஸனுக்கு நேர்ந்ததென்னே? கூறுவாயாக; நானும், அவனது அன்னேயும், அமைச்சருமாகக் கடிதம் வரைந்திருக்க, அவன் வராமல் இருப்பதேன்? வாராததற்குக் காரணமொன்றும் எழுதப்படவுமில்லேயே!' என்று த்வரிதகனை வினவ, அவன் சென்றதுமுதல் நடந்த வரலாறனைத்தையும் உள்ளபடி கூறலானான். அரசனும் சந்திராபீடனது இருதயம் பிளவுற்ற விருத்தாந்தமளவும் செவியுற்று, துயரக்கடல்மிகக் கொந்தளித்தெழும்பியதால், தழுதழுத்து,காத்தைநீட்டி, ஏங்கிய குரலுடன் த்வரிதகனைநோக்கி இவ்வாறுரைக்கலாயினன்:—' போதுமப்ப! நீ, சொல்லவேண்டுவதை இப்பொழுதுச் சொல்லிவிட்டனே! நானும் கேட்கவேண்டுவ தெதுவோ, அதையும் கேட்டுவிட்டேன்! வினவுதலிலுள்ள விருப்பம் எனக்குப் பூர்த்தியாயினது! இருதயம் இன்பமுற்றது! ஸுகம் பெற்றேன்! ஆ! வத்ஸ! உனது இருதயம் பிளவுற, நீ அவ்வேதனையைத் தனித்திருந்து அனுபவித்தனேயே! வைசம்பாயனன்மீதுள்ள பிரீதியை நீ நன்கு நிறைவேற்றினாய்! நாங்களோ, துன்பமனுபவிக்கும் கொடிய கர்மசண்டாளர்! உனது இருதயம் வெடித்திருக்கையிலும், யாம் விகாரமற்றே இருக்கின்றோமே! தேவி! எமது இந்த இருதயம் வஜ்ரத்தினும் வெகு வன்மையானதே! இஃது தானகவே ஆயிரக்கணக்காய்ப் பிளவுறவில்லே யன்றோ? ஆதலால், எழுந்திரு; நமது வத்ஸன் தனித்து நெடுந்தூரம்

போவதற்குள்ளாகவே, நாமும் பின்பற்றிச் செல்வதற்கு முயலுவோமாக. சுகநாஸரே! இன்னுமா சும்மாவிருக்கின்றீர்? அவ்வன்பிற்கு இதுதான் ஏற்றகாலம். மஹாகாளனது ஆலயத்திற்கு அருகிற் சிதையடுக்குவதன்பொருட்டு ஊழியருக்குக் கட்டளையிடும். பூபதிகாள்! தம் தமது தேசத்தை நோக்கி நீங்கள் அனைவரும் ஏகுவீராக; கைவிடப்பட்டீர்கள். இப்பொழுதே, பிரஜைகள் இத்துயரத்தை எங்ஙனம் அறியாமலிருப்பரோ, அவ்விதம் செய்யக்கடவீர்.' என்றவாறு ஏங்கிப் புலம்பும் தாராபீடனை நோக்கி த்வரிதகன், 'வேந்தே! இளவரசு, இருதயம் வெடித்திரிந்தும், அழியாத்தேஹத்துடனே இருக்கின்றனர். தேவரீர், வைசம்பாயனனுக்குச் சாபதோஷத்தினால் ஜன்மமேற்பட்ட வரலாற்றையும் குறைவின்றிச் செவியுறுவீர்களாக.' என வாரம்பித்து விஷயமனைத்தையும் விஞ்ஞாபனம் செய்துகொண்டான்.

தாராபீடனும், அவ்வாச்சரியத்தைச் செவியுற்று, வெகு கருத்துடன் அவன் பார்த்தவண்ணமும் கேட்டவண்ணமும் சிறிதும் விடாது அச்செய்திகளனைத்தையும் செப்பக் கேட்கலானான். அவன், அனேக வகையான அடையாளங்களால் நன்கு நம்பிக்கையைத் தருவதான யுவராஜ வைசம்பாயனரது விருத்தாந்தைக் கேட்டு, முகத்தைச் சிறிது திருப்பி, யோசனை செய்வதால் நிலை நின்ற கருவிழியையுடையதான தனது திருஷ்டியைத் தன்னிலும் வேற்றுமையற்ற நிலைமையைப் பெற்றவனான சுகநாஸனது முகத்தில் நாட்டினான். சான்றோர், தாம் துயரமுற்றிருந்தும், தமது துயரத்தை ஒரு புறத்திலடக்கிக்கொண்டு, நண்பரது சோகத்தைத் தீர்ப்பதற்கே முயலுவர்; சுகநாஸன், அவ்வித அவஸ்த்தையை அடைந்திருந்தும், ஸுகமாயிருப்பவனை யொப்ப, மன்னவனை நோக்கி இங்ஙனம் மொழிய முயன்றானன்றோ?—

'வேந்தே! விந்தைகளுக்கிடமான இந்த ஸம்ஸாரத்தில், பலவகையிற் படைக்கப்பெற்றும், இருந்துகொண்டும், இறந்துகொண்டுமிருக்கும் ஸ்தாவரஜங்கமங்களுக்கு எப்பொழுதும் நிகழாததான அத்தகைய நிலைமை யேதுமிலது. ஆதலால், தேவரீருக்கு இவ்விஷயத்தில் ஆலோசனையேன்? யுக்தி செய்து விசாரிப்பீராயின், அப்பொழுது இதில் யுக்திக்குட்படாது சாஸ்திரப் பிரமாணத்தைக்கொண்டே ஒப்புக்கொள்ளக் கூடியவையும் முரண்பட்டவையுமான எத்தனையோ விஷயங்கள் காணப்படுகின்றனவே! குளிசம் கட்டி, அல்லது ஜபம் செய்து, விஷத்தி

னால் மூர்ச்சையுண்டவனை யெழுப்புவதென்பதிலும், அய்க்காந்தம் இரும்பு இவை ஒன்றையொன்று இழுப்பது அல்லது சுழற்றுவதென்பதிலும், பலவகைப்பட்ட சடங்குகளில் வைதிகம் அல்லது வைதிகமல்லாத மந்திரங்களின் ஸித்திகளிலும் யுக்திகள் எத்தகையன? வேதங்களிலும், புராணங்களிலும், இராமாயண பாரதமுதலியவனைத்திலுமே அனேகவிதமான சாபவிருத்தாந்தங்கள் நன்கு கூறப்பெற்றுள. அவை யெங்ஙனமெனில்.—மஹேந்திரனது ஸ்தானத்தில் இருந்த நஹுஷனுக்கு இராஜருஷியான அகத்தியரது சாபத்தினால் மலைப்பாம்பின் நிலைமை நேரிட்டது. அஸுர குருவான சுக்கிராசாரியருடைய சாபத்தினால் யயாதிக்கு வாலிபப் பருவத்திலேயே வார்த்தக்கியத்தினாற் கேடு ஸம்பவித்தது. பிறர் இருக்கட்டும்; ஆதிதேவனான அகண்டைச்வர்யம் வாய்ந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவே ஜமதக்னிக்குப் புதல்வராக வந்து ஜனித்தார். ஆகையால் மானிடரிடம் தேவதைகள் வந்து பிறப்பது நேரிடக்கூடாததல்ல. இதில் ஸம்பவிக்கத்தகாததென்னே? அன்றியும் கருத் தரிக்கும்போதே, தேவரீர், தேவியின் முகத்தினுட் பூர்ணசந்திரன் புகுந்ததையும் பார்த்தீர்; அங்ஙனமே எனக்கும் கனவிற் புண்டரீகத்தின் * தரிசனமும் உண்டாயிற்று. ஆனதுபற்றி, அவ்விருவருமே இவ்வாறு ஆவிர்ப்பவித்தனரென்பதில் ஐயமே கிடையாது.—இறந்தவரது உடல் அழிவு பெறாமலிருப்பதெங்ஙனம்? மீளவும் அவ்வுடலுக்கு உயிருண்டாவதுதான் எவ்வாறு?—என்பீராயின், இதிலும் அகில லோகங்களிலும் அரும்புகழ்பெற்ற அவ்வமுதமே முக்கிய முகாந்தரமென மொழியப் பெற்றுளது. அவ்வமுதம் அம்புலியினிடம் இருக்கின்றதென்றே பிரஸித்தியுமுண்டு. ஆதலால், தேவர், இஃதனைத்தையும் இங்ஙனம் உண்மையெனவே அறிவீராக. அவ்விருவருக்கும் இவ்வாறு நேரிட்ட சாபம் எமக்கு வரனே. ஆனதுபற்றி, இவ்விஷயத்தில் தேவரீராயினும் தேவிகளாகிலும் சிறிதும் துயரமுற வேண்டுவதில்லை. மேலும், இவ்வாறு நிகழ்ந்திருக்கையில், எவ்வெவற்றை நன்மையெனச் செவியுறுகின்றீரோ, அல்லது அறிகிறீரோ

---

* புண்டரீகம்=வெண்தாமரை மலர். [புண்டரீக—என்பதற்கு வெண்தாமரைமலர் என்று பொருளாதலாலும், அவன் பிறந்தது தாமரைப் பூவிலாகையாலும், புண்டரீகன் தாமரை மலருருவங்கொண்டு மனோரமையின் கர்ப்பத்திற் பிரவேசித்தான், என்று கருதவேண்டும்.]

அவ்வவற்றை அனைத்தையும் இது முதலாகவே செய்ப அல்லது செய்விக்க முயற்சி பெறவேண்டும். வைதிகமான அல்லது அவைதிகமான கிருத்தியங்களனைத்துக்கும் அஸாத்தியமென்பது ஒன்றுமில்லை. வெகு பிரயாஸங்களை அனுபவித்துப் பெற்ற அவர்களது பிறப்பும், முன்பு இத்தகையச் செயல்களாற்றானே ஸம்பவித்தது?'

சுகநாஸன் இவ்வாறு சொல்லியதும், அரசன், சோகத்துடன் இவ்விதம் மறுமொழி கூர்ந்தனன்:—'நீங்கள் உரைத்தது அனைத்தும் உண்மையே. வேறு எவர் இவ்வளவும் அறிவர்? எமக்குப் போதிப்பதற்கும் பிறர் எவரேனும் உளரோ? ஆயினும், என் வத்ஸனது இருதயம் வைசம்பாயனனுடைய துயரத்தினால் பிளவு பெற்றதென்னும் விஷயமானது, என் முன்னிருந்து, மற்ற எல்லாவற்றையுமே எனது திருஷ்டியிற் புலப்படாவண்ணம் மறைத்து விடுகின்றதே! ஆகையால், வத்ஸனது வதனத்தைப் பிரத்தியக்ஷமாய்ப் பாராமல், எனதுயிரைத் தாங்குவதற்கே வல்லமையில்லாதவனா யிருக்கின்றேன். எனது நிலைமையே இத்தகையதா யிருக்குங்கால், யான் தேவிக்குத் தேறுதல் கூறுவதென்பது வெகுதூரம். ஆதலால், அவ்விடம் செல்வதை விட்டு, உயிருடன் இருப்பதற்கு உபாயம் பிறிதொன்றும் இல்லவே இல்லையென நீங்கள் உணரவேண்டும்.' என்று தாராபீடன் பகர்ந்ததும், வெகு நேரமாகத் தன் தநயனது துயரத்தினால் வருத்தமுற்றவளான விலாஸவதீ, வேந்தனுக்கு எதிரில் வெட்கத்தை விட்டு, அஞ்ஜலிசெய்து, ஊத்தகுரலுடன் உரைக்கலாயினள்.—' ஆர்யபுத்திர! * இப்படியானால், இன்னும் தாமதிப்பானேன்? குழந்தையைக் காண்பதன்பொருட்டு எனதுள்ளம் பதைக்கின்றதே! முதலில் விஸனத்தை விலக்குவதற்கு உபாயமாய் இருதயம் விரிந்துபோவதையும் விரும்பினேன்; இப்பொழுது மைந்தனைக் காண்பதில் ஆசையுண்டானதாதலின், அதுவும் என்றனக்கு ருசிக்கவில்லை. ஒரு முறையேனும் வத்ஸனைக் காண்பதற்கு, நீண்டகாலமளவும் துயரங்களை அனுபவித்துக் கொண்டு பிழைத்திருப்பது சிறப்பாகுமல்லாது, தாங்கக்கூடாத துக்கத்தைத் தீர்ப்பதற்காக இப்பொழுதே மாண்டுபோவது மேலன்று என, என்றனக்குத் தோற்றுகிறது. ஆனதுபற்றி, ஆங்குச் செல்வதேனும், இவ்வாசையை ஆதாரமாகப்பெற்ற என் இருதயத்திற்கு ஒருவாறு விநோத

* ஆர்யபுத்திர = கணவனைக்குறித்து கூறப்படும் சொல்.

மாய் இருக்கட்டும்.' இவ்வாறு விலாஸவதீ மொழிந்துகொண்டிருக்கையிலேயே, வேதியன் ஒருவன் அவளருகிற் சென்று, வாழ்த்து கூறி இவ்வண்ணம் விண்ணப்பம் செய்தனன்;—"தேவி! நன்கு விளங்காவண்ணம் எங்கும் கலகல வென்றெழும் வார்த்தைகளின் கோலாஹலத்தினுல் மனங்குழம்பிய மனோரமை, தானே விரைவுடன் வந்து, வேந்தரிடம் வெட்கத்தினுல் இவ்விடம் வாராது, இவ்வம்மன்கோயிலின் பின்புறத்தில் இதோ நின்று கொண்டு, 'இப்பொழுதுவந்தவர் மொழிந்ததென்னே? என் வத்ஸன் வைசம்பாயனன் உயிருடன் ஸுகமாயிருக்கின்ருனே? இளவரசினிடம் அகப்பட்டானே? எவ்விடத்தில் இருக்கின்ருன்? அவ்விருவரும் வந்து சேர்வரோ? எத்தனை நாட்களாகும்?' என்று தேவியையும் வினவுகின்றனர்." அதுகேட்டு, மன்னவன் சோகத்தினுல் மனம் விரிந்தவன்போல் விலாஸவதியை நோக்கி 'தேவி! உன் பிரியஸகி, நமது குழந்தைகளைப் பற்றிய செய்தி யெதையுமே செவியுறவில்லையோ? அவ்வாருயின், அவள் வேறிடத்தில் இவற்றைக் கேள்வியுறுவளேல், ஒருகால் உயிரையும் இழந்திடுவள். ஆதலால் எழுந்து, நீயே சென்று, தைரியத்துடன் செய்திகளெல்லாவற்றையும் செப்பி,உன் பிரியஸகியை அமைதியுடன் இருக்கச் செய். அவளும் ஆர்யரான சுகநாஸருடன் அவ்விடம் வரவேண்டும்.' என்றுரைத்து, விலாஸவதியை விடுத்தனன். தானும் சுகநாஸனுடன்கூட பிரயாணத்திற்குத் தகுந்த ஸன்னஹங்களைச் செய்விக்கலானுன்.

பிறகு, மன்னவன், மனம்பதைக்க, இடைவிடாது இராப் பகலாய் பிரயாணம் செய்து,அனேக தினங்கள் சென்றபின்,அச்சோத ஸரஸ்ஸை அடைந்தனன். அவ்விடம் சென்று, தூரத்திலிருந்தவாறே, முதலிற் செய்தியறிவதன்பொருட்டு, த்வரிதகனுடன் கூட மிகவும் ஆப்தரான சில குதிரைப் பாகரை அனுப்பினன்.

அப்பால், அரசனனவன் அவருடன் கூடவே மேகநாதனை முன்னிட்டுக்கொண்டு—பார்த்திவன் பாராவண்ணம் ஒருவனை மற்றொருவன் மறைவாகப் பெற்று, கேடேதும் நேரிடாமலிருந்தும் கேடுண்டவரை யொப்பவும் பயந்தவரைப்போலவும்—தன்னிடம் வந்துகொண்டிருக்கும் திரளான இராஜகுமாரரைக்கண்டு, அப்பொழுதே மூச்சுவந்தவன்போல் திரும்பி, மூடுபல்லாக்கில் இருக்கும் விலாஸவதியை நோக்கி, 'தேவி! நீ பாக்கியசாலிதான்; உன்னையாகவே வத்ஸனது சரீரம் அழிவுபெருமா

விருக்கின்றது ; ஏனெனில், அவனது சரணகமலங்களை அடுத்திருக்கும் அரசர் குமாரனைவரும் அவனருகிலிருந்து இதோ வருகின்றனரே.' எனப் பகர்ந்தனன். அவளும் அது கேட்டு, தனது காத்திலைலேயே பல்லாக்கினது திரைச் சீலையின் தலைப்பைச் சிறிது விலக்கிப் பார்த்து, தைரியமிழந்தவளாய், 'ஹா ! வத்ஸ ! கூடவிருந்து புழுதிவிளையாடிய இவ்வளவு இராஜகுமாரரிடையில், நீ ஒருவனை காணப்படாமலிருக்கின்றனே !' என உரத்துக் கதறினள். அரசன், அவ்வாறு கதறும் அவளுக்கு ஆறுதல் சொல்லி, மேகநாதனை நோக்கி 'அப்ப ! வத்ஸனது செய்தியென்ன ? செப்புவாயாக' என வினவினன். அவனும் 'தேவ ! நினைவு கிடையாததலால், அங்கங்களுக்கு அசைவுமாத்திரம் ஒழிந்திருக்கின்றது. சரீரவொளியோ, ஒவ்வொருநாளும் ஓங்கி வளர்கின்றது.' என விஞ்ஞாபனம் செய்தனன். பிரபுவும் அதைச் செவியுற்று, அவன் மீண்டும் உயிருடன் எழுந்திருப்பதில் நம்பிக்கை மேவிட்டவனாய், 'தேவி ! மேகநாதன் கூறுவதைக் கேட்டனையோ? ஆதலால், வத்ஸனது வதனத்தைக் காண்பதற்குப் போவோம் வா. வெகு நாட்களாயின; அவனைப் பார்த்து எம்மைப் பயன் பெற்றவராகச் செய்துகொள்வோமாக.' என மொழிந்துகொண்டே, வெகு வேகத்துடன் செலுத்தப்படும் பெண்யானையின்மீது ஏறியவாறு, மஹாச்வேதையின் ஆச்ரமத்தை அடைந்தனன்.

பின்னர், மஹாச்வேதை, திடீரெனச் சந்திராபீடனது பெற்றோர் முதலியவர் வந்திருப்பதாகக் கேள்வியுற்று, வெட்கத்துடன் ஓடி, ஓர் குன்றத்தின் குஹையினுட்புகுந்தனள். சித்திரதபுத்திரியான காதம்பரியும் மூர்ச்சையெனும் அந்தகாரத்தை அடைந்தனள். அவ்விருவரும் அந்நிலைமையிலிருக்கையில், மன்னவனும் சுகநாஸனால் தாங்கப்பெற்ற தேஹத்தையுடையவனாய், ஆச்ரமத்தினுட் சென்றான். அதன் பின்பு, விலாஸவதியும் தனது சரீரத்தை மனோரமை தாங்க, அவ்விடம் சென்றனள். அப்பால், புதல்வனிடம் வாத்ஸல்யம் வாய்ந்த விலாஸவதியானவள், இயல்பாகவே அமைந்துள்ள அங்கங்களின் காந்தியானது சற்றும் குன்றாது, அசைவின்றி கண்வளர்பவன்போல் தோற்றும் புத்திரனைப் பார்த்து, தாராபீடன் அருகிற்போவதற்கு முன்னமே, இவள் தன்னைத் தாங்கிக்கொண்டிருக்கும் மனோரமையையும் வலித்திழுத்துச் சென்று, தூரத்திலிருந்தே இலதைகள்போன்ற இரு புயங்களையும்

நீட்டி, 'அடைதற்கரிதான என் குழந்தாய் ! நீ வருக ! உன்னைக் கண்டு வெகு நாட்களாயின. என்றனக்கு மறுமொழி மொழிந்திடுவாயாக. ஒரு முறையேனும் என்றனைக் கண்ணோக்கவேண்டும். அப்ப ! நீ இவ்விதமிருப்பது உன்றனக்கு உற்றதல்ல. எழுந்து, எனது மடிதனில் வந்தமர்ந்து, மைந்தனுக்கேற்ற பிரீதியைப் பாராட்டுவாயாக. நீ, முன் சிறு பிராயத்திலும் எனது சொல்லைக் கேட்காமலிருந்ததில்லையே! இப்பொழுதுமட்டும் இப்படிப் புலம்பியும் நீ ஏன் செவியுறவில்லையோ ? குழந்தாய்! உன்றனக்குக் கோபமூட்டியவர் யாவர் ? வத்ஸ! யான் இதோ பாதங்களில் வீழ்ந்து உன்றனைக் களிக்கச் செய்கின்றேன்! மைந்த ! சந்திராபீட ! உனதிடமுள்ள அன்பினுற்றானே வெகுதூரத்திலிருந்து உனது தந்தை வந்தனர் ? நீ எதிர்கொண்டு போய், அவரது தாள்களைப் பணிவாயாக. உனக்கிருந்த அக்குருபக்தி இப்பொழுது எங்குப் போயிற்று ? இல்லையேல், ஸுகமாய் உனது இஷ்டப்படி இருக்கலாம். எமது மனம், உன்றனிடமிருந்து இவ்விஷயத்திற் கௌரவாகௌரவங்களைக் கோரியதல்ல.' என்று ஏங்கிப் புலம்பியவளாய், சந்திராபீடனது சரணங்களைச் சிரந்தனில் தாங்கி, குரல்விட்டுக் கதறியழுதாள். தாராபீடன், தனது துயரத்தை அடக்கிக்கொண்டு, இவ்வாறு கூறலானுன்:—' தேவி ! இவன் எமது ஸுக்ருத வசத்தால் எமக்குப் புதல்வனுகப் பிறந்தான் என்றாலும், துக்கிக்கத் தகாத தைவப் பிறப்புதான். ஆதலால், மானிடவுலகத்திற்கேற்ப மனத்துயர முறுவதென்னும் இவ்விஷயத்தை இப்பொழுது நீ விட்டு விடுவாயாக. இவ்வாறு துயரமுறுவதாற் பயனேது மிலது. கேவலம் கதறுபவரது கண்டமே விரிந்திடுமல்லாது, இருதயம் பிளவுறாது. புலம்புவதாற் பயனின்றிப் பிதற்றலே வெளிவருமன்றி, பிராணன் வெளிப்படாது. மேலும் இந்நிலைமையில், நாம் இருவருமே தைரியத்தை நிலைநிறுத்திக்கொண்டு, மனோரமையையும் சுகநாஸனையும் ஆறுதல் சொல்லித் தாங்கவேண்டும்; அவர்களுடைய புதல்வனை வைசம்பாயனன் இவ்வுலகத்தை விட்டு மறைந்திருக்கின்றானன்றோ ? இவர்களும் இருக்கட்டும்; யாதொருத்தியின் பிரபாவத்தினாலேயே வத்ஸன் உயிர் பிழைத்த லென்னும் உத்ஸவப் பேறை யாம் பெறப் போகின்றோமோ, அந்த கந்தர்வமன்னவனது மகளான உன் மருமகள் இன்னும் இதோ நினைவு பெறாமல் இருக்கின்றனளே! ஆகையால்,

அவளையெழுப்பி, மடிதனில் அமர்த்தி, நினைவு வரச் செய்யக்கடவாய். பின்னர் உனதிஷ்டப்படிப் புலம்புவாயாக.' என்று.

மன்னவன் இங்ஙனம் மொழிய, விலாஸவதியானவள், 'என் வத்ஸனுயிருக்கு ஆதாரமான, எனது அம்மருமகள் எங்கே?' எனப் பகர்ந்து கொண்டே பரபரப்புடன் அருகிற் சென்று, நினைவின்றியே கிடக்கும் காதம்பரியை மடிதனில் அமர்த்திக்கொண்டு, சந்திராபீடனது சரீரத்தின் பரிசம்போல் குளிர்ச்சி பெற்ற கரத்தினுல் இருதயத்தைப் பரிசித்து, 'அம்ம! தேறுதல் பெறுவாயாக! நீயன்றி, இன்று முதலாகவே என் வத்ஸனுன சந்திராபீடனது சரீரத்தைத் தாங்குபவர் யார்? அம்ம! என் வத்ஸனது வதனத்தை மீண்டும் காணும்வண்ணம், நீ அமிருதமயமாகப் பிறந்தனையே.' எனக் கூறினள். காதம்பரியும், சந்திராபீடனது அப்பெயரைச் செப்பியதாலும், அவனது பரிசத்தினும் வேற்றுமையில்லாத விலாஸவதியினது சரீரத்தின் அப்பரிசத்தினுலும் மூர்ச்சை தெளிந்தும், வெட்கத்தினுல் தலைகுனிந்தவளாய், பெரியோரைப் பணியவேண்டு மென்பதையும் மறந்து, மதலேகையினுல் விலாஸவதியின் மடியிலிருந்து இறக்கப்பட்டாள். அப்பொழுதும், ஸ்வாதீனமற்றவளாகவே இருக்கும் காதம்பரீயைக் கொண்டு, மதலேகையானவள், முதியோரான தாராபீடன்முதலியவருக்கு முறைதவருது வந்தனம் செய்வித்தனள். அப்பால், சித்திரரத புத்திரியானவள் நினைவு பெற்று நிஷ்களங்கமாயிருக்க, இராஜனும் சந்திராபீடனே மீளவும் பிழைத்தெழுந்ததாகக் கருதியவனுய், மதலேகையை அழைத்து, 'எமக்கு இவர்களது தரிசனஸுகமொன்றுதான் விதியினுல் ஏற்படுத்தப்பட்டது; அதுவும் எமக்குக் கிடைத்துவிட்டது. ஆதலால், எமதுமருமகள், எவ்விதப் பணிவிடையால் வத்ஸனது சரீரத்தை இவ்வளவு நாட்களாய் உபசரித்து வந்தனளோ, அதே பணிவிடையை எமது நிர்ப்பந்தத்தினுலாவது, எமதிடம் இலஜ்ஜையினுலாவது சிறிதும் பரிஹரிக்க வேண்டாம். யாம் பிரயோஜனமின்றி, கேவலம் கண்கொண்டு பார்ப்பவரே. ஆதலால், யாம் இங்கு இருந்தால் என்னே? அல்லது சென்ருல்தான் என்னே? எவளது கரத்தின் பரிசத்தினுல் இச்சரீரம் அழிவு பெருமலும் ஸுகமாகவும் இருக்குமாறு செய்யப்பட்டதோ, அம்மருமகளே இவனது பக்கத்தில் இருக்கட்டும்.' எனக் கட்டளையிட்டு, வெளிப் புறப்படலாயினன். பிறகு இவன், தனக்கென்று நிர்மிக்கப் பெற்ற வாஸஸ்தலத்திற்குப்

போகாமலே, முனிவர் வஸிப்பதற்கேற்ப, அருகிலுள்ள ஆச்ரமமரங்களின் அடியிலிருக்கும் ஓர் கொடிமண்டபத்தில் உட்கார்ந்து, தன்னிலும் வேற்றுமையில்லாத விலனமுறும் வேந்தர்குழாமனைத்தையும் அழைத்து, மேன்மை படுத்தி, இங்ஙனம் மொழிந்தனன்:—'இப்பொழுது, யான் இத்துயா வெழுச்சியினாலேயே இந்நிலைமையை எற்றுக்கொண்டதாக நீங்கள் எண்ணவேண்டாம். சந்திராபீடன் மனைவியுடன் இருக்கையில், யான், அவனது முகத்தைப் பார்த்துவிட்டு, எனநிடமுள்ள இராஜ்யபாரத்தை அவனிடம் பற்றவைத்து, பின்னர் அடவியில் எவ்விடத்திலேனும் ஓர் ஆச்ரமம் சென்று, அந்திமவயதைக் கழிக்கவேண்டுமென்னும் இவ்விஷயம் முன்னம் ஆலோசிக்கப்பட்டதே. அதுவும், நிகில வல்லமையும் நிரம்பிய நமனாலோ, முற்பிறப்பிற் செய்த தீவினைகளாலோ இவ்வாறு நேர்ந்துவிட்டது. செய்வது வேறென்னே? விதியோ மறுக்க முடியாதது. ஆதலால், நெடுநாட்களாகக் கோரிய கோரிக்கையை நிறைவேற்ற விரும்புகிறேன். ஆனதுபற்றி, இவ்விஷயத்தின்பொருட்டு யான் உங்களை, வேண்டிக்கொள்ளத் தகுந்தவனாகிறேன்.' என்றுரைத்து, அனுபவிப்பதற்கு அருகில் ஆயத்தமாயிருக்கும் அகில ஸுகங்களையும் அகற்றி, தனக்குத் தகாதவையும், அரண்ணிய வாஸத்திற்கு அனுகூலமானவையுமான ஸுகங்களை யேற்றுக்கொண்டவனாய், அதாவது—மரங்களின் அடிகளில் மாளிகை யென்னும் மதியையும், மான்களிடம் பழகிய ஜனத்தினிடமுள்ளப் பிரீதியையும், காய் கிழங்கு வகைகளில் அறுசுவை பொருந்திய ஆஹாரமென்னும் அபிப்பிராயத்தையும், தர்மமான கதைகளில் விநோதவார்த்தைகள் என்னும் எண்ணத்தையும், மரங்களின்பால் மைந்தனிடமுள்ள அன்பையும் ஆரோபணம் செய்து—தபஸ்விகளுக்குத் தகுந்த பணிகளைச் செய்துகொண்டு, காலையும் மாலையும் இடைவிடாது சந்திராபீடனது சரீரத்தைத் தரிசித்து இன்பமனுபவித்தவாறு, துயரங்களைக் கருதாது, தனது பரிவாரம், விலாஸவதி, சுகநாஸன் இவர்களுடன் கூட அவ்விடத்திலேயே இருந்தான்."

மேன்மைதங்கிய ஜாபாலி இங்ஙனம் மொழிந்து, மூப்பினால் ஒளி மழுக்கங்கொண்ட புன்னகை புரிந்து, கதை கேட்பவரனைவரையும் நோக்கி இவ்வாறு கூறினர்:—'நீங்கள், இக்கதையின் சுவை, மனதைப் பறிக்கும் மேன்மையைக் கண்டீரோ! எதைக் கூறவேண்டுமென

முயன்றேனே, அதை விட்டுவிட்டே, கதையின் சுவையினால் எதையோ மொழிந்துகொண்டே வெகுதூரம் கடந்துபோனேன். யாதொருவன் சிற்றின்பப் பற்றுதலாற் சிதைவுண்ட சித்தத்தை யுடையவனாய், தான் செய்த தீவினையினாற்றானே தைவலோகத்திலிருந்துத் தவறி மானிட லோகத்தின்கண், சுகநாஸனிடம் 'வைசம்பாயனன்' என்னும் புதல்வனாகப் பிறந்தானோ, அவனே, மீண்டும் தனது விநயக்கேட்டினாலேயே கோபமூட்டப்பெற்ற தன் தந்தையின் திட்டுதலாலும், மஹாச்வேதையின் ஸத்தியமான சாபத்தினாலும் இக்கிளிப்பிறப்பில் வந்து வீழ்ந்தனன்.'

மஹாபிரபாவம் வாய்ந்த ஜாபாலி இங்ஙனம் மொழிகையிலேயே, அவ்விளமைப் பிராயத்திற்றானே, தூங்கி யெழுந்தவனையொப்ப என்றனக்கு வித்தைகள் அனைத்துமே நாவின் முனையில் வந்து தோன்றின. மனிதனைப்போல் எழுத்துக்களைத் தெளிவாய் உச்சரித்துப் பேசுவதற்கு வாக்கும் எனக்கு உண்டாயிற்று. அதிகமாய் மொழிவதிற் பயனென்ன? யான், மானிடவுடல் ஒன்றைத் தவிர்த்து, மஹாச்வேதையினிடம் காதல் முதலிய மற்றெல்லாவற்றையும் அந்தக்ஷணமே அடைந்துவிட்டேன். அங்ஙனமே உள்ளத்தில் ஆவல் அதிகரித்து, மஹாமஹிமை பெற்ற ஜாபாலியை நோக்கி, வெகு அச்சமுற்று மெல்ல மெல்ல விண்ணப்பம் பண்ணலானேன்:—'ஐயன்மீர்! யான், தமது அருளால் அறிவு பெற்றவனானேன். முற்பிறப்பிலுள்ள உறவினர் அனைவருமே எனது நினைவுக்கு வந்தனர். அவர்களை நினைத்து எனது இருதயம் பிளவுறுவது போல் இருக்கின்றதே! மற்ற உறவினரை நினைப்பதும் அவ்வளவு மனத்துயர மூட்டவில்லை; சந்திராபீடனைச் சிந்திப்பதாலேயே சித்தம் சிதறிப்போவதுபோல் தோற்றுகின்றது! யான் இறந்ததாகக் கேள்வியுற்றதுமே, அவனது இருதயம் விரிந்துப் போயிற்றன்றோ? ஆதலால், அவனது பிந்திய பிறப்பின் வகையையும் கூறியருளவேண்டுமென்று, தம்மை வேண்டிக்கொள்கின்றேன். ஏனெனில், யான் அவனிருக்குமிடம் சென்று, அவனுடன் வஸித்தால்,இப்பறவையின் உடலை யடைந்திருப்பதும் துன்பமுண்டாகாமலிருக்கும்.' என்று யான் இங்ஙனம் விஞ்ஞாபனம் செய்ய, பகவானான ஜாபாலி அன்புடனும் கோபத்துடனும் 'அடா துஷ்ட! நீ எவ்வித சித்தசாபல்யத்தினால் இத்தகைய அவஸ்தையை அடைந்

தனையோ, அதே குணத்தை இன்னும் பின்பற்றுகின்றனையே! இன்னமும் இறகுகள் இரண்டுகூட முளைக்கவில்லையே! ஆகையால், உனக்கு ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் திறமை வரட்டும். அதன்பின்பு என்றனை வினவுவாயாக.' என மறுமொழி கூறியதும், ஹாரீதன் குதூஹலமேலிட்டவனாய், இவ்வாறு வினவினன்.—'தந்தையே! இஃது என்றனக்குப் பெரியதோர் விந்தையாகத் தோன்றுகின்றது; இதை மொழிந்தருளவேண்டும்; இருஷிஜாதியில் இருக்கையில், இதற்குச் சிற்றின்பத்தில்—உயிரையும் தாங்கிக்கொள்ள முடியாதவாறு—அத்தகையைப் பற்றுதல் எங்ஙனம் உண்டாயினது? தைவலோகத்திற் பிறந்தவனுக்கு அங்ஙனம் ஆயுள் அற்பமாவதேன்?' என்று இவ்வண்ணம் தனது புதல்வன் வினவ, மேன்மைதங்கிய ஜாபாலி, மறுமொழியுரைக்கலாயினர்.—'வத்ஸ! இதன் காரணம் மிக்க விளக்கமானதே; இவன், கேவலம் காம ராக மோஹமயமானதும், ஸாரமற்றதுமான ஸ்த்ரீவீர்யத்திலிருந்து பிறந்தவன். ஒருபொருள் எத்தகைய வஸ்துவிலிருந்து உற்பத்தியாகின்றதோ, அது அத்தகையதாகவே இருக்கின்றது, என்று வேதமும் கூறுகின்றது. உலகத்திலும், காரியங்களெல்லாம் பெரும்பாலும் காரணகுணங்களைப் பெற்றவையாகவே காணப்படுகின்றன. அங்ஙனமே ஆயுர்வேதத்திலும் பிரமாணமிருப்பதாய் அறியப்படுகின்றது. ஆதலால், இவன் உற்பத்தியான வகைக்கு ஏற்றவண்ணம் சிற்றின்பத்தில் அத்தகையப் பற்றுதலைப் பெற்றனன். மரணமும் அங்ஙனமே உண்டாயினது. அப்படியே இப்பொழுதும் இதற்கு ஆயுள் அற்பமே. சாபத்தின் இறுதியில், உடனே இதற்கு அழிவற்ற ஆயுள் ஏற்படப்போகின்றது. இத்துடன் இக்கதை இருக்கட்டும். கதையின் சுவையினால் மனமிழுக்கப்பட்டு, நம்மையறியாமலே பெரும்பான்மையாய் இரவும் கழிந்துவிட்டது. இதோ, இச் சந்திரபிம்பமும், ஒளி மழுங்கியதால் துலக்கமற்ற வெள்ளியாலாக்கிய கண்ணாடிபோல் மேல்திசையின்கீழ் இறங்கிவிட்டது. பம்பாஸரஸ்ஸிற் படுத்திருக்கும் பறவைகள் கண்விழித்தெழுந்தனவென்று அறிவிப்பதான அவைகளின் ஆர்ப்பரிப்பும் செவிகளுக்கின்பமாய் இசைந்தெழுகின்றது. அக்கினியை ஆராதிக்கவேண்டிய வேளையும் அருகில் வந்துவிட்டது.' என மொழிந்தவாறே, கூட்டத்தைக் கலைத்துவிட்டு எழுந்தனர்.

மஹாமஹிமைசாலியான அந்த ஜாபாலி எழுந்த பின்னர், திரளான மற்றமுனிவர் அனைவரும் ஆசை யொழிந்தவரா யிருந்தும், கதையின் இரஸத்தினுல் குருவுக்குச் செய்யவேண்டிய பணிவிடையையும் மறந்து, இன்னும் கதை கேட்பவர் போலவே மயிர்க்கூச்செறிந்த மேனியை யுடையவராய், அப்படியே நிலைநிறுத்தப் பெற்றவரை யொப்ப வெகுநேரம் நின்றிருந்து, தம் தமது இடத்திற்கு ஏகலானுர். ஹாரீதனும், என்றனைத் தனது பர்ணசாலைக்கு எடுத்துப்போய் ஆங்கு விட்டு, காலைச் சடங்குகளைச் செய்வதன்பொருட்டு வெளிச் சென்றனன். அவன் சென்றபின், ஸர்வகாரியங்களிலும் ஸாமர்த்தியமொழிந்ததான இப்பறவையின் ஜாதியிற் பிறந்ததனுல் மனம் பீடிக்கப்பட்டு, இங்ஙனம் சிந்தையுறலாயினேன்:—' இங்கு, பல ஜன்மங்களிற் செய்த பல்லாயிரக் கணக்கான புண்ணியங்களாற் பெறக்கூடிய மானிடப் பிறப்பே மிகவும் அரிது; அதிலும், அகிலஜாதிகளுள், அந்தணர் குலத்துதித்தல் இன்னும் சிறப்புற்றதாம் ; முத்திபெறும் பதவியை மிகவும் அருகிற் பெற்ற முனியாயிருத்தல் இன்னும் உயர்ந்தது ; மொழியவரிதான மஹிமை வாய்ந்த விண்ணுலகவாஸமென்பது அதிலும் மிக மேலானது. அங்ஙனமிருக்க, யான் அத்தகைய ஸ்தானத்திலிருந்து, தான் செய்த தீவினையினுலேயே எனது ஆத்மாவை வீழ்த்திக்கொண்டேனே ! இப்பொழுது எவ்விதச் செய்கையையும் செய்யத் திறமையற்ற இப்பறவைப் பிறப்பிலிருந்து இவ்வாத்மாவை விடுத்து எங்ஙனம் கடத்தேறச் செய்வேன் ? ஆதலால், பயனற்றதான இவ்வுடலை பிராணனுடன் பரிபாலிப்பதால் ஆவதென்னை ? ஆகையால் இத்தேஹத்தை மாய்த்துக்கொள்கின்றேன்! எனக்கு எவ்வெவ்வகைகளில் துன்பங்களையே தரக் கூடும் என்று சிந்தையினுல் வருத்தமுறும் விதியின் கோரிக்கையும் நிறைவேறட்டும் என்று எண்ணி, யான் உயிரிழப்பதிற் கவலைகொண்டு, கண்களை மூய்ந்தவண்ணமிருக்கையில், ஹாரீதன் வந்து, என்றனைத் தேற்றுபவன் போல் 'அப்ப ! வைசம்பாயன ! நீ பாக்கியசாலியே ! உனது தந்தையான மேன்மை தங்கிய ச்வேதகேதுமாமுனிவரின் பாதமூலத்திலிருந்து கபிஞ்ஜலன் உன்றனையே தேடிக்கொண்டு வந்திருக்கின்றுன்.' என மொழிந்தனன்.

செய்நன்றி மறந்தவனும், சான்றோர் செப்புவதைச் செய்யாதவனும், துராத்மாவுமான யான் அதைக் கேட்டு, 'அவன் எங்கே ?' எனக்

கூறிக்கொண்டே இரு கண்களினும் ஒருமிக்கக் கண்ணீர்த்துளிகளைச் சொரிந்துகொண்டு, வருத்தம் நீங்கியிருந்தும் என்பொருட்டுத் துன்ப முற்று, என்னைக் காணவேண்டுமென்னும் எண்ணத்துடன் சடைமுடிகளும் கலைந்துபோக வெகு வேகத்துடன் வானத்திலிருந்து இறங்கிவருபவனும், சான்றோர் செப்புமாறுச் செய்பவனும், செய்நன்றி மறவாதவனும், மஹாத்மாவுமான அக்கபிஞ்ஜலனைக் கண்டேன். யான் கண்டதும் அவனை நோக்கி 'எனது நண்ப! கபிஞ்ஜல! யான், இவ்வாறு இரு ஜன்மங்களில் மறைந்திருந்தும் இப்பொழுது காணப்பெற்ற உன்னை, தூரத்திலிருந்தே பரபரப்புடன் எழுந்து வந்து இரு கைகளையும் நீட்டி இறுகக் கட்டிக்கொண்டு இன்பமனுபவிப்பேனா? கரத்தினாற் பற்றிக்கொண்டு ஆஸனத்திலாயினும் வீற்றிருக்கச் செய்வேனா?' என்றேன். யான் இவ்விதம் என்னைக் குறித்துத் துயரமுறுகையில், கபிஞ்ஜலன் என்னைத் தனது இருகரங்களாலும் உயரவெடுத்து, வெகுவேகமாய் எழும் விஸனத்துடன் எனது சரணங்களைச் சிரந்தனில் வைத்து, வேற்று மனிதன்போல் புலம்பலானான்.

யான், வாக்கு ஒன்றாலேயே பரிஹாரம் பண்ணக்கூடிய நிலைமையில் இருந்தவனாய், அங்ஙனம் அழும் அவனை நோக்கி மீளவும் இவ்விதம் மொழிந்தேன்.—'நண்ப! கபிஞ்ஜல! நீ எதைச் செய்ய முயன்றனையோ, அது, ஸகல கிலேசங்களாலும் துன்பப் படுத்தப்பெற்ற கொடும்பாவியான என்றனக்கு அல்லவோ ஏற்றது? நீ பாலனாயிருந்தும் இந்த ஸம்ஸாரபந்தரூபமான தோஷங்களாற் பரிசிக்கப் பட்டவனல்லன். ஆதலால், அறிவிலார்க்குரியதான இப்பாதையில் நீயும் ஏன் செல்லவேண்டும்? உட்கார்ந்து, செய்தியை உள்ளபடி உரைத்திடுவாயாக. தந்தை க்ஷேமமா? என் விருத்தாந்தத்தைச் செவியுற்று, அவர் செப்பியதென்னை? சினங்கொண்டனரோ?' என்று யான் வினவ, அவன் முகத்தைக் கழுவிக்கொண்டு இவ்வாறு பகர்ந்தனன் :—"நண்ப! தந்தை க்ஷேமம். அவர், நமது செய்தியை ஞானதிருஷ்டியினால் அறிந்து, இக்கஷ்டங்களுக்குப் பரிஹாரங்களையும் செய்ய முயன்றார். அவர் பரிஹாரமான பணிகளைச் செய்ய முயன்றதும், யான் குதிரைத் தன்மையிலிருந்து விடுபெற்று, பிதாவின் பாதமூலத்தினிடம் போய்ச் சேர்ந்தேன். யான் அவ்விடம் சென்று, பயத்தினால் அருகிற்செல்லாமலிருக்க, அவர் அது கண்டு, என்றனை அழைத்து, 'வத்ஸ! கபிஞ்

ஜல! உனதிடம் தோஷமுளதென்னும் சங்கையை நீ விட்டுவிடு. இவையனைத்தும் மூடமதியான என்றனது குற்றமே. ஏனெனில், யான் அறிந்திருந்தும், பிறந்த ஸமயத்திலேயே வத்ஸனுக்குத் தீர்க்காயுளை அளிக்கவல்ல இச்சடங்கை நிறைவேற்றாமலிருந்தேனே. இஃது இப்பொழுது பெரும்பாலும் நிறைவேறியே விட்டது. நீ துன்பமுற வேண்டாம். எனதிடமே நீ இருப்பாயாக.' என ஆஞ்ஞாபித்தனர். இன்று காலையிலேயே, என்றனை அழைத்து 'குழந்தாய்! கபிஞ்ஜல! உன் மித்திரன், ஜாபாலியென்னும் மாமுனிவரின் ஆச்ரமத்தில் இருக்கின்றான். முற்பிறப்பின் நினைவும் இவனுக்கு வந்துவிட்டது. ஆதலால், நீ இப்பொழுது அவனைப் பார்ப்பதற்குப் போய், நான் செய்த தாக ஆசீர்வாதமும் செய்து,—வத்ஸ! இக்கர்மம் முடிவுபெறும் வரையில் இந்த ஜாபாலியின் பாதமூலத்திலேயே நீ இருக்கவேண்டும்—என்றும் அவனிடம் கூறக்கடவாய்' எனக் கட்டளையிட்டனர். மேலும் உனது மாதாவான மஹாலக்ஷ்மியும் உனக்குண்டான துன்பத்தின் பொருட்டுத் துயரமுற்றவளாய், அச்சடங்கிற் பரிசாரிகையாய் அமர்ந்திருக்கின்றனள். அவளும், உன்னை உச்சிமுகந்ததாகக்கூறி, அடிக்கடி இதையே உனதிடம் மொழியும்படி யுரைத்தனள்." என்றவாறு கூறி, வருத்தமுறும் மனத்துடன் இருக்கும் அவனை நோக்கி 'எனது நண்ப! கபிஞ்ஜல! நீ ஏன் வருத்தமுறுகின்றனை? நீயும், புண்ணியமிழந்தவனான என்றனக்காகக் குதிரையாகப் பிறந்து, பராதீனனாயிருந்து, பலவகையான துன்பங்களையும் அனுபவித்தனையே! ஸோமபானத்திற்கு * உரியதான இம்முகத்தினால் நுரையுடன் கூட உதிரத்தை உதிர்க்கக் கூடிய கடினமான கடிவாளத்தினால் உண்டான விரணங்களை எவ்வாறு பொறுத்தனையோ? பூணூலைப் பூணுவதற்குப் பொருந்திய இத்தேஹத்தில், தோல்வார்களைக் கட்டியிழுத்ததால் எவ்வகையான வருத்தங்கள் உண்டாயினவோ?' என்று இவற்றையும், இன்னும் பலவாறான முற்பிறப்பின் செய்திகளையும் பற்றிய ஸல்லாபங்களைச் செய்துகொண்டே, அக்காலை, பறவைப் பிறவி யென்பதனாலுண்டான துன்பத்தையு மறந்தே இன்பமுற்றிருந்தேன்.

ஆதித்தனும் ஆகாயத்தின் உச்சியை அடைந்திருக்க, கபிஞ்ஜலன்

---

* ஸோமபானம்—ஸோமம் என்னும் யாகத்தில், ஸோமலதை யென்னும் கொடியின் இரஸத்தைப் பானம் பண்ணுவது வழக்கம்.

உணவுண்டு, க்ஷணநேரம் போல் இருந்து, என்றனைக் குறித்து 'பிதாவானவர், உனக்குத் தேறுதல் சொல்லுவதற்கும், முன் செய்த வினை முடிவு பெறும் வரையில் ஜாபாலியின் பாதமூலத்தைவிட்டு எங்கும் செல்லக் கூடாதெனக் கூறுவதற்கும் என்றனை அனுப்பினர்; அன்றியும் நானும் அச்சடங்கிலேயே பெரு முயற்சியுடையவனு யிருக்கின்றேன். ஆதலால் இப்பொழுது யான் செல்லுகிறேன்.' என்றனன். நானும் அதைச் செவியுற்று, விஸனமுற்ற வதனத்துடன் அவனை நோக்கி 'எனது நண்ப! கபிஞ்ஜல! நீ இங்ஙனம் செல்லுவாயாயின் யான் என் சொல்வேன்? தந்தைக்காயினும் அன்னைக்காகிலும் எச்செய்தியைச் செப்புவேன்? நீயே அனைத்தையும் அறிவாய்.' என மொழிந்தேன். உடனே அவ்விடத்திலேயே என்னை இருக்கவேண்டுமெனப் பலமுறை வற்புறுத்தி யுரைத்திட்டு, வானத்தில் எழும்பி வெகுதூரம் சென்று எங்கேயோ கண்ணுக்குத் தோன்றாது மறைந்தனன். அவன் சென்றதும், ஹாரீதன் நீராட்ட முதலிய பணிகளை யெல்லாம் முடித்துக்கொண்டு வந்து, பகலில் மூன்றாவது யாமத்தில் மீண்டும் தன்னுடன் கூடவே என்னையும் ஆஹார மருந்தச் செய்தனன்.

இவ்வாறு வளர்க்கப்பெற்று வந்த என்றனக்குச் சிறிது நாட்களிற்றானே பறக்கக் கூடிய திறமையும் வந்தது. பிறகு, ஒருநாட் காலையில், உலாவுவதன்பொருட்டு வெளியில் வடதிசை நோக்கிப் பறந்துப் போகலானேன். பறந்து செல்லப் பலதினங்கள் பழகவில்லை யாதலால், சிறிது தூரம் சென்றவளவிலேயே, சிரமத்தினுற் சரீரம் சிதறிப் போவதுபோல் ஆயினது. அவ்வவஸ்தையுடன் சிறகுகள் ஓய்வடைய, 'இங்கு வீழ்வேனே! இங்கு வீழ்வேனே!' என்று எண்ணி ஸ்வாதீனமிழந்தவனுகவே, கயத்தின் கரையிலுள்ள ஓர் மரப்புதரின்மீது என்னையும் அறியாது போய் இறங்கினேன். வெகுநேரம் சென்ற பின், வழியிற் பறந்துவந்த வருத்தம் நீங்க, அவ்வித சிரமத்தினுல் மிகவும் சோர்ந்துபோன எனது அங்கங்கள் களைதீரும்பொருட்டு, ஓர் கிளையிலேறி யுட்கார்ந்து, வழியிற் பறந்துவந்ததற்கேற்ப எளிதில் ஏற்படக் கூடிய நித்திரையை யடைந்தேன். நெடுநேரம் கழித்து விழித்துக்கொள்ள, என்றனைக் கட்டுண்டு இருக்கக் கண்டேன்! என்றனக்கு எதிரில், கையிற் பாசமில்லாத இயமபடனைப் போலவும், மனதிலும் மயிர்களிலும் பசையற்றவனும், உடலிலும் வாக்கி

லும் வெகு வன்மையானவனுமான ஓர் புருடனைப் பார்க்கலானேன். யான் அவ்விதமாயிருக்கும் அவனைக் கண்டு என் சரீரத்தினிடம் நிராசைகொண்டே, 'அப்ப! நீ யாவன்? எதற்காக என்றனைக் கட்டினாய்? எனது புலாலில் விருப்பத்தினலாகில், யான் நித்திரை போகும்போதே, நீ ஏன் என்றனைக் கொன்றிருக்கக் கூடாது? குற்றமற்ற என்றனைக் கட்டிக்குட்படுத்திக் கஷ்டமனுபவிக்கச் செய்வதிற் பயனென்னை? அல்லது, கேவலம் வேடிக்கைக்கு இங்ஙனம் செய்தனையோ? அங்ஙனமாயின், வேடிக்கைப் பார்த்தது போதும்! அப்பா! நீ என்னை இப்பொழுது விட்டுவிடு.' என்று யான் மன்றாடிக்கொண்டேன். அவன் அதற்கு 'ஓ மஹாத்மாவே! யான் குரூரகர்மங்களைச் செய்யும் சண்டாளஜாதியிற் பிறந்தவன். ஆயினும், யான் உன்னைக் கட்டியது உனது இறைச்சியில் இச்சைகொண்டுமல்ல, விநோதத்திற்கு மன்று. என் யஜமானன் ஓர் பறைச்சேரிக்கு அதிகாரி. அவனுக்கு, விநோதத்திற்கெல்லாம் வீடுபோன்ற இளம் பிராயத்தில் மகள் ஒருத்தி இருக்கின்ருள். எவனே ஒரு கொடும்பாவி, அவளிடம் உன்னைப் பற்றிய செய்திகளைச் சொல்லிவிட்டனன். அவள், அது கேட்டு, ஆவல்கொண்டு, உன்றனைப் பிடித்துவர வேண்டுமெனக் கட்டளையிட்டு, என்னைப்போலவே அனேகரை அனுப்பலானுள். இப்பொழுது, எனது புண்ணியத்தினல், நீ என்றனிடம் அகப்பட்டனை. ஆதலால், அவளது பாதமூலத்தில் உன்றனைக் கொண்டு சேர்த்து விடுகின்றேன். இனி உன்னைக் கட்டிப்போடுவதிலேனும், விட்டுவிடுவதிலாயினும் அவள் தான் அதிகாரமுடையவள்.' என மறுமொழி கூர்ந்தனன்.

யான் அதைக்கேட்டு, மனம் திகிலடைந்து, சிந்திக்கலானேன்:— 'ஒகோ! துர்ப்பாக்கியசாலியான எனது கர்மங்களின் பரிபாகம் மிகக் கடுமையானது! யான், மிலேச்ச ஜாதிகளும் பிரவேசிக்காமற் பரிஹரித்திருக்கும் பறைச்சேரியிலன்ருே இப்பொழுது போய் நுழையவேண்டும்? சண்டாளச் சிறுவருக்கு விளையாட்டுக் கருவியாகவும் ஆகவேண்டுமே! ஓ துராத்மாவான பாழும் புண்டரீகனே! உனது ஜன்மத்தைச் சுடு! நினது வினைப் பயனல்லவோ இவ்வாறு முடிந்தது! முதற்கர்ப்பத்திலேயே நீ என் ஆயிரக்கணக்காய்ச் சிதறிப்போகாமலிருந்தனையோ?' என்று இவற்றையும் இன்னும் பலவற்றையும் மனதில் எண்ணிப் புலம்பி, மறுபடியும் அவன் மனமுருகுமாறு இங்ஙனம் மன்ருட

லானேன்.—'அப்ப! யான் முற்பிறப்பை யறிந்தவன்; முனிவர் குலத்தி லுதித்தவன். ஆகையினால், நீ இவ்வாறு பெரும் பாதகத்தை விளைவிப்பதான இச்சங்கடத்திலிருந்து என்றனை மீட்பாயாயின், மறுமையில் இன்பமளிக்கக் காரணமான தர்மம் உனக்குண்டு; இம்மையிலும் மற்றவர் எவருமறியாது என்றனை விடுத்ததனாற் கெடுதியும் உனக்குக் கிடையாது. ஆனதுபற்றி நீ என்றனை விட்டுவிட வேண்டும்.' எனப் பகர்ந்து கொண்டே அவனது பாதங்களில் வீழ்ந்தேன். அவன் நகைத்து விட்டு, என்றனைக் குறித்து 'அடா! அறிவிலா அந்தகனே! உனது தேஹத்திலேயே லோகபாலர் ஐவரும் ஸாக்ஷிகளாக விருந்து, எவனது நல்வினை தீவினைகளைக் காணவில்லையோ, அவனு, அச்சத்தினால் இதரனுக்குப் பயந்து அடாத செயலைச் செய்யமாட்டான்? ஆகையினால் எனது அதிகாரியின் ஆஞ்ஞையினால் உன்றனைக் கொண்டுபோகின்றேன்.' என மொழிந்தவாறே, என்றனை யெடுத்துக்கொண்டு, பறைச்சேரியை நோக்கிச் சென்றனன்.

நானோ, இஃது எவ்வித வினைகளின் பயனோவென மனத்தினில் ஆலோசித்தவாறு, உயிரை மாய்த்துக்கொள்வதில் மனவுறுதி செய்துகொண்டு, அவன் எடுத்தேகுகையிலேயே சற்றுத் தூரத்தில் ஓர் பறைச்சேரியைப் பார்த்தேன்; ஆங்கு, வேறு பக்ஷிகளைப் பிடிப்பதற்கு உதவியான பலவகைப்பட்ட பறவைகளைக் கூச்சலிடச் செய்வதிற் கைதேர்ந்தவரும், வேட்டைநாய்களை ஏவுவதில் வெகு சதுரருமான சண்டாளச் சிறுவர் கூட்டம் கூட்டமாய் திசைகள்தோறும் வேட்டையாடிக் கொண்டிருந்தனர்; அவ்விடத்தில், மண்டையோடுகளைக் கொண்டு வேலிகளிடப் பெற்றிருந்தன. மேலும், வெண்பசுக்களே வாஹனமாகவும், மாதர்கள்மீதும் மதுவின்மீதும் மதியை ஓயாமற் செலுத்துவதே மேலான புருஷார்த்தமாகவும் இருந்தன; அது, முதுகாடுகள் அனைத்துக்கும் முக்கியவிடம் போன்றது; பாதகங்களெல்லாவற்றிற்கும் பிரதான பட்டணத்திற்கொப்பானது; மனதில் எண்ணப்படினும் மஹாபயங்கரமானது.

யான், அதைக் கண்டு வெகு வெறுப்புடன் 'அம் மாதங்கமாது, தன் குலத்திற்கேற்றவாறு செய்யாமல், தூரத்திலேயே என்றனைக் கண்டு, கருணைபுரிந்து விடுதலை செய்வளா? இத்தகைய புண்ணியம் எனக்குமுண்டா? யான் ஓர் நொடிப்பொழுதும் இவ்விடத்தில் அடி வையேன்.

என மனதிற் கோரிக்கொண்டிருக்கையிலேயே, அச்சண்டாளன் என்றனை யெடுத்துப் போய், அம்மாதங்க மாதுக்குக் காட்டினன். அவளும் களிப்புற்று, மிக மலர்ந்தமுகத்துடன், தனது இரு கரங்களாலும் என்றனை யேற்றுக்கொண்டு, 'ஆ! எனது அருமைப் புதல்வ! அகப்பட்டுக்கொண்டாய்! நீ இப்பொழுது வேறு எவ்விடம் போவாய்? இவ்விதம் நீ தோன்றியவாறெல்லாம் திரிவதை இனி முற்றிலும் தகைந்துவிடுகின்றேன்.' என மொழிந்துகொண்டே, ஓர் மரக்கூட்டின் வாயிலைச் சிறிது திறந்து, மஹாச்வேதையைக் காண்பதிலுள்ள மனோரதங்களுடன்கூடவே,என்றனை வலிய இழுத்து அதில் அடைத்து, 'இப்பொழுது நீ இதிற் கவலையொழிந்து இருக்கக்கடவாய்.' எனச் சொல்லி, சும்மாவிருந்தனள். யான், அவ்வாறு தகையப்பட்டதும், இங்ஙனம் சிந்திக்கலானேன்.—'பெரும் ஸங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டேனே! எனது நிலைமையைக் கூறி, தலை வணங்கி, மீட்சிபெற இவளிடம் விண்ணப்பம் செய்வேனாயின், அப்பொழுது எனது எக்குணமே குற்றமாக மாறிக் கட்டுதலை யுண்டாக்கியதோ, அதே குணத்தை யான் இன்னும் விருத்தி செய்தவனாவேன். நன்கு பேசுகின்றது என்றே, இவள் என்றனைப் பிடித்துவரச் செய்தனள். யான் கட்டுண்டு, கஷ்டமனுபவிப்பதால், இவளுக்கு வருத்தமென்னை? யான் இவளுக்கு உடலிற் பிறந்த மைந்தனுமல்லேன்; உடன்பிறந்தோனுமல்ல; உற்றோனுமன்று. இனி மௌனமாய் இருக்கின்றேன். அதிலும், இவள் எனது மூட்டுத்தனத்தைக் கண்டு, சினங்கொண்டு, ஒருகால் இதற்குமேலான துன்பத்தையும் எனக்கு உண்டாக்குவள். இஜ்ஜாதி மிகக் கொடியதன்றோ? ஆனால், இன்னும் அதிகமான துன்பம் வருவதே நன்று; பஞ்சமருடன் பேசுவதும் பெரும் பிசகாம். அல்லாமலும், மௌனமாயிருந்தால், மனம் வெறுத்து ஒருவேளை விட்டுவிடவும் கூடும்; பேசினேனோ, ஒருகாலும் இவள் என்னைவிடப்போவதில்லை. மேலும் விண்ணுலகத்திலிருந்து வீழ்ந்ததென்ன, இம்மண்ணுலகத்திற் பிறந்ததென்ன, பறவையின் ஜாதியில் ஜனித்ததென்ன, பஞ்சமாது கையிற் பிடிபட்டதென்ன, இங்ஙனம் கூட்டிலடைபட்டுத் துன்பமனுபவிப்பதென்ன, இவையனைத்தும், இந்திரியங்களைக் கட்டுக்குட்படுத்தாததின் குற்றமே. ஆதலால் வாக்கு ஒன்றைமட்டுமேயல்ல, இந்திரியங்களனைத்தையுமே இறுகக் கட்டிவிடுகின்றேன்.' என்று மனவுறுதி செய்துகொண்டு, மௌ

னத்தை அவலம்பித்தேன். பானமும் உணவும் கொண்டு கொடுக்கப்பட்டும், பட்டினியாகவே அத்தினத்தைக் கழித்தேன். மறுநாள் ஆஹார வேளையும் அதிக்கிரமிக்க, எனது மனதும் துயருற்றிருக்க, அவள், பழுத்தும் பழுக்காதவையுமான பற்பல கனிகளையும், நறுமணமும் குளிர்ச்சியும் பொருந்திய நல்ல தண்ணீரையும் தனது கரத்தினால் எடுத்து வந்து, மிகவும் அன்பார்ந்தவளை யொப்ப இப்படிப் பகாலானாள் :—' சிந்தையொழிந்து ஜீவிப்பவையான பசுபக்ஷிகளுக்குப் பசிதாஹம் உண்டாயிருக்கையில், உணவுகள் கிடைப்பின், அவை உபயோகிக்காமலிரா. ஆகினும், நீ பூர்வஜன்மத்தை நினைத்து, புஜிக்கக் கூடியது கூடாதது என்பதையுணரக்கூடிய இத்தகைய பகுத்தறிவு பெற்றிருக்கும் ஓர் அபூர்வமான பிறவி யென்றாலும், உண்ணக்கூடியது கூடாததென்னும் பகுத்தறிவற்றப் பறவையின் ஜாதியிற் பிறந்திருப்பதால், உனக்குப் புஜிக்கத் தகாதது யாது? ஆதியிலேயே தன்னை விவேகந்தவறாது வைத்துக் கொள்ள வில்லை; இப்பொழுது, தான் செய்த வினைக்குத் தகுந்த ஜாதியிற் பிறந்தபின், இப்பிறப்புக் கேற்றவண்ணம் செய்வதால், உனக்குத் தோஷமே கிடையாது. யான், உன்றனக்கு உண்பதற்காகக் கொண்டு வந்தவைகளுள், பஞ்சமர் பரிசித்து எடுத்துவந்த பதார்த்தமென்று பரிஹரிக்கக் கூடியதும் ஒன்றுமில்லை. கனிகளை அவர்களிடமிருந்தும் பெற்றுக்கொள்வதுண்டு. தண்ணீரும், சண்டாளரது கரத்திலிருந்து புவிதனில் வீழ்ந்தபின் புனிதமாகின்றதெனவே உலகத்தோர் கூறுகின்றனர். ஆனதுபற்றி, நீ பசியினாலும் தாஹத்தினாலும் உன்றனை ஏன் மாய்த்துக்கொள்கின்றனை?' என்ற அவளது வார்த்தையினாலும், விவேகத்தாலும் யான் மனம் வியந்து, பசிதாஹங்களைத் தணிப்பதற்காக உண்டிவினையை ஏற்றுக்கொண்டேன். மௌனத்தைமட்டும் யான் விட்டவனன்று.

இங்ஙனம் சிலகாலம் கழிந்துவர, கிரமமாக எனக்கு வாலிப வயதும் வந்து சேர, ஒருகால்,பொழுதுவிடிந்ததும், யான் கண்களை விழித்துக்கொண்டு இப்பொற்கூட்டில் என்றனை இருக்கக் கண்டேன்.தேவரீர் அச்சண்டாள கன்னிகை எத்தகையவளென்பதையும் கண்டிருக்கின்றீர். அப்பறைச்சேரி யாவும் வானவரது நகரம்போல் ஆய்விட்டதைக் கண்டு, இஃதென்னவென அறிய ஆவல் மேலிட்டு வினவ விரும்பி மௌனத்தை விட்டுவிட முயல்வதற்குள்ளாகவே, இவள் என்றனை யெடுத்துக்கொண்டு

தேவரது பாதமூலத்தினிடம் வந்தனள். ஆதலால்,—இவள் யாவள்? சண்டாளத்தன்மையை ஏன் விளக்கிக் கொண்டனள்? என்றனை எதற்காகக் கட்டி வைத்தனள்? கட்டிவைத்து இங்கு எடுத்து வந்ததுதான் எதற்கு?—என்கிற இவற்றையறிய, தேவரீரைப்போல் நானும் குன்றுக் குதூஹலமுடையவனே'' என்று.

சூத்திரகனும் அதுகேட்டு, மிகவும் குதூஹல மேலிட்டவனாய், அவளை அழைத்து வரும்பொருட்டு, எதிரிலிருந்த வாயிற்காப்பவளிடம் கட்டளை யிட்டனன். சிறிது நேரத்திலேயே, அவள் எதிரில் வந்து, உயரத்திலிருந்தவாறே மொழிந்தனள்:—'புவனபூஷண! ரோஹிணீபதே! நீ உன்னுடையவும், கேடுண்ட மதியைப் பெற்ற இதனுடையவும் செய்திகளை முற்றிலும் செவியுற்றனை. இது, இப்பிறப்பிலும் மறக்கப் பெற்றிருந்தும், தந்தையின் ஆஞ்ஞையை மீறி, மனைவியினிடம் போகப் புறப்பட்ட வரலாற்றையும் தானே செப்பியது. யான், இத்துராத்மாவின் மாதாவான மஹாலக்ஷ்மி. இதன் பிதா, இஃது அங்ஙனம்போக முயன்றதைத் திவ்யதிருஷ்டியினுற் கண்டு, 'அடாத செயலைச் செய்ய முயன்றவன் எவனுமே அநுதாபம் பெறாது, அவ்வழியிலிருந்து திரும்பமாட்டான். ஆதலால், உனது புதல்வன் ஒருகால் இப்பறவையின் பிறப்புக்கும் கீழான ஜாதியில் வீழ்ந்திடுவான். ஆகையால், இவனுக்கு இக்கர்மம் முடிவுபெறுவதற்கு முன்னமே மானிடலோகத்திலேயே இவனைக் கட்டிப் பிடித்துக்கொள். இதற்கு அநுதாபமுண்டாகுமாறு நீ முயற்சிப்பாயாக!' என உத்தரவு செய்தனர். ஆனதுபற்றி, இதற்கு வினயமுண்டாக வேண்டுமென இவ்விதமெல்லாம் ஏற்பாடு செய்தேன். இப்பொழுது இதன் கர்மம் முற்றிலும் முடிவுபெற்றது. சாபம் முடிவுபெறும் வேளையும் வந்துவிட்டது. சாபத்தின் இறுதியில், உங்கள் இருவருக்குமே இன்பம் ஒருமிக்க உண்டாக வேண்டுமென விரும்பி, யான் இதை உன்றனிடம் கொண்டு சேர்த்தேன். இவ்விடத்திலும், யான் பஞ்சமஜாதியெனப் பிரகடனம் பண்ணியது, இவ்வுலகத்தோரது பற்றைப் பரிஹரிக்கும் பொருட்டே. ஆகையினல், இனி நீங்கள் இருவரும் ஒன்றுகவே, பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி முதலான துன்பங்கள் நிறைந்த இத்தேஹங்களைத் துறந்து, தம் மனமுவந்தஜனத்துடன் கூடி இன்ப மனுபவிக்கக் கடவீர்கள்.'' என அவள்மொழிந்துகொண்டு அந்தக்ஷணமே அவனியைவிட்டு ஆகாயத்திற் கிளம்பினள்.

பிறகு, அவ்வார்த்தையைக் கேட்டு முற்பிறப்பை நினைத்துக் கொண்ட அம்மன்னவனது மனதில், மன்மதன், போகும் பிராணனைத் தடைசெய்பவன் போல் இடையில் வந்து தோன்றினன்; மனமும், தானிருக்குமிடத்தில் அம்மன்மதன் அடிவைத்ததனல், அங்கிருந்து துரத்தப்பட்டதுபோல், காதம்பரியை அடைக்கலமாய் அடைந்தது; அவனது அம்புகளான மலர்களின் பொடிகள் படிந்தனவோ வெனக் கூறுமாறு, கண்களிரண்டும் நீரைச் சொரிந்தன. உடனே வதனத்தின் ஒளியும் ஒருவாறு வெளிறியது. பசுமரத்திலிருந்து திரவம் பொசிவது போல், மன்மததாபத்தினல் எரிக்கப்படும் அவனது மேனியிலிருந்து வியர்வைநீர் வடிந்தது. இங்ஙனமே, அவனது அங்கங்களின் புற வேலையனைத்தும் ஓய்வடைந்தது; அவளையே தியானம் செய்து, அவளையே எங்குங் காணுபவனுமான இவன், தனது கடமையான தர்ம காரியங்களிலும் கருத்தொழிந்தவனானன்; பலவாறு கூறுவதிற் பயனென்னை? காதம்பரியைக் கூடுவதிலும் முயற்சியற்ற அவனுடல், கேவலம் ஓர் கட்டையைப்போல் ஆயிற்று; காமாக்கினியும் அவ்வுடலையெரிக்கக் கூடுமாறு வேண்டியவளவும் ஓங்கி வளர்ந்தது. புண்டரீகத் தன்மையனான வைசம்பாயனனுக்கும் மஹாச்வேதையினிட முண்டான காதலால், மன்னவனுக்கேற்ற நிலைமையே மிகவு மேலோங்கியது.

இதனிடையில், வஸந்தகாலமானது, அவ்வனங்கனைத் தூண்டுவதற்கு முயன்றதுபோல், ஸகலபிராணிஸமூஹத்தையும் பிரீதிமயமாகவும், உத்ஸவமயமாகவும், காதல்மயமாகவும் செய்யுமாறு வந்து தோன்றியது. இதனல் இருதயத்திற் கவலை யதிகரித்தவளான காதம்பரியும், ஓர் மாலைப்பொழுதில் மஞ்சனமாடி, மன்மதபூஜை செய்து, அம்மன்மதன் முன்னிலையிலேயே குளிர்ச்சியும் மணமும் பொருந்திய நீர்களைக்கொண்டு சந்திராபீடனை நீராட்டிவைத்து, உள்ளங்கசியக் கண்களும் பொசிய, நெடுநேரம் அவனைக் கண்ணேக்கி, காதல் மேலோங்கி, ஏகாந்தத்தில் திடீரென அவனிடம் சென்று, கமலமலர்போன்ற தனது கண்களை மூய்ந்தவாறு, ஜீவித்திருப்பவனைப் போலவே தோற்றிய அச்சந்திராபீடனது கண்டத்தைக் கட்டியாகத் தழுவலானள்.

காதம்பரீ அவ்வாறு சந்திராபீடனது கண்டத்தை ஆலிங்கனம் செய்ததும், அவனுயிர் நெடுந்தூரம் சென்றிருந்தும் உடனே மீள

வும் அவனது கண்டத்தை யடைந்தது. விடியற்காலத்துக் கருங்கு வளை மொட்டுபோல், காதுவரையில் நீண்டுள்ள அவனது கண்களும் மலர்ந்தன. இங்ஙனம் சந்திராபீடன், தூங்கிக் கண்விழிப்பவன்போல் அகில அவயவங்களையும் அசைத்தெழுந்து, தனது கண்டத்தைக் கட்டிக் கொண்டு, அப்பொழுதுண்டான பயத்தினால் அவ்வாறே பற்றிக்கொண் டிருப்பதற்காவது, விடுவதற்காவது வல்லமையற்றிருக்கும் காதம்பரி யின் கழுத்தைத் தழுவிக்கொண்டு இவ்விதம் கூறலாயினன்.—'அடி அச்சங்கொண்டவளே! இப்பயத்தை விட்டுவிடு. நீ இவ்வாறு ஆலிங்க னம் செய்துகொண்டதினாலே, யான் மீண்டும் உயிர் பிழைத்தெழுந்தேன். நீ, அமுதத்திலிருந்து ஆவிர்ப்பவித்த அப்ஸரஸுக்களின் குலத்திலல் லவோ உதித்தனை? இவ்வளவு நாட்களாய், நீ காத்தினாற் பரிசித்துக் கொண்டிருந்தும், சாபதோஷத்தினாற் பிழைத்தெழுந்தேனில்லை. இப் பொழுதுதான் எனக்கு இரண்டாமுறை சாபம் நீங்கியது. உனது பிரி வாற்றாமையின் நிமித்தம் பெருந்துயரமளித்ததும், சூத்திரகனென்று பெயரைப்பெற்றதுமான அம்மானிட தேஹத்தையும் விட்டேன். உன்ற னக்கு இச்சரீரத்தின் மீது காதலுண்டாயிற்றென நினைத்து, உனதிட முள்ள அன்பினால் இதுகாறும் இதைக் காப்பாற்றி, இப்பொழுது இதை வந்தடைந்தேன். ஆதலால், இவ்வுலகம் சந்திரலோகம் இரண்டு மே உனது கால்களிற் கட்டப்படலாயின. மேலும், உனது அன் பார்ந்த தோழியான மஹாச்வேதையின் காதலனும் என்னுடன் கூடவே சாபத்திலிருந்து விடுதலை பெற்றனன்.' என்றவாறு, சந்திராபீட னது சரீரத்தில் மறைந்துள்ள சந்திரன் மொழிந்துகொண்டிருக்கையி லேயே புண்டரீகன், அதே வேஷத்துடன்—மஹாச்வேதையின்பால் மோஹங்கொண்டு மாண்டுபோகையில் எவ்வகையாயிருந்ததோ—அவ்வி தமே கண்டந்தனில் முத்துமாலையை அணிந்து, கபிஞ்ஜலனது கரத் தைப் பற்றியவாறு, ஆகாயத்திலிருந்து இறங்கி வந்தான்.

சந்திராபீடன் அவனைக் கண்டு, கழுத்தைக் கட்டிக்கொண்டு, 'நண்ப! புண்டரீக! முதல் ஜன்மத்து ஸம்பந்தத்தினால் நீ என்றனக்கு மரு மகனென்றாலும், மறு ஜன்மத்தில் ஏற்பட்ட மித்திரன் என்னும் பிரீதி யைக்கொண்டே என்னுடன் நீ பழகவேண்டும்.' என்றுரைத்தவாறிருக் கையில், கேயூரகன் சித்திரரதனையும், ஹம்ஸனையும் பேரின்பச் செய்தி யைச் செப்பிப் புகழ்வதற்கு ஹேமகூடம் சென்றான். மதலேகை

யும் ஓடிப் போய், மிருத்யுஞ்ஜயமென்னும் ஜபத்தைக் * கருத்துடன் செய்துவரும் தாராபீடன், விலாஸவதி இவர்களது பாதங்களைப் பணிந்து, 'தேவ! தேவரீரும் தேவியரும் பாக்கியசாலிகளானீர்கள்! இளவரசு, வைசம்பாயனன் இருவரும் உயிர்பிழைத்து எழுந்தனர்.' என்று பேரானந்தமுற்று, உரத்தகுரலுடன் உரைத்தனள். பார்த்திவனும் அதைச் செவியுற்று, பெருமகிழ்ச்சி பெற்று, பரவசமானவனாய், விலாஸவதியின் கண்டத்தை ஆலிங்கனம் செய்துகொண்டான்; சுகநாஸனது கழுத்தையும் கட்டிக்கொண்டுப் பெருமை படித்தி, அவ்விடத்திற்கே சென்றனன். சந்திராபீடனும், ஆனந்தபரவசனாய், பிதாவைப் பார்த்து, முன்போலவே அவனது தாள்களைத் தொழுதனன். பிறகு, தாராபீடன், விரைவுடன் ஒதுங்கி, தனது சரணங்களிற் பணிந்த சந்திராபீடனை யெழுப்பி இவ்வாறுரைத்தனன்:—'புதல்வ! உனது சாபதோஷத்தினாலோ, அல்லது எனது புண்ணியங்களாலோ யான் உன்றனக்குப் பிதாவாக ஆயினேன்; ஆயினும், நீ உலகத்தோரால் பணியத்தகுந்த லோகபாலனாயிருக்கின்றனை. அன்றியும், அடிபணியக்கூடிய அம்சம் யாதொன்று எனதிடம் உண்டோ, அதையும் உனதிடமே சேர்த்துவிட்டேன். ஆனதுபற்றி, இருவகையிலும் நீயே எம்மால் வணங்கத் தகுந்தவனாகிறாய்.' என மொழிந்து கொண்டே, ஆயிரக்கணக்கான இராஜகுமாரருடன் அவனது பாதங்களைப் பணியலானான். விலாஸவதியோ, அவனை உச்சிமுகந்து, பலமுறை நெற்றியிலும் கபோலங்களிலும் முத்தமிட்டு, நெடுநேரம் நன்கு ஆலிங்கனம் செய்துகொண்டாள். அன்னை அவனை ஆலிங்கனம் செய்து விடுத்ததும், அவன் அவளது அடிகளைப் பலமுறை பணிந்து, சுகநாஸனிடம் சென்று, அவனையும் வணங்கலாயினன். சுகநாஸன், அனேகமாயிரம் ஆசீர்வாதங்களைக் கூறி அநுக்கிரஹித்ததும், இவன் முறை தவறாது தாய்தந்தையருக்கும், சுகநாஸனுக்கும், மனோரமைக்கும் 'இதோ இவன் தமது வைசம்பாயனன்!' எனப் புண்டரீகனைக் காட்டினன்.

அந்நிகழ்ச்சியிலேயே, கபிஞ்ஜலன் சுகநாஸனிடம் சென்று, "மஹாத்மாவான ச்வேதகேதுமாமுனிவர், தமக்கு இங்ஙனம் ஆஞ்ஞை

* மிருத்யுஞ்ஜயஜபம்=மரித்தவரை உயிர்மீட்கும் ஜபம்; அல்லது மரித்தவரை மீட்பதற்காகச் சிவபெருமானைக் குறித்துச் செய்யப்படும் ஜபம்.

யளித்தருளினர் :—'இப்புண்டரீகனை வளர்த்ததும்ட்டும் யான், ஆயினும் இவன் உமது புதல்வனே. இவனுக்கும் உங்களிடமே பற்றுதலும் உண்டாய் விட்டது. ஆகையால், நீங்கள் இவன் வைசம்பாயனனே என்றெண்ணி, அடாத செயல்களைச் செய்ய விடாது, ஆதரிக்க வேண்டும். இவன் பிறன் எனக் கருதி நீங்கள் இவனைப் புறக்கணித்தலாகாது. இவன் உம்முடையவன் என நினைத்தே, சாபம் நீங்கிய பின்பு எனதிடம் அழைத்துக்கொள்ளாமல் அனுப்பிவிட்டேன். மேலும், உலகத்திற் சந்திரனிருக்கு மளவும் * ஆயுளை யடையப்பெற்று இவனிடம் தனது அம்சத்தை அர்ப்பணம் செய்து, எனது ஸத்வம் என்னும் ஜோதியானது இப்பொழுது தைவலோகத்திற்கும் மேலான ஸ்தானத்திற்கு ஏகும் பொருட்டு முயன்றுவிட்டது.' என்று." எனப் பகர்ந்தனன். சுகநாஸனும் 'கபிஞ்ஜல! மஹா மஹிமை வாய்ந்த அம்முனிவர் உலகமனைத்திலுமுள்ள ஜனங்களது உள்ளத்தை யுள்ளபடி யறிந்திருந்தும், இங்ஙனம் ஆஞ்ஞாபித்தனாரல்லவா? இவ்வதிருப்தி, பலவகையிலும் பேரன்பினால் ஏற்பட்டதே.' என்று, அவரனைவரும்இவ்விதம் முற்பிறப்பின் செய்திகளை நினைத்து ஸல்லாபம் செய்துகொண்டிருக்கையில், அவர்களால் உணரப்படாமலே இரவும் கழிந்துவிட்டது. விடியற்காலத்திலேயே சித்திரரதன், ஹம்ஸன் இருவரும் தமது மனைவிகளான மதிரை, கௌரீ இவர்களுடன், ஸகல கந்தர்வராலும் பின்தொடரப்பட்டவராய் அவ்விடத்திற்கே வந்து சேர்ந்தனர். அவ்விருவரும் வந்து, தாராபீட சுகநாஸருடன் ஸம்பந்தம் ஏற்பட்டதற்கு ஏற்றவாறு ஸல்லாபங்களைச் செய்ய, மஹோத்ஸவமானது ஆயிரமடங்காக நடைபெறலாயினது.

அப்பால், அவ்வுத்ஸவம் நிகழ்ந்துகொண்டிருக்கையிலேயே, சித்திரரதன் தாராபீடனை நோக்கி 'நமது மாளிகையிருக்கையில் இவ்வரண்ணியத்தில் ஏன் இவ்வுத்ஸவத்னைச் செய்யவேண்டும்? ஒருவருக்கொருவர் வெகு நட்புடன், இவ்விவாஹமே நமக்கு நெறிதவறாததெனத் தோற்றுகின்றதாயினும், உலக நடவடிக்கையை நாடவேண்டுவதும் அவசியமே. ஆதலால், நமது இல்லத்திற்கு வருவோமாக. பிறகு, நமது தேசத்திற்கோ, சந்திரலோகத்திற்கோ போகலாம்' என்றனன். தாராபீடன், 'கந்தர்வமன்னவ! எவ்விடத்திற் பெரும்பாக்கியத்தினால்

* (சந்திராபீடனது சரீரத்திற் சந்திரன் பிரவேசித்திருப்பதால்) சந்திராபீடன் இருக்கும் வரையில் என்றும் கருத்து.

ஒப்பற்ற இன்பம் ஏற்படுகின்றதோ, அதுவே காடாயிருப்பினும் வீடாம். வேறெவ்விடத்தில் இத்தகைய ஸம்பத்தும் ஸுகமும் என க்கு ஏற்பட்டது ? அன்றியும், யான் இப்பொழுது இல்லறவாழ்க்கை யனைத்தையுமே உமது மருமகனிடம் சேர்த்துவிட்டேன். ஆதலால், நண்பரே ! மனைவியுடன்கூட அவனையே இல்வாழ்க்கையை இன்பத் துடன் அனுபவிக்க அழைத்துப் போவீராக' என மறுமொழி கூறினன். அவன் அங்ஙனம் சொல்ல, சித்திரரதனும் சந்திராபீடனை அழைத்துக் கொண்டு, ஹேமகூடம் ஏகினன். சித்திரரதன், அவ்விடம் சென்று, காதம்பரியுடன் தனது இராஜ்யம் அனைத்தையுமே சந்திராபீடனுக்கு அளித்தனன். ஹம்ஸனும், மஹாச்வேதையுடன் தனது செங்கோலைப் புண்டரீகனுக்குத் தந்தான். அச்சந்திராபீட வைசம்பாயனரோ, தமது மனதுக்கின்பமான மனைவிகளைப் பெற்றதாலேயே முற்றிலும் கிருதார்த்தர்களாய், மற்ற எதையுமே ஏற்றுக்கொள்ள வியலவில்லை.

மற்றொருகால், காதம்பரீ, இன்பமுற்றிருந்தும், வருத்தங் கொண்ட வதனத்தை யுடையவளாய், சந்திராபீடனது சரீரத்தைப் பெற்றிருக்கும் சந்திரனை நோக்கி 'ஆர்யபுத்திர ! நாம் அனைவருமே மரணத்தையடைந்து, மீண்டும் உயிர் பிழைத்தெழுந்து ஒருவருக்கொருவர் ஒன்று சேர்ந்தோமே! அவ்வேழைப் பத்திரலேகை மட்டும் நமது மத்தியிற் காணப்பட வில்லையே! அவளொருத்தியின் செய்தி மாத்திரம் எத்தகையதென்று அறிந்தோமன்று.' என வினவினள். அவன் அதற்கு மறுமொழி இங்ஙனம் உரைத்தனன்:—"என் காதலி! அவள் இவ்விடத்தில் ஏது? அவள் ரோஹிணீ ; அவள், எனக்குச் சாபம் நேர்ந்ததாகக் கேள்வியுற்று, எனக்குண்டான துன்பத்தினால் வருத்தமுற்று, 'நீர் தனியாக மானிடலோகத்தில் வஸிக்கும் வருத்தத்தை அனுபவிப்பது எங்ஙனம்?' எனக் கூறியவளாய், என்னால் மறுக்கப்பட்டிருந்தும், எனக்கு முன்பாகவே, என் பாதங்களிற் பணிவிடை செய்வதற்கு, பாருலகிற் பிறந்தவள். மறுபடியும், யான் இங்கிருந்து மறுபிறப்பெடுக்கையில், அப்பொழுது யான் இறந்ததும், அவள் தனது தேஹத்தைத் துறந்து, மீண்டும் மேதினியிற் பிறக்க முயல, வலிய அவளை மறுத்து, எனது லோகத்திலேயே இருக்கச் செய்தேன். நீ அவளை அவ்விடத்திற் காணப்போகின்றனை." அதுகேட்டு காதம்பரியானவள், ரோஹிணியின் அவ்வுதாரத் தன்மையினாலும், கற்புத் தவறுஞ்சுபாவத்

தினும் மனம் வியந்து, மிக வெட்கமுற்று, அதற்குமேல் ஏதும் கூற முடியாதவளாயினள்.

இங்ஙனம் சந்திராபீடன், ஆங்கு, பத்துநாட்கள் இருந்து, மிகவும் மனமகிழ்ச்சியடைந்த மாமி ம்மாமன்களிடம் விடை பெற்று, பிதாவின் பாதமூலத்திற்கு வந்தான்.

அவன் அவ்விடம் வந்து, தன்னைப்போல் அவ்வளவு நாட்களும் கிலேசங்களை அனுபவித்த அவ்வாசரனைவரையும் தனக்குச் சமானமாகவேமகிழ்வுறச் செய்து, புண்டரீகனிடம் இராஜ்யபாரத்தை யேற்றி வைத்து, சிலகாலம் பிறந்தவிடமென்னும் பிரீதியினுல் உஜ்ஜயினியிலும், வேறு சில ஸமயம் கந்தர்வ ராஜனிடம் கௌரவத்தினுல் ஹேமகூடத்திலும், மற்றும் சில காலம் ரோஹிணியினிடம் வெகுமானத்தினுல் சந்திரலோகத்திலும், காதம்பரியின் விருப்பத்திற்கேற்ப மற்றும் பல மனோஹரமான அவ்வவ்விடங்களில் வஸித்து பேரின்பத்தை யனுபவித்தனன்; சந்திரனே யல்ல, மற்றும் அனைவருமே ஒருவரையொருவர் பிரியாது ஸர்வகாலத்திலும் இன்பங்களை யனுபவித்தவராய், அளவற்ற ஆனந்தத்தை அடைந்தனர்.




Madras : The Guardian Press, Mount Road

## மூவர் தேவாரம்-பண் முறை

இப்பதிப்பில் (1) சம்பந்தர், அப்பர், சுந்தரர் இம்மூவர்களின் சரித்திரக் குறிப்பும், (2) தேவார வரலாறும்,(3) தேவாரப் பண் அட்டவணையும், (4) தேவாரப் பாடல்பெற்ற ஸ்தல அகராதியும், (5) தேவார ஸ்தலங்களுள்ள நாடுகளின் விபரமும், (6) அட்டவீரட்டானங்களைக் குறிப்பிக்கும் செய்யுளும், (7) தேவாரப் பொதுப்பாடல்களின் பக்க அட்டவணையும், (8) தேவார வைப்புஸ்தல அட்டவணையும், (9) காரைக் காலம்மையார் அருளிச்செய்த மூத்ததிருப்பதிகமும் நூதனமாய்ச் சேர்க்கப்பட்டுள்ளன.

1044 பக்கம்: ரூ. 3 0 0

---

## நாலாயிர திவ்யப்பிரபந்தம்

இப்பதிப்பு (1) ஆழ்வார்களின் காலவைபவக் குறிப்பும், (2) ஆழ்வார்கள் அருளிச்செய்த பிரபந்தங்களின் அட்டவணையும், (3) ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பெற்ற திவ்விய தேசங்களின் அட்டவணையும், (4) அந்தத் தேசங்களின் வைபவக்குறிப்பும்,(5) பாசுரங்களின் முதலடி அகராதியும், (6)பாடபேதக்குறிப்புகளும் சேர்த்துப் பலபிரதிகளுடன் ஒத்திட்டுப்பார்த்து, நன்றாய் அச்சிடப்பெற்றுளது.

640 பக்கம்: ரூ. 3 0 0

---